
மங்களகரமான தீபாவளி வாழ்த்துக்கள்!
காஸ்
ஜனதா
தீப்டி
ஸ்டவ்
தீப்டி
லாந்தர்கள்
எனமல்
பாத்திரங்கள்
ஆண்டுக்கு ஓர் முறை
வரும் நன்னாள்.
குதூகலமான நேரம்.
கங்காஸ்நானம் முடித்துக்
கோடி உடுத்தி கடவுளையும்
பெற்றோர்களையும்
வணங்கிக் கோலாகலமாக
மகிழும் வேளை.
மத்தாப்பும் பட்டாசுமாக
சிறுவர்களும், பெரியவர்
களும் களிக்கும் நாள்.
எங்கும் குதூகலம்,
மகிழ்ச்சி. இந்தப் புனித
நாளில், உங்கள் ஆனந்தம்
மேன்மேலும் பெருக
வேண்டும் என்று எங்க
ளுடைய நண்பர்களுக்கும்
ஆதரவாளர்களுக்கும்
எமது மனமார்ந்த
வாழ்த்துக்களைக்
கூறுகிறோம்.
தி ஓரியண்டல் மெட்டல்
இண்டஸ்ட்ரீஸ்(பி)லிட்.
77, பௌபஜார் தெரு
கல்கத்தா 12
KALPANA


MODEL 0724
6 Valve · All-wave · 8-Band
fully band spread
AC or AC/DC (Two models)
MODEL 0452
6-valve with 9 functions
All-wave · 3-Band
Piano-key switch · AC
MODEL 0298
All-wave · 5-valve · 3-Band AC/DC
Also: Model 0299. (Dry Battery)
4-Valve
murphy radio....
Delights the home!
MODEL 0704
4-Valve · All-wave · 2-Band
AC/DC
MODEL 0374
6-valve with 9 functions · All-wave · 4-Band
Piano-key switch
AC or AC/DC · (Two models)
MODEL 0752
5-valve · All-wave
3-Band · AC or AC/DC
(Two models)
Also: Model 0751: 5-valve
MR. G. 156
Sole Distributors for South India:
MAHOMED EBRAHIM & COMPANY PRIVATE LIMITED
MADRAS · BANGALORE · HYDERABAD

# நல்ல நிறமும்

## ருசியுமுள்ள தேயிலை சொற்ப விலையில்

# முடீஸ்

# சூபர்பைன் தேயிலை

முடீஸ் சூபர் பைன் தேயிலை ஒரு நேர்த்தியான இலைவகை தேயிலையாகும். இதில் கிடைக்கும் தேநீர் கஷாயம் நல்ல மணமும், பொன்னிறமும் உள்ள கெட்டியான வகையினது. ஒரு சிறு பாக்கெட் போதும். பல டஜன் கோப்பைகள் மகிழ்வூட்டும் மணமுடைய தேநீர் கெட்டியாகத் தயாரித்து வழங்கலாம். இதனால்தான் சூபர் பைன் தேயிலை முடீஸ் மலிவுவகை தேயிலைகளுள் மிகப் பிரசித்தமானதாக விளங்குகிறது. முடீஸ் சூபர் பைன் வாங்குவீர்களாயின், உங்கள் குடும்பத்திற்கு அருமையான தேநீர் பானம் வழங்க சாத்யம். ஏனெனில் மலிவு விலையில் கிடைக்கும் உயர்தரமான தேயிலை இதுவே.

இன்னும் அநேக அற்புதமான முடீஸ் தேயிலை ரகங்களுள் வேண்டியதை தேர்ந்தெடுத்து வாங்குங்கள்.

ஜனதா-தேயிலைத்தூள்—தேநீர் கெட்டியாகவும் ருசியுள்ளதாயுமிருக்கும் பிரபலமான ரகம்.

பெஸ்ட் முடீஸ் பிளெண்ட்—பொறுக்கி எடுத்த இலைவகைத் தேயிலை. மிக நேர்த்தியான மணமுடையது




BBTC-717 A TAM EVEREST

# வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

## சிவப்பு லேபில்

இருமல், ஜலதோஷம், இன்ப்ளூயென்ஸா
மூச்சுக்குழல் தொற்றுநோய்கள்
காசநோய் ஆகியவற்றிற்குச் சிறந்தது.




**வெறும் மருந்து மட்டுமல்ல நம்பிக்கைக்குப் பாத்திரமான டானிக்கும் இதுவே.**

காலத்தால் தேறிக் கைவந்த மருத்துவ நியதிகளுக்கு இணங்கத் தயாரிக்கப்படும், நம்பிக்கைக்குரிய டானிக்காகிய வாட்டர்பரீஸ் காம்பவுண்ட், மருத்துவத் துறையினர்களால் பெரிதும் சிபார்சு செய்யப்படுகின்றது

**மருந்தாகப் பயன்படும்:** இருமலையும், ஜலதோஷங்களையும் சட்டென்று வன்மையாகக் கண்டித்து... நுரையீரல்களைத் தெளிவுறச் செய்யும் கபமறுக்கும் மருந்துகளாகிய கிரியோஸோட், குவயகால் ஆகிய இரண்டும் வாட்டர்பரீஸ் காம்பவுண்டிலே அடங்கியுள்ளன.

**டானிக்காகவும் உதவும்:** நோய்களை எதிர்க்கும் சக்தியை உடம்பு தானாகவே உண்டுபண்ணிக்கொள்ளுமாறு உதவுவதோடு மீளமீளத் திரும்பிவரும் தொற்றுநோய்களினின்று திண்ணிய பாதுகாப்பை அளிக்கிறது வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்; பசியைத் தூண்டி, ஜீரண சக்திக்குத் துணைபுரிந்து, இரத்தபுஷ்டியளித்து, இழக்கநேர்ந்த தாதுப் பொருள்களுக்கு ஈடுசெய்கிறது.

வார்னர்-லாம்பர்ட் பார்மஸூடிகல் கம்பெனி (வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு. எஸ். ஏ. வில் இணைக்கப்பெற்றது)

WCRY-I-TAM


PLATO
REGD.
இதோ
ஒரு சிறந்த
பரிசு
அழகிய பெட்டியில் அடங்கியுள்ள ப்ளேட்டோ பேனாவும், ப்ளேட்டோ பால்-பாயிண்ட் பேனாவும் எல்லா விசேஷ காலங்களிலும் நீங்கள் அளிக்க விரும்பும் பரிசு! உங்கள் அன்பு மனைவிக்கோ, கணவனுக்கோ, ஏன் உங்களுக்கே கூட ஏற்ற அன்பளிப்பு!
plato
ப்ளேட்டோ ப்ரஸெண்டேஷன் ஸெட்
PLATO
Shilpi MP, 130 Tam


DO IT YOURSELF LAMP SHADE
KAYCEE venetian lamp shade is ideal for the handyman as it comes to YOU in a compact kit and can be assembled into an elegant shade
Available at all leading electrical dealers
bajaj
electricals limited
45-47, veer nariman road, bombay-1.
BE-60


மனமார்ந்த
தீபாவளி வாழ்த்துக்கள்
எல்லாவிதமான பாங்க் அலுவல்களுக்கும் வசதி உண்டு. உலகமெங்கும் ஏஜண்டுகளும் காரஸ்பாண்டெண்டுகளும் உள்ளனர்.
தி இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க் லிட்.
தலைமைக் காரியாலயம்:
151, மவுண்ட் ரோடு, சென்னை-2.

# தீபாவளி நல் வாழ்த்துக்கள்

மெல்லிளம்
சருமத்திற்கு
சுகமளிக்க

## மெரோலின்

தேக துர்நாற்றம் போக்கும்
ஒளஷத ஸ்நான சோப்



சருமத்தைத் தூய்மையாக்குவது இப்போது மிக சுலபம். வெறும் சுத்திகரிப்பு சாதனமாக மட்டு மின்றி மெரோலின் தேக துர் நாற்றத்தைப் போக்கி, சரும ஆரோக்யத்தை மீண்டும் அளித்து, மேனி அழகை மினுமினுக்கச் செய்கிறது. அதன் ஒளஷதத் தன்மை மற்றும் துர் நாற்றம் நீக்கும் குணம் உங்களுக்கு ஸ்னான சுகம் அளிக்கிறது.




தயாரிப்பாளர்கள்:
வெஜிடபிள் சோப் ஒர்க்ஸ்
கோழிக்கோடு.

SNP-M-225


மங்கள ஸ்நானத்திற்கு...
Sai Studio
அருணகிரிவிலாஸ்
சீயக்காய் பவுடர்
காரைக்குடி


புகழ் பெற்றது...
Sai Studio
தங்கபஸ்பம்
புகையிலை
தயாரிப்பாளர்கள்
M/S என். ஆறுமுகம் பிள்ளை
காரைக்குடி



BMF
பாலசுப்ரமணியா
பம்புகள் - மோட்டார்கள்
விசேஷ அம்சங்கள் :-
• குறைந்த மின்சார சக்தியில் அதிக தண்ணீர்
• நீடித்த உழைப்புக்கு நம்பிக்கை கொண்டவை
• நிசப்தமான ஓட்டம்
• உறுதியான வேலைப்பாடு
• செலவில் சிக்கனம்
SEKHAR
பாலசுப்ரமணியா பவுண்டரி
படேல் ரோடு கோயமுத்தூர்




அய்யனூர் சோப்
என் வீட்டு சலவைப் பிரச்னைகளை தீர்க்கிறது!
அய்யனூர் சோப் ஒர்க்ஸ்.,
தூத்துக்குடி

தீபாவளித் திருநாளில் அனைவருக்கும் எங்கள் நல் வாழ்த்துக்கள்!

போன் நெ. 2862 தந்தி: JAIMILL

# ஸ்ரீ கண்ணபிரான் மில்ஸ் லிமிடெட்



ரிஜிஸ்டர்டு ஆபீஸ் & பாக்டரி: சௌரிபாளையம், கோயமுத்தூர்-4

மானேஜிங் ஏஜண்டுகள்:

**K. வெங்கடஸ்வாமி நாயுடு & கம்பெனி**

ரிங் ஸ்பிண்டில்ஸ் 22,372 - டபிளிங் ஸ்பிண்டில்ஸ் 1104, கோன் 180

தயாரிப்பு

உயர் ரக நூல்: ஒற்றை, மடிப்பு நூல்களும்

கோன்கள்: 36s லிருந்து 80s வரை எல்லா வகையிலும் சப்ளை செய்யப்படுகிறது

கைத்தறிகளுக்கும், விசைத்தறிகளுக்கும் மிகச் சிறந்தவை

# கிஷ்ணவேணி டெக்ஸ்டைல்ஸ் லிட்.

உப்பிலிபாளையம் – சிங்காநல்லூர் P. O. – கோயமுத்தூர்

மானேஜிங் ஏஜண்டுகள்:

**K. கிருஷ்ணசாமி நாயுடு & சன்ஸ்**

# இரவீந்திரா மில்ஸ் லிமிடெட்

போன்: 3974

சிங்காநல்லூர் – தபால் பெட்டி எண் 859 – கோயமுத்தூர்-5



தரமான நூல் தயாரிப்பாளர்கள்:

கோன் & ஹேங்கில், கோப்புநூ & கார்பெட்

ஒற்றை இழை & இரட்டை இழை நூல்

30s, 40s, 42s, 60s, & 80s

மொத்தக் கதிர்கள்:

| | | |
|---|---|---|
| ஒற்றை இழை | ... | 12,148 |
| இரட்டை இழை | ... | 1,448 |
| கோன் | ... | 125 |

டெக்ஸ் மார்க் நெ. 2916

மானேஜிங் ஏஜண்டுகள்: **K. இராமச்சந்திரன் & சன்ஸ்**


தீபாவளி
வாழ்த்துக்கள்
ஸாஹு ஜெயின் லிட்.
11, கிளைவ் ரோ
கல்கத்தா -1
SAHU JAIN
INDUSTRIES


சிறந்தது எதுவோ அதுவே நான் வாங்குவது...
நான் எவரெஸ்டைத் தேர்ந்தெடுத்ததில் ஆச்சரியமென்ன !
★ விற்பனைக்குப்பின் - வழங்கப்படும் சேவை
★ மிருதுவான, நம்பிக்கையான ஓட்டம்
★ முழு உத்திரவாதம் உடையது
★ கண்ணைக்கவரும் தோற்றம்
★ நியாயமான விலை
இவையனைத்தும்
எவரெஸ்ட்
தையல் மெஷினின்
தனிப்பெரும் சிறப்புக்கள்
தயாரிப்பாளர்கள்
ஷாரதா மெஷினரி கார்ப்பொரேஷன்
தலைமை ஆபீஸ்: 11, பூனா ரோடு, புதுடில்லி-5
குரோம்பேட்டை, மதராஸ்
EVEREST
EVEREST


Quality Cotton Spinners
Counts Spun: COTTON YARN
20s, 30s, 40s, 50s, 60s, 80s, 100s
2/40s, 2/60s, 2/80s and 2/100s
Carded & Combed; Hanks & Cones
STAPLE FIBRE YARN
20s, 30s, 40s, 2/40s and 2/60s
Carded, Hanks and Cones
Installed Spindles
RINGS ... 28,420
DOUBLING ... 648
CONES ... 1360
PHONE: 3166
GRAMS: "KADRIMILLS" COIMBATORE
KADRI Mills (CBE) Ltd.,
ODDARPALAYAM, ONDIPUDUR P. O., COIMBATORE-5
Managing Partner: V. RAMASWAMY NAIDU
Sales Depots at: MADRAS - SALEM - TIRUPUR & COIMBATORE

அன்பர்களுக்கும் ஆதரவாளர்களுக்கும்
எமது மனமார்ந்த
தீபாவளி நல் வாழ்த்துக்கள்!

ARC

மீண்டும்
நீடித்த உழைப்பு, பாதுகாப்பு
சேமிப்பு இவைகளைப்பெற
ஒவ்வொரு தேய்ந்த டயரையும்
அமெரிக்க முழுவட்ட
சூபர் லோடி மோல்டுகளால்
புதுப்பித்துத் தருகிறோம்



போன்: 3400 தந்தி: "ARC"

**ஆனைமலைஸ்**
**ரீட்ரெடிங் கம்பெனி**
ஜெயில் ரோடு - கோயமுத்தூர்-1

## ஆரியன்

தன் ஆதரவாளர்களுக்கு மகிழ்ச்சிகரமான
தீபாவளியும் சுபிட்சம் நிறைந்த புத்தாண்டும்
கிட்டவேண்டும் என்று வாழ்த்துகிறது!




**ஆரியன்** இந்தியாவின் சிறந்த டூத் பிரஷ்



நன்றாக சுத்தம் செய்கிறது!
நீடித்து உழைக்கக்கூடியது!

★

தி ஆரியன் பிரஷ் கோ., லிட்.
வெலண்டின் சேம்பர்ஸ், தலால் தெரு
பம்பாய்-1

சிறந்த ஆரியன் டாய்லட் மற்றும்
தொழில்துறை பிரஷ்கள் தயாரிப்போர்

புனித நீராடி
புத்தாடை அணியும்
தீபாவளித் திருநாளன்று
எங்கள் வாழ்த்துக்கள்

கோ-ஆப்டெக்ஸ் கைத்தறி துணிகள்

ஆடைக்கும் அலங்காரத்திற்கும்



தமிழ்நாடு கைத்தறி நெசவாளர்
கூட்டுறவு சங்கம் லிமிடெட்
எழும்பூர், சென்னை-8

*Indigenous Products of*
*Outstanding Quality...*

ORIGINAL
**GOETZE Piston Rings**

Engineered to outperform and outlast all other rings!!

**MAHLE Piston Assembly**

Known for Reliability, efficiency and durability for well over 40 years.

There are more than 1,00,000,000 Mahle Pistons serving world traffic on road, rail, sea and air with proverbial dependability.

**AMCO Silver Cobalt Battery**

You get longer life with Amco Silver Cobalt Batteries because they have 300 per cent more overcharge resistance plus greater undercharge resistance.

*For Maharashtra and Gujarat States (except Vidarbha)*

**Payen Talbros Guaranteed Gaskets**

Life and part of your engine.

SUPERSEAL

Contact:

*Distributors for Maharashtra Gujarat and Madhya Pradesh States.*

# CENTRAL AUTOMOBILES PRIVATE LIMITED

Lakshmi Bhuvan, 466, Sandhurst Road, Bombay-4
Phone: 72866-79034          Grams: "CENTALAUTO"

Show Room: Mani Mahal, 7, Mathew Road, Bombay-4
Phone: 30410

*Distributors for foreign products*

Bendix Corporation, U.S.A. - Clayton Dewandre, U.K.
(for Maharashtra, Gujarat and Calcutta)
Vandervell Products Ltd., London (for whole of India)
Electric Auto Lite Co., U.S.A. (Maharashtra & Gujarat)
G. A. Rix, England (for whole of India)

*Indigenous Products*

"KAP" Brand, Axle Shaft, Cross & Bearing King Pin Sets, Rear Spring Pin, Shackle Bolts etc.
(Distributors for western Zone)







**1860**-ல் தொடங்கிய இந்த ஸ்தாபனம் 5 தலைமுறைகளாக இவ்வியாபாரத்தைத் தொடர்ந்து நடத்தி வருகின்றனர். இதன் ஸ்தாபகர் பி. வேங்கடாசலம் இறந்த பின்னர் இவருடைய குமாரர் பி. வி. சுப்பிரமணியம் பிள்ளை மேற்படி வர்த்தகத்தை நடத்தி வந்தார். மேற்படியாரின் குமாரர்கள் சம்பசிவம், குமரவேல், பாலமூர்த்தி ஆகிய மூவரும் இத்தொழிலையே மேற்கொண்டனர். சம்பசிவம் மறைவிற்குப் பின்னர் அன்னாரது குமாரர் காலஞ்சென்ற பி. வி. எஸ். வேங்கடாசலம் அவர்கள் ஸ்தாபனத்தின் முழு உரிமையையும் பெற்று, உலகத்தின் எல்லா பாகங்களிலும் வியாபாரத்தை நிலைநாட்டினர். தற்போது மேற்படியாரின் குமாரர்களான பி. வி. சுப்ரமண்யம், பி. வி. நிவாசன் ஆகியவர்களால் ஆரம்பகால விசேஷத்துடனேயே இயங்கி வருகிறது.


அத்தான்! நினைத்தது போலவே நடந்துவிட்டது!
நாம் தங்குவதற்கு இந்தத் தடவையும்
நாஷனல் ஹிந்து ஹோட்டலிலே ஏற்பாடு
செய்து தந்தியடித்திருக்கிறார் அப்பா!
கவலையே இல்லை! புறப்படலாமா?
NATIONAL HINDU HOTEL
BOARDING & LODGING HOUSE
FRERE ROAD & MINT ROAD TRAM JUNCTION
FORT, BOMBAY
Phone: 261624
Grams: SUKHNIVAS





சிகரெட் உற்பத்திக்கான ஆள்பலம், நிதி, பொருள் நிறைவு ஆகிய எவ்வளவோ வசதிகள் நம் நாட்டுக்கு உள்ளன. எனினும் பாரதத்திலே, சிகரெட்டுத் தொழில் தனக்குரிய உயர்நிலையை இன்னும் எய்த முடியவில்லையென்றால், அது இந்திய மூலதனம் சுணங்கிப்போயிருக்கிறது என்பதனாலோ, அல்லது தேர்ச்சிவாய்ந்த தொழிலினம் இல்லாமையாலோ அல்ல. ஆனால் இந்தியாவில் வாணிபக் கூட்டுறவு அமைத்த அந்நியர்களின் ஏகபோக உரிமையாட்சியினால்தான்.





பம்பாய்—57.

# பனாமா

**ஒரு நல்ல சிகரெட்—**
**இறுதிவரை இன்பமூட்டுவது**

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

GT. 709-A TM

Greens' Advtg.

# கல்கி தீபாவளி மலர் 1962

## பொருளடக்கம்







# ஸ்ரீமுகம்

பண்டிகை என்றால் சுப காரியத்தைக் குறிக்கிறது. போகிப் பண்டிகை, பொங்கல் பண்டிகை, தீபாவளிப் பண்டிகை எல்லாமே சுபம். சுபத்தைக் கொடுக்கக்கூடிய பண்டிகையான தீபாவளியை இந்தச் சுபத்தைச் செய்கிற வருஷத்தில் சுபமான எண்ணங்களுடன் கொண்டாடுவோமாக. கொண்டாடி, உலக மக்களுக்குச் சுபமே விளைய வேண்டுமென்று சர்வேசுவரனைப் பிரார்த்திப்போமாக.

ஸ்ரீ சங்கராச்சார்ய சுவாமிகள்
காஞ்சி காமகோடி பீடம்



# கஷ்டங்கள்



சாதாரண ஆஸ்திக மக்களும் சாஸ்திரம் படித்து அறிவு அடைந்தவர்களுங்கூட இந்தக் காலத்தில் பகவானை மறவாமல் நினைத்து மனத்தில் பூஜை செய்கிறார்களா? சாப்பிடும்போது அவன் அருளிய உணவு என்று எண்ணிச் சாப்பிடுகிறார்களா? தாகம் தட்டிய போது அவன் கொடுத்த ஆரோக்கியம் என்று ஜலத்தை உட்கொள்ளுகிறார்களா? பெரும்பாலும் இல்லை. அவனை மறந்துவிட்டே காலம் கழிக்கிறோம்.

ஏதேனும் கஷ்டமோ, கவலையோ, நோயோ வந்தால் அப்போது அவனை நினைத்து இறைஞ்சுகிறோம். ஆதலால் பக்திக்கு நோயும், கவலையும், கஷ்டமும் அவசியம் ஆகிறது. அவன் நமக்குக் கஷ்டங்களைத் தருவது இதற்காகவே என்று கொள்ளவேண்டும்.

முன் யுகங்களில் பகவான் பல அவதாரங்கள் எடுத்ததைப் புராணங்களில் படிக்கிறோம். அவ்வப் போது மக்களுக்கு ஆபத்து வந்த காலத்தில் அவன் ஆமையாகவும், மீனாகவும், அற்புத வராகமாகவும், நரசிம்மனாகவும், வாமனனாகவும், ராமனாகவும், கிருஷ்ணனாகவும் அவதரித்தான் என்பது சாஸ்திரம். இந்தக் காலத்தில் நாம் இறைஞ்சும்போது அவன் அவ்வாறு நமக்காக அவதரித்துத் தரிசனம் காட்டுவதில்லை. வேண்டும்போது மறைந்தே நமக்கு அருள்வான். பிரகிருதி நியதிகளை மாற்றி அற்புதங்கள் நமக்காக நடத்த மாட்டான். பிரகிருதி நியதிகளின்படியே எல்லாம் நடப்பதுபோல் நமக்கு அருள்வான். வைத்தியர் நோயைத் தீர்த்ததாகவே காட்டுவான். நல்ல மருந்து நம்முடைய வியாதியை சொஸ்தப்படுத்திற்று என்று நாம் எண்ணும்படி அருள்வான். அரசனுடைய மனம் உருகிற்று என்று நாம் எண்ணும்படிக்கு அரசன் மூலம் அவன் அருள்வான். நாம் பகவானிடம் பெறும் அருள்கள் அனைத்தும் இப்படியே இயற்கை விதிகளின்படி நடந்ததாகக் காட்டித் தன்னை மறைத்துக் கொண்டு மக்களுக்கு அருள்கிறான்.



ஏதேனும் ஒரு பெருங் கவலையும் கஷ்டமும் நேர்ந்த போதுதான் அவனை நாம் நினைக்கிறோம், இறைஞ்சுகிறோம். அப்போதும் அவன் அருளின உடனே அவனை மறந்து விடுகிறோம். மறுபடி கஷ்டம் வரும் வரையில் அவனை நினைப்பதில்லை. ஏன்? இடையில் நாஸ்திகர்களாகவும் பேசுவோம். இது மக்களுடைய சுபாவம். கஷ்டங்கள்





இல்லாவிடில் முற்றிலும் அவனை மறந்தே விடுவோம்.

உலகத்தில் ஏன் கவலையும் கஷ்டமும் இருக்க வேண்டும் என்று சிலர் கேட்பார்கள். பிரபஞ்சத்தின் ரகசியத்தை யாரும் அறிய மாட்டார். மரத்தில் மலராகி, காயாகி, ஏன் பழமாக வேண்டும்? பழமாகவே ஏன் எல்லாம் காய்க்கலாகாது என்றும் கேட்கலாம். அனைத்தும் ஒரு பெரிய ரகசியம். பக்திக்குக் காரணமாகக் கவலையும் கஷ்டமும் நோயும் அமைந்திருப்பது அந்த இரகசியத்துள் ஒரு பாகமாகும்.

தீபாவளி ஒரு கஷ்டமும் நோயும் கவலையும் இல்லாமலே பகவானை நினைவுக்குத் தந்து கொள்ளப் பெரியோர் வகுத்த திருவிழா.

அசுரனை மாய்க்க அவதரித்த கண்ணனை வணங்குவோமாக. எண்ணெய் தேய்த்து ஸ்நானம் செய்யும் போது வெளியழுக்கு போவதுபோல் உள்ளழுக்கும் ஜலத்துடன் போவதாகுக என்று பகவானை இறைஞ்சுவதற்காகத் தான் தீபாவளியை நம்நாட்டு மக்களுக்கு ரிஷிகள் வகுத்திருக்கிறார்கள். தீபாவளியன்று கங்காஸ்நானம் என்று சொல்லுவது அதற்காகவே. பகவானை ஸ்மரித்துச் செய்யும் ஸ்நானம் எல்லாம் கங்கா ஸ்நானம்.



சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்



# இலட்சிய பாரதத்தில்

# இலக்கிய கர்த்தர்கள்

நமது நாட்டில் அமைதியான முறையில் ஒரு மகத்தான புரட்சி நிகழ்ந்து கொண்டிருக்கிறது. இதனுடைய அலைகள் சமூகத்தின் எல்லா அம்சங்களிலும் மோதிக் கொண்டிருக்கின்றன. இந்தப் புரட்சியில் இலக்கிய கர்த்தர்களின் பங்கு முக்கியம் வாய்ந்ததாகும். தங்களது சுடர் விடும் சொல் அலங்காரங்களாலும், நினைவிலே நீங்காது நிற்கும் வாசகங்களாலும், ''ரஸாத்மகம் வாக்யம்'' என்றபடி ஜீவன் ததும்பும் சொல்லோவியங்களாலும், எழுத்தாளர்கள் மக்கள் மனங்களை மாற்றும் ஆற்றல் படைத்தவர்கள். அத்தகைய எழுத்தாளர்களைச் சமூகத்தின் அந்தராத்மா என்றே சொல்ல வேண்டும். சென்ற காலத்துக்கும் வருங்காலத்துக்குமிடையே உள்ள மோதல்களையும் பிரத்யட்சத்துக்கும் கற்பனைக்கும் இடையே உள்ள இறுக்கங்களையும் அவர்களால் பிரதிபலிக்க முடிகிறது. கடந்த காலத்தால் உருவாக்கப்பட்டவர்கள் இலக்கிய கர்த்தர்கள். நிகழ் காலத்தை ஆண்டு அநுபவிப்பவர்கள்; அதோடு வருங்காலத்தை சிருஷ்டி செய்பவர்களாகவும் அவர்கள் விளங்குகின்றனர். அவர்கள் கற்பனைத் திறன் படைத்தவர்கள். பிரத்யட்சத்தைக் கடந்து, கவித்துவக் கனவில் தோய்ந்த மனோபாவம் பெற்றவர்கள். இதனாலேயே அவர்கள் நடைமுறை உண்மைகளுக் கப்பால் சென்று, அவை ஆதர்ச நிலையில் எப்படி இருக்க வேண்டும் என்ற காட்சியைத் தீட்டிக் காட்ட வல்லவர்கள். அவர்களிடம் குடிகொண்டுள்ள இந்த அசாதாரணச் சிறப்புத்தான் பலாத்காரத்தையும் தீமைகளையும் வெறுத்து சத்தியம் தயை ஆகியவற்றில் அவர்களை அன்பு பூணுமாறு செய்கிறது.

கிரேக்க, எகிப்திய, இந்திய நாகரிகங்கள் மூன்றும் புராதனப் பெருமை வாய்ந்தவை. பூகோள ரீதியில் பார்க்கும்போது இம் மூன்று நாடுகளும் பண்டைக் காலத்திலிருந்தபடியேதான் இப்போதும் இருக்கின்றன. ஆனால் ஓர் இனத்தில் இந்தியாவுக்கும் அவற்றுக்கும் வித்தியாசம் உண்டு. இப்போது காணப்படும் எகிப்திய, கிரேக்க நாகரிகங்கள், பண்டைக்கால நாகரிகங்களிலிருந்து முற்றிலும் மாறுபட்டவை. இந்திய நாகரிகமோவெனில் பண்டைக்கால நாகரிகத்துடன் இடைவிடாது தொடர்பு கொண்டே உருவாகி யிருக்கிறது. ஆதி காலத்தில் பாரத மக்கள் உயர்வாக மதித்த அதே பண்புகளைத்தான் இன்றும் நாம் போற்றிப் பின்பற்றி வருகிறோம். இவ்வாறு நமது புராதனப் பண்பாடு காலத்தை வென்றிருப்பதற்குக் காரணம் அது அந்நிய நாகரிகங்களுக்கும் நெகிழ்ந்து கொடுத்து அவற்றையும் நமக்கு ஒவ்வியதாகச் செய்து நமது பண்பாட்டு அமைப்புக்குள்ளே இணைத்துக் கொண்டு விட்டதுதான். நமது மாபெரும் பண்டைக்கால இலக்கியகர்த்தர்களின் படைப்புக்களைப் படிக்கும்போது, நமது இன்றைய சமூகத்தின் இருதயத் துடிப்புக்களையே அவற்றில் கேட்கிறோம். எக்காலத்துக்கும், எந்நாட்டுக்கும் பொதுவான எந்த உயர் லட்சியங்களுக்கு நமது சமூக வாழ்வில் உருக்கொடுக்க வேண்டுமென இன்று நாம் பாடுபடுகிறோமோ அதே லட்சியங்கள் நம் பண்டைய இலக்கியங்களிலும் ஒலிப்பதைக் கேட்கிறோம். இவ்வாறு அன்றி, நம் தேசத்துக்கு ஒத்து வராத முறைகளில் இன்று அந்நியக் கலப்பு நேர்ந்திருப்பதைக் கண்டுதான் நமது தலைவர்கள் — எழுத்தாளர்களும் இந்தக் கோஷ்டியைச் சேர்ந்தவர்களே — மனம் வெதும்புகின்றனர்.

ஃ ஃ ஃ

நாம் பெற்றுள்ள ஆத்மீக தனம் பல நூற்றாண்டுகளுக்கு முன்பிருந்து நமக்குப் பரம்பரைச் செல்வமாகக் கிடைத்துள்ளது. ஆனால் அது இன்றைய சமூகத்தில் நாம் தெற்றெனக் காணும் பல அம்சங்களுக்கு எதிர்மறையாக உள்ளது. எந்தக் கணமும் மக்களைப் பலாத்காரத்தில் ஆழ்த்தி விடக்கூடிய சமயச் சண்டைகள்; ஜாதி, மொழி அடிப்படையில் எழுந்து சில சமயங்களில் கலவரங்களிலும், உயிர்ச்சேதம் கூட ஏற்படக்கூடிய கலகங்களிலும் ஆழ்த்தும் வகுப்புச் சண்டைகள் — இவை நமது ஆன்மீகப் பண்பாட்டுக்கு இயைந்தவை அல்ல. தீண்டாமையினால் விளையும் துன்பமும் இழிவும், சமூகத் தீமைகள் தவிர்க்க முடியாதவை என்று கருதி அவற்றை ஏற்றுக் கொள்வதும், தீமையையே உயர்வாகக் கருதி அதை வழிபடுவதும், நமது மனிதாபிமானத்தைக் களங்கப்படுத்துகின்றன. எனினும் இந்தத் தீமைகளை நாம் சகஜமாக ஏற்றுக் கொண்டு விடுகிறோம். 1947-ம் ஆண்டில் பாரதம்





ராஷ்டிரபதி டாக்டர்
**எஸ். ராதாகிருஷ்ணன்**

சுதந்திரம் பெற்றபோது, நமது நாடு பிளவுபட்டு ரத்தம் சிந்திக்கொண்டிருந்தது. அப்போது நிகழ்ந்த சம்பவங்கள், நம்முடைய நற்பெயருக்குப் பெரிய களங்கமேயாகும்.

இவையெல்லாம் ஏன் நிகழ்ந்தன? நம்முடைய பண்பாட்டின் உட்பொருளிலிருந்து நாம் விலகி நின்று, அதைத் திரித்தோ, அல்லது அது முற்றிலும் பொய்யெனப் பொருள் கொண்டு மாற்றியோ நடந்து கொண்டதால் ஏற்பட்ட விபரீதங்களே இவை. இதை மாற்ற சமய உணர்வு அவசியமாகும்.

ஃ ஃ ஃ

சமயம் என்பது ஒருவனை முற்றிலும் புது மனிதனாக மாற்றி விடுகிறது. சுயநல நோக்குடனேயே மற்ற மனிதர்களையும், இயற்கைப் படைப்புகளையும் நோக்கும் மனோபாவத்தைப் பரிபூரணமாகத் திருத்தி விடுகிறது. மனிதத்தன்மை கொண்டவனுக்குப் பூரணத்துவம் அளிக்கிறது. இதன் விளைவாக அவனுடைய கருத்துக்களில் ஒரு புத்துணர்வு தோன்றி விடுகிறது. தான் அநுசரிக்க வேண்டிய ஒரு புது வாழ்முறைத் தத்துவ வரிசையை அவன் கண்டு கொள்கிறான். இந்நிலையில், கட்டுப்பாடுகளுக்கு உட்பட்ட மானுடன் தன் உள்ளத்தில் அகண்டமான பரம்பொருள் பிரசன்னமாகக் காண்கிறான். இந்த ஸ்வானுபவம் கிடைக்க வேண்டும் என்று தான் ஆண்டவன் படைப்பில் அகப்பட்ட ஜீவராசிகள் அனைத்தும் ஏங்கிக் காத்துக் கிடக்கின்றன. அதுதான், முடிவான நிலை என்று ஆண்டவன் வாக்களித்த ஆனந்த பூமியாகும்.

சமயம் என்பது ஒரு வாழ்க்கை முறை. ஆன்மீகத் துறையில் பூரணமான ஒரு மாறுதலை உண்டாக்குவது தான் அதன் லட்சியம். சமயம் ஒரு கோட்பாடு அல்ல; மனோபாவமும் அல்ல. அது ஓர் அதி முக்கியமான ஆத்ம அனுபவம். உள்ளத்தூய்மை பெறுவதற்காக அனுஷ்டிக்கும் கடுமையான சாதனைகளின் விளைவாக ஏற்படக் கூடியது அது. தவறுதலாக இந்தச் சாதனங்களையே லட்சியங்களாகக் கொள்ளக் கூடாது.

ஸத் எனும் தெய்வீக ஒளி, மனிதத் தன்மையின் மூலம் ஸ்புரிக்கும். மானுடர்களின் மனத் தோற்றத்தின் மூலம், புத்தி வலிமையின் மூலம், சங்கல்ப பலத்தின் மூலம், இந்தத் தெய்வீக ஒளியைத் தூண்டிக் கொள்ள வேண்டும். ''அம்ருதா மனீஷா மனஸா'' என்று இதனால்தான் சொல்லப்படுகிறது. இந்த உயர் நிலையில், ஒருவன் உயர்ந்தவன், ஒருவன் தாழ்ந்தவன் என்ற சச்சரவுகள் பயனற்றவை ஆகிவிடுகின்றன. இதுதான் பண்டைக்கால பாரத ரிஷிகள், கண்ட சத்திய தரிசனம். அக்கால கிரேக்க அறிஞர்கள் கண்ட உண்மையும் இதுவே.

கிறிஸ்தவர்கள் எல்லோரும் ஒன்று சேரவேண்டும், இஸ்லாமியர்கள் எல்லோரும் ஒன்றாகச் சேரவேண்டும், இப்படிப் பல இயக்கங்கள் இருக்கின்றன. இவற்றை விட உலக முழுவதிலும் உள்ள ஆஸ்திகர்கள் யாவரையும் ஒன்றாக இணைக்கும் ஓர் இயக்கமே அவசியமாகும் என்று எண்ண வேண்டிய தருணம் வந்து விட்டது. உலகையெல்லாம் ஒன்றாக இசைக்கும் யோக லக்ஷியத்துக்கு ஜீவாதாரமாக இருக்கக்கூடியது இத்தகைய ஓர் இயக்கமே யாகும். வல்லரசுகள் தங்களுடைய விஞ்ஞான அறிவை மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்ள மறுத்து, தங்களது மூடப் பிடிவாதம் காரணமாக உலக மாந்தர்களுக்குப் பேராபத்து விளைவிப்பதாகப் பயமுறுத்திக் கொண்டிருக்கும் இந்தச் சமயத்தில் உலக மக்கள் அனைவரும் ஆன்மீக அடிப்படையில் ஒற்றுமை காண விழைய வேண்டும்.

இந்த ஆண்டு ஜனவரி மாதம் ரோமாபுரியில் கத்தோலிக்க உயர் குரு பீயா தலைமையில் ஒரு மகத்தான சம்மேளனம் நடைபெற்றது. இதர சமயங்களைச் சேர்ந்த பலரும் கலந்து கொண்டனர். அனைவரையும் வரவேற்றுப் பேசிய உயர்குரு பீயா, அங்கே கூடியுள்ளவர்கள் அனைவரும் உலகத்தைப் படைத்து அளித்தவரும், உலக நாடுகளையெல்லாம் ஆளுபவரும், சத்தியம் நன்மை அழகு





யாவற்றையும் ஊக்குபவரும் ஆகிய ஒரே ஆண்டவனிடம் கொண்டுள்ள ஆழ்ந்த பக்தியால் பிணைக்கப்பட்டவர்கள் என்று கூறினார். மேலும், நாம் பரந்த திறந்த இதயம் உள்ளவர்களாக இருந்தால், மற்றவர்களுடைய இதயக் கதவும் நமக்குத் திறக்கும் என்று அவர் சொன்னார். இந்த மகத்தான உரை கேவலம் ராஜதந்திர முறையில் ஆற்றப்பட்டதல்ல. நாம் எல்லாரும் ஒரே ஆண்டவனின் குழந்தைகள் என்ற திடமான நம்பிக்கையின் விளைவாக உதித்த வாசகங்கள் இவை. அசோகன், ஹர்ஷன், அக்பர் போன்ற இந்தியப் பேரரசர்களும் இதே போன்ற ஆழ்ந்த நம்பிக்கையினால் உந்தப்பட்டுத் தான் செயல் புரிந்தார்கள். நமது அரசியல் சட்டத்திலும் அடிப்படையாக நிற்பது இந்தப் பரந்த மனோபாவந்தான். **ஸத்யம் ஏவ ஜயதே** – சத்தியம் ஒன்றுதான் வெல்லும் என்ற நம் துவஜ வாசகமும், அசோக சக்கரவர்த்தியின் 'ஸமவாய ஏவ ஸாதூன்' என்பதும் எக்காலத்துக்கும் உண்மையான வாசகங்கள்.

மதச் சார்பில்லாதது (secularism) என்ற வாசகம் நமது அரசியல் சட்டத்தில் பிரயோகிக்கப்படவில்லை. ஆனாலும், மத சம்பந்தமாக அரசியல் அமைப்பில் பொதிந்துள்ள உட்கருத்தை விளக்கும் சின்னமாக இந்த வார்த்தையை நாம் உபயோகிக்கிறோம். ஒருவர் மத விஷயத்தில் எவ்விதமான கருத்துக்களைக் கொள்ளவும், அவற்றைப் பின்பற்றவும், பிரசாரம் செய்யவும் நாம் சுதந்திரம் அளித்திருக்கிறோம். ஆனால், இந்த உரிமையால் பிறருடைய சமய சுதந்திரத்தில் தலையிடக் கூடாதென்றும், தார்மிக உணர்வுகளைப் பாதிக்கலாகாது என்றும் விதித்திருக்கிறோம். மதச் சார்பற்றது என்பது, மதமே இல்லாதது என்றோ முழு நாத்திகம் என்றோ பொருளாகாது. ஒவ்வொரு பிரஜையும் தனது ஆன்ம நிறைவுக்கு உகந்த பிரத்தியேக மார்க்கத்தைத் தேர்ந்தெடுப்பதற்கு அநுமதியும், அங்கீகாரமும் அளிப்பதே தனியொரு மதத்தைச் சாராத நம் அரசியல் கொள்கை. கருத்தளவில் மட்டுமே இந்த உரிமை அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. ஆனால், இனச் சண்டைகளையும், வகுப்புச் சண்டைகளையும் தவிர்க்க வேண்டுமானால், இந்தக் கருத்தை நடைமுறையில் நாம் நிலைநாட்ட வேண்டும். தனிமனிதனுடைய கௌரவத்திலும் மதிப்பிலும் ஆழ்ந்த நம்பிக்கை வைப்பதே ஜனநாயகத்தின் ஆதாரத் தத்துவம்.

ஒவ்வொரு மனிதனிடத்திலும் தெய்விகம் குடிகொண்டிருக்கிறது. தெய்விகப் பேரொளியின் கிரணம் நம்மில் ஒவ்வொருவரிடமும் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது. நான்கு வேதங்களிலுமுள்ள நான்கு மகா வாக்கியங்களும் மனிதனுக்குள்ளே விளங்கும் தெய்விகத்தையே கோஷிக்கின்றன.

**ப்ரக்ஞானம் ப்ரம்ம** – விளக்கமுற்ற அறிவே பரம்பொருள்

**அஹம் பிரம்மாஸ்மி** – நான் பரம்பொருளே

**தத் த்வம் அஸி** – அது நீ (பரம்பொருளாகிய 'அது'வும் ஜீவனாகிய 'நீ'யும் ஒன்றே.)

**அயமாத்மா பிரம்ம** – இந்த ஆத்மாவே பரம்பொருள்

இவை அனைத்தும் நம்முள்ளே குடிகொண்டிருக்கும் தெய்விகத்தையே வற்புறுத்துகின்றன. உடல், மனம், இதயம், கற்பனைத் திறன், அறிவு என்ற தொகுப்புக்குள் நின்று உறைவது அதுவே. முன்னேறிச் சென்று தன்னிறைவு எய்த நம்மை உந்துவது இந்தத் தெய்விகச் சக்திதான்.

தர்மத்தின் உட்பொருள் அன்பு. மற்றவர்பால் தயை காட்ட வேண்டும், மன்னித்துவிடும் மனப்பான்மை வேண்டும், அவர்களின் குற்றம் குறைகளை மதிப்பிடும்போது நிதானம் வேண்டும் என்றெல்லாம் அன்பு நம்மைப் பணிக்கிறது. மகான்களும், ஞானிகளும், சாதுக்களும், தீர்க்கதரிசிகளும் இவ்வாறே ஜாதி, மதம், வகுப்பு, தேசம் என்ற வித்தியாசங்களைப் பாராமல் மானிடர்க்காகக் கண்ணீர் சிந்தித் தொண்டு செய்து வருகிறார்கள். 'லோக கல்யாணம்' (உலக மங்களம்) என்ற பரந்த நோக்கில் சகல ஜீவராசிகளின் க்ஷேமத்திலும் ஈடுபாடு கொண்டு செயல்படும் இவர்கள் எக்காலத்துக்கும், எந்நாட்டுக்கும் பொதுவானவர்கள். மற்றவர்களுடைய சுக துக்கங்களைத் தங்களுடையதாகவே கருதிப் பகிர்ந்து கொள்பவர்கள். தன்னை நேசிப்பதைப் போலவே பிறரையும் நேசிக்க வேண்டும் என்ற உயர்ந்த கருத்தை மெய்ப்பிப்பவர்கள் இவர்கள்தாம்.

சமய நம்பிக்கையுள்ள சிலர் சிற்சில சமயங்களில் மனிதத் தன்மையற்றும், நன்னெறி உணர்வுக்கு முரணாகவும் செயல்பட்டால் – சகிப்பு மனப்பான்மையற்றுத் துவேஷத்தை வளர்த்தால் – இதற்குக் காரணம் அவர்கள் பெயரளவில் மட்டுமே சமயப் பற்று கொண்டிருப்பதுதான். பரதத்துவம் குறித்த அநாவசியமான சூட்சும வாதத்திலும், வித்வத்தை மட்டும் காட்டும் நுண்ணிய கொள்கைப் பாகுபாடுகளிலும், சற்றும் இணக்கமற்ற பிடிவாதத்திலும், புறச் சடங்குகளில் அளவுக்கு மீறிய ஈடுபாடு காட்டுவதிலும், வகுப்பு விசுவாசத்திலுமே அவர்கள் திருப்தியடைந்து விடுகிறார்கள். இதன் விளைவாக நம்முடைய சமயப் பற்றை நாம் காண்பித்துக் கொள்ளும் விதமே நம்முள் விளங்கும் தெய்விகப் பேரொளியின் தோற்றத்தை அடியோடு மறைத்து விடுகிறது. இவ்வித மதப் பற்று உயிரற்ற இயந்திரகதியிலேயே இயங்குகிறது. இத்தகைய மதாபிமானம் வகுப்புச் சார்பு கொண்டது. ஆத்ம ஒளி பெறாதது. இதனால்தான் மகா மேதைகளும் ஆத்மானுபவம் உள்ளவர்களாக இருப்பதில்லை. அவர்கள் மகா வித்துக்கள்; ஆனால் ஆத்ம வித்துக்கள் அல்ல. எல்லாப் பிராணிகளும் பரம்பொருள் முன்னிலையில் சமமே என்பதை ஆத்ம வித்துக்களே உணர்கின்றனர். மானிடர்களைக் கண்ணியமாகவும் மரியாதையுடனும் நாம் நடத்தாவிட்டால், உணர்ச்சிகளும் அநுதாபமும் இல்லாதவர்களாக நடந்து கொண்டால்–அவ்வாறு நடந்து கொள்வதால் ஆண்டவனைத் திருப்திப்படுத்துவதாகத் தவறாக எண்ணிக் கொண்டால் — நாம் நம்மையே இழிவுபடுத்திக் கொள்வதுடன் கடவுளையும் இழிவுபடுத்துகிறோம்.

லட்சக்கணக்கான மக்கள் வேலையற்றுக் கிடப்பதாலும், பலர் முழு நேர வேலை இல்லாதிருப்பதாலும், ஜாதி, இனம் முதலிய பிரிவுகள் தவறான முறையில் பயன்படுத்தப்படுகின்றன. மக்களது பொருளாதார நிலைமை உயர்ந்தால், இவ்வாறு பிளவு மனப்பான்மையைப் பயன்படுத்திக் கொள்வது குறையும். எனவே நாம் சமூக வாழ்க்கையை மேல் நிலைக்கு உயர்த்தப் பாடுபட வேண்டும். நானாவித அம்சங்கள் உள்ளடங்கிய ஒரு சமூகத்தை ஒன்றாக இணைத்து ஒரு தேசத்து மக்களாக உருவாக்கும் பணி முடிவில்லாதது. இப்பணியில் நாம் இடையறாது முயன்று கொண்டே யிருக்க வேண்டும். இன்னல்கள், கிளர்ச்சிகள், முரண்பாடுகள் முதலியவை நம் முயற்சியைத் தடை செய்ய இடம் தரலாகாது. பொருளாதாரம், சமூகம், சமயம் ஆகிய எல்லாத் துறைகளிலும் வித்தியாசங்கள் ஒழிவதற்கு மதப் பற்றுள்ளவர்கள் பாடுபட வேண்டும். இந்த ஆக்கப் பணியில் இலக்கியகர்த்தர்களின் பங்கு முக்கியமானதாகும்.

# போதனைமொழி

**எம். பக்தவத்சலம்** (சென்னை மாநில கல்வி, நிதி அமைச்சர்)

நமது விவகாரங்கள் அனைத்தையும் ஒரே மொழி மூலம் நடத்தி வந்தோமேயானால் மொழிப் பிரச்னை என்பதே இருக்காது. பள்ளிகளில் படிப்பதும், சமூக நடவடிக்கைகள் மேற்கொள்வதும் ஒரு மொழியிலே நடைபெற்று விடும். பண்டைக் காலங்களில் அப்படித்தான் இருந்தது. ஆனால் இன்று நம் சமூகம் இருக்கும் நிலைமையில் நாம் தாய்மொழி ஒன்றை மட்டும் கற்றுக் கொண்டால் போதாது. எல்லா நாடுகளும், தங்கள் குழந்தைகளுக்கு அந்தந்த நாட்டுத் தாய்மொழியுடன், பிற மொழிகளையும் கற்றுக் கொடுக்க வேண்டும் என்ற அவசியத்தை உணர்ந்து அதில் அதிக கவனம் செலுத்தி வருகின்றன. நமது பிரதமர் நேருஜி சமீபத்தில் இதுபற்றிய தமது கருத்தைத் தெளிவாக எடுத்து சொல்லி யிருக்கிறார். எகிப்து நாட்டில் அராபிய மொழியும் ஆங்கிலமும் தம் பிள்ளைகளுக்குக் கற்றுக் கொடுக்கிறார்கள். இங்கிலாந்தில் ஆங்கிலத்துடன் பிரஞ்சு மொழி சொல்லித் தரப்படுகிறது. உயர் கல்விமான் என்று விளங்க ஆசைப்படுபவர்கள் லத்தீன் மொழியை இன்றும் பயிலுகிறார்கள். அமெரிக்காவில் பல ராஜ்யங்களில் ருஷ்ய மொழி சிறு வயதிலிருந்தே பள்ளிச் சிறுவர்களுக்குப் போதிக்கப்படுகிறது. ருஷ்ய நாட்டில் பல பிரதேசங்களில் ஆங்கிலம் சொல்லிக் கொடுக்கிறார்கள். லெனின் கிராட் நகரத்திலுள்ள ஓர் உயர் பள்ளியில் ஆங்கிலத்தின் மூலமே பாடங்கள் போதிக்கப்படுகின்றன என்று கேள்விப்படுகிறேன். இது ஏன் என்று கேட்டால் ருஷியக் குழந்தைகள் வெளி யுலகத்தையும் தெரிந்துகொள்ள இது சிறந்த சாதனம் என்று கூறப்படுகிறது. இவற்றை யெல்லாம் பார்க்கும் போது தமிழ்நாட்டில் மொழிப் பிரச்னை என்ற விவாதம் எவ்வளவு அர்த்தமற்றது என்றே தோன்றும்.

தமிழ்மொழி பற்றி இப்போது நம் நாட்டில் உள்ள நிலைமையை நாம் எல்லோரும் நன்றாகவே அறிந்து கொண் டிருக்கிறோம். ஆனால் என்னுடைய குறை என்னவென்றால் தமிழை நாம் சீராகப் படிப்பதில்லை என்பதே. கல்வி ஸ்தாபனங்களில் எல்லாக் கட்டங்களிலும் மாணவ மாணவிகள் தமிழை நன்றாகக் கற்க வேண்டும் என்பதுதான் என்னுடைய விருப்பம். தமிழ் மொழி மூலமே எல்லாப் பாடங்களும் சொல்லிக் கொடுக்கக் கூடும் என்பதிலும் எனக்குப் பூரண நம்பிக்கை உண்டு. சுமார் இருபத்திரண்டு ஆண்டுகளுக்கு முன்பு திருமயிலையில் நடைபெற்ற ஓர் அறிஞர் கூட்டத்தில் உலக நாடுகளின் வெவ்வேறு அரசியல் சட்ட அமைப்புக்களைப் பற்றி நான் சுத்தத் தமிழிலேயே ஏறக்குறைய ஒரு மணி நேரம் பேசி விளக்கினேன். கூட்டத்துக்கு வந்திருந்தவர்கள் ஆச்சரியப்பட்டார்கள். எனவே இது பற்றி ஒரு கட்சிக்கு அவசியமே இல்லை, கட்சி வேண்டாம் என்றுதான் நான் சொல்ல விரும்புகிறேன்.

கடவுளுக்கும், தமிழ் மொழிக்கும் பாதுகாப்பாக யாருமே முன்வர வேண்டிய அவசியமில்லை. தன்னைக் காத்துக் கொள்ளும் வலிமை தமிழுக்குண்டு. தெய்விகமான புனிதத் தமிழைத் தனிப்பட்டவர்கள் நலனுக்கோ அல்லது அரசியல் கட்சிகள் நலனுக்கோ பயன்படுத்திக் கொள்ளப் பார்ப்பது முறையல்ல. அது தமிழ் வளர்ச்சிக்குப் பாதகமானது என்றே கூடச் சொல்ல வேண்டும். குழந்தைக்குத் தாய்ப்பால் அத்தியாவசியமானது தான். ஆனால் எப்போதுமே தாய்ப்பாலை மட்டுமே குடித்துக் கொண்டிருக்க வேண்டும் என்று யாரும் சொல்ல மாட்டார்கள்.

இன்றைய உலக நிலைமையையும், நம்முடைய சூழ்நிலை பற்றியும் நாம் கவனித்து உணர்ந்து கொள்ள வேண்டும். கம்பர், நாம் புகழும் கவிச் சக்கரவர்த்தி. அவர் படித்த படிப்பு போதும் என்றால், அவர் எந்தப் பள்ளியில் படித்தார், எப்படிப் படித்தார் என்றெல்லாம் நம்மில் யாருக்குமே தெரியாது. அப்படி ஒருகால் தெரிந்திருந்தாலும், இன்றைய நிலைமைக்கும் தேவைக்கும் அத்தகைய படிப்பு மட்டும் போதுமா என்றுதான் நாம் கவனிக்க வேண்டும். உலகத்தில் விஞ்ஞான அறிவும், தொழில் நுட்ப அறிவும் மிக வேகமாக வளர்ந்து முன்னேற்றம் அடைந்து வருகின்றன. இந்த முன்னேற்றத்தை நாம் பார்த்துக் கொண்டுதான் இருக்கிறோம். இதன் வேகம் நம்மையும் தாக்கத்தான் செய்கிறது. இந்த நிலைமைக்கு ஏற்றவாறு நம் குழந்தைகளுக்கும் கல்வி அளிக்க வேண்டியது அவசியமாகிறது. இதனால்தான் குழந்தைகளின் பெற்றோர்களும் மற்றோர்களும் தங்கள் குழந்தைகளுக்கு உயர்ந்த ரகக் கல்வி புகட்ட வேண்டும் என்று விரும்பிக் கேட்டுக் கொள்கின்றனர்.

உயர்நிலைப் பள்ளிகளில் தாய்மொழியான தமிழ்மொழி மூலமாகவே பாடங்கள் சொல்லித் தரப்படுகின்றன. ஆனால் தமிழ்மொழி தாய்மொழியாக இல்லாத சிறுபான்மையினர்களுக்கும், மற்றவர்களுக்கும் விதிவிலக்காக ஆங்கிலத்தின் மூலம் ஒரு சில பள்ளிகளில் பாடம் சொல்லித் தரப்படுகிறது. நமது பிள்ளை



களுக்கும் ஆங்கிலம் சொல்லித் தர வேண்டும் என்பது அவசியம் தான் என்றால், அதைச் சிறுவயதிலிருந்தே தொடங்க வேண்டும். அப்படித்தான் முன்காலத்தில் இருந்தது. ஆனால் பிறகு மேல் வகுப்புக்களிலிருந்து ஆங்கிலப் பாடம் தொடங்குவதாக மாற்றப்பட்டது. இதன் விளைவாகத்தான் நமது மாணவ மாணவிகளின் தரம் குறைந்து விட்டது. ஆகவே தென்மண்டல ராஜ்ய அரசாங்கங்கள் இது சம்பந்தமாக ஏகோபித்துச் செய்த பொரிகைகளின்படி இனி மூன்றாவது வகுப்பிலிருந்து ஆங்கிலப் பாடம் தொடங்கப்படவிருக்கிறது.

கல்லூரிகளில் உயர் படிப்புக்கும் தமிழ் மூலம் பாடங்கள் சொல்லிக் கொடுப்பதில் எனக்கு எந்த வித ஆட்சேபமும் இல்லை. இதில் எனக்கு அவாகூட உண்டு என்பதையும் சொல்ல விரும்புகிறேன். இதற்காகத் தேவையான ஆதரவை அளிக்கவும் நான் எப்போதும் தயாராகவே இருக்கிறேன். ஆனால் மாணவர்கள் இதுபற்றி ஆர்வம் காட்டாவிட்டால், அவர்களைக் கட்டாயப்படுத்த நான் விரும்பவில்லை. கூடிய வரையில் எந்த விஷயத்திலும் கட்டாயப்படுத்தி ஒரு நிலைமையை ஏற்படுத்துவதைத் தவிர்க்க வேண்டும் என்பதுதான் என் நோக்கம். மாணவர்கள் வெவ்வேறு பல்கலைக் கழகங்களில் உயர் படிப்புப் படிக்க விரும்புகிறார்கள். மத்திய அரசாங்க உயர் உத்தியோகங்களில் நமது மாணவ மாணவிகள் இன்று முதன்மையாக இருக்கின்றனர். கல்லூரிகளில் ஆங்கில மொழி போதனா முறையை அடியோடு எடுத்து விட்டால் இந்த நிலை வெகுவாகப் பாதிக்கப்படும். இதை மாணவர்களும் நன்றாகவே உணர்வதனால்தான் கல்லூரிகளில் தமிழ் மூலம் பாடங்கள் கற்றுக் கொள்வதில் அதிக உற்சாகம் காட்டவில்லை. இதுதான் உள்ள நிலைமை. இதை மூடி மறைத்துக் காட்டுவதில் பயனில்லை.

இன்றைய நிலைமையில் நாட்டு ஒருமைப்பாட்டைப் பற்றி அதிகமாக வற்புறுத்தப்படுவதையும் நாம் கவனிக்க வேண்டும். இந்தி மொழியில் போதிய பயிற்சி பெற்று, அதனைச் சரிவரக் கையாள முடியாதென்றால், அதற்குப் பதிலாக ஆங்கிலத்தைத்தான் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். ஸ்ரீ சம்பூர்ணானந்த் போன்ற அறிஞர்கள்கூட ஆங்கிலமே போதனாமொழியாக இருக்கலாம் என்று வற்புறுத்தியிருக்கிறார்கள். அறியாமை காரணமாக இந்தி உற்சாகிகளுக்கு ஆங்கிலத்தின் மீது வெறுப்பு ஏற்பட்டு, அவர்கள் அம்மொழியை எதிர்த்துப் போர் தொடுக்கிறார்கள் என்றால் தமிழ் உற்சாகிகளும் அவர்களுடன் சேர்ந்து கொள்ளுவது விவேகமானது அல்ல. நான் யோசித்து வருகிற கல்லூரி போதனாமொழி திட்டத்தின்படி, எந்தக் கட்டத்திலும் தமிழ் மூலம் பாடங்கள் கற்க விரும்புகிறவர்களுக்கு அவ்வாறே கற்பிப்பதற்குப் போதிய ஆதரவு இருக்கும். கல்லூரிகளில் ஆங்கிலத்தின் மூலமும் பாடங்கள் கற்பிக்கப்படும். தமிழை மாணவ மாணவிகள் நன்றாகக் கற்றுக் கொள்வதற்கு எல்லா வசதிகளும் அளிக்கப்படும். தமிழ்ப் போதனாமொழி என்ற அர்த்தமற்ற சர்ச்சையை விட்டுவிட்டுத் தமிழ் இலக்கியத்தை நன்றாகக் கற்றுணர்ந்து அனுபவிக்க வேண்டும் என்ற நன்முயற்சியை மக்கள் எல்லாரும் மேற்கொண்டு அதை நீடிக்கச் செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொண்டு தீபாவளி புனித விழாவின் மங்கல வாழ்த்துக்களை அளிக்கிறேன்.

அட்டைச் சித்திரம்

# அம்பு எய்யும் அன்புத் தம்பதி

பூதேவியாகிய சத்தியபாமைதான் நரகாசுரனை வில் ஏந்தி வதம் புரிந்து தீபாவளியைத் தோற்றுவித்தாள் என்று சொல்வதுண்டு. சீதேவியைச் சீதாதேவியாகத் தன்னுள் தாங்கியிருந்து ஜனக விதேகனுக்கு அளித்தவளும் அதே பூமி தேவிதான்.

வேதனுடன் பிறந்த இந்தச் சீதாதேவி எப்போதேனும் வில் தாங்கியதுண்டா என்ற எண்ணம் எழலாம். அடியாரைக் காப்பதற்காகக்கூடக் கொடியோரைத் தண்டிக்க மனம் கொள்ளாத கருணைத் தெய்வம் மைதிலி. தன்னைச் சொல்லொணா இன்னலுக்கு ஆளாக்கிய அரக்கியரையும் அநுமன் செட்டிக்காமல் காப்பாற்றியவள் அவள். 'குற்றம் செய்யாதார் உலகில் யார் உண்டு?' என்று கேட்ட பொறுமையின் வடிவம் அவள். எனவே, பொறுமைக்குப் பூமாதேவி என்று பெயர் பெற்ற நிலத்தாய் வில் ஏந்தினாலும், அன்னை ஜானகிக்கு வில்லால் பயனிராது என்றே கருதுகிறோம். எனினும் இந்த அருட் தெய்வமும் வதைக்காக அன்றி, விளையாட்டுக்காக வில் தாங்கிய ஓர் அசாதாரணமான நிகழ்ச்சியை வடமொழிக் காவியமொன்றில் காண்கிறோம். அந்த நிகழ்ச்சியையே இம் மலரின் மேலட்டையில் மனோகரமாகத் தீட்டியிருக்கிறார் ஓவியர் மணியம்.

ராமப்பிரபாவம் தரும் நவரசத்தின் இன்சுவையில் நவநவமான சாயல்களைக் கண்டு தேமதுரமாகப் பாடியுள்ள கவிகளில் ராமபத்திர தீக்ஷிதர் என்ற மெய்யடியாரும் ஒருவர். இவர் தமது **ராமஸ்தவகர்ண ரஸாயனத்தில்** வர்ணித்துள்ள காட்சி பொன்றின் நினைவில் பூத்த மலர் தான் இம் மலர் அட்டையில் காணும் ஓவியம். சீதையின் கை மலரில் தனுசைக் கொடுத்து, பூமியில் இரு முழந்தாளும் சேர மண்டியிட்டமர்ந்த தாசரதி, அம்பின் அடியில் கராம்புஜத்தைப் பொருத்தி, ஒரு கண்ணை இடுக்கி மறுகண்ணால் சரத்தின் இலக்கைச் சரி பார்க்கிறானாம். அப்படி சகதர்மிணியுடன் சேர்ந்து வில்லேந்திய வீரராகவனைத் தம் இதய பீடத்துக்கு வரவேற்கிறார் கவி. வைதேஹியுடன் வில் வித்தை பயிலும் இந்த வைகுந்தநாதனைக் காண்பதற்காகப் பஞ்சவடியில் வசிக்கும் முனிவர்கள் ஜபத்தையும், வேதமோதுவதையும், சந்தி உபாசனையையும், வேள்வியையும் அப்படியே விட்டு விட்டு விரைந்தனராம்.

ஆத்மா எனும் அம்பைப் பிரணவ வில்லில் பூட்டி, பரம் பொருள் என்ற இலக்கை நோக்கி அதனை தியான யோகத்தால் எய்ய வேண்டும் என்று விதிக்கிறது உபநிஷதம். ஜீவாத்மா பரமாத்மாவில் லயிப்பதே போல் பரம்பொருளும் அதன் சக்தியும் லயித்திருப்பதைக் காட்டவே தேவியுடன் சேர்ந்து ஒரே வில்லை வளைத்து விளையாட்டு புரிகிறான் பிரபு. அடியாரின் இதயத்தை இலக்காகக் கொண்டு தங்களது அன்பு என்னும் அம்பைத்தான் விளையாட்டாக எய்கிறார்கள் இந்தத் தெய்வதம்பதியர். இந்தக் கருத்தே கவிவாக்கில் தொனிக்கிறது. ஆனால் காவியக் கண்ணுக்கு ஓவிய ஒளி கூட்டி இங்கு நாம் காணும் சித்திரத்தில் அவர்கள் அம்பையும் கவனிக்கவில்லை; வில்லையும் கவனிக்கவில்லை. விற்புருவத்தில் தொடுத்த விட்சணம் என்ற அம்பால் அவர்கள் பரஸ்பரம் கண் 'கவ்வுவது. இருவரும் ஒரே நோக்கோடு நம்மைப் பாலிக்க வருவார்கள் என்ற நம்பிக்கையை ஊட்டுகிறதல்லவா?




அரசியல் புராணம்
சிறையிலிருந்த தேவகி-வசுதேவருக்கு மகாவிஷ்ணு குழந்தையாகப்பிறந்தார்
காங்கிரஸ் சர்க்கார்
அசோகவனத்தில் சீதை
காங்கிரஸ்
1947-க்கு முன்
இன்று
பதவி
ஆசை
கார்க்கோடகன் பிடித்த நளன் குரூபியானன்
துஷ்யந்தன் சகுந்தலையை மறந்து போனான்
"திட்டத்துக்குத் துறவளித்தால்தான் முதலை விடும், தாயே"
சர்க்கார்
மக்கள்
சங்கரர் தாயிடம் வேண்டியது போல...
நிலச்சட்டங்கள்
வரி
கள்
நவீன பகாசுரன்



தேசிய ஐக்கியம்
ஆங்கிலம்
இந்தி
இன்றைய சூர்ப்பனகை
மோகினியைக்காட்டி முனிவர்களை மயக்கிறார் பிட்சாடனர்
கிருஷ்ணரின் ராஸலீலை
மக்கள்
மாயா பஜார்
அர்த்த நாரீசுவரர்
PK



# காங்கோ

ஸி. வி. நரசிம்மன்

(ஐ. நா. சபை நிர்வாகக் காரியதரிசி)



காங்கோப் பிரச்னையானது ஐக்கிய நாடுகள் சபையின் பரிசீலனைக்கு வந்தது இன்று நேற்றல்ல. முன்பு காங்கோவை ஆண்டு வந்த பெல்ஜியத்துக்கும், அந்நாட்டு அரசியல் தலைவர்களுக்குமிடையே தேச சுதந்திரம் குறித்துப் பேச்சு வார்த்தை நடந்தபோதே இப்பிரச்னை ஐ. நா. வின் மீது சுமத்தப்பட்டது. அப்போது நிகழ்ந்த ஒரு தவறுதான் பின்னால் நேரிட்ட தவறுகளுக்கு அடிப்படையாக அமைந்துவிட்டது. பெல்ஜியத்தின் காலனி ஆட்சியின்போது வலுவான மத்திய சர்க்காரொன்று காங்கோ முழுவதையும் பரிபாலனம் செய்தது போலவே சுதந்திர காங்கோவிலும் ஒரே மத்திய சர்க்காரின் ஆட்சியைத் தொடர்ந்ததுதான் இந்தத் தவறாகும். அந்நிய ஆட்சிக்கு இம்முறை ஒத்து வந்திருக்கலாம். எனினும் இந்த அமைப்பு காங்கோ மக்களின் இயல்புக்கு ஏற்றதன்று போலும். பல தரப்பட்ட பழங்குடி மக்கள் தனித்து வாழ்ந்துகொண்டு, பரஸ்பரம் ஒவ்வொரு குடியினரும் மற்றவரைச் சந்தேகிக்கும் நாடு காங்கோ. எனவே சுதந்திரத்துக்குப் பின் இவர்களை ஒன்றாக்கி ஒரே சர்க்காரின் கீழ் ஆள்வது சாத்தியமில்லாதது என்றே தோன்றுகிறது.

ஒவ்வொரு நிலையிலும் ஓரளவுக்குச் சுய ஆட்சிப் பொறுப்புடன் ஆட்சிப் பொறுப்பைப் பல மட்டங்களில் பகிர்ந்துகொள்ளும் முறையிலேயே பிரிட்டனின் ஆளுகையிலிருந்த காலனி நாடுகள் சுயராஜ்ய அமைப்புக்கு மாறின. இவ்வாறு நடைபெறுவதற்கு வேண்டிய சாதகமான சூழ்நிலை காங்கோவில் நிலவவில்லை. ஏனெனில் காங்கோ துர்ச்சம்பவங்களுக்கு மூலகாரணம் அந்நாட்டு மக்கள் தமது அரசியல் விழிப்பையும், பொறுப்பு உணர்ச்சியையும் வளர்க்க எவ்வித வாய்ப்பும் பெற்றிராததுதான்.

காங்கோ மக்களின் கல்வி அபிவிருத்தியும் புறக்கணிக்கப்பட்டே வந்திருக்கிறது. பத்து லட்சம் மக்களுக்கு ஒரு பட்டதாரி என்ற விகிதத்தில் கூட அங்கு கல்விமான்கள் இல்லையென்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!

காங்கோப் பிரச்னைக்கு இன்னொரு காரணம் பெல்ஜியர்களின் ஆதிக்கத்தின் கீழிருந்த ராணுவத்தில் காங்கோலிய அதிகாரிகள் போதுமான அளவு இடம் பெறாததுதான். இப்போது சேனாதிபதியாகவுள்ள ஜெனரல் மொபுடுவும், அவருக்கு அடுத்து ராணுவத்தில் உன்னதமான பதவியிலுள்ள ஜெனரல் லுண்டுலாவும்கூடக் காங்கோ சுதந்திரம் பெறுமுன்பு சாதாரண சார்ஜண்டாக இருந்தவர்கள் தாம்.

இந்தச் சூழ்நிலையில்தான் காங்கோ சுதந்திரம் பெற்றது. அப்போது காங்கோ மக்களில் அரசியல் அநுபவம் பெற்றவர்கள் மிகச் சிலர் தாம் இருந்தனர். ராணுவத்தில் காங்கோலிய அதிகாரிகள் யாரும் கிடையாது. முன்பே சொன்னது போல் பழங் குடிகள் மலிந்த காங்கோலிய மக்களுக்குள் பலவிதமான போட்டி பொறாமைகள் வேறு. எனவே தொடக்கத்திலிருந்தே காங்கோவின் சுதந்திர சர்க்கார் ஸ்திரமற்றுத்தான் இருந்தது. இதனால் தான் காங்கோவின் தலைநகரான லியோபோல்ட்வில்லியில் விடுதலை பெற்ற இரண்டு வாரங்களுக்குள்ளேயே சச்சரவு ஏற்பட்டது; அதையொட்டி பெல்ஜியர்கள் மீண்டும் காங்கோவில் பிரவேசிப்பதும் சாத்தியமாயிற்று. அந்த நிலைமையில்தான் ஐ. நா.வின் உதவி கோரப்பட்டது. பெல்ஜியர்களை வெளியேற்றுவதற்காகவும், காங்கோவில் சட்டத்தையும் ஒழுங்கையும் நிலைநாட்டி அந்நாட்டில் ஐக்கியத்தையும், கட்டுக்கோப்பையும் ஏற்படுத்தவும் ஐ. நா. வின் உதவி தேவைப்பட்டது. பெல்ஜியர்களின் வெளியேற்றத்தை ஐ. நா. சாதித்து விட்டது. ஆனால் காங்கோ ஒற்றுமை விஷயமாகத்தான் அது இன்னமும் முயன்றபடியே யிருக்கிறது.

இந்தத் தாறுமாறான சூழ்நிலையைத்தான் தமக்குச் சாதகமாகக் காங்கோவில் ஒரு பகுதியான கடாங்காவின் தலைவர் ஷோம்பே பயன்படுத்திக் கொண்டார். விலை மதிப்புயர்ந்த பல கனியப் படிமங்கள் கடாங்காவில் உள்ளன. எனவே ஷோம்பே கடாங்காவைத் தனியான சுதந்திர நாடு எனப் பிரகடனப் படுத்திவிட்டார். இன்று வரை காங்கோவிலிருந்து பிரிந்த கடாங்கா தனித்தே யிருப்பதுதான் ஒரு



பெரும் பிரச்னையாயிருக்கிறது. ஏனெனில் கடாங்காவிலுள்ள அந்நியர்களின் பெரிய சுரங்கக் கம்பெனிகளிடமிருந்து கிடைக்கும் வரிகள் இல்லாது போனால் காங்கோ மத்திய சர்க்காரின் பொருளாதாரம் சமநிலையில் இயங்காது. எனவேதான் ஐ. நா. வின் பொதுக் காரியதரிசி ஊ தாண்ட், இப்பிரச்னையை அலசிப் பார்க்கும்போது இறுதியில் அது சுரங்கக் கம்பெனிகளைப் பொறுத்ததே என்று கூறியுள்ளார்.

காங்கோப் பிரச்னையின் பல எதிர் விளைவுகளில் ஒன்று ஐ. நா. சபையில் சென்ற இரண்டாண்டுகளாக ஏற்பட்டுள்ள பயங்கரமான நிதி நெருக்கடியாகும். மாதமொன்றுக்கு ஒரு கோடி டாலர் வீதம் காங்கோவுக்காக ஐ. நா. செலவழிக்க வேண்டியிருக்கிறது. வேறு காரணமில்லாவிட்டாலும் இந்த நிதிப் பற்றுக்குறை ஒன்று காரணமாகவே ஐ. நா. சபை காங்கோ விவகாரத்திலிருந்து விடுபட நேரிடும். இதை நன்கு புரிந்துகொண்டேதான் ஷோம்பேயும் நடந்துகொள்கிறார்.

எல்லா விஷயங்களையும் சரிவர அறியாத சிலர் ராணுவ பலத்தைக் கொண்டு கடாங்கா பிரிவினைப் பிரச்னையை வெகு எளிதில் தீர்த்துவிடலாமென யோசனை சொல்கிறார்கள். ஆனால் நான் இந்தப் பிரச்னையை—ஏன், எந்த அரசியல் பிரச்னையையுமே—பலாத்காரத்தின் மூலம் தீர்க்க முடியாது என்று நம்புகிறேன். காங்கோலியத் தலைவர்கள் சமரஸமாகி ஒருவருக்கொருவர் நல்லிணக்கம் பெற்றால்தான் பிரச்னைக்கு நிரந்தரமான தீர்வு காணமுடியும். அதோடு பந்தோபஸ்து சபையின் அதிகார நிர்ணயத்திலும் மூன்றே சந்தர்ப்பங்களில்தான் ராணுவத்தைப் பிரயோகிக்க இடமிருக்கிறது. உள்நாட்டுப் போரைத் தவிர்ப்பது, கூலிக்காகப் போராடுபவர்களை நாட்டிலிருந்து வெளியேற்றுவது, தற்காப்பு ஆகியவையே இந்தச் சந்தர்ப்பங்கள்.

இன்று, காங்கோப் பிரச்னையைத் தீர்க்க ஐ. நா. எடுத்துள்ள நடவடிக்கைகளின் பலன் என்னவாகுமென ஜோஸ்யம் செய்ய இயலவில்லை.* ஆகஸ்ட் 24-ந்தேதியன்று கார்டினர் அவர்கள் கடாங்காத் தலைவர்களுக்கு ஒரு திட்டத்தை அளித்துள்ளார். ராஜ்யங்களின் வருவாயில் பாதியை அவை வைத்துக்கொண்டு மீதி பாதியை மத்திய சர்க்காருக்கு அளிக்க வேண்டும் என்று இந்தத் திட்டம் கூறுகிறது. அதோடு, நீண்ட நாட்களாக ஷோம்பே வலியுறுத்தி வருவது போல, காங்கோவிலுள்ள ராஜ்யங்களுக்கும் பல இனங்களில் தனிச் சுதந்திரம் அளித்து, சில இனங்களில் அவை யாவும் ஒரு மத்திய சர்க்காருக்குக் கீழ்ப்பட்டு இயங்கும் ஃபெடரல் அமைப்பை நிறுவ வேண்டும் என்றும் இத்திட்டம் கூறுகிறது. சில நாட்களில் ஷோம்பே இத்திட்டத்தைத் தாம் ஏற்றுக் கொள்கிறாரா என்பதைத் தெரிவித்தாக வேண்டும். திட்டத்துக்கு அவர் ஆதரவளித்தால் இரு சாராரும் சிறிதே விட்டுக் கொடுப்பதன் மூலம் ஃபெடரல் சர்க்கார் ஏற்படுவது சாத்தியமாகும்.



திட்டத்தை அவர் மறுத்தால் என்னவாகும் என்ற வினா எழுகிறது. அம்மாதிரி நேரிட்டால் காங்கோவில் ஓர் ஐ. நா.ப் படையை நீடித்துப் பராமரிப்பதில் ஏதும் பொருள் உண்டா வென்று ஐ. நா. வின் பொதுக் காரியதரிசி பந்தோபஸ்துக் குழுவுடன் ஆலோசிப்பதன்றி வேறெதும் செய்ய இயலாது என்றே எனக்குப் படுகிறது. பந்தோபஸ்துக் குழு என்ன முடிவு செய்தாலும் சரி, இவ்வாறு காரியதரிசி அதனைக் கேட்பதொன்றே ஐக்கிய நாடுகள் சபையின் தோல்வியாகும் என்று உலகம் கருதும். ஐ. நா. வுக்கு மட்டுமின்றி, பிரிவினைச் சக்தி நிச்சயமாகத் தலைதூக்கக் கூடிய அநேக ஆப்பிரிக்க நாடுகளுக்கும் அது தோல்வியாகும்.



ஒன்று மட்டும் தெளிவாகத் தெரிகிறது. ஐ.நா.வுக்குக் காங்கோ ஓர் அரிய அநுபவமாகும். காங்கோ நடவடிக்கைகளில் ஐ. நா. பெற்றுள்ள படிப்பினை மற்றப் பல பிரச்னைகளை ஏற்கும்போது அதற்குத் துணை நிற்கும். உதாரணமாக மேற்கு நியூ கினி பிரச்னையை எப்படிச் சமாளிப்பது என்பதற்கு அது உதவலாம். காங்கோ விவகாரத்தில் ஐ. நா. சபை மிகவும் வேகமாகவும், அதிகப்படியாகவும் சென்றுவிட்டது என்று இப்போது பின்நோக்கிப் பார்க்கும்போது எண்ணத் தோன்றுகிறது. இதனால்தான் அது இப்போது தன்னை விடுவித்துக் கொள்ளச் சிரமப் படுகிறது. காங்கோவுக்காகப் பொருளோடு, ஐ. நா. பொதுக்காரியதரிசியாகவிருந்த ஹாமர்ஷீல்ட் உட்படப் பலர் இன்னுயிரையும் அர்ப்பணிக்க நேரிட்டது. இப்போதைய நிலையில் ஐ. நா. காங்கோவிலிருந்து விலகினால், எதிர்காலத்தில் இதே போன்ற சூழ்நிலை எங்கேனும் ஏற்படும்போது உரிய உதவியளிக்க ஐ. நா. வுக்குத் திறனிராது. எனினும், ஐ. நா. ஸ்தாபனம் காங்கோப் பிரச்னைக்கு முடிவு கண்டு சம்பந்தப்பட்ட யாவருக்கும் உற்ற முறையில் தீர்வு காண முடியுமானால், சிறுகச் சிறுக ராணுவ நடவடிக்கைகளைக் குறைத்து, காங்கோவின் அமைதியான உள்நாட்டுப் பரிபாலனத்துக்கும், தொழில் வளர்ச்சிக்கும் மட்டும் நல்லுதவி புரிய இயலும்.



காங்கோப் பிரச்னையின் திருப்பம் எப்படி அமையும் என்பதைக் காலம்தான் உணர்த்த முடியும்.



* இந்தக் கட்டுரை செப்டம்பர் மாதம் இரண்டாம் தேதி எழுதப்பட்டது.

# முந்தையர் வாழ்ந்து முடிந்த கதை



**வா**ழ்ந்ததில் கதை இருக்கலாம்; முடிந்ததில் என்ன கதை இருக்க முடியும் என எண்ணுவீர்கள். ஆனால் தமிழ்த் திருநாட்டின் முதல் நாகரிகக் குடி மக்கள் வாழ்ந்த கதையை அறியவோ அவர்கள் முடிவு பற்றிய விவரங்கள்தாம் உதவுகின்றன.

> **முந்தையர் ஆயிரம் ஆண்டுகள் வாழ்ந்து**
> **முடிந்ததும் இந்நாடே**

என்று பாடி மகிழ்ந்த பாரதியார்,

> **எங்கவர் மாய அவர் உடற் பூந்துகள்**
> **ஆர்ந்ததும் இந்நாடே**

என்றும் அப்பாட்டிலேயே கூறியிருப்பதுதான் என் நினைவுக்கு வருகிறது. நம்முடைய முந்தையர்கள் மாண்டபின் அவர்களது உடலம் அர்ப்பிக்கப் பட்டதும் இந்த மண்ணுக்குத்தான் என்பதைச் சொல்லுகிறார் கவி.

அப்படி மாண்டபின் மானுடரை மண்ணிலிடுவதில் நமது பழங்குடிகள் கைக்கொண்ட பழக்க வழக்கங்களே அவர்களது நாகரீகத்தைப் பற்றி நமக்குத் தெரிவிக்கின்றன. இந்தப் பழக்க வழக்கங்களைப் பற்றி நாம் அறிவது புதைபொருள் இலாகாவின் கண்டுபிடிப்புக்களைக் கொண்டுதான்.

**வ**ரலாற்று முக்கியத்துவம் பெற்றிருந்து இன்று பூமிக்கடியில் புதையுண்டுள்ள சின்னங்களை விதிமுறைப்படித் தோண்டி எடுக்கும் பணி நம் நாட்டில் கடந்த முப்பதாண்டுகளாகத்தான் நடைபெற்று வருகிறது. இந்த ஆராய்ச்சித் துறையில் நாம் முக்கியமாகக் குறிப்பிட வேண்டியவர் ஸர் மார்ட்டிமர் வீலர் அவர்கள் ஆவார். பத்தொன்பதாம் நூற்றாண்டிலும், இந்த நூற்றாண்டின் முதல் முப்பதாண்டுகளிலும் பல சரித்திர நிபுணர்களும், தொல்பொருள் ஆராய்ச்சியாளரும் புரிந்து வந்த சரித்திரப் பணிக்கு நிறைவு தந்தவர் அதிருஷ்டவசமாக இன்றும் நம்மிடையே உள்ள ஸர் மார்ட்டிமர் அவர்கள்தான்.

பாண்டிச்சேரிக்கு அருகிலுள்ள அரிக்காமேடு என்ற இடத்தில் புதையுண்டிருந்த பண்டையப் பொருட்களை ஆராய்ந்து தென் இந்திய சரித்திரத்தில் ஒரு முக்கியமான கால கட்டத்தை நிச்சயமாக நிர்ணயித்தவர் வீலர் அவர்கள் தாம். இவ்விடத்தில் பூமியின் ஒரே மட்டத்தில் இரு வகையான மண் பாண்டங்களைக் கண்டெடுத்தார் வீலர் அவர்கள். இவற்றில் ஒரு வகை, ரோம சாம்ராஜ்ய அர்ரடைன் மட்கல வகையைச் சேர்ந்தவை. இவை கி.மு. முதல் நூற்றாண்டில் மட்டுமே செய்யப்பட்டவை. பாண்டிச்சேரியில் அக்காலத்தில் ஒரு ரோமானியக் குடியிருப்பு இருந்திருக்கிறது. அவர்களுக்காக இந்தப் பாண்டங்கள் தமிழ் நாட்டில் இறக்குமதி செய்யப் பட்டிருக்க வேண்டும். மற்ற வகை மண் பாண்டங்கள் உள் நாட்டிலேயே செய்யப் பட்டவை. இவற்றில் ரோம சாம்ராஜ்ய அர்ரடைன் மண் கலங்களின் காலம் ஏற்கனவே நிர்ணயிக்கப்பட்டுள்ளது. ஒரே மட்டத்தில் புதையுண்ட பொருட்கள் ஒரே காலத்தைச் சேர்ந்திருக்க வேண்டுமென்பது புதை பொருள் ஆராய்ச்சி கண்டுள்ள முடிவாகும். எனவே உள்ளூர் வகையின் காலத்தையும் நிர்ணயிக்க உதவி செய்தார் சர் மார்ட்டிமர். தென் இந்திய சரித்திரத்தைப்பற்றி விதிமுறைக்கு இணங்க நிச்சயிக்கப்பட்ட மிகத் தொன்மையான காலம் இதுவேயாகும். தட்சிண பாரத சரித்திரத்தின் அந்தத் தொன்மையை நிர்ணயிக்க உதவிய பெருமை தமிழகத்தையே சாரும்.

**கி**றிஸ்துவ சகாப்தத்துக்கு முன்பு இந்நாட்டில் வாழ்ந்து முடிந்து போன முந்தையர்களின் சவ அடக்க முறைகளைப் பற்றி நிரம்ப ஆராய்ந்து, பல பிரச்னைகளைத் தீர்த்து, தென் இந்திய சரித்துக்கும், குறிப்பாகத் தமிழக வரலாற்றுக்கும் அரும்தொண்டாற்றியவரும் மார்ட்டிமர் அவர்கள் தாம். பெருங் கல் சவ அடக்கம் (megalithic burials) எனக் கூறப்படுவது இதுவே. இது போன்ற சவ அடக்கங்கள் தென் இந்தியா முழுதும் காணப்படுகின்றன. இந்த மரணச் சின்னங்கள் தான், முன்பு கூறியதுபோல் சரித்திர காலத்தின் தொடக்கத்தில் இருந்த திவ்விய நாகரிகத்தையும், பண்பாட்டையும் கூறுகின்றன. பூமிக்கடியில் சவத்தைச் சுற்றிக் கற்களைப் பெட்டிபோல் அமைத்துப் பூமிக்கு மேல் அந்த இடத்தைக் குறிப்பிடும் வகையில் அதனைச் சுற்றி வளைவாக மிகப் பெருங் கற்களை வைப்பதே இந்தச் சவ அடக்க முறையின் முக்கியமான அம்சமாகும். இந்த அந்திமச் சடங்கு முறையைப் பின்பற்றியவர்களே தமிழ் நாட்டின் முதல் நாகரிக மக்களாவர்.

இவர்கள் யார்? இங்கேயே இருந்தவர்களா? வெளியிலிருந்து வந்தவர்களா? இவர்களுடைய நாகரிகம் எப்போது தோன்றிற்று? எப்போது மறைந்தது? அந்த நாகரிகத்தின் சிறப்பு அம்சங்கள் யாவை? அந்தச் சமுதாயத்தின் விசேஷ இயல்புகள் யாவை? அந்தச் சமுதாய நாகரிகம் தட்சிண பாரதத்தின், தமிழகத்தின், பிந்தைய சரித்திரத்தில் ஏற்படுத்திய விளைவுகள் என்னென்ன? இவற்றைக் குறித்து இன்னும் இறுதியாக முடிவுகள் காணவில்லை. தொல் பொருள், புதை பொருள் குறித்து இன்னும் மிக விரிவான ஆராய்ச்சிகள் நடந்தபின்தான் இவ்விஷ

மேலே: **செங்கல்பட்டு மாவட்டம் காவலூர் கிராமத்திலுள்ள ஒரு பெருங்கல் சவ அடக்க ஸ்தலம். இரு வண்ண மண்பாண்டங்களைக் கவனிக்கவும்.**

**என். ராமேசன் ஐ.ஏ.எஸ்**

யங்கள் நிர்மாணமாக விளக்கம் பெறும். கிறிஸ்துவ சகாப்தத்துக்கு முன்பே நாகரிகம் படைத்திருந்த நந்தமிழ் நாட்டு மக்களை — தங்கள் மரணச் சின்னத்தால் தமது ஜீவன முறைக்குக் குறிப்பு விட்டுச் சென்றுள்ள பூர்வீகக் குடிகளைப் பற்றி விரிவாக அறிய வேணும் என்ற துடிப்புள்ள தமிழர் யாவரும் இனி இந்தத் துறையில் நிகழவிருக்கும் ஆராய்ச்சிகளை ஆர்வம் மீதூற எதிர் நோக்கியிருக்கிறார்கள்.

தென் இந்தியாவின் பெருங் கல் சவ அடக்க முறையைப் பற்றி முதன் முதலில் 1947-ல் மைசூர் ராஜ்யத்தில், சித்தல் தூர்க் மாவட்டத்தில் உள்ள பிரம்மகிரியில் ஆராய்ச்சி நடந்தது. ஆராய்ச்சி புரிந்தவர் ஸர் மார்ட்டிமர் வீலர்.

இதிலிருந்து கிடைத்த உற்சாகம் தென் இந்தியாவில் மலிந்து கிடக்கும் மற்றும் பல பெருங்கல் சவ அடக்க ஸ்தலங்களையும் முறைப்படி ஆராய உதவியது. இந்த ஆராய்ச்சியிலிருந்து தமிழகத்தின் பண்டைப் பெருமை முதன் முதலாக உறுதிப்படலாயிற்று. நமது செங்கல்பட்டு மாவட்டத்திலும் அதனை ஒட்டியுள்ள வட ஆர்க்காடு, தென் ஆர்க்காடு மாவட்டங்களின் பகுதிகளிலும் பெருங் கல் சவ அடக்க முறை பின்பற்றப்பட்டது என்பதைக் காட்டும் ஒரே போன்ற பல சின்னங்கள் கண்டு பிடிக்கப்பட்டன. இதே பிரேத சம்ஸ்கார முறையில் சில மாறுபாடுகளுடன் கூடிய சின்னங்கள் வடார்க்காட்டில் உள்ள திருவாலங்காடு, அரியூர், கரிகாந்தாங்கல் முதலிய இடங்களில் கண்டு பிடிக்கப்பட்டன. பெருங்கல் சவ அடக்க முறையில் மிகவும் சரித்திரப் பிரசித்தி பெற்ற இடங்கள் ஆதிச்சநல்லூர், அமிராம்பாக்கம், சானூர் ஆகியன வாகும். 1950லும் 1952லும் சென்னைக்கு நாற்பத்தைந்து மைல் தொலைவில் உள்ள சானூரில் நடைபெற்ற ஆராய்ச்சிகளிலிருந்து இவ்வித அடக்கமுறையைப் பின்பற்றிய பிரதேசங்கள் யாவும் ஒரே பண்பாட்டைச் சேர்ந்திருக்க வேண்டும் என்ற அநுமானம் வலுப்பட்டது.

எல்லாப் பெருங்கல் சவ அடக்க ஸ்தலங்களிலும் பொதுவாகக் காணப்படும் விசேஷ அம்சங்களாவன: பூமியைத் தோண்டி அடியில் சவத்தை வைத்து அதனைச் சுற்றித் திசைக்கு ஒன்றாக ஒரு பெட்டியின் நான்கு பக்கங்களைப் போல நான்கு பலகை போன்ற கற்களை அமைப்பது. இவற்றில் கிழக்குப் புறமாக உள்ள கற்பலகையில் இடைவெளி விட்டிருப்பது. இந்தக் கல்லறையை ஒரு பாறையால் மூடியிருப்பது; பூமியடியில் கல்லறை உள்ள இடத்தைச் சுற்றி நிலத்தின் மேற்பரப்பிலே வட்டமாகப் பெரும் பாறைகளை அமைப்பது. கல்லறையின் உள்ளே இறந்த மனிதனின் எலும்புக்கூடும், இரும்புக் கருவிகளும், சிவப்பிலும் கருப்பிலுமான மண்பாண்டங்களும் காணப்படுகின்றன.

இதிலிருந்து இந்தச் சவ அடக்கமுறையை அநுசரித்தவர்கள் இரும்பின் உபயோகத்தைக் கண்டறிந்து பயன்படுத்திக் கொண்டவர்கள் என்பது தெளிவாகிறது. மண்பாண்டக் கலையில் அவர்கள் நல்ல தேர்ச்சி பெற்றிருந்தார்கள் என்பதும் தெரிகிறது. சிவப்பாகவும், கருப்பாகவும் மண்ணை வேகவைப்பதென்றால், அதற்குச் சூளையைப் பலவித வெப்ப நிலைகளில் இயக்கும் திறன் தேவையாகும். இத்திறனைத் தம்பழங்குடிகள் பெற்றிருந்து மண் பொருட்களில் வண்ண பேதங்களைக் கண்டிருக்கிறார்கள். இப்பாண்டங்கள் பெரும் கல்லறைகளில் மட்டும் தான் காணப்படுகின்றன.

முதலில் மாவீரர்களை இவ்வாறு அடக்கம் செய்து ஆயுதங்களை உடன் புதைக்கும் பழக்கம் இருந்திருக்கலாம். இதுவே பிற்பாடு ஏனைய மக்களுக்கும் அந்தியச் சின்னமாகிவிட்டது. கல்லறையின் கிழக்குப்புறமுள்ள துவாரத்தின் வழியே இறந்து போனவரின் ஆவிக்கு நீர் வார்த்து, உணவளித்து, இந்தப் புராதன மக்கள் நீத்தார் கடன் ஆற்றியிருக்க வேண்டும் என்பது அநுமானம்.

சரித்திர வல்லுநர்கள் இம்முறையைக் காட்டும் சின்னங்கள் கி. மு. ஆறும் நூற்றாண்டிலிருந்து இரண்டாம் நூற்றாண்டுக்கு உட்பட்டிருக்க வேண்டுமென எண்ணுகிறார்கள். அரிக்கமேடு ஆராய்ச்சியால் கால நிர்ணயம் செய்யப்பட்ட மண்கலங்களின் மட்டத்துக்கு, கீழ் மட்டத்தில் இந்தப் பெரும் கல்லறைகள் காணப்படுகின்றன. இந்த நிலமட்ட வித்தியாசம், இருநூற்றாண்டுகளைக் குறிப்பதாகக் கொள்ளலாம். எனவே பெரும் கல்லறை அடக்கங்கள் கி. மு. இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்தவை எனக் கருதுகிறார் வீலர்.

இந்தக் கல்லறைகளின் மட்டத்துக்குக் கீழ் தமிழகத்தின் எப்பகுதியிலுமே இதுவரை கற்கால மனிதனின் சின்னங்கள் தவிர,



வேறே பண்டை நாகரிகச் சின்னங்கள் காணப்படவில்லை என்பது குறிப்பிட வேண்டியதாகும். இது, புராதனப் பெருமையை அளவுக்கு மீறிப் போற்றுபவர்களுக்கு ஏமாற்றமும் வருத்தமும்கூட அளிக்கலாம். ஏனெனில் தமிழ் நாட்டின் நாகரிக வாழ்வானது கிறிஸ்துவ சகாப்தத்துக்கு முந்தைய ஒரு சில நூற்றாண்டுகளுக்கு முற்பட்டதல்லவென்றுதான் இந்த ஆராய்ச்சிகள் 'கோடி' காட்டுகின்றன. ஹாரப்பா நாகரிகம் முதலியன கிறிஸ்து சகாப்தத்துக்கு மூவாயிரம் ஆண்டுகள் முற்பட்டவை எனும்போது தமிழகத்தின் நாகரிக காலம் அதற்கு மிகவும் பிற்பட்டதே என்று ஏற்படுகிறது. எனினும் புதைபொருள், தொல்பொருள் அறிஞர்கள் யாவரும் ஒருவாறு ஒப்புக்கொள்ளும் விஞ்ஞான பூர்வமான உண்மையை நாம் உணர்ச்சிகளைக் கொண்டு வெல்ல முடியாதல்லவா? இனி தமிழ்நாட்டின் மிகப் பழமை இலக்கியமான சங்க நூல்களில் இந்தச் சவ அடக்க முறை பற்றிக் குறிப்புள்ளதா என்று பார்ப்போம். சங்கத் தமிழிலக்கியம் கி. மு. மூன்றும் நூற்றாண்டிலிருந்து கி. பி. மூன்றும் நூற்றாண்டுவரை உள்ள நாகரிகத்தைப் பற்றிப் பாடுவதாகக் கருதப்படுகிறது. மூடியிட்ட பாண்டங்களில் சடலத்தையிட்டுப் புதைக்கும் பழக்கம் சங்க காலத்தில் இருந்ததாகத் தெரிகிறது. பெரிய பானை ஒன்றில் சடலத்தை அப்படியே இட்டுப் புதைப்பது பற்றிச் சங்கப் பாடல்களில் குறிப்புகள் உள்ளன. இந்தச் சவப் பாண்டங்கள் **தாழி** என்றும் **இம்மத்தாழி** என்றும் குறிக்கப்படுகின்றன. கி. மு. மூன்றும் நூற்றாண்டிலிருந்து கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டு வரையுள்ள இலக்கியத்தில் இந்தத் தாழி பற்றிக் கூறப்பட்டுள்ளது. கல்லறையைச்





மேலே: **சானூர் கிராமத்தில் சேர்ந்து காணும் மூன்று கல்லறைகள்**
கீழே: **கல்லறையைச் சுற்றிப் பூமியின் மேல் அமைந்த கல் வளையம்**
Courtesy: Archaeological Survey of India.

சுற்றிக் கற்களால் போடப்பட்ட வட்டத்தைக் **கற்கிடை** என்று குறிப்பிடுகிறது தஞ்சையில் உள்ள ஒரு கல்வெட்டு. சீனிவிபூ நிஜின்தர்களில் இவை **கல்குட்டு** என்று கூறப்படுகின்றன. இந்தச் சின்னங்கள் உள்ள ஊரிலுள்ளவர் பொதுவாக இவற்றை **முதுமக்கத்தாழி** என்று சொல்வது கவனிக்க வேண்டியதாகும். ஆந்திர நாட்டில் இவற்றை ராட்சஸ குல்லு எனக் கூறுவதாக லெவெல் என்பவர் கண்டிருக்கிறார்.

இந்தச் சின்னங்கள் கி. மு. ஆறும் நூற்றாண்டைச் சேர்ந்தவையாக இருக்கக் கூடுமெனச் சொன்னேன். எனினும் இவ் விஷயத்தில் பலவிதமான கருத்துக்கள் தெரிவிக்கப்பட்டிருக்கின்றன. இவற்றில் மிகவும் முக்கியமானது இந்தப் பழங் குடிகள் ஆதியில் கிழக்கு மத்திய தரைக் கடற்கரைப் பிரதேசத்திலிருந்து புறப்பட்டுத் தமிழகம் வந்தடைந்திருக்கவேண்டும் என்ற கொள்கையே யாகும். மத்திய தரைப் பிரதேசத்திலிருந்து கடலோரமாகவே குடிபெயர்ந்து இந்தியாவின் மேற்குக் கடற்கரை வழியே தமிழகத்தின் மையப் பகுதிக்குள் இம் மக்கள் பிரவேசித்திருக்க வேண்டும்; பிறகு அங்கிருந்து வடக்காக, இன்றைய ஹைதராபாத் வரையில் பரவியிருக்க வேண்டும் என்று எண்ணப்படுகிறது. தென்னிந்தியாவில் பெருங் கல் சவ அடக்கமுறையைப் பின்பற்றிய மக்களின் தோற்றுவாயை மத்தியதரை மக்களுடன் பல மேநாட்டு வரலாற்று அறிஞர்கள் இணைக்கின்றனர். இவர்களில் பாரன் ஹெய்மிண்டார்ஃப் முக்கியமானவர். கிறிஸ்து பிறப்பதற்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு கிழக்கு மத்திய தரைக் கடற் பகுதிகளில் வாழ்ந்தோர் இதே போலச் சவ அடக்கம் செய்திருப்பதே இந்தக் கொள்கைக்கு அடிப்படையாகும். எனினும் முன்பே கூறியது போல இத் தென் இந்தியக் கல்லறைகள் கி. மு. அறுநூறுண்டுக்கு முற்பட்டவை என்று கொள்வதற்குப் புதை பொருட்களின் நில மட்டங்களைப் பற்றிய ஆராய்ச்சி அநுமதிக்கவில்லை. அவ்வாறுனும் மத்திய தரை நாகரிகம் தமிழ் நாட்டுக்குப் பரவச் சுமார் 1400 ஆண்டுகள் பிடித்திருக்கும். இந்தப் பெருங் கால இடைவிட்டை ஒப்புக் கொள்வது சற்றுக் கடினமாக இருக்கிறது.

டாக்டர் பி. சுப்பாராவ் அவர்கள் வேறொரு கொள்கையை * வகுத்துள்ளார். ரிக் வேத காலத்திலிருந்து வடமொழியில் திராவிட மொழிச் சொற்கள் இடம் பெற்றிருப்பதையும், வட இந்தியாவில் பல இடங்களில் பெருங்கல் சவ அடக்கத்தின் இதரச் சின்னங்கள் காணப்படாவிடினும் சிவப்பு, கருப்பு இரு நிறத்திலும் மட்பாண்டங்கள் புதையுண்டிருப்பதையும் ஆதாரமாகக் கொண்டது இவரது கருத்து: இரும்பின் உபயோகத்தை அறிந்திருந்த இந்த ஆதிமக்கள் எங்கிருந்தோ வட இந்தியாவுக்குக் குடிபெயர்ந்து, பிறகு வடக்கேயிருந்து தென்முகமாகச் சென்று தமிழகத்தை அடைந்தார்கள் என்பதே இவரது கொள்கை.

என்றாலும் இப்போதைக்கு நாம் அநுமானங்களுடனேயே தான் திருப்தி காண வேண்டியுள்ளது.



''எங்கள் தீபாவளி மலரில் வெளியிட மத்தாப்பு கொளுத்துவது போல் ஒரு போஸ் தாருங்கள் என்றால் ரூ. 500 கேட்கிறீர்களே!''

''புதுப் பட்டுப் புடவையுடன் நின்றால்தானே பொருத்தமாக இருக்கும்?''

ஏது எப்படியானாலும் இந்தப் பூர்வ குடிகள்தாம் தமிழகத்தின் இரும்புக் காலத்துக்கு வழி காட்டிய, ஒளி காட்டிய பெருமக்கள் என்பது நிச்சயம். மனிதன் இரும்பின் பயனைக் கண்டபின் தான் முழு நாகரிக வளர்ச்சியுற்றான் என்ற கருத்தை யொட்டி நோக்கும் போது இவர்களே நமது முதல் நாகரிகக் குடிமக்கள் என்று தயங்காது கூறலாம். தமிழிலக்கியத்தின் துணை கொண்டு இதனை அழுத்தமாகக் கூறியுள்ளார் ஸ்ரீ கே. ஆர். ஸ்ரீநிவாசன் அவர்கள்.* இம்மக்களுடைய காலத்தில்தான் தமிழர்களுடையவும், தமிழ் நாட்டுடையவும், தமிழ் மொழியுடையவும் புகழ் மகோன்னதமடைந்தது என்பதும் நிச்சயமாக நிரூபணமாகியுள்ளது. இதற்கு முன் கற்கால நாகரிகம் தான் நிலவியிருந்திருக்கிறது. இயற்கையாகக் கிடைக்கும் உணவைத் திரட்டி உண்ண மட்டுமேதான் கற்கால மனிதன் கற்றிருந்தானே அன்றி உணவைச் சமைத்துப் பக்குவமாக்க அவன் அறிந்திருக்கவில்லை. இரும்புக் காலத்தில் தான் இந்த இரண்டாவது படியில் மனிதன் ஏறியது. இந்தக் காலத்துக்குக் கட்டியம் கூறியவர்கள் பெருங்கல் சவ அடக்க முறையைப் பின்பற்றியவர்களே. அவர்கள் தமிழகத்தின் சரித்திர காலத்துக்கும், வரலாறு காணாத தொன்மைக்கும் இடையே வாழ்ந்தவர்களாவர். அவர்கள் இங்கு வந்து குடியேறியவர்கள் என்றே கொள்ளலாம். எனினும் அவர்கள் எங்கிருந்து வந்தவர்கள் என்பதுதான் விளங்காத புதிராக உள்ளது.

அவர்கள் குடியேறியவர்களென அழைப்பதற்கு ஒரு முக்கியமான காரணம் உண்டு. தமிழ் நாட்டில் இரும்புக் காலம் என்பது கற்காலத்திலிருந்து மெல்ல மெல்லக் கிரமமாகப் பரிணமிப்பதாகக் காணவில்லை. தொல்பொருள் கலை ஆராய்ச்சியைக் கொண்டு நோக்கினும், திடுமென இரும்புக் காலம் உதயமானதாகவே காண்கிறது. இதனால்தான் இது புதியதொரு அந்நிய சமுதாயத்தின் தொடர்பினால் நிகழ்ந்திருக்க வேண்டுமென எண்ணப்படுகிறது.

தமிழ் நாட்டின் பூர்வீக மக்களைப் பற்றி எவ்விதமான முடிவான கருத்தும் உறுதிப்படாத இன்றைய நிலையில் வடநாட்டார், தென் நாட்டார் என்று இரண்டு இனங்களாகப் பிரித்து வைத்துப் பேதமாக வாதம் செய்வது பொருளற்றதாகும். தமிழ் நாட்டின் மாபெரும் நாகரிகத்துக்கு யார் வித்தூன்றியவர்களோ, தமிழ் மொழியின் வளத்துக்கு யார் உரமிட்டவர்களோ அவர்களே இந்த மண்ணைச் சேர்ந்தவர்களா, அல்லது வெளியார்களா; அவர்களுக்கும் அவர்களுக்கு முந்தையக் குடிகளுக்கும் என்ன தொடர்பு இருந்தது என்பதெல்லாம் மர்மப் போர்வையில் மறைந்து கிடக்கும் நிலையில், வடக்கு தெற்கு என்ற பேதங்களை வலியுறுத்துவதற்கு ஆதாரமில்லை. இன்னும் எவ்வளவோ இடங்களை வெட்டியும், தோண்டியும் பண்டையச் சின்னங்களைச் சேகரித்து ஆராய்ந்தபின்தான் வாதம் செய்வதில் அர்த்தமுண்டு.

கட்சி, பிரதி கட்சிகளில் நாம் கலந்து கொள்வதில் பயனில்லை. உயிர்த் துடிப்பும், துணிவும், ஆக்கத் திறனும் படைத்துப் புதுப் புது இடங்களை நாடிச் சென்று புதிய நாகரிக முறைகளைப் பரப்பிய இந்த முதல் நாகரிகக் குடிமக்கள்தாம் இரும்பையும், மண்ணையும் பயன் செய்து கொள்ளக் கற்றுத் தந்தவர்கள்; அதோடு வாழ்க்கையை நிறைவு பெறச் செய்யும் பல நுணைப் பொருட்களின் பயனையும் மற்றக் குடிகளுக்குக் கற்பித்தவர்கள். அவர்களுடைய வினைத் திட்பத்தை நாமும் பெற முயலுவதே அவர்களுக்கு நாம் செலுத்தும் நன்றியாகும். சரித்திர நிபுணர்களின் நுண்ணறிவிலும், தொல்பொருள் ஆராய்ச்சியாளர்களின் மண்வெட்டி முனையிலும் ஆதார பூர்வமாக உருவாக வேண்டிய உண்மைகளை நாமாக மனம் போனபடி கற்பிப்பதை விடுவோம். பல இனங்களும், நாகரிகங்களும் ஒன்றோடு ஒன்று பின்னிப் பிணைந்து ஒன்றுகின்றன என்பதொன்றே தொல்பொருட்களை நமக்கு உணர்த்தும் உண்மையாகும். நம் நாட்டில் இந்த கைய பண்பாட்டு இசைவு 2500 ஆண்டுகளுக்கு முன்பிருந்து ஏற்பட்டுள்ளது. இவற்றில் ஒன்றான பெருங்கற் சவ அடக்க காலத்தின் எதிரொலி அதற்குப் பிற்பட்ட பல நாகரிகங்களிலும் ஊடுருவி அவற்றை எழிலுறச் செய்துள்ளது. இப்படிப் பழையனவற்றில் தேவையற்றவற்றை நீக்கி, தேவையுள்ளவற்றை உள்ளடக்கிப் பழையதும் புதியதும் பிரிக்க முடியாதபடி இணைந்து உருவாகியுள்ள நாகரிகத்தைச் சேர்ந்தவர்கள் நாம். மொழி, இனம் இவற்றைப் பிரிவினைச் சக்திகளுக்கு ஊன்றுகோலாகக் கொள்ளாது சரித்திரபூர்வமாக சத்தியத்தை அறிய நமது சக்தியைப் பயனுக்குவதே நம் கடமையாகும்.

* K. R. Srinivasan—Transactions of the Archaelogical Society of S. India 1959—pp. 1-14.



# ஸப்த மாதாக்கள்

'அன்னு'

ஒன்றாய் அரும்பிப் பலவாய்
விரிந்திவ்வுலகெங்குமாய்
நின்றாள்

என்று அன்னை பராசக்தியின் அபரிமிதமான ஆற்றலைப் போற்றுகிறது ஒரு தமிழ்ப் பாடல். 'ஆதியில் இருந்த ஒரே பொருள் அருள் மயமான பரதேவதைதான். அவளிடமிருந்து தான் சராசரங்கள் யாவும் தோன்றின; தேவரும் மூவரும் அவளுடைய குழந்தைகளே' என்று தேவி உபநிஷதங்களும், தேவிபாகவத புராணமும், மந்திர தந்திர சாஸ்திர நூல்களும், பல சாக்த கிரந்தங்களும் பறைசாற்றுகின்றன.

மும்மூர்த்திகளுக்கும் மூத்தவள் என்பதாலேயே தெய்வத் தாயை திரிபுரா என்றும் மகா திரிபுர சுந்தரி என்றும் கூறி வணங்குகிறோம்.

தேவி மாஹாத்மியத்தில் அன்னையைத் துதிக்கும் பிரம்மதேவர், "விஷ்ணுவும், நானும், ஈசானும் எவளால் உடல் தாங்கும்படி செய்விக்கப் பட்டோமோ அப்படிப்பட்ட உன்னைத் துதிக்க எவன்தான் சக்தி உடையவன் ஆவான்?" என்று வினவுகிறார். அதே தேவி மாஹாத்மியத்தில் ரிஷி கூறுவதுபோல "உன்னை யாவுமாகி அவற்றை யெல்லாம் வியாபிக்கும் அன்னை, பக்தர்களின் பொருட்டுப் பல விதங்களில் உற்பவிக்கிறாள்." பக்த கோடிகளின் மனப் பக்குவத்துக்கு ஏற்பவும், துஷ்டர்களின் தீவினைகளுக் கேற்பவும், எண்ணற்ற வடிவங்களில் தோன்றி அருள் புரிந்திருக்கிறாள் அம்பிகை. துஷ்டர்களை சிட்சிப்பதற்காக அவள் ஏந்திய ஆயுதங்களே சிஷ்டர்களை ரட்சிக்கும் படைக்கலங்களுமாயின.

தீக் கொழுந்திலிருந்து தெறிக்கும் சுடர்கள் ஒன்றுகூடி மீண்டும் ஜ்வாலையாவது போல் தேவியிடமிருந்து உற்பவமான தேவர்களின் தேஜஸ் மீண்டும் ஒன்று கூடி அம்பிகையாக உருவெடுத்ததுமுண்டு. இப்படி எல்லா தேவர்களின் திவ்விய காந்தியும் ஒன்றாகச் சேர்ந்தவளே மஹிஷாசுர மர்த்தினியாகிய மஹாலக்ஷ்மி.

தேவர்களையும் சிருஷ்டித்த மஹாதேவி அந்தத் தேவர்களின் தனித் தனி சக்தியாகவும் உருப் பூண்டு விளங்கும் சந்தர்ப்பங்கள் பல உண்டு. சிவ சக்தியின் பரிவார கணங்களாகப் பணி புரிந்து அசுரர்களை அழிக்கப் போர் புரியும் பல சக்திகளாகவும் அன்னையை வணங்குகிறோம். அன்னையென்ற அமிருத சக்தி இவ்வாறு அழிவு சக்தியாகத் தோன்றுவது அதிசயமாகத் தோன்றுகிறது. 'அன்பு வடிவாகி நிற்பள்; துன்பமெலாம் அவள் இழைப்பள்' என்று இதனையே









(மேலே) பிராம்மி
(கீழே) வாராஹி

(மேலே) மாஹேசுவரி
(கீழே) வைஷ்ணவி

தேச கவியும் பாடுகிறார். அன்னை துன்பம் தருவதும் நம் உள்ளக் கோணல்களை நிமிர்த்துவதற்காகவே என்பதுதான் இதன் தாத்பரியம். ரணத்துக்கு அறுவை சிகிச்சை செய்வது போல உலகில் மண்டிய அதருமத்தை அகற்றப் போர் இடுகிறாள் தேவி. சிவம் என்ற அன்புத் தத்துவம் உலகில் நிலை பெற்ற பின் அவளே சாந்த கலியாணகுணசாலினியாகக்காட்சி தருகிறாள். இந்த இரு கோலங்களையும் இணைத்துப் பாடுகிறார் மகாகவி பாரதியார்.

எத்திக்கினிலும் நின் விழியனல்
போய் எட்டித்தானே
எரியும் கோலம் கண்டே
சாகும் காலம்.
அன்னே. அன்னே. ஆடும் கூத்தை
நாடச் செய்தாய் என்னை

என்று பாடும் கவி அதே பாடலில்,

சிவன்
கோலம் கண்டு உன் கனல் செய்
சினமும் விலகும்-கையைக்
கொஞ்சித் தொடுவாய் ஆனந்தக்
கூத்திடுவாய்



என்றும் கூறியிருப்பது சிந்தனைக் குரியதாகும்.

தீயோரை அழிக்கும் அதே போழ்தில் நல்லோரைக்காப்பவள் அன்னை. அவ்வாறு செயசக்தி பரிவார கணங்களாகப் போரிடும் தேவியர் வரிசையில் இடம் கொள்பவரே ஸப்த மாதாக்கள் என்ற ஏழு அன்னையர்.

பிரம்மனின் சக்தியாகிய பிராம்மியும், விஷ்ணுவின் சக்தியாகிய வைஷ்ணவியும், இந்திரனின் சக்தியாகிய ஐந்திரியும், ருத்திரனின் சக்தியாகிய ரௌத்திரியும், வராகரின் சக்தியாகிய வாராஹியும், குபேரனின் சக்தியாகிய கௌபேரியும், குமாரனாகிய முருகப் பெருமானின் சக்தியாகிய கௌமாரியுமே இந்த ஏழு அன்னையர் என்கிறது அமர மகை. இவர்களில் கௌபேரியை நீக்கி, சாமுண்டேசுவரியையும் சர்ச்சிகா என்னும் துர்க்கையையும் சேர்த்து அஷ்ட மாதாக்களைக் கூறுகிறது 'சப்தகல்ப த்ருமம்' என்ற நிகண்டு. சர்ச்சிகாவுக்குப் பதில் மஹாலக்ஷ்மியைக் கூட்டி எண்மரைக் கூறுகிறது மஹாஸ்ராக்ஷர வித்யை. சக்தி பூஜையில் அஷ்ட மாதாக்களே திக்பாலகிகளும் ஆவர்.

பொதுவாக உலக வழக்கில் பிராம்மி, மாஹேசுவரி, வாராஹி, வைஷ்ணவி, மாஹேந்திரி அல்லது ஐந்திரி எனப்படும் இந்திராணி, கௌமாரி, சாமுண்டி இவர்களே ஸப்த மாதாக்களாகப் பூஜிக்கப் படுகின்றனர். ஸப்த மாதாக்களின் சிலாவடிவங்களையும் பல ஆலயங்களில் காணலாம்.

இவற்றில் திருத்தணியிலுள்ள வீரட்டானேசுவரர் கோயிலில் விளங்கும் ஸப்த மாதாக்களின் படங்களையே இங்கு காண்கிறோம். திருத்தணியில் இன்று முருகன் தான் தனிப் புகழுடன் விளங்குகிறான். எனினும் ஆற்றின் அக்கரையிலுள்ள ஈசுவரன் கோயிலும் மிகப் பழமையானது எனத் தெரிகிறது. கி.பி. 890-ல் அபராஜித வர்மனின் காலத்தில் இக்கோயில் கட்டப்பட்டதாகக் கல்வெட்டு உள்ளது. இந்தக் கோயிலில் காணும் ஸப்த மாதாக்கள் பல்லவ சிற்பக் கலையின் விசேஷ லட்சணங்களுக்கு அருமையான எடுத்துக்காட்டாகும்.

'எந்தெந்த தேவனுக்கு எந்தெந்த வடிவமோ, எவ்வகை பூஷணமோ, வாகனமோ அதே போல அந்தந்த தேவனின் சக்தி அவரவரிடமிருந்து வெளிப் போந்து அசுரர்களுடன் போர் புரிந்தாள்' என்ற மந்திரத்துக் கிணங்க இந்தச் சிலைகள் அமைந்துள்ளன.

இங்குள்ள படங்களில் பிரம்மாவுக்குரிய சதுர்முகம், ஹம்ஸ வாகனம், அக்ஷமாலை, கமண்டலு இவற்றுடன் கூடிய பிராம்மியையும், மஹேசுவரனுக்குரிய ரிஷபம், மான் மழுவுடன் விளங்கும் மாஹேசுவரியையும், வக்ர வராகருக்குரியலட்சணங்களோடு கூடிய வாராஹியையும், கருடன், சங்கு, சக்கரம் பொருந்திய வைஷ்ணவியையும், ஐராவதத்தில் ஆரோகணித்து, வஜ்ராயுதம் தரிக்கும் மாஹேந்திரியையும், மயில் வாகனத்தின் மீதமர்ந்த கௌமாரியையும், காளிகாதேவியாகக் காட்சி தரும் சாமுண்டேசுவரியையும் தரிசிக்கிறோம்.

விந்துவாக இருந்துஏழுலகாகப் பரிணமித்தஅன்னை, நாதமாக இருந்து ஏழு இசையாகப் பரிணமித்த அன்னை எழில் மிகு இந்த ஏழுகோலங்களிலும் நிலவுவது உயர்வற உயர் நலமளிக்கும். அந்தந்த தேவர்கள்தரும் சக்தியை யெல்லாம் ஸப்த மாதாக்களும் அருளுவர்.

கடலில் அலைகள் தோன்றினும், தனியாகக் கடல் என்று ஒன்றைக் காணாது அலைகளையே காணுவது போல் எல்லா சக்திகளுக்கும் பிறப்பிடமான பராசக்தியை இவ்வாறு தனித் தனி சக்தியாகக் கண்ட மெய்யடியார்கள் நமக்கு வடித்துத் தந்த ஸப்த மாதாக்களை வழிபட்டு உய்வோமாக.





(மேலே) ஐந்திரி
(கீழே) சாமுண்டி



கௌமாரி





போட்டோ:
என். ராமகிருஷ்ண



# நான் கண்ட அமெரிக்கா: ஒற்றுமை

**தெ.பொ.மீனாட்சிசுந்தரன்**

"யாதானும் நாடாமால் ஊராமால் :
என் ஒருவன்
சாந்துணையும் கல்லாத வாறு"

என்று பாடுகிறார் திருவள்ளுவர். உலகம் ஒரு நேர்முகப் பள்ளிக்கூடம். இதில் ஒவ்வொரு இமைப் பொழுதும் கற்று வருகிறோம். இந்த உண்மையை அண்மையில் தான் அனுபவித்து அறிந்து கொண்டேன். அமெரிக்கா எனக்கு ஏட்டுச் சுரைக்காயாகவே இருந்தது. அங்கே நேரே சென்ற பொழுதுதான் கறிச் சுரைக்காயாக உடலையும் உயிரையும் உணர்வையும் வளர்ப்பதனைக் கண்டறிந்தேன்.







இந்தியாவைக் கண்டுபிடிக்கச் சென்ற கொலம்பஸ் அமெரிக்காவைக் கண்டுபிடித்தல், பின்னர் ஆங்கிலேயர்கள் அங்கு போதல், அமெரிக்காவில் குடியேறியவர்களது விடுதலைப் புரட்சி, யுனைடெட் ஸ்டேட்ஸ் என்ற அரசியலை நிலைநாட்டுதல், மனிதனுக்கு மனிதன் அடிமையாயிருப்பதனை ஒழித்தது. அதனை எதிர்த்த தெற்கு, அது பிரிந்து செல்லாதபடி தடுக்க வடக்குக்கும் தெற்குக்கும் மூண்ட உள்நாட்டுப் போர், நாட்டின் ஒருமைப்பாட்டினை நிலைநாட்டிக் குடியரசின் மேன்மையினை வற்புறுத்துவதன் வழியே மனித உரிமையை வாழ வைத்த லிங்கன் வரலாறு, காந்தியைப்போல் உயிரையே கொடுத்துக் காப்பாற்றிய அவரின் அருட்பெரு விளக்கம், முதல் உலகப் போரின் முடிவில் அமெரிக்கா நுழைதல், அதன் காரணமாகச் செர்மனி தோற்றுப் போதல், உட்ரோ வில்சனின் எல்லாத் தேசக் கழகம், பழிக்குப் பழி வாங்கும் நோக்கத்தில் எழுந்த வெர்சேல்ஸ் உடன்படிக்கை, அமெரிக்கா மனமுடைதல், பழைமை போல வெளிநாட்டில் தலையிடாக் கொள்கையை மேற்கொள்ளுதல், 1929-ல் உலகப் பொருளாதார நெருக்கடி, சமுதாய நலம் கருதி ரூஸ்வெல்ட் திட்டம், இரண்டாம் உலகப் போர், அமெரிக்கா வலிய இரண்டாம் உலகப் போரில் இழுக்கப் படுதல், அணுகுண்டு, ஹிரோஷிமா எரிந்து மண்ணுதல், அனைத்துலக நாடுகளின் நிலையம் தோன்றுதல், வெற்றி பெற்ற நாடுகளிடையே பிளவு, ருஷ்ய—அமெரிக்க வேற்றுமை, குளிர்ப்போர் — இவையெல்லாம் செய்தித்தாள் மந்திரமாக நான் படித்தவையே.

அமெரிக்காவின் குடியரசுத் தேர்தல் கோளாறுகள், இலாபத்தையே கருதும் முதலாளிகளின் இரக்கமற்ற செயல்கள், சிறிது மனம் பிடிக்கா விட்டாலும் கலியாணத்தை உடைத்தெறியும் காட்சி, நூற்றுக் கணக்கான மாடிகள் அமைந்த மாளிகைகள் — இவற்றைப் பற்றிப் படித்துக் காமமும் பணமுமே அமெரிக்கா என்று மயங்கியதும் உண்டு.

இந்திய விடுதலைக்காக ரூஸ்வெல்ட் உழைத்தது. லஜபதிராய் போன்ற நம் தேசியத் தலைவர்கள் அமெரிக்காவில் வாழ வேண்டி நேர்ந்தது. இன்று நமக்கு வரும் அமெரிக்க உதவி — இவற்றையும் உணர்ச்சியோடு படிப்பது இன்னமும் நின்றபாடில்லை. ஆனால் கோவா—காஷ்மீர் முதலிய சிக்கலில் அமெரிக்கா இந்தியாவைக் கடுமையாக எதிர்ப்பது போன்ற இவற்றைப் படிக்கும்போது மனக் கசப்பே வளர்கிறது. ஏதோ இராவண உலகமே நம் மனத்தில் உருவாகிறது.

ஆனால் நேரே அமெரிக்கர்களைக் கண்ட போது அவர்களும் நம்மைப் போல் மனிதர்கள் என்பது உறுதியாகிறது. அறியாமை காரணமாக நம்மைப்பற்றியும் அந்நாட்டுப் பொது மக்கள் ஏதேதோ நினைக்கலாம். அரசியற் போராட்டம் நாம் அறிந்த ஒன்றுதானே! சில பத்திரிகைகள் இந்தியாவைப் பழிப்பதையே தொழி



வாகக் கொண்டுள்ளன. சிக்காகோவில்தான் நான் தங்கி யிருந்தேன். அங்கேயுள்ள பத்திரிகைகள் எல்லாம் இந்திய எதிர்ப்புக்குப் பேர்போனவை. ஆனால் அங்குள்ள பல்கலைக் கழகத்தில் அத்தகைய எதிர்ப்பைக் காணோம். நம்மைப் பற்றி அமெரிக்கா முழுவதும் அறியத் தக்க வகையில் நாமோ, நம் துரைத்தனமோ முழுவதும் முயலவில்லை என்றே கூற வேண்டும். இந்த முயற்சி உலகில் நம்மை வாழ்விக்கும் முயற்சி என்பதனை மறத்தலாகாது.

இங்கு போல அங்கும் தன்னலம் என்ற பேய் தலைவிரித்தாடுகிறது. நாட்டின் செல்வத்திற்கு ஏற்ப அந்தப் பேயாட்டமும் மிகுதியாகலாம். இந்தக் கோடையில் எஃகின் விலையை முதலாளிகள் ஏற்றினார்கள். அவர்கள் சங்கங்களின் கணக்கைப் பார்ப்பது என்று துரைத்தனம் முந்தியது. கென்னடியின் இந்த எதிர்ப்பைக் கண்டதும் முதலாளிகள் அடிபணிந்தனர். விலையைக் குறைத்தனர். இருந்தாலும்







கணக்கில் ஏதோ கோளாறு இருக்கிறது என விளங்குகிறது அல்லவா? செல்வம் கொழிக்கும் நாடு என்பதில் ஐயம் இல்லை. செல்வம் எந்திரம் இவற்றினைக் கையாளும்போது அவற்றின் மாயம் எல்லோரையும் மயக்குகிறது. முடிவில் மனிதன் அவற்றிற்கு அடிமையாகி விடுகிறான். அவற்றை அடக்கியாளுவதை விட்டு அவை தன்னை அடக்கியாள விட்டு விடுகிறான். இதனை நம்முடைய நாட்டிலும்தான் காண்கிறோம். ஆனால் இதற்குக் கழுவாய் போலப் பொது நலத்திற்கும் உதவுகிறான். செல்வம் குவித்த பின் நம் நாட்டிலும் சிலர் கோவில் கட்டவில்லையா? பள்ளிக்கூடம் வைக்கவில்லையா?— இதேபோல ராக்கிபெல்லர் அறநிலையம், கார்னேக் அற நிலையம்

முதலியவற்றை அறியாதார் யார்? ஸ்மித் சோனியன் நிலை விஞ்ஞானக் காட்சிசாலைகள் அமெரிக்கத் தலைநகரம் வாஷிங்டனில் எவ்வளவு பெரியனவாக விளங்குகின்றன! சிக்காகோ பல்கலைக் கழகமே ராக்கிபெல்லர் அமைத்தது. எவ்வளவு அழகிய கட்டடங்கள்! இருந்தும் அவர் பெயர் இல்லை. நாமோ கோயிலில் ஒரு குத்துவிளக்குப் போட்டாலும் அதன் ஒளி எல்லாம் மறைய நம் பெயரை எழுதி வைக்கின்றோம்.

இன்றைய உலகில் அமைதி எங்கும் இல்லாததால் காமம் களியாட்டம் இவற்றில் அமைதி தேட முயல்கிறது உலகம். இதை அமெரிக்காவிலும் காண்கிறோம். வாழ்க்கையின் நெருக்கடி, பரபரப்பு இவை காரணமாக மனநிலை சிதைவது இயல்பு என அறிகிறோம். திருமண முறிவின் எண்ணிக்கை மிகுதி என்றாலும் பெரும்பான்மையான திருமணங்கள் நிலைத்து நிற்கவும் காண்கின்றோம். மனைவியும் மணாளனும் ஒத்துழைப்பதனைப் பார்க்க வேண்டும். அங்கே வீட்டு வேலையாள் என்பது பொதுவாக இல்லை. ஆதலின் சமைப்பது, சமைத்த தட்டுமுட்டுக்களைக் கழுவுவது, வீட்டைத் துப்புரவாக வைத்துக் கொள்வது, துணி துவைப்பது, குழந்தைகளை வளர்ப்பது — எல்லாம் இவர்களே செய்து கொள்ள வேண்டும். இப்படி உழைக்கும்போது எங்கே ஓய்வு? செல்வம் மிக்கவர் நிலைவேறாகலாம். அன்பில் ஒன்றின குடும்பங்களையே பார்த்து மகிழும் பேறு எனக்குக் கிடைத்தது. நல்லதும் கெட்டதும் கலந்துள்ள உலகத்தில் கெட்டதைத் தேடுவானேன்?

நான் கல்லூரியில் படிக்கும் போது திருமணமாகும் வயது அங்கே உயர்ந்து கொண்டே வந்தது. ஆனால் இப்போதோ இளமையிலேயே மணம் செய்து கொள்ளும் வழக்கம் மிகுந்து வருகின்றது. கல்லூரி மாணவர்கள் மணந்து வாழ்கிறார்கள். பெண்கள் கல்லூரிக்கு வருவது இதற்கு என்று கூற முடியாமற் போனாலும் இந்த ஒரு நலமும் விளைகிறது என்றே கூற வேண்டும். கல்லூரிப் படிப்புக்கு வரும் மாணவர் தரம் உயர்ந்தே இருக்கும். ஆகையால், அங்கே தக்க மணமகன் கிடைப்பது எளிது. இதன்பயனாகப் பல திருமணங்கள் கல்லூரிப் படிப்பின் போதே நிகழக் காணலாம். திருமணத்துக்கு முன் காதற்படி முறைகள் வளரும் அல்லவா? இவற்றைக் கண்டு நாம் வெருளலாகாது. அந்த நாட்டு மக்களின் பழக்க வழக்கங்களை மனத்தில் வைத்துக் கொண்டு இவற்றைக் காண வேண்டும். சில பல கோளாறுகள் எழவே செய்கின்றன. ஆண்மக்கள் பெண்மக்களிடம் விரும்பும் ''கற்பு'' என்பதற்கு அங்கு வேறு பொருள். மணந்த பின் மணாளனையே காதலிப்பது என்பதே அங்கு பொருள். கற்க வந்த பெண்கள், மணந்து கொள்வதும் மணந்த பின் தம்முடைய மணாளனைப் படிக்க வைப்பதற்காகத் தாம் உழைத்துப் பணம் தேடித் தருவதும் காணலாம். இந்தச் சூழ்நிலையில் இருபது வயதுக்கு உள்ளாகவே மண வாழ்வு தொடங்கக் காணலாம். இதனாற் காதற் சோதனைகள் குறைந்து வருவதோடு காதல் வாழ்வில் ஓர் அமைதி, பெரும்பான்மையும் பிறக்கக் காண்கிறோம். பழக்க வழக்கங்களையும் எதிர்த்துச் சூழ்நிலை இவ்வாறு சமுதாயத்தை உருவாக்கி வரக் காண்கிறோம்.

இந்தியச் சூழ்நிலையில் பழகிய நாம் அங்கே சென்றதும் பெண்கள் உடைகள் கண்டு திடுக்கிடுவோம். இவை அவர்கள் பழக்க வழக்கங்கள் என்றே விட்டு விட வேண்டும்.

தீண்டாமை நம் நாட்டில் மறைந்து வருகிறது. அடியோடு மறைந்து விட்டது என்று கூற முடியுமா? அமெரிக்காவில் நீக்ரோக்கள் அடிமைகளாக விற்கப்பட்டனர். பின் அடிமை ஒழிப்புச் சட்டம் வந்தது. இருந்தாலும் நீக்ரோக்களைத் தீண்டாதவர்களாகவே பலர் கருதுகின்றனர். தெற்குக்கும் வடக்குக்கும் இன்னும் போராட்டந்தான். ஒரு நாளில் தீராது இந்தச் சிக்கல். ஆனால் நான் தங்கிய சிக்காகோவில் நீக்ரோக்கள் மிகுதி. அவர்கள் வாழுமிடம் சேரி என்று சிலபோது அழைக்கப் பெறும். பல அடுக்கு மாடிகள் தான். என்றாலும் ஏழ்மையும் துப்புரவின்மையும் அங்கே கூத்தாடக் காணலாம். ஏழ்மை என்றால் நம் நாட்டு ஏழ்மையல்ல. அந்த நாட்டுத் தரத்துக்கு ஒத்த ஏழ்மை; அவ்வளவுதான். ஆனால் அவர்கள் தங்களை அமெரிக்கர்கள் என்றே கருதுகிறார்கள். நீக்ரோக்களைத் தீண்டாதவர்களாகக் கருதுவதனைச் சிக்காகோவில் பார்க்க முடியாது என்றாலும் மனத்தாங்கல் இல்லாமல் இல்லை. பல்கலைக் கழகம் வளர இடம் வேண்டுமானால் அடுத்துள்ள இடங்களில் வாழும் நீக்ரோக்களை அப்புறப்படுத்துகின்றனர். எனவே பல்கலைக் கழகத் திட்டத்தை, நீக்ரோக்களை அப்புறப்படுத்தும் திட்டம் என்று எதிர்க்கும் முயற்சியும் அங்கு உண்டு. பல்கலைக் கழகத்தில் பல நீக்ரோ மாணவர்கள் கற்கின்றனர். நீக்ரோ மாணவன் வெள்ளை மாணவியோடு நெருங்கிப் பழகுவதும் உண்டு. காதல் எல்லாத் தடையையும் தாண்டும் போது நிறத் தடையையும் தாண்டாதா? ஆனால் பல்கலைக் கழகத்தார் இவ்வாறு வெள்ளை மாணவிகள் நெருங்கிப் பழகத் தங்கள் பெற்றோரின் ஒப்பம் பெற வேண்டும் என்கின்றனர். இட வசதி இல்லாமையால் எல்லா நீக்ரோ மாணவர்களும் மாணவர் விடுதியில் வாழ முடியவில்லை என்றும் பல்கலைக் கழகம் முறையிடுகின்றது. இங்கெல்லாம் தீண்டாத மனப்பான்மையே உண்டு என்று எதிரிகள் குறை கூறுகின்றனர்.

பல பல இனத்தினர் இந்த இந்திய நாட்டில் வந்த பின் அவர்களை ஓரினமாக்கும் முயற்சியே இந்திய வரலாறு எனலாம். ஒவ்வோர் இனத்தையும் ஒவ்வொரு சாதியாக அமைத்து இந்தியா ஒற்றுமை காண முயன்றது. ஓரளவு வெற்றியும் பெற்று நின்றது. ஒவ்வொரு சாதிக்கே அன்றி ஒவ்வொரு தனி மனிதனுக்கும் ஒத்த உரிமையுண்டு என்னும் குடியரசுக் கொள்கையில் பழைய திட்டம் தோல்வியே பெறுகிறது. எனவே புது வகையில் பழைய சிக்கலைத் தீர்த்து வைக்க வேண்டும். அமெரிக்க நாட்டு வரலாறும் இத்தகைய சிக்கலைத் தீர்த்து வைக்க வேண்டிய நெருக்கடியில் அகப்பட்டுத் திகைக்கிறது. இந்த அடிப்படை உண்மையை உணர்ந்தால் இருவரும் ஒருவருக்கொருவர் உதவலாம்.

சிக்காகோ பல்கலைக் கழகத்தைச் சார்ந்த உயர்நிலைப் பள்ளிக்குச் சென்றிருந்தேன். உலக வரலாற்றுப் பாடம் நடக்கும்போது போனேன். நண்பர் இரங்க ராமானுச ஐயங்கார் அன்று என்னுடன் வந்தார். அவர் வீணை வாசித்தார். பின் என்னை இந்திய வரலாற்றைப் பற்றிப் பேசச் சொன்னார்கள். பல இனச் சிக்கலைச் சமய உலகிலும் அரசியல் உலகிலும் தீர்ப்பதே இந்திய வரலாறு என்று காட்ட முயன்றேன். மொகஞ்சதாரோ கால முதல் இன்று வரை நாற்பது நிமிடங்களில் கூற வேண்டியதாயிற்று. புத்தர், அசோகர், அக்பர், காந்தி—எல்லோரும் இதற்கு உழைத்தவர்கள் என்று காட்டினேன். இது போன்றதுதான் அவர்களுடைய சிக்கல் என்பதனையும் எடுத்துக் காட்டி இரண்டு நாட்டு வரலாற்றையும் ஒற்றுமைப் படுத்த முயன்றேன். வேற்றுமைகளை வற்புறுத்த நேரம் இல்லை. அந்தப் பச்சிளங் குழந்தைகளின் உள்ளத்தைக் கவர இந்த ஒற்றுமைப் பல்லவியே பயன் தந்தது. வேற்றுமை மல்கிய இந்த உலகில் வேற்றுமையை எல்லோரும் காண்கின்றனர். வேற்றுமை இல்லை என்று யார் கூற முடியும்? ஆனால் ஒற்றுமைதான் புலனாவதில்லை. வேற்றுமை இடையே ஒற்றுமை காண்பது தானே இந்தியப் பண்பாட்டின் சிறப்பியல்பு?



# புனிதன் கதை சொன்ன புண்ணியசீலர்கள்

## திருவையாறு பிரம்மஸ்ரீ அண்ணாசாமி பாகவதர்

மறைந்திருந்த காலக்ஷேபக் கலை மீண்டும் மலர்ச்சி பெற்றுள்ள இன்று காலக்ஷேபத் துறையில் வழிகாட்டியாக இருந்த சில மகான்களைப் பற்றி நான் அறிந்தவற்றைப் பெருமையுடன் எழுதுகிறேன்.

எனது குருநாதர் திருப்பழனம் பிரம்மஸ்ரீ டி. என். பஞ்சாபகேச சாஸ்திரிகள், நாடெங்கும் மக்களுக்கு நல்வாழ்வு முறையையும் தெய்வ பக்தியையும் பேரறிவையும் ஹரிகதைகளின் வாயிலாக ஊட்டிய மகான். அதோடு ஹரிகதை செய்ய வேண்டும் என்று அநேகர் ஆர்வம் கொண்டு அந்தத் தொழிலில் இறங்குவதற்கும் அவர் காரணமானார். ஸ்ரீ பாகவதர் அவர்கள் சங்கீத சாஹித்தியங்களில் பரிபூர்ண ஞானம் உடையவர்கள்.



ஹரிகேச [நல்லூர் முத்தையாபாகவதர்]

ஆதியில் ஸ்ரீமத் ராமாயண பாகவதங்களை உபந்நியாசமாகச் செய்து வந்தவர் ஸ்ரீ சாஸ்திரிகள். பிறகுதான் ஹரிகதையில் இறங்கி நாடெங்கும் நிகரற்ற புகழ் அடைந்தார்கள். இவருடைய கதையைக் கேட்பதற்கு ஜனங்கள் எட்டு மைல், பத்து மைல் தொலைவிலிருந்து நடந்து வந்து கேட்டு ரஸித்துப் பரவசப்படுவது வழக்கம். இவரது ஹாஸ்ய ரஸம் நிரம்பிய சொற்கள் ஜனங்கள் நினைவை விட்டு என்றும் நீங்காது. இவருடன் மனப் பொருத்தம் இல்லாதவர்களும்கூட இவருடைய கதையை மறைவில் உட்கார்ந்து கேட்டிருக்கிறார்கள் என்றாலே இவருடைய திறமையை அளிக்க முடிவாகிறதல்லவா ?



ஸ்ரீமத் ராமாயணம், பாகவதம் முதலிய நீண்ட பெரும் கதைகளைப் பன்னிரண்டிலிருந்து இருபத்தைந்துக்கு உட்பட்ட காலக்ஷேபங்களில் விதரணையாக அமைத்துப் பாகவத உலகுக்குக் கச்சிதமான வழிகாட்டிய மகான் இவர்.

இவர் தெய்வங்களை வர்ணிக்கும்போது கேட்பவர் எதிரில் அந்தந்தத் தெய்வங்களைக் கொண்டு வந்து நிறுத்துவார். அதேபோல் கேட்பவர்கள் சம்பவங்களையும் நேரில் பார்த்து, பாத்திரங்களின் சுகதுக்கங்களில் தாங்களும் பங்கு கொள்வது போல் உணர்வார்கள். அவ்வளவு பாவத்துடன் சொற்கள் அமைந்திருக்கும்.

கேட்கும் ஜனங்களுக்கு அலுப்புத்தட்டாத முறையில் வாக்கு வன்மையாலும் வர்ண மெட்டுக்களாலும் மக்களைக் கவர்பவர் ஸ்ரீ பஞ்சாபகேச சாஸ்திரிகள். தியாகையர்வாள் கிருதிகளை இவர் பாடும் அழகும், சுலோகங்கள் சொல்லும் அழகும் வேறு எவர்க்கும் அமையாத பாணி. இவருக்குப் பின் பாட்டுப் பாடக்கூடிய இருவர்களும் நல்ல சாரீர சம்பத்தும், ஞானமும் பொருந்தியவர்களாக அமைந்திருந்ததும் விசேஷமாகும். இவரது கதையைப் பிரபல சங்கீத வித்துவான்களும் ஆர்வத்துடன் கேட்பார்கள். இவருடைய சங்கீதத்தின் மேன்மையும், இவர்கள் மத்யம காலநிரவல்கள் செய்யும் லக்ஷணமும், ராக ஆலாபனை செய்வதில் இவருக்கிருந்த திறமையும் தான் இதற்குக் காரணம். பிரசித்தி பெற்ற காரைக்குடி வீணை சகோதரர்கள் கிருஹத்தில் ஒரு கல்யாணம். அன்று நடந்த கதைக்குக் காலஞ்சென்ற பிரபல சங்கீத வித்துவான் ராமநாதபுரம் ஸ்ரீநிவாஸய்யங்கார் அவர்கள் வந்திருந்து பூரணமாகக் கேட்டார்கள். கடைசியில், ''இவ்வளவு காலம் பாடியும் எனக்கு மத்தியமகால நிரவல் இவ்வளவு ஸ்வாதீனமாக வரவில்லையே'' என்று அவர்கள் சொன்னது இன்னமும் என் நினைவிலுள்ளது.

பாகவதர் அவர்கள் திடமான லய ஞானம் உள்ளவர்கள். பிரபல சங்கீத வித்துவான் கோனேரிராஜபுரம் ஸ்ரீவைத்தியநாத அய்யர் இவருக்கு ஒரு சமயம் பின்பாட்டாக இருந்தார். ஸ்ரீ அழகநம்பியா பிள்ளை அவர்கள் இவருக்கு வெகுகாலம் மிருதங்கம் வாசித்திருக்கிறார்.

ஒவ்வொரு கதையிலும் அந்தந்த ரஸங்களுக்குத் தகுந்தபடி பாவத்துடன் வர்ண மெட்டுக்கள் அமைப்பதில் பரமசமர்த்தர் ஸ்ரீ பஞ்சாபகேச சாஸ்திரிகள்.

கதையில் அவசியமில்லாத பேச்சுக்களும் வளர்த்தலும் இராது. பிறர் மனம் நோகும்படி பேச மாட்டார். எந்தச் சமூகத்தையும் பெருமைப்படுத்தியே பேசுவார். இவரிடத்தில் பொதுவாக யாருக்கும் கோபம் என்பதே வராது. கோபம் வந்தவர்களும் இவரது கதையைக் கேட்டுச் சினம் தணிந்து நேசம் பூண்ட நிகழ்ச்சிகளும் பல உண்டு.

தஞ்சாவூர் கிருஷ்ண பாகவதர்



காரைக்குடியில் ஒரு சமயம் ஒரு தனிகர் வீட்டில் ஸ்ரீ பாகவதர் அவர்கள் கதைக்கு வரக் காலதாமதமாகி விட்டது. வீட்டுக்காரருக்கு மிகவும் கோபம் வந்து விட்டது. எனவே பாகவதரை அவர் வரவேற்கவில்லை. 'கதைவேண்டாம்' என்றே சொல்லி விட்டார். இருந்தும் நயமான குணம் படைத்த பாகவதர் அவர்கள் 'வந்த இடத்தில் கதை செய்யாமல் போவதா?' என்று எண்ணிக்



மாங்குடி சிதம்பர பாகவதர் லக்ஷ்மணாச்சாரியார் குலமங்கலம் வைத்தியநாத பாகவதர்

கதை செய்யத் தவாரால் விட்டார். இரவு சாப்பாட்டுக்குப் பிறகு அங்கு இருநூறு பேர்களுக்கு மேல் உட்கார்ந்து தாம்பூலம் போட்டுக் கொண்டிருந்தார்கள். ஸ்ரீ பாகவதர் அவர்களை அவர்கள் யாவரும் வரவேற்றுக் கதைக்கு ஏற்பாடு செய்து விட்டனர். அன்றையக் கதை வெகு நேர்த்தியாக இருந்தது. கதையில் தம்மை மறந்து ஈடுபட்டு ரசித்த வீட்டுக்காரர் முடிவில் பாகவதரை நமஸ்காரம் செய்தார். "கோபப்பட்டு விட்டேன். மன்னிக்க வேண்டும்" என்று கேட்டுக் கொண்டார். தாம் செய்த தப்புக்காக அதிகத் தொகையும் ஓர் அங்க வஸ்திரமும் கொடுத்துக் கௌரவித்தார். ஸ்ரீ பாகவதர் அவர்கள் அதற்கு, "தங்கள் வீட்டுக்கு அடிக்கடி வந்திருக்கிறேன். எனினும் இது போல் ஒவ்வொரு சமயமும் தங்களுக்குக் கோபம் வராமல் போய் விட்டதால், இத்தனை காலம் நான் அல்லவா நஷ்டப்பட்டு விட்டேன்?" என்றார். இதைக் கேட்ட வீட்டுக்காரரும் சிரித்து விட்டார். பாகவதரது உயர்ந்த பண்பாட்டுக்கு இது ஓர் உதாரணமாகும்.

தாம் வேதாந்த சாஸ்திரத்தில் பெருந் திறமை பெற்றிருந்தாலும் ஹரிகதை சொல்லும் போது ஜனங்களுக்குப் புரியாத வேதாந்த விசாரங்களில் இறங்க மாட்டார்.

இவருடைய கதையை வித்வான்களைப் போலவே பாமர மக்களும் கேட்டு அளவற்ற மகிழ்ச்சியையும், தெய்வபக்தி என்னும் லாபத்தையும் அடைந்திருக்கிறார்கள். இந்த மகான் வகுத்த பாதையில்தான் நாங்களும் போய்க் கொண்டிருக்கிறோம்.

## ஸ்ரீமான் சிதம்பர பாகவதர் அவர்கள்

பிராசீன சம்பிரதாயத்தை ஒட்டியும் உத்தர தேசத்துச் சம்பிரதாயத்தை ஒட்டியும் உத்தமமான முறையில் கதை செய்து வந்த தஞ்சாவூர் பிரம்மஸ்ரீ கிருஷ்ண பாகவதரிடத்தில் கதை கேட்டுக் கதை செய்ய ஆரம்பித்தவர் மாங்குடி சிதம்பர பாகவதர் அவர்கள்.

கதையில் சந்தர்ப்பத்துக்கு ஏற்றபடி ஸ்ரீ தியாகய்யர் கீர்த்தனங்களை ஏராளமாகப் பாடும் திறமை வாய்ந்தவர் இவர். சைவ வைஷ்ணவ பேதமின்றி, இரண்டிலும் கதை சொல்லி ஜனங்களை சந்தோஷப்படுத்தும் திறமை வாய்ந்தவர். நல்ல சாரீர சம்பத்து உள்ளவர். ஆங்கிலப் படிப்பும், ஆராய்ச்சியும், அந்தக் கதைகளில் உபயோகிக்கும் சாதுர்யமும் உடையவர். இவர் 'சங்கீத கலாநிதி' என்ற பட்டமும் பெற்றுப் பாகவதர் குலத்துக்குப் பெருமை தேடிக் கொடுத்தவர். ஜனங்கள் நடந்து கொள்ள வேண்டிய முறையைத் தைரியமாக எடுத்துச் சொல்லுபவர். சம்ஸ்கிருதப்படிப்பாலும் இதர பாஷா ஞானத்தாலும் ரசிகர்களுக்குப் பரம ஆனந்தத்தை உண்டு பண்ணி சர்வ சம்மதமான கொஇதியை அடைந்தவர் மாங்குடி ஸ்ரீ சிதம்பர பாகவதர் அவர்கள்.

சிதம்பரம் ஸ்ரீரங்காச்சாரியார்



## பிரம்மஸ்ரீ லக்ஷ்மணாச்சாரியார் அவர்கள்

இவர்களுடைய கதையை 1914 முதல் 1918 முடிய திருவையாற்றிலேயே கேட்கும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. பூரணமாக வேதாத்யயனம் செய்த கனபாடிகள் இவர். சகல சாஸ்திரங்களிலும் பூர்ண ஞானம் உடையவர். மகாகவி. புராண இதிகாசங்கள், சர்வ மதகிரந்தங்கள், ஆழ்வார் பிரபந்தங்கள் எல்லாவற்றிலும் நல்ல தேர்ச்சியுடையவர். இவர் தம் வீட்டில் செய்த கதையில் சங்கீத மேதைகளான ஸ்ரீ மகா வைத்தியநாதய்யர், ஸ்ரீ பட்டணம் சுப்பிரமணிய அய்யர், ஆகியவர் உற்சாகத்தால் தாமாகவே இவருக்குச் சகாயமாகப் பாடியுள்ளார்கள். ஸ்ரீ லக்ஷ்மணாச்சாரியார் அவர்கள் சதாவதானம் செய்தவர். ஹரிகதையோடு உபந்நியாசமும் செய்தவர் ஸ்ரீ லக்ஷ்மணாச்சாரியார்.

## ஸ்ரீ முத்தையா பாகவதர் அவர்கள்

எனக்கு இவர்களிடம் சொற்பப் பழக்கம் உண்டு. யாரிடமும் பிரீதியுடன் பேசும் சுபாவம் உடையவர். திருவையாற்றில் வேதாத்யயனம் செய்ய வந்தவர். திருவையாறு சபேசய்யரின் தகப்பனாரிடம் சங்கீதம் கற்றுக் கொண்டார். தஞ்சை ஸ்ரீ கிருஷ்ண பாகவதரின் கதையைக் கேட்டுத் தாமும் கதை செய்ய அவா கொண்டதாக ஸ்ரீ முத்தையா பாகவதர் என்னிடம் சொல்லியிருக்கிறார். இவருக்கு சம்ஸ்கிருதம் தவிர, தெலுங்கு, தமிழ், மராட்டி முதலிய பாஷைகளிலும் பாண்டித்தியம் உண்டு. சுயமாகச் சாகித்தியம் செய்யும் திறமை உள்ளவர். இவருடைய கதைகளில் தமிழ் இருசொல் அலங்காரம் விசேஷமாக விளங்கும். சங்கீத சாஸ்திரத்தில் நல்ல பாண்டித்தியம் உடையவர். 'சங்கீத கலாநிதி' என்ற பட்டத்தையும் பெற்றவர். இவர்கள்தான் ஆனந்த ராமாயணத்தில் உள்ள சதிலோசனா, கௌசல்யாபரிணயம் என்ற சரித்திரங்களை முதன் முதலில் கதையாகச் செய்தது.

ராஜஸ்தானங்களில் இவர் ஆஸ்தான வித்வானாக இருந்திருக்கிறார். ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளுடைய சரித்திரத்தை சம்ஸ்கிருதத்தில் ஒரு காவியமாக எழுதி யிருக்கிறார். இவர்களுடைய கதையை எவ்வளவு தரம் கேட்டாலும் அலுக்காது.

பிரம்மஸ்ரீ குலமங்கலம் வைத்தியநாத பாகவதர் அவர்கள், பிரம்மஸ்ரீ சிதம்பரம் ஸ்ரீரங்காச்சாரியார் அவர்கள், ஸ்ரீ சௌந்தரராஜ பாகவதர் அவர்கள் முதலான மகான்களும் மேன்மையான முறையில் ஹரி கதை செய்து அந்தத் துறையில் ஈடுபட்டவர்களுக்கு நல்ல மார்க்கத்தைக் காண்பித்திருக்கிறார்கள். இவர்கள் எல்லாருக்கும் இன்றையப் பாகவத குலத்தின் சார்பில் நன்றியோடு நமஸ்காரங்களை அளிக்கிறேன்.

திருப்பழனம்
ஸ்ரீ பஞ்சாபகேச சாஸ்திரிகள்











# பக்தி வளர்க்கும் பெரியோர்கள்

வேதவியாஸரும் வால்மீகி மகரிஷியும் ஆழ்வார்களும் நாயன்மார்களும் கீர்த்தனாசாரியர்களும் நமது

---

(மேலே இடமிருந்து வலம்)
கிருபானந்தவாரியார்
ஸ்ரீமதி சரஸ்வதி பாய்
டி. எஸ். பாலகிருஷ்ண சாஸ்திரிகள்
(நடுவில் இடது புறம்)
அன்னுசாமி பாகவதர்
(வலது புறம்)
எம்பார் விஜயராகவாச்சாரியார்
(கீழே இடமிருந்து வலம்)
பெங்களூர் கிருஷ்ண பாகவதர்
ஸ்ரீமதி சி. பன்னிபாய்
ஆவுடையார்கோவில் ஹரிஹர பாகவதர்

















வாழ்வு வளம் பெற, மனம் பக்குவம் பெற மகாபாரதம், ராமாயணம் போன்ற காவியங்களும் பக்திப் பாசுரங்களும், கீர்த்தனங்களும் அருளி விட்டுச் சென் றிருக்கிறார்கள். ஆனால் இன்றைய மக்க ளில் எத்தனை பேரால் இவற்றையெல் லாம் அறிய முடியும்! ஆயினும் இந்த மகத்தான செல்வத்தை, பல கஷ்ட நஷ்டங்களிடையே அருமையாகப் பேணிப் பாதுகாத்து நமக்கு அவ்வப்



(இடதுபுறம் மேலிருந்து கீழ்)

சுகப்பிரம்மம்
ராமசுவாமி சாஸ்திரிகள்

கோமல் சேஷாத்ரி ஐயங்கார்

ஸ்ரீவத்ஸ சோமதேவ சர்மா

(நடுவில்)

சேங்காலிபுரம்
அனந்தராம தீட்சிதர்

(வலது புறம் மேலிருந்து கீழ்)

சேங்காலிபுரம்
நாராயண தீட்சிதர்

திருக்குடந்தை
ஸ்ரீனிவாசாச்சாரியார்

கல்லிடைக்குறிச்சி
ராமகிருஷ்ண சாஸ்திரிகள்





56





போது அருளி, நமது அரும் பெரும் பரம்பரையை நிலைநாட்டி வருகிறார்கள் சில பெரியோர்கள். அவர்களில் 'ஹரி கதை' யென்னும் இசையோடு கலந்த உரை நடை-பிரவசன முறையைப் பேணிப் பாதுகாத்து வருபவர்களை முதல் பக்கத்திலும், உபந்நியாச முறையில் பக்திச் செல்வத்தை அள்ளி வழங்குபவர்களை அடுத்த இரண்டு பக்கங்களிலும் காண்கிறோம்.

---

(இடதுபுறம் மேலிருந்து கீழ்)

மஞ்சக்குடி
ராஜகோபால சாஸ்திரிகள்

காரப்பங்காடு
வேங்கடாச்சாரியார்

நாகேசுவர சிரௌதிகள்

(நடுவில்)

மாயூரம்
சிவராமகிருஷ்ண சாஸ்திரிகள்

(வலது புறம் மேலிருந்து கீழ்)

பிரதிவாதி பயங்கரம்
அண்ணங்கராச்சாரியார்

திருவாசகமணி
கே. எம். பாலசுப்பிரமணியம்

வெங்களத்தூர்
மணி சாஸ்திரிகள்











# நேரில் கண்ட தெய்வம்

செங்காலிபுரம் பிரம்மஸ்ரீ அனந்தராம தீக்ஷிதர்



நமது பிழைகளைப் பொறுத்து, குறைகளை நீக்கிக் காக்க வல்லது தெய்வம் ஒன்றே. அந்தத் தெய்வத்தை மறைகளும், பெரியோர்களும் நமக்கெல்லாம் காண்பித்துக் கொடுக்கிறார்கள். மறைகளாலும் பெரியோர்களாலும் கல்லிலும் மண்ணிலும் இருக்கும் தெய்வ சாந்நித்தியத்தைக்கூட நமக்குப் புலனாகுமாறு செய்ய முடியும்.

இவ்வாறுதான் ஆலயங்களில் இருக்கும் பிம்பங்களின் மூலம் எங்குமுள்ள தெய்வ சக்தியை நாமும் கிரகிக்குமாறு செய்கிறார்கள் பெரியோர்கள்; மறை மந்திரங்களின் மூலம் சிலையில் மறைந்துள்ள தெய்வ சக்தியையும் வெளிக் கொண்டு வருகிறார்கள். அப்படி மகான்கள் வேத மந்திரமோதி ஸ்தாபித்த ஆலயங்களில் பதரி, காசி, காஞ்சி, சிதம்பரம், ஸ்ரீரங்கம், திருப்பதி, பழனி, திருச்செந்தூர், குருவாயூர் முதலிய ஆலயங்கள் மிகச் சிறந்தன.

குருவாயூர் க்ஷேத்திரம் மேற்கு சமுத்திரக் கரையில் அமைந்துள்ளது. அங்கு குருவாயூர் அப்பன் என்ற பெயரில் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா எழுந்தருளி இருக்கிறார். இன்றைக்கும் அந்தக் கோவிலில் விடியற்காலம் மூன்று மணி முதல் ஆயிரக்கணக்கான பக்தர்கள் ஸ்நானம் செய்து ஆசாரத்துடன் "குருவாயூரப்பா, நாராயணா, ஸ்ரீ கிருஷ்ணா" என்ற நாமங்களைத் தம்மை மறந்து கோஷித்தபடி தரிசனத்துக்குச் செல்கிறார்கள். பக்தி நெறியை அறியாதவர்களும்கூட அந்தச் சூழ் நிலையில் தம்மை அறியாமல் பகவன் நாம ஜபம் புரிவதைக் காணும்போது ஆலயங்களை ஸ்தாபித்த மகான்களின் மகிமையும், எங்கும் உள்ள தெய்வ சக்தியை விக்கிரகம் மூலம் வெளிப்படுத்தும் மறைகளின் மகிமையும் பிரத்யட்சமாகத் தெரிகிறது. இங்கு எழுந்தருளியுள்ள கிருஷ்ணனின் மூர்த்திகரம் எழுதி முடியாததாகும். இந்தத் தெய்வத்தின் முன்னிலையில் நாராயண பட்டத்ரி என்னும் ஒரு மஹாகவி சுமார் நானூறு வருடங்களுக்கு முன்பு ஸ்ரீ நாராயணீயம் என்ற ஸ்தோத்திரத்தைப் பரவச நிலையில் பாடி அருளினார். இதில் 1034 சுலோகங்கள் உள்ளன. இவை பக்திப் பிரதானமான ஸ்ரீமத் பாகவதத்தின் சாரமேயாகும். ஒவ்வொரு சுலோகமும் முடிந்தவுடன் அதன் தாத்பரியம் சத்தியமானதே என அப்பன் தலையை அசைத்து அங்கீகரித்தாராம்.

ஸ்ரீ பட்டத்ரி, உபநிஷத்து போற்றும் தெய்வம் குருவாயூர் கோயிலில் பிரகாசிக்கிறது என்றும் இது ஜனங்களின் மகா பாக்கியம் என்றும் முதல் சுலோகத்திலேயே வியந்து கூறுகிறார்.

**तत्तावत् भाति साक्षात् गुरुपवनपुरे हन्त भाग्यं जनानाम् ।**

தத்தாவத் பாதி ஸாக்ஷாத் குருபவனபுரே ஹந்த
பாக்யம் ஜனானாம்.

உண்மையாகவே அது ஜனங்களின் பரம பாக்கியம் தான் என்பது ஸ்ரீ அப்பனை நேரில் தரிசித்தவர்களுக்கு நன்கு புலப்படும். அந்த அநுபவத்தைப் புலனாக்கும் வகையில் ஸ்ரீ பட்டத்ரி கூறியுள்ள ஓர் அருமையான கட்டம் நாராயணீயத்தில் உள்ளது. ஸ்ரீ பட்டத்ரி 1024-வது சுலோகத்தில் "உன் மூர்த்திதான் எனக்குக் கதி; என்னை எல்லாவிதப் பிணிகளிலிருந்தும் நீதான் காப்பாற்ற வேண்டும்"

**मूर्तिं ते संश्रयेऽहं पवनपुरपते पाहि मां कृष्ण रोगात् ।**

மூர்த்திம் தே ஸம்ச்ரயேஹம் பவன புரபதே பாஹிமாம்
க்ருஷ்ண ரோகாத்

என்று கதறியபடி கண்ணனின் காலில் விழுந்து நமஸ்கரித்தார்.

அடுத்த பாடலிலிருந்து பரீக்ஷித்து ராஜா ஸ்ரீவைகுண்டத்தைக் கண்ட காட்சியைத் தொடங்க எண்ணினார். ஆனால் ஸ்ரீ குருவாயூரப்பன் கால்களிலிருந்து அவர் தலையைத் தூக்கிய க்ஷணமே அந்தப் பிரபு பட்டத்ரிக்கும் திவ்யமான வைகுண்டத்தைக் காட்டி அருளிவிட்டார். அதைக் கண்ட பட்டத்ரி 'பரீக்ஷித்து பரமபதத்தைக் கண்டான்' எனப் பாடுவதற்குப் பதிலாக "நானும் கண்டேன்; காண்கிறேன்" எனத் தான் கண்ட கோலத்தைப் பத்து சுலோகங்களால் வெகு அற்புதமாக வர்ணித்துள்ளார். அதில் முதல் சுலோகம்:

**अग्रे पश्यामि तेजो निबिडतरकलायावलीलोभनीयम्**
**पीयूषाप्लावितोऽहं तदनु तदुदरे दिव्यकैशोरवेषम् ।**
**तारुण्यारंभरम्यं परमसुखरसास्वादरोमाञ्चिताङ्गैः**
**आवीतं नारदाद्यैर्विलसदुपनिषत्सुन्दरीमण्डलैश्च ॥**

அக்ரே பச்யாமி தேஜோ நிபிடதர கலாயாவலீ லோபனீயம்
பீயூஷாப்லாவிதோஹம் ததனுததுதரே திவ்ய
கைசோரவேஷம்।

தாருண்யாரம்பரம்யம் பரம ஸுகரஸாஸ்வாத
ரோமாஞ்சிதாங்கை:
ஆவீதம் நாரதாத்யை: விலஸது பனிஷத்
ஸுந்தரீ மண்டலைச்ச ||

'இங்கு என் முன்னிலையில் நீருண்ட மேகம் போன்ற திருமேனியும், ஒளி வடிவமும், நல்ல யௌவனமும் கூடிய ஸ்ரீ குருவாயூரப்பனைக் காண்கிறேன்; கண்டு அமிருதத்தால் நனைக்கப்பட்டவன் போல் ஆகிறேன். பரமானந்தத்தை அநுபவிக்கிறவர்களும், மயிர் சிலிர்த்தவர்களுமான நாரதர் போன்ற முனிவர்கள் சூழ — நாரீமணிகளின் உருவத்துடன் விளங்கும் உபநிஷத்துக்கள் சூழ — நிற்கும் கண்ணனைக் காண்கிறேன்' என்பது இதன் பொருள். இப்படி திவ்விய தரிசனம் அளித்த ஸ்ரீ குருவாயூரப்பனிடம் ''தங்களது மங்களமாகிய இரண்டு நேத்திரங்களின் கடாட்சத்தையும் அநாதனை என்மீதும் வீசவேண்டும்'' (क्षिप्यतां मय्यनाथे - க்ஷிப்யதாம் மய்யநாதே) என வேண்டினார் பட்டத்ரி.

உடனே ஸ்ரீ அப்பன் ''உன்னைக் காப்பதற்கு நான் ஒருவன் இருக்கும் பொழுது நீ அநாதன் எனச் சொல்லலாகுமா?'' என்று கேட்டாராம். அப்பனின் கருணையைக் கண்ட நாராயண பட்டத்ரி, கடைசி சுலோகத்தில் ''தங்கள் மகிமை எங்கே, நான் எங்கே? தங்கள் மகிமையை நான் அறிய முடியுமா? அப்படியிருக்க நான் அதனை வர்ணிக்க ஆரம்பித்தது எவ்வளவு பெரும் தவறாகும்? எல்லா உலகத்தையும் காக்கும் தாங்கள் அந்தத் தவற்றைப் பொறுத்துக் கொள்ள வேண்டும்''

अज्ञात्वा ते महत्त्वं यदिह निगदितं विश्वनाथ क्षमेथाः ।
அஜ்ஞாத்வா தே மஹத்வம் யதிஹ நிகதிதம்
விச்வநாத க்ஷமேதா: ।

என்று காலில் விழுந்து பணிந்தாராம். அப்பொழுது ஸ்ரீஅப்பன் ''நீ என்னை வர்ணிக்காவிடில் என் மகிமையைப் பக்தர்கள் எவ்வாறு உள்ளபடி உணர்வார்கள்?'' என்று அன்புடன் வினவினாராம். மேலும் பட்டத்ரி விரும்பும் எந்த வரனையும் தருவதாகக் கூறினாராம். ''இந்த ஸ்தோத்திரத்தைப் படிப்பவர்களுக்கும், கேட்பவர்களுக்கும் தங்களது பிரஸாதம் கிட்ட வேண்டும்'' என அப்போது சகல உலகுக்காகவும் வரம் கேட்டுப் பெற்றார் பட்டத்ரி. ஆயுஸ், ஆரோக்கியம் முதலிய சகல சௌக்கியங்களும் அவர்களுக்குக் கிடைக்க வேண்டுமெனவும் வேண்டினாராம்.

இப்படி ஸ்ரீபகவானை பட்டத்ரி நேரில் கண்டு நாம் ஒருவருக்கொருவர் உரையாடுவது போல் பேசியிருக்கும் அற்புதம் நாராயணீய ஸ்தோத்திரம் முழுவதிலும் நிருபணமாகிறது. காளிய நர்த்தனம், ராஸக்கிரீடை முதலிய காட்சிகளைப் பிரத்யட்சமாகக் கண்டு ஸ்தோத்திரங்களாகப் பாடியிருக்கிறார் பட்டத்ரி.

பகவான் எப்படி ஐந்தாவது வயதில் காளிய நர்த்தனமும், ஏழாவது வயதில் ராஸக்ரீடையும் செய்திருக்க முடியும் என ஸ்ரீ பட்டத்ரி யோசித்தாராம். உடனே ஸ்ரீ குருவாயூரப்பன் தனது கோயிலிலேயே இந்தச் சரித்திரங்களை நடத்திக் காட்டினாராம்.

ஸ்வாமி நர்த்தனம் செய்வதற்குத் தக்கவாறு விருத்தத்தை அமைத்து இந்த ஸ்தோத்திரங்களைப் பாடியுள்ளார் பட்டத்ரி. இவற்றைப் படிப்பவர்களுக்கு ஸ்ரீ குருவாயூரப்பன் நேரில் தரிசனம் அளிப்பது போல் தோன்றுகிறது. ஸ்ரீ கோபாலனுடைய பாலலீலைகளை பட்டத்ரி கூறும் இடத்தில், प्रतिनवनवनीतं - ப்ரதி நவநவநீதம் எனத் தொடங்கும் ஒரு அற்புத சுலோகம் உள்ளது.

''குருவாயூரப்பா, தாங்கள் குழந்தையாக இருக்கும்பொழுது சில கோபிகைகளின் வீடுகளில் மிக மதுரமாய்ப் பாடிக் கொண்டும், சில கோபிகைகளின் வீடுகளில் அழகாக நர்த்தனம் செய்து கொண்டும் புது வெண்ணெய் வேண்டினீர்களாமே? அப்போது கோபிகைகள் வெண்ணெயை விழுங்கினாலும் தங்களுக்கு நெஞ்சு வலிக்குமோ என தயை கொண்டு, நெய்யைக் கொடுத்தார்களாமே! அதைத் தாங்கள் சாப்பிட்டீர்களாமே? இதெல்லாம் வாஸ்தவமா?'' எனக் கேட்க ஸ்ரீ அப்பனும் ''ஆம், ஆம்'' எனத் தலையை அசைத்து ஒப்புக்கொண்டதைப் படம் பிடித்துக் காட்டுகிறது இந்த சுலோகம். பட்டத்ரியின் வாக்குவன்மையால் ஸ்ரீ அப்பன் பாடுவது போலும், ஆடுவது போலும், நெய்யையும் பாலையும் குடிப்பது போலும் நம் மனக்கண் முன் தோன்றுகிறது. பல பக்தர்கள் இக்கலியிலும் நாராயணீய ஸ்தோத்திரங்களைப் படிப்பதாலும், ஸ்ரீ அப்பனைத் தரிசிப்பதாலும் கோரிய பலனை அடைந்து வருகின்றனர்.

இவ்வளவு பெருமைகள் பொருந்திய ஸ்ரீ குருவாயூரப்பனைத் தீபாவளி புண்ணியகாலத்தில் ஸ்மரிப்பவர்கள் ஸகல மங்களங்களையும் அடைவார்கள். தீபாவளி என்பது உலகு அளந்த பெருமாளாகிய திரிவிக்கிரமனுக்கு மஹாபலி தன்னையும் தனது பொருள் யாவற்றையும் தானம் செய்த புண்ணிய காலமாகும். பகவான் மஹாபலியின் பக்தியைக் கண்டு மகிழ்ந்து வரம் கேட்கும்படி சொன்னார். மஹாபலியும், ''தங்களுக்கு நான் தானம் செய்த இந்த நாளில் மக்கள் யாவரும் விடியற்காலையில் மங்கள ஸ்நானம் செய்து, புது ஆடைகளையும் தரித்து, சந்தோஷமாய்த் தங்கள் வீடுகளில் விளக்குகளை வரிசையாக வைத்து விழாக் கொண்டாட வேண்டும். இந்தப் பண்டிகையைக் கொண்டாடும் பக்தர்களுக்கு யம பயம் இல்லாமல் இருக்க வேண்டும்'' என்று வரம் கேட்டான்.

தீபாவளி சதுர்த்தசி அன்று விடியற்காலையில்தான் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா, நரகன் என்னும் அஸுரனை வதம் செய்தார். அவன் மோட்சத்தை அடையும் சமயத்தில் ஸ்ரீ கிருஷ்ணனைப் பரமாத்மா எனத் தெரிந்து கொண்டு, நன்மனம் பெற்று அவரை வணங்கினான். கோரிய வரனை அளிப்பதாக அவனிடம் ஸ்ரீ பகவான் கூறினார். நரகாஸுரனும் ''எனக்கு வரம் கொடுத்த இந்த ஐப்பசி மாத கிருஷ்ண பட்ச சதுர்தசி திதி விடியற்காலையில் எண்ணெயில் மஹாலட்சுமியும், ஜலத்தில் கங்கையும் வசிக்க வேண்டும்; எண்ணெய் தேய்த்து மக்கள் லக்ஷ்மியின் கடாட்சத்தைப் பெற வேண்டும்; கங்கா நதிக்கு ஒப்பான நீரில் ஸ்நானம் செய்து மனகம் பாவனமாக வேண்டும்'' என்று வேண்டினான்.

तैले लक्ष्मीर्जले गङ्गा दीपावल्याश्चतुर्दशीम् ।
தைலே லக்ஷ்மீர் ஜலே கங்கா தீபாவல்யாச்சதுர்தசீம்.

ஸ்ரீ பகவானும் அவ்வாறே வரம் அளித்தார். இதனால் துறவிகள் கூடத் தீபாவளி அன்று விடியற் காலம் வெந்நீரில் சிறிது எண்ணெயை விட்டு அந்த நீரை எடுத்து ஸ்நானம் செய்வது வழக்கம். இதே போல் பல ஆஸ்திகர்கள் அன்று விடியற்காலம் பல விளக்குகளை வரிசையாக ஏற்றி வைத்து, இரண்டு பெரிய அகல்களை விட்டு முன்புறத்திலும், பின்புறத்திலும் யம தீபம் என வைப்பது வழக்கம். இதனால் யம பயம் நீங்கும்.

தலைமுறை தலைமுறையாக நம் முன்னோர்களெல்லாம் கொண்டாடிய விழா தீபாவளி. அதன் தத்துவத்தைப் புரிந்து கொண்டு, பெரியோர்களின் வழக்கங்களைத் தவறாமல் செய்து தேச தர்மத்தைக் காக்க வேண்டியது நமது கடமையாகும். தர்மமே நம் தேசத்தையும், நம் குடும்பத்தையும் ரட்சிக்கும். சம்பிரதாய தர்மங்களை நம் வீட்டிலுள்ள ஆண், பெண் குழந்தைகள் ஒருவரும் மறக்க விடலாகாது. இவைகளே அவர்களின் வாழ்க்கையை சுபிட்சப்படுத்தி, மேன்மேலும் காக்கும் என்பதில் சிறிதளவும் சந்தேகம் இல்லை



தீபாவளி
வாழ்த்துக்கள்
Brooke Bond
SUPREME
Darjeeling Tea
நறுமணம் * புத்தம் புதுமை * நல்ல சுவை
தோட்டப் புதுமை கொண்ட சிறந்த தேயிலைகளை ப்ளெண்ட் செய்யப்பட்ட ப்ரூக் பாண்ட் மெய்யான டார்ஜிலிங் தேயிலை, திறமையாக ப்ளெண்ட் செய்வதில் 60 ஆண்டு அனுபவத்தின் அபூர்வ வெற்றியாகும்!
ப்ரூக் பாண்ட் ஸுப்ரீம்
டார்ஜிலிங் தேயிலை


இப்பொழுது
டிடபிள்யூஏ சூப்பர்ஜெட்
ராயல் அம்பாஸடர் ஸர்வீஸ்
கெய்ரோ ஏதென்ஸ் பாரிஸ்
ரோம் • நியூயார்க்
TWA. G. 238. TAM.


What others can't Supply We can!!
CONTACT US FOR YOUR REQUIREMENTS IN AUTOMOBILE SPARES AND Silver Exide BATTERIES..
... BIGGEST IMPORTERS OF MOTOR PARTS AND ACCESSORIES FOR ALL POPULAR CARS AND TRUCKS...
POST-BOX No. 322
TELEGRAMS: "MOBILE"
TELEPHONE: 86765
... 83730
THE MODERN AUTOMOBILES
4/17-A, MOUNT ROAD,
MADRAS-2
MAJOR STOCKISTS OF SPARE PARTS FOR
Ford
FIAT
BENZ

# அன்பும் நிலையாமோ ?



ஸ்ரீவேணுகோபாலன்

எங்கள் ஊருக்கருகில் ஒரு தோணித் துறை. பிறை வடிவான இரண்டு தோணிகளை நடுவில் கட்டை அடித்துப் பிணைத்திருப்பார்கள். இக்கரைக்கும் அக்கரைக்குமாகத் தோணி ஓடும். நாங்கள் எவ்வளவோ தடவைகள் அதில் போய் வந்திருக்கிறோம்; எவ்வளவோ இன்பமுற்றிருக்கிறோம்.

இந்தத் தோணித் துறை வழியாகத் தான் மதுரவல்லி எங்கள் வீட்டுக்கு வந்தாள். மதுரவல்லி எங்கள் மதனி!

சாயங்காலம் வரை சாப்பிட்டுக் கொண்டிருந்தான். இதைத் தவிர, ஊரெல்லாம் போய், ''எங்கள் மன்னி வந்திருக்காளே, எங்கள் மன்னி வந்திருக்காளே!'' என்று பெருமை வேறு அடித்துக் கொண்டான்.

மாலையில் மதனியோடு கோவிலுக்குப் போனோம். எல்லோரும் மதனியையே பார்த்தார்கள். ''ரங்கன் பெண்டாட்டி யாடி? ல...க்ஷணமா யிருக்காளே!'' என்று பேசிக் கொண்டார்கள்.

''நாங்கள் அவளைத் தாழையூத்து ரயில் நிலயத்தில் வரவேற்றோம். சாலைவழியே வருவதென்றால், திருநெல்வேலிச் சந்திப்பில் இறங்கி ஆறுமைல் சுற்றி எங்கள் ஊருக்கு வர வேண்டும். தாழையூத்தில் இறங்கி, ஆற்றுக்குக் குறுக்காக வந்துவிட்டால் இரண்டே இரண்டு மைல் தூரந்தான்!

மதனி முதலில் தோணியில் ஏறுவதற்கே பயப்பட்டாள். ஒரு காலை வைத்து அவள் ஏறும்போது தோணி ஆடவே, அவள் திடுக்கிட்டுப் போய், அங்கச்சியின் தோள்களைப் பிடித்துக் கொண்டாள். நாங்கள் எல்லோரும் விழுந்து விழுந்து சிரித்தோம். ஆற்று நடுவில், வரிவரியாய்க் கீறிக் கொண்டு தோணி போனபோது மதனி அந்தப் பக்கமும், இந்தப் பக்கமும் மருண்டவாறே பார்த்துக்கொண்டிருந்தாள்.

வீட்டு வாசலில் அங்கச்சி மங்கள நீர் சுற்றினாள்.

''வலதுகாலைப் படியில்வையம்மா'' என்றார் அப்பா.

மதனி எங்கள் வீட்டுக்குள் நுழைந்து விட்டாள்.

தோட்டத்தில் குருத்துவிட்டிருந்த வாழைமரமும், மொட்டு விட்டிருந்த கனகாம்பரச் செடியும் மதனிக்கு வெகுவாகப் பிடித்துவிட்டன. உள்ளே வந்ததும், சாங்கினி – சங்கரன் இவர் பெயர் – பெருங்காய டப்பாவைத் திறந்து கோலியையும் பம்பரத்தையும் மதனிக்குக் காட்டினான்.

மதனி கொண்டு வந்த மைசூர்ப் பாகைச் சாங்கினியும், அங்கச்சியும் ஆளுக்கொன்று முழுதாக, வாங்கிப் போய் விட்டார்கள். அதை அங்கச்சி கொஞ்சம் கொஞ்சமாகக் கடித்தும்

எனக்குக் கூட மதனியை மிகவும் பிடித்து விட்டது. ஊரிலேயே அவள் தான் அழகு என்று கூடத் தோன்றியது. மதனி சிரிக்கும்போது பார்க்க வேண்டும். செக்கச் செவேலென்று செம்பருத்திப் பூவைப் போல் உதடுகள் விரியும். அவைகளுக்கு நடுவே பற்கள் பளிரென்று மின்னி மறைந்து விடும்.

வீட்டுக்குத் திரும்பினோம். அப்பாவின் பாட்டு கணீரென்று கேட்டுக் கொண்டிருந்தது. அப்பா பூஜையிலிருந்தார்.

''காயத்ரீம், த்ரயக்ஷராம், பாலாம்!'' கல்யாணி ராகத்தின் உயரத்தில் அப்பா சஞ்சரித்துக் கொண்டிருந்தார். வீடு முழுதும் ராகத்தின் சுழல் நிறைந்து ததும்பிக் கொண்டிருந்தது. மதனி நடையிலேயே நின்று விட்டாள். முகத்தில் ஏதோ தாக்குண்டது போல் பிரமை பிடித்து நின்றாள்.

''அவர் பாட்டிலே என்ன மூர்க்கம்? சிங்கம் கட்டவிழ்ந்து திரிகிற மாதிரி இருக்கிறதடா!'' என்றாள்.

''இன்னும் நீங்கள் நிறையக் கேட்கணும், மன்னி! தம்பூராவோடு, அவர் சாதகம் பண்றதைக் கேட்டால் வீடே உருகி விடும்'' என்றேன் நான்.

மதனி உள்ளே நுழைந்தாள். நேராகப் பூஜையறைக்குச் சென்றாள். அப்பா எழுந்து நின்று கைகூப்பிக் கொண்டிருந்தார். திரும்பியபோது அவர் மதனியைப் பார்த்து விட்டார். மதனி அவரது காலடிகளில் நமஸ்கரித்தாள்.

அப்பாவின் உயரம் அதிகம். விசுவரூபம் எடுத்தாற் போல் தரைக்கும் கூரைக்குமாகத் தொட்டு நின்றார். அவரது வலது கையில் ரக்ஷை பளபளத்தது. மதனி, அவரது காலடியில், –





தாமரை மொட்டு கூடப்பது போல் கைகூப்பியிருந்தாள்.

"எழுந்திரம்மா! மங்களம் நிறையப் பெருகணும்!"

மதனி எழுந்தாள். புடவைக்கு வெளியே கிடந்த தாலியையும், சங்கிலியையும் உள்ளே எடுத்துப் போட்டுக் கொண்டாள். குத்து விளக்கு வெளிச்சத்தில் அவை மின்னி மறைந்து விட்டன.

மதனி உள்ளே போய் விட்டாள்.

அப்பா, மீண்டும் எதிரே படத்தைப் பார்த்துக் கை கூப்பினார். படம் பெரிய படம். ராஜராஜேசுவரி அதில் நிமிர்ந்த பார்வையுடன் அமர்ந்திருந்தாள். சுற்றி வர மாலைகள், ஊதுவத்திகள், தீபங்கள். பெரிய சர்ப்ப விளக்கு!

அப்பாவின் கண்களில் ஏதோ பளபளத்தது. நான் உற்றுப் பார்த்தேன். கண்ணீர் எனத் தெரிந்ததும் திடுக்கிட்டு விட்டேன். அவர் கண்ணீர் உகுத்து நான் இதுவரையில் பார்த்ததில்லை.

அப்பா என்னைப் பார்த்து விட்டார். மேல் துண்டால் முகத்தைத் துடைப்பது போல் கண்ணீரை வழித்து விட்டார்.

ஞாயிற்றுக் கிழமை வந்தது! அப்பா காலையிலேயே வண்டியில் ஏறி எங்கோ போய்விட்டார். வீடு இரண்டு பட்டுக் கொண்டிருந்தது. சாங்கிலி புன்னை மரக் காயைக் குடைந்து ஊதல் செய்து ஊதிக் கொண்டிருந்தான். அங்கச்சி மாக்கல்லால் வீடு முழுவதும் படங்கள் தீட்டிக் கொண்டிருந்தாள்.

மாலை மங்கியதும் சாங்கிலியும் அங்கச்சியும் வெளியே "அடலோ பிடலோ" விளையாடப்போய் விட்டார்கள். நான், திண்ணையின் மங்கிய வெளிச்சத்தில் சினிமாப் பத்திரிகை ஒன்றைப் பிரித்துப் பார்த்துக்கொண்டிருந்தேன்.

"கோண்டு!"

மதனி வாயிற்படி ஓரத்தில் நின்று கொண்டிருந்தாள். நான் பத்திரிகையை மடித்து வைத்து விட்டு அவளை நோக்கினேன்.

"திண்ணையில் உட்கார்ந்து கொள்ளுங்கள் மன்னி!"

"யாரேனும் வரப் போகிறார்களடா!" என்று சொல்லிக் கொண்டே மதனி திண்ணைத் தூணருகே வந்து நின்றாள்.

"என்ன மன்னி?" என்றேன்.

மதனி சற்று நேரம் மௌனமாக நின்றாள். மதனியின் குரல் மிகவும் மெல்லியது. அதையும் மடித்து, நாலாக்கி மிக மெல்லியதாகவே அவள் பேசுவாள். அதுவும் அவள் நின்றபோது, பேசவேண்டியதைப் பேசி விட்டாளோ என்று தோன்றியது.

"என்ன சொல்கிறீர்கள், மன்னி?" என்றேன் நான் மீண்டும்.

"உங்க அண்ணா எங்கேடா?"

"அண்ணாவா?"

"ஆமாம்."

"வெளியில் போயிருக்கிறான். திரும்பி வருவான்!" என்றேன்.

"என்றைக்கு வருவார்?"

"ஒரு வாரம் என்று வைத்துக் கொள்ளுங்களேன்! அவனால் வேறு எங்கேயும் தங்கவும் முடியாது. அவன் கோபமும் நிற்காது. இடையிடையே இப்படி ஒரு நாடகம் உண்டு, மன்னி!"



"அவனுக்கு யார் மேலே கோபம்?"

"அப்பா மேலேதான்!"

மதனி உள்ளே போய்விட்டாள். நான் கண்களை விரித்து உற்றுப்பார்த்துப் பத்திரிகையைப் படித்துக் கொண்டிருந்தேன். பிறகு அதை மடித்து வைத்து விட்டு உள்ளே போனேன். பூஜையறையில் மதனி மண்டியிட்டு அமர்ந்திருந்தாள்.

ஒரே ஒரு சர்ப்ப விளக்குத்தான் ஐந்து நாக்குகளுடன் எரிந்து கொண்டிருந்தது. ஒரு கணத்தில், அந்த விளக்குக்குப் பின்னால் நிற்பதுதான் படமா, அல்லது முன்னால் மண்டியிட்டிருப்பவன்தான் படமா எனத் தெரியவில்லே. மதனி அசையாமலேயே கண்மூடி உட்கார்ந்திருந்தாள்.

சற்று நேரத்தில் மதனி கண் விழித்து எழுந்தாள். நெற்றியில் ரத்தம் குமிழ்த்தாற் போல் குங்குமம் இட்டிருந்தாள்.

''கொண்டு! எனக்கு உங்க அண்ணாவின் அறையைக் காட்டு!''

நான் சற்றுத் திகைத்து நின்றேன். அவள் என்னே உற்றுப் பார்த்தாள். நெற்றியிலிருந்து, அவள் குங்குமந்தான் கண் விழித்து, அழலாய் எரிந்து என்னேப் பார்ப்பது போல் தோன்றியது.

நான் பயந்தவாறு மெள்ள நடந்தேன். ''மாடியைத் திறந்தது தெரிந்தால் ரங்கன் கோபித்துக் கொள்வான்'' என்றேன்.

''ஒன்றும் சொல்ல மாட்டார்! நீ தைரியமாக வா!'' என்றாள் மதனி.

பீரோவிலிருந்து சாவியை எடுத்துப் போய் மாடிக் கதவைத் திறந்தேன். என்றைக்கோ எரிந்திருந்த மட்டிப்பாலின் வாசனே குப்பென முகத்தில் அடித்தது. மதனியின் முகத்தில் பால் படர்ந்தாற் போல் ஒரு வெண்மை தோன்றி மறைந்தது.

நாற்காலி, மேஜை, சுவரில் விவேகானந்தர், ராமகிருஷ்ணர் படங்கள், அலமாரி நிறையப் புத்தகங்கள், கீட்ஸ், மல்டன், ஷெல்லி, பட்டினத்தார் முதலியவை; சுவரில் ஒரு சிம்னி விளக்கு! எல்லாவற்றையும் அவள் பார்த்தாள்.

மேஜையருகில் அவள் சற்று நேரம் நின்றாள். பிறகு குனிந்து தரையைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொண்டாள். உடனே வெளியே வந்து விட்டாள்.

வெள்ளிக்கிழமை! அன்று அமாவாசையும் கூட! பூஜையறையில் ஏக தடபுடல்! அப்பா சௌந்தர்ய லஹரியை ராகமாலிகையாகப் பாடிக் கொண்டிருந்தார்.

நான் திண்ணேயிலேயே உட்கார்ந்து கொண்டிருந்தேன். ஊதுவத்தி, சாம்பிராணி வாசனேகளுக்கிடையே பால் பாயசத்தின் வாசனேயும் 'கம்'மென மணந்து வந்தது. சாம்பனும் அங்கச்சியும் நாக்கைச் சப்புக் கொட்டியவாறு, பூஜை முடிவதற்காகக் காத்திருந்தனர். பூஜை முடிய மணி பத்தாகிவிட்டது.

பால் பாயசம் வெகு நேர்த்தியாயிருந்தது. நான் சாப்பிட்டு விட்டு வாயிற்புறம் வந்தேன். அப்பா திண்ணேயில் உட்கார்ந்திருந்தார். வெளியே சூழ்ந்த இருள் திண்ணேயிலும் ஏறி அவரை வெறும் உருவக் கோடாக ஆக்கியிருந்தது. அவர் எதிரே மதனி நின்றிருந்தாள். அவள் கையில் ஒரு வெள்ளிப் பேலா பளபளத்துக் கொண்டிருந்தது.

''எனக்கு வேண்டாம்! நான் வணங்கும் தெய்வத்தின் மீதே எனக்குக் கோபம்!'' என்றார் அப்பா.

''நைவேத்தியத்தில் ஒரு வாயாவது சாப்பிடுங்கள்! இல்லாவிட்டால் நன்றாக இராது!''

''இல்லே; ஒரு துளிகூட வேண்டாம், குழந்தை! இதுகூட ஒரு விரதம்! எல்லாவற்றையும் அம்பாளே கோலாகலமாக ஏற்றுக் கொள்ளட்டும். நான் துக்கத்தோடு இருந்தால் போதும்!'' என்றார் அவர்.

மதனி வெலவெலத்து நின்றாள். ஒரு கணத்தில் பேலாவைத் திண்ணே மீது வைத்தாள். பிறகு நிமிர்ந்து நின்றாள். அவள் கண்களிலிருந்து நீர் பொல பொல வென்று வந்து கொண்டிருந்தது. அப்படியே கீழே மண்டியிட்டு அமர்ந்து கொண்டாள். அப்பாவின் கால்களைப் பற்றிக் கொண்டாள்.

''குழந்தை, இது என்ன?''

''சொல்லுங்கள்! அவர் எங்கே போனார்? அவர் எங்கே போனார், சொல்லுங்கள்!''



அப்பா மௌனமாய்ச் சமைந்தார். மேல்துண்டை எடுத்துக் கண்களைத் துடைத்துக் கொண்டார்.

''அவனு?''

அவர் குரலில் நடுங்கிய தழுதழுப்பு ஒவ்வோர் எழுத்துக்கும் துடிக்கும் நாதத்தைக் கொடுத்தது.

''எங்கே போனார் அவர்?''

''அதுதான் தெரியவில்லே, குழந்தை!''



''எப்போது வருவார்?''

''அதுவும் தெரியவில்லை; என்றைக் காவது நிச்சயம் வருவான்! எல்லாவற் றிற்கும் காரணம் நான்தான்! நான்தான் காரணம்! உனக்கும் ஒரு நாள் சொல் கிறேன். சொல்வதற்கு எனக்கும் மனம் கசிய வேண்டும். உனக்கும் ஏற்றுக் கொள்ளப் பக்குவம் வேண்டும்!'' என்றார் அப்பா.

அன்று ஆற்றிலிருந்து மதனி குளித்து விட்டு வந்தாள். நான் வெளியே திண்ணை யில் கிரை ஆய்ந்து கொண்டிருந்தேன்.

உள்ளே இருந்து மதனி பாடுவது கேட்டது. எனக்கே ஆச்சரியமாகவிருந் தது. மெள்ள எழுந்து உள்ளே போனேன். பூஜையறையில் சர்ப்ப விளக்குக்கு முன் அவளும் ஒரு சர்ப்பம் போல் மடிந்து உட்கார்ந்திருந்தாள். மதனி பாடுவதை நான் அப்போதுதான் கேட்டேன். அவள் குரல் இழைகளில் உருக்கம் நிறைந்து ஓடிக் கொண்டிருந்தது.

பாட்டு முடிந்தது. திரும்பினேன். என் பின்னால் அப்பா நின்றிருந்தார்.

''குழந்தை!''

மதனி திடுக்கிட்டு எழுந்து நின்றாள்.

''என்ன அற்புதமான குரல்! உன் குரலில் இரக்கம் வரவழைக்கும் கனிவு கசிகிறது. ஆனால் என் குரலில் மூர்க்கத் தன்மைதான் இருக்கிறது. நீயே பாடம்மா! எனக்கு அருளாத தெய்வம் உனக்கு இரங்கி அருளும்!'' என்றார்.

மதனி தலைகுனிந்து கொண்டாள்.

அப்பா போனபிறகு நான் கிணற் றடிக்குப் போனேன். கல்லின் மீது என் சொக்காய்களை நனைத்து வைத்தேன்.

''கோண்டு!'' மதனி என் அருகில் வந்தாள். ''அப்பா இப்போதெல்லாம் சாதகம் பண்ணுறதை ஏன் நிறுத்தி விட்டார்?''

''ரங்கன் கோபித்துக் கொண்டு போன திலிருந்து அவருக்கு மனசே சரியில்லை!''

''அப்பாவுக்கும், அண்ணாவுக்கும் என்ன மனஸ்தாபம்?''

நான் மௌனமாகி விட்டேன். எனக் குத் தெரிந்தது அரைகுறை. அந்த அளவுகூட அவளிடம் சொல்லலாமா என் பது எனக்குத் திகில்.

''ஏன், சொல்ல மாட்டாயா?''

மதனியின் குழைவு என் அகத்தைத் தொட்டு விட்டது. ''அண்ணா இருக் கிறான் பார்!'' என்று இழுத்தேன்.

''இருக்கிறார்!''

''அவன் போன வருடத்தில் தான் மதுரை ஆஸ்பத்திரியில் வேலைக்குச் சேர்ந் தான். அங்கே ஒரு பெண்ணைக் கல்யா ணம் செய்துகொள்ள வேண்டுமென்று விரும்பினான்.''

''அப்புறம்?''

''அந்தப் பெண் அங்கே நர்ஸ் வேலை பார்க்கிறவள். அண்ணாவின் விருப் பத்தை அப்பா எதிர்த்தார். அதனாலே அடிக்கடி இரண்டு பேருக்கும் சண்டை!''

மதனியின் கண்கள் இமைக்கவில்லை. சிறிது நேரம் பேசாதிருந்தாள். பிறகு, ''அப்படியென்றால் என்னை எப்படி அவர் கல்யாணம் செய்து கொள்ளச் சம்மதித் தார்?'' என்றாள்.

''அதுதான் தெரியவில்லை!''

மதனி பேசவில்லை. நான் அவள் முகத் தைப் பார்க்க இயலாது பார்வையை வேறு பக்கம் திருப்பி விட்டேன்.

நான் அன்று கோவிலில் மஞ்சள் நீர் விழா பார்த்துவிட்டு ஒற்றையடிப் பாதை வழியே திரும்பிக் கொண்டிருந்தேன்.

''கோண்டு!''

எனக்குச் சிலிர்த்தது! அது என் குரலா? அல்லது வேறு யார் குரல்?

''கோண்டு!''

ஒற்றையடிப் பாதையில் ஓர் உருவத் தைக் கண்டதும் துள்ளியெழுந்தேன்.

''ரங்கனா?''

''கத்தாதே, இங்கே வா!''

நான் ரங்கனின் கரங்களை உணர்ச்சி யோடு பற்றினேன். ''ரங்கா! ரங்கா!!'' என்று நாத்தடுமாறினேன்.

அவன் பதில் பேசவில்லை. நான் அவ னையே நோக்கினேன். மனம் துணுக் குற்றது. ''ஏன், ரங்கு இளைத்திருக் கிறாய்?'' என்றேன்.

''இளைக்கத்தான் முடியும். என் கதி அப்படி! எனக்கு ஒரு காரியம் செய்ய வேண்டும், கோண்டு!''

''என்ன காரியம்?''

''நான் என் பழைய வேலையை விட்டு விட்டேன். வேறு வேலை தேட வேண்டும். என் ஸர்டிபிகேட்டுகளைக் கொண்டு வந்து கொடு!''

''நீயே வீட்டுக்கு வாயேன், ரங்கு!''

''விளையாடுகிறாயா? நான் அன்றைக்கு அப்பாவிடம் சபதமிட்டது இட்டது தான். நான் இனி வீட்டுக்கு வரவும் மாட்டேன்; அப்பாவின் முகத்திலும் விழிக்க மாட்டேன்!''

நான் தயங்கி நின்றேன்!

''நீ இந்த உதவியைச் செய்யப் போகி றாயா, அல்லது நான் போய்விடட்டுமா?''

நான் வீட்டுக்குத் திரும்பினேன். மதனி பின்கட்டிற்குப் போயிருந்தாள். அப்பா நார்க் கட்டிலில் படுத்திருந்தார். 'ஸர்டிபிகேட்டு'களை எடுத்துக் கொண்டு நான் திரும்பி விட்டேன்.

ரங்கன் அரச மரத்தடி வேரில் அமர்ந் திருந்தான். நான் கொணர்ந்தவைகளை அவன் முன் நீட்டினேன். அவைகளை வாங்கும் போது என் கண்ணீர் அவன் கைகளில் விழுந்திருக்க வேண்டும்.

''நீ ஏன்டா, அழுகிறாய், கோண்டு?''

நான் விசித்தேன். ''ரங்கு, உனக்கு அப்பா என்ன துரோகம் செய்தார்? நீ ஏன் வீட்டுக்குத் திரும்ப மறுக்கிறாய்?''

அவன் சிறிது நேரம் என்னைக் கூர்ந்து கவனித்தான்.

''உன்னிடம் எப்போதாவது சொல் லித்தானே ஆக வேண்டும், கோண்டு! அதை இப்போது சொல்கிறேன் – அப்பா என்னை வஞ்சித்து விட்டார்!''

''என்ன செய்தார்?''

''எனக்கு மதுரைப் பெண்ணைக் கல்யா ணம் செய்து கொள்ள விருப்பமிருந்தது. அவளுக்கும் விருப்பம் இருந்தது. என் வயதில், இந்த விருப்பங்கள் எவ்வளவு சக்தி வாய்ந்தவை என்பது உனக்கு ஒரு நாள் தெரியும். இதைப் பற்றி அப்பா கேள்விப்பட்டு, அந்தப் பெண்ணின் தகப்பனாரை மதுரையில் கண்டு பேசி, இருவரும் இதை முறிக்கத் திட்டமிட் டார்கள். அந்தப் பெண்ணுக்கு வேறு ஒருவனுடன் கல்யாணம் என்று பொய்த் திருமணப் பத்திரிகை அச்சடித்துக் காண் பித்து என்னை நம்பும்படி செய்து விட்டார், அப்பா! நான் அப்பாவின் சத்தியத்தில் நம்பினேன். வேறு பெண்ணுடன் திருமணத்துக்குச் சம்ம தித்தேன். திருமணமாகி விட்டது! அதன் பின் இரண்டே மாதங்களுக்குள் அப்பாவின் பொய் அம்பலமாகி விட் டது. நான் வஞ்சிக்கப் பட்டவன் என்று தெரிந்த பிறகுதான் நான் அன்று அப்பா விடம் அவ்வளவு சண்டை போட்டுக் கொண்டேன்! இவ்வளவு தெய்வபக்தி யிருந்த அப்பா இப்படிச் செய்யலாமா?''

''அந்தப் பெண் என்ன ஆனாள்?''

''என் கல்யாணத்தைக் காட்டிக்காட்டி அவளுக்கும் திருமணம் செய்து விட் டார்கள்....!''

''அப்போது நீ இனி என்ன செய்யப் போகிறாய்? வீட்டுக்கு வந்து விடு! மதனி யைப் போல் நல்லவள்....''

ரங்கனின் குரல் தழுதழுத்தது.

''கோண்டு! இந்த விஷயங்களில் உனக்கு என்ன சொன்னாலும் என் நிலை பிடிபடாது. அவளை நினைத்தபிறகு எனக்கு இனி ஒரு பெண்ணுடன் வாழ்வு கிடையாது. அப்பா எனக்குக் காட்டிய பத்திரிகை பொய்யானது என்று தெரி யும் முன்னால், நான் அவள் மனத்தைப் பற்றிச் சஞ்சலமுற்றேன். அவள் மனம் பேதலித்து விட்டது என்று நினைத்தேன். ஆனால் அப்பாவின் பொய் தெரிந்தபிறகு எனக்கு அவளை மறக்கவே முடியவில்லை. அப்பாவுடன் வாழ எனக்குக் கொஞ்ச மும் விருப்பமில்லை.''

''வேறு என்ன செய்யப் போகிறாய்?''

''இப்போது மதுரைக்குப் போகி றேன். அந்தப் பெண், என்றைக்காவது தெருவில் தென்படுவாளே, அந்தத் தரிசனத்திலேயே என் மனத்தை ஆற்றப் போகிறேன். என் வாழ்வு இதுதான்! இதன் வேகம் உனக்குப் புரியாது!''

அவனுக்கு அழுகை பீறிட்டு வந்தது. தேம்பியவாறு அவன் நடந்து சென்றான். ஒற்றையடிப் பாதை மீண்டும் வெறிச் சிட்டு விட்டது.

நான் வீட்டுக்கு வந்தேன். மதனி காத்திருந்தாள். ''ஏன் நாழிகை?'' என்றாள். அவள் கையில் ஒரு விளக்கு எரிந்து கொண்டிருந்தது.

நான் அவள் முகத்துத் தெளிவைப் பார்த்தேன்.

''மன்னி!'' என்றேன்.

''சொல்லு, கோண்டு! எனக்கு என் னமோ ஏதோ என்று இருக்கிறது!''

''மன்னி!'' மீண்டும் மென்று விழுங் கினேன்.

மதனி உக்கிரத்தோடு என்னைப் பார்த் தாள். அவள் குங்குமம் பொடித்து உதிர்ந்து கொண்டிருந்தது.

''சொல்லு, கோண்டு! அவரைப் பார்த்தாயா? அவரைப் பார்த்தாயா?'' அவள் நடுங்கும் குரலில் துடித்துப் போய்க் கேட்டாள்.

''பார்த்தேன்!''

''என்ன சொன்னார்? சொல்லு! முழுங்காதே, கோண்டு! என் நெஞ்சு பதறுகிறது!''

''ஒரு நாள் அவசியம் வருவேன் என் றார்...!''

''நிஜமாகவா?''

''நிஜமாகத்தான்!''

அவள் இழைப்பு அடங்குவது தெரிந் தது. விளக்கைச் சிறிதாக்கிக்கொண்டே


மகிழ்வூட்டுவதில்
இணையற்றது!
பழங்காலப் பெருமைகளுக்குச் சிறப்புற்றுத் திகழும் இடத்தின் மத்தியிலே நிறுவப்பட்ட, சகல நவீன வசதிகளையும் உடைய இந்த ஹோட்டல் உள்நாட்டு அயல்நாட்டு உல்லாசப் பிரயாணிகளுக்கு மனோரம்மியமான வாசஸ்தலம். சேர்த்தியான அறைகள், ருசிமிக்க உணவு, அன்பான உபசரணை முதலியவைகளுக்கு இணையற்றது. ஒருவர் தங்கும் அறைக்கு ரூ. 25; இருவர் தங்கும் அறைக்கு ரூ. 46. உலகப் புகழ்பெற்ற அஜந்தா, எல்லோரா குகைகளைச் சென்று பார்க்க அவுரங்காபாத் ரயில்வே ஸ்டேஷனில் இறங்கவேண்டும்.
Aurangabad
Hotel
ரிசர்வேஷன் மற்றும் இதர விவரங்களுக்கும் எழுதவும்
சூப்பர்வைஸர், அவுரங்காபாத்
ஹோட்டல், அவுரங்காபாத்
தந்தி: "Rail Hotel" அவுரங்காபாத்
போன்: நெ. 29, அவுரங்காபாத்
அல்லது
டிவிஷனல் சூப்பரின்டென்டென்ட்,
சென்ட்ரல் ரயில்வே, செகந்திராபாத்
(டெக்கான்)
அல்லது
சீப் கமர்ஷியல் சூப்பரின்டென்டென்ட்,
சென்ட்ரல் ரயில்வே, பம்பாய் V. T.

உள்ளே போனான். விளக்கை அணைத்தான். தலையணையில் தொப்பென்று உடலைச் சாய்க்கும் சத்தம் கேட்டது.

இங்கணும் வருடமும் தங்கள் போக்கில் எவ்வளவு மாறுதல்களை என் மனத்துள் நிகழ்த்தியிருக்கின்றன.! முன்பெல்லாம் ரங்கனின் அறையில் உள்ள புத்தகங்கள் எனக்குப் பயனற்றவையாய்த் தோன்றின. இப்போது அவைகளிலுள்ள கலை எனக்குத் தென்படுகிறது!

விவேகானந்தரை நான் ஊன்றிப் படிக்கிறேன். 'பிரௌனிங்'கின் கவிதைகள் கூட எனக்கு விளங்குகின்றன. ரங்கனின் அலமாரி எனக்கு விருந்தாகி விடுகிறது.

நான் கல்லூரியில் படிக்கிறேன்.

அன்று அம்மாவுக்கு வருடாந்திரத் திதி நடந்தது. அது ஐந்தாவது திதி! உள்ளே புகைச்சல் தாங்காது வெளியே வந்து அமர்ந்தேன்.

சாங்கிலியும், அங்கச்சியும் என் எதிரே உள்ளே போனார்கள். நான் அவர்களை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தேன்.

அங்கச்சியின் வளர்ச்சி என்னைத் திகைக்கவைத்தது. வோலாக்கு போட்டுக் கொண்டு தலைகுனிந்தவாறே நடந்தாள். அவளிடம் அம்மாவின் முகச் சாயல் இப்போது நன்கு தெரிந்தது. பழைய அரட்டையெல்லாம் அவளிடமிருந்து விடை பெற்றுப் போய் விட்டது.

சாங்கிலியின் குரல் உடைந்துவிட்டது. கால் சட்டை போடுவதை நிறுத்தி விட்டான். வேட்டி கட்டிக் கொள்கிறான். முகத்தில் மெல்லியதாக மீசை அரும்பியிருக்கிறது.

திதி முடிந்து நாங்கள் சாப்பிட்டு விட்டோம். மதனி கொல்லை வாயிற்படியில் அமர்ந்திருந்தாள்.

"என்ன, பார்க்கிறாய், மதனி?"

அவள் பதில் சொல்லுமுன் அவள் பார்க்கும் காட்சி தெரிந்து விட்டது. ஆற்றுக்கருகில் உள்ள எங்கள் தோப்பை விற்று விட்டோம். வாங்கியவர்கள் மருத மரத்தை வெட்டிக் கொண்டிருப்பது. இங்கிருந்தே தெரிந்தது.

"எல்லாம் போச்சு!" என்றாள் மதனி. எனக்கு அடுத்தடுத்து நினைவுகள் எழுந்தன. வண்டிப்புரையும் தொழுவமும் கூடக் காலியாகக் கிடந்தன. வண்டி மாடுகளை விற்று விட்டோம்.

அப்பா கச்சேரிகளுக்குப் போவதில்லை. குரலில் தொய்மை விழுந்து விட்டது. ராகத்தில் சஞ்சரிக்க முடிவதில்லை.

"கவலைப் படாதே, மதனி! நான் சீக்கிரம் சம்பாதிப்பேன்!" என்றேன்.

உள்ளே போனேன். மதனி, அப்பாவுக்கு நீர்மோர் கொண்டு தந்தாள்.

அவளை நான் இரக்கத்தோடு பார்த்தேன். கண்களிலும் முகத்திலுந்தான் அவளுக்கு ஜீவன்! உடலெல்லாம் இளைத்துத் துரும்பாகி விட்டது.

மாலையில் கோவிலில் நகரா முழங்கியது. தெரு முழுதும் அதன் சப்தம் "தும் தும்" என்று அதிர்ந்தது. கோவிலில் திருவிழா நடந்து கொண்டிருந்தது. மாலையில் தான் தேர்த் திருவிழா!

பத்து மைல் சுற்றளவிலிருந்து எங்கள் ஊரில் கூட்டம் கூடி விட்டார்கள். நான் கூட்டத்திடையே நடந்தேன்.

ஆரவாரத்திடையேயும், உல்லாசப் பேச்சுக்களிடையேயும் நான் தனித்து நின்று நடந்தேன். என் மனத்தில் பெரிய சூன்யம் உருவாகி யிருந்தது.

யாரோ என்னைத் தொட்டு இழுப்பது தெரிந்தது. திரும்பி நின்று உற்றுப் பார்த்தேன். உள்ளம் பரபரத்தது. ரங்கன் தானா அது?

யாரோ புதியவன்! வாலிபன் தான். ஆனால் நோயில் விழுந்தவன் போல் மெலிந்து கிடந்தான். "அதோ இருப்பது உங்கள் வீடா?" என்று சுட்டிக் காட்டினான்.

"ஆமாம்!"

அவன் பெருமூச்செறிந்தான்.

"அந்தப் பெண் மதுரம் உனக்கு என்ன ஆக வேண்டும்?"

"மதனி! ஏன் விசாரிக்கிறீர்கள்?"

அவன் கண்களில் நீர் மல்கியது.

"எப்படியிருந்தாள்! இப்போது எப்படி உருக்குலைந்து போய் விட்டாள்! இந்த மாதிரிப் பெண்ணைத் தலையில் வைத்துக் கும்பிடலாம். தெய்வந்தான்! ஆனால்



அவளை இந்த விதமாகவா நடத்துவது? சோகச் சித்திரம் ஆக்கி விட்டார்களே?"

எனக்கு அவன் பேச்சில் வியப்பும் வேதனையும் ஏற்பட்டன.

"அந்தப் பெண்ணை உங்களுக்கு எப்படித் தெரியும்?"

"என் தூரத்து உறவு அந்தப் பெண்! நான் படிக்காதவன். சமையல்காரன்; நான் படித்து அந்தஸ்தில் இருந்திருந்தால், அவளை வேறு ஒருவருக்கும் மணம் செய்துவைக்க விட்டிருக்க மாட்டேன்! எல்லாம் அவரவர் விதி...."

நான் வெலவெலத்து நின்றேன். அவன் கூட்டத்தில் புகுந்து மறைந்து விட்டான்.

தேர் நகர்ந்து ஊரைச் சுற்றி நிலைக்கு வந்து விட்டது. எங்கும் துளிர்க்கும் கிளிப்பில் ஒரு நிலை கூட என் மீது படியவில்லை. சிந்தனைகளில் குழம்பினேன்.

நன்றாக இருட்டி விட்டது. நான் ஆற்றுப் பாதையிலுள்ள அரச மரத்தடியில் அமர்ந்து விட்டேன். இருட்டில் பொட்டுக்கள் வைத்தாற் போல், திருவிழாக் கடைகளின் விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன.

"கோண்டு!"

இந்தத் தடவை நான் அதிர்ச்சியுற்றுப் போனேன்! சுற்றி வரப் பார்த்தேன். பாதையை அடைத்துக் கொண்டு யாரோ நிற்பது தெரிந்தது.

"கோண்டு!"

"ரங்கனா?" நான் துள்ளிப் போய் அவன் கைகளைச் சேர்த்துப் பிடித்துக் கொண்டேன். அவன் மெலிந்து வாடிப் போய் நின்றான். முகத்தில் ஒரு குறுந்தாடியும் வளர்ந்திருந்தது.

"பெரியவனாக வளர்ந்து விட்டாயே, கோண்டு!" என்றான் அவன். எனக்குப் பேச்சே எழவில்லை. மரத்தடியில் அமர்ந்து கொண்டோம்.

"ஏண்டா, ஏதாவது பேசு!" என்றான் ரங்கன்.

"நீ எப்படி இங்கு வந்தாய்?"

"உங்களை யெல்லாம் பார்க்க வேண்டும் போலிருந்தது. இந்தத் திருவிழா தான் அதற்குச் சரியான சமயமென்று புறப்பட்டேன்; வந்தேன்!"

எனக்கு அழுகை பீறிட்டு வந்தது.

"இப்படித்தான் பார்க்க வருவதா?"

அவன் பதில் பேசவில்லை.

"எல்லோரையும் பார்த்து விட்டாயா...?"

"பார்த்து விட்டேன் — அம்மா நீங்கலாக!"

"அம்மா போய் விட்டாள்!"

அவன் திகைப்பது தெரிந்தது. கண்களில் நீர் கசிந்தது.

"எப்போது?"

"இன்றைக்கு ஐந்தாவது திதி ஆகி விட்டது!"

"அப்புறம்?"

"அப்பா பாதியாக உடைந்து விட்டார். சொத்து கரைந்து விட்டது. அங்கச்சி பெரியவளாகி விட்டாள். சாங்கிலிக்கு இந்த வருஷம் பரீட்சைக்குப் பணம் கட்ட வேண்டும்!"

"அப்புறம்?"

"அப்புறமென்ன? மதனி என்ற பெயரில் ஒரு ஜீவனும் இருக்கிறது!"

அவன் பேசவில்லை. நான் தொடர்ந்தேன்.

"உன் அன்பில் வெற்றி கண்டாயா?"

"வெற்றி ஏது? தோல்வியைத் தான் அன்றே கண்டு விட்டேனே!"

"மன ஆறுதல் வேண்டு மென்றாயே! கிடைத்து விட்டதா?"

அவன் யோசித்தான். "இல்லை; மனக் குமுறல்தான் அதிகமாகி விட்டது."

"ஏன்?"

"அந்த மதுரைப் பெண் இப்போது டி. பி. யில் வாடி வதங்குகிறாள். கவனிப்பாரில்லை."

"அவள் புருஷன்?"

"அவனும் புருஷனா? அவனுடன் சண்டை போட்டுக் குடித்தனம் நடத்துகிறாளும். இப்போது டி. பி. யில் கிடக்கிறாள். ஆஸ்பத்திரியில் பார்த்தேன். தெய்வ அழகு கொண்டவள். இன்று உருக்குலைந்து கிடக்கிறாள்."

"இன்னும் உன் அன்பு அவள் மீதிருக்கிறதா?"

"இருக்கிறது!"

"முன்பு கொண்ட அதே அளவு? அதே திண்மை? அதே வடிவம்?"

"அவ்வளவு இல்லைதான்!"

"ஒரு காலத்தில் உன் மனத்தைக் கவரும் அழகு பெற்றிருந்தாள் என்பதற்காகத்தானே அவளை நேசிக்கிறாய்?"

''ஆமாம்!''

''உன் அன்பும் அவளது அழகைப் போலவே அழியக் கூடியது தானே?''

''எனக்குத் தெரியவில்லை!''

''அழிவுள்ள ஒன்றின் மீது வைத்துள்ள அன்பும் அழிவுறும் என்று விவே கானந்தரே அன்புக்கு விளக்கம் கூறி யிருக்கிறார் தெரியுமா?''

அவன் பதில் பேசவில்லை.

''அன்பும் நிலைப்பதில்லை. உயிரே நிலைக்காத போது அந்த உயிரின் ஓர் இச்சை மாத்திரம் நிலைக்கப்போகிறதா?''

கோவிலில் விழா முடிந்து சின்னங்கள் ஊதுவது கேட்டது. ஒற்றையடிப் பாதை யில் ஒரு கூட்டம் வருவது தெரிந்தது.

ரங்கன் எழுந்தான். நடக்க ஆரம்பித் தான். நான் போய் வழி மறித்துக் கொண்டு நின்றேன்.

''வீட்டுக்கு ஒரு முறை வந்து விட்டுப் போ, ரங்கா! நீ என்னைப் பார்க்க ஆசை கொண்டது போல் அப்பா உன் னைப் பார்க்க வேண்டுமென்று ஆசை கொள்ள மாட்டாரா?''

''அப்பா என்னைப் பார்ப்பதற்கு உரிமை கிடையாது!''

''மதனி?'' அவன் பதில் பேசவில்லை. என்னைப் புறக்கணித்து விட்டு முன்னே போனான்.

''மதனி ஒரு நிரபராதி! நீயும் அப்பாவும் அவள் வாழ்க்கையைப் பாழாக்கி விட் டீர்கள்.''

''கோண்டு! இந்த விஷயத்தைப் பற்றிப் பேசாதே! இது நான் சிந்திக்க விரும்பாத விஷயம்!''

''நீ போகிறாயா, ரங்கு?''

''ஆமாம்; நீ சொல்வதற்கு ஏதாவது இருக்கிறதா?''

''கடைசியில் ஒன்றுதான்! உன்னைப் போல் இன்று மாலையில் ஒருவன் இங்கு வந்தான். மதனிக்குத் தூரத்து உறவாம். சமையல் தொழில் செய்பவனும். அவன், மதனியைத்தொலைவிலிருந்துபார்த்தான். 'தலையில் வைத்துக் கும்பிட வேண்டிய இந்தப் பெண்ணை இப்படி உருக்குலைத்து விட்டார்களே, பாவிகள்!' என்று திட்டி விட்டுப் போனான். நீ சற்று முன் திட்டி னாயே, அவனிடமிருந்து நீ எள்ளளவும் மாறுபட்டவனல்ல!''

கூட்டம் எங்களை நோக்கி நெருங்கியது. ரங்கன் சொல்லாமலேயே நடக்க முற் பட்டான். தூரத்தில் அவன் சற்றுத் தயங்கி நிற்பது தெரிந்தது. பிறகு அவன் விரைவாகப் போய் விட்டான்.

என் அழுகை தெறித்து வெளி வந்தது! முகத்தை மூடிக் கொண்டு விசித் தேன்!

வீட்டுக்குத் திரும் பியபோது நள்ளிரவு இருக்கும்! அப்பாவின் குறட்டை யொலி கேட்டது. கலரொட்டி விளக்கு மெல்லியதாக எரிந்து கொண் டிருந்தது. உள்ளே நுழைந்தேன்.

''கோண்டு!''

''நீங்கள் தூங்கவில்லையா, மதனி?''

''உனக்காகக் காத்திருந்தேன்! இப்படி உட்காரு!''

நான் இரேழியில் உட்கார்ந்தேன்.

''நான் சொல்வது உனக்கு அதிர்ச்சி யாகவும் இருக்கலாம்! இருந்தாலும் சொல்கிறேன்!''

''என்ன மதனி?''

''நான் இந்த வீட்டை விட்டுப்போகத் தீர்மானித்து விட்டேன்!''

''எங்கே போகப் போகிறீர்கள்?''

''எங்கேயாவது போக வேண்டும்! எனக்குத் தெரிந்தவர்கள் எங்கே எங் கேயோ இருக்கிறார்கள். எங்கேயாவது போவேன்! எப்படியாவது பிழைத்துக் கொள்வேன்.''

''ஏன் இங்கே என்ன?''

''இனி இங்கே இருப்பதற்கே என் உள்ளம் இடம் கொடுக்காது. என் உள் ளம் உடைந்து சுக்கலாகி விட்டது, கோண்டு!'' அவள் விசித்தாள்.

''இந்த வீடே எனக்கு இப்போது ஒரு சிறையாகத் தோன்றுகிறது. நெஞ்சம் வலிக்கும்படி நான் இங்கே தினமும் துக்கத்தை அநுபவிக்கிறேன். வெளியே சொன்னதில்லை, அவ்வளவுதான்! இனி இங்கிருந்தால், ஒன்று நான் பைத்திய மாகிக் கிடப்பேன்; அல்லது கிணற் றிலோ, குட்டையிலோ பிணமாகக் கிடப்பேன்'' என்றாள் தொடர்ந்து.

''அப்படிச் சொல்லாதே, மதனி!''

''என் உண்மை நிலை இதுதான்! இதைத் தவிர வேறொன்றும் இருக்கிறது!''

''என்ன அது?''

மதனி சொல்லத் தயங்கினாள்.

''சொல்லுங்கள், மதனி!''

''நீயும் வளர்ந்து விட்டாய், இனி நாட்கள் செல்லச் செல்ல ஊரின் நாவும் புரண்டு விடும்! நாம் அதற்கு இலக்காகி விடுவோம்!''

என் நினைவில் இருள் அடித்தாற்போல் தோன்றியது. ''நீயா; நானா?'' என்று நாக் குழறினேன். நினைக்க வொண்ணா ததை நினைக்க வழி செய்ய ஒரு கீறல் தென்பட்ட போது என் நெஞ்சத்தில் வலி கண்டது.

நான் அழுகை பெருகுவாறு நின் றேன். மதனி தனது ஒரே ஒரு மாற்றுப் புடவையை மடித்துப் பைக்குள் செருகிக் கொண்டாள்.

நான் வெகு நேரம் நின்றேன். பிறகு மதனியைக் கிழக்கு நோக்கி நிற்கச் சொன்னேன். அவள் பாதங்களில் விழுந்து வணங்கி எழுந்தேன்.



''எப்போது புறப்படுகிறீர்கள் மதனி?''

''விடியுமுன், நான்கு மணிக்கே! உன் னிடம் கூடச் சொல்லாமல் போக வேண்டும் என்று முதலில் நினைத்தேன், கோண்டு! அந்த நினைவுக்காக என்னை மன்னித்துவிடு!''

விடியும் ஜாமம். மதனி என்னை எழுப்பினாள். சுவர்க் கடிகாரம் நான்கை நெருங்கிக் கொண்டிருந்தது! மதனியின் கையில் ஒரு பை! நாங்கள் புறப்பட்டு விட்டோம்!

இருள் திட்டுத் திட்டாகக் கிடந்தது. வால் குருவிகள் ''டுவீக், டுவீக்'' என்று புலம்பிக் கொண்டிருந்தன. தோணித் துறைக்கு நாங்கள் நடந்தோம். எங்கள் காலடியோசையே எங்களுக்கு நன்றாகக் கேட்டது. துறைக்கு நாங்கள் போவ தற்கும், தோணியைக் கொண்டு நிறுத்து வதற்கும் சரியாக இருந்தது. தயிர்க் காரிகள் பலர் ஏறிக் கொண்டார்கள்.

மதனியும் ஏறிக் கொண்டாள். என் னிடமிருந்து பையை வாங்கிக் கொண் டாள். தோணியைத் தள்ளிவிட்டார்கள். நான் முழங்கால் ஆழத்தில் நின்று கொண்டு மதனியையே பார்த்திருந் தேன். ''சமர்த்தாக இரு! தைரியமாக இரு!'' என்று அவள் குரல் கேட்டது. எனக்குக் கண்ணீர் வெடித்து வந்தது. தோணி நகர்ந்து, நகர்ந்து போயிற்று. முகங்கள் மறைந்து தோணியும் ஆட் களும் வெறும் நிழற் சித்திரங்களாகவே எனக்குத் தோன்றினார்கள்.

சட்டென்று, தோணித் தலைப்பில் அமர்ந்திருக்கும் ஆளின் நிழலைக் கண்ட தும் நான் திடுக்கிட்டேன்.

''ரங்கனா அது? ரங்கனே தானா?''

எனக்கு அவன் நிழல் நன்றாகத் தெரிந் தது. அது ரங்கன் தான்! ''ரங்கா!'' என்று கத்தினேன். தோணி தூரத்தில் போய்க் கொண்டிருந்தது. துடுப்புக்களின் சத்தத்தில் என் சத்தம் எடுபடாது போய் விட்டது.

தலைப்பில் உட்கார்ந்திருப்பவனை, மதனியும் பார்ப்பது தெரிந்தது. அப் படியே பார்த்தவாறு நிற்பதும் தெரிந் தது. பிறகு அவனை நோக்கி நகர்ந்து போவதும் தெரிந்தது. அவன் தன் கைகளை முன்நீட்டிச் செல்வதும், அவன் தன் கைகளை முன் நீட்டி வரவேற்பதும் தெரிந்தன. அவர்கள் கைகள் பிணைவதும் தெரிந்தது.

வழியும் நீர் கண்ணை மறைத்ததால் நான் துடைத்துப் பார்க்கத் துடித்தேன். மதனி, ரங்கா !'' என்று கத்தினேன். கரையில் ஏறித் துள்ளித் துள்ளிக் குதித்து என் கைகளை மேல் நோக்கி வீசினேன். என் நெஞ் சம் உடைந்து விம்மி அரற்றினேன்.

தூரத்தில் தோணியின் நிழல் ஒரே கூளமாகத் தெரிந்தது. பிறகு அது வும் மறைந்து விட்டது. நான் கரையில் துடித் துப் போய் நின்றேன். மெள்ளக் கிழக்கு வெளுக்க ஆரம்பித்தது.

# போர்ஹான்ஸ் பற்பசையைப் பற்றி ஆச்சரியகரமான செய்திகள்

## இந்தியாவின் எல்லா பாகங்களிலிருந்தும் தாமாகவே பலர் அனுப்பியுள்ள நற்சாட்சிக் கடிதங்கள் போர்ஹான்ஸ் பற்பசையின் இணையற்ற சிறப்பை எடுத்துச் சொல்லுகின்றன.

சமீபத்தில் நடந்த போர்ஹான்ஸ் பளிச்சிடும் புன்னகைப் போட்டியின்போது பல பேர்கள் தாங்களாகவே பல கடிதங்கள் எழுதி அனுப்பி இருந்தார்கள். போர்ஹான்ஸ் பற்பசையின் சிறப்பை அவை அனைத்தும் எடுத்துக்காட்டுகின்றன.

கீழே கொடுக்கப்பட்டுள்ள சிலர் தங்களைப்பற்றிச் சொல்லிக்கொள்ளும் விபரங்களைப் படியுங்கள்:-

" என்னுடைய வயது இப்போது 65. ஒரு பல்லாவது சொத்தை இல்லை. பொய்ப் பல்லுமில்லை. எனக்கு ஈறு கோளாறுகள் எதுவுமில்லை. பற்கள் உறுதியுடனிருக்கின்றன ... இவை யனைத்திற்கும் காரணம் நான் தவறாது போர்ஹான்ஸ் பற்பசையை உபயோகிப்பதுதான் "

" பல்வலி என்றோ ஈறுக் கோளாறு என்றோ என்னிடம் வரும் நோயாளிகளுக்கு எல்லாம் நான் எப்போதும் போர்ஹான்ஸ் பற்பசையை உபயோகிக்கும்படி சிபார்சு செய்து வருகிறேன். இதற்காக அவர்கள் எல்லோரும் எனக்கு மிக்க நன்றி தெரிவிக்கிறார்கள்."

" 1935-ம் ஆண்டு நான் முதன் முதலாக போர்ஹான்ஸ் பற்பசை உபயோகிக்க ஆரம்பித்தேன். அதற்கு முன்பெல்லாம் என்னுடைய ஈறுகளிலிருந்து ரத்தம் கசிந்துகொண்டே இருக்கும். இப்போது என்னுடைய பல்வரிசை மற்ற இளைஞர்களின் பல்வரிசைகளைக் காட்டிலும் மிகவும் உறுதியுடன் இருப்பதுமன்றி எனக்கு ஈறுகளின் கோளாறுகளே கிடையாது. இதைப்பற்றி மிகப் பெருமையுடன் கூறிக்கொள்ளுகிறேன்."

போர்ஹான்ஸ் பற்பசை டாக்டர் ஆர். ஜே. போர்ஹான்ஸ் என்னும் அமெரிக்க பல் டாக்டரால் கண்டு பிடிக்கப்பட்டது. போர்ஹான்ஸ் பற்பசை ஒன்றில்தான் ஈறுகளுக்கு உறுதியளிக்கும் டாக்டர் போர்ஹான்ஸின் தனித் துவர்ப்புப் பொருள் கலந்திருக்கிறது.




**போர்ஹான்ஸ்**

பளபளக்கும் முத்துப்பல் வரிசைக்கும், ஆரோக்கியமான ஈறுகளுக்கும் போர்ஹான்ஸ் பற்பசை இன்றியமையாதது

GEOFFREY MANNERS & COMPANY LIMITED

# கடல் கடந்த ராமன் புகழ்..

கமலநாதன்

இமயமும் கங்கையும் உள்ளவரையில் ராமன் கதை நின்று நிலவும் என்பதில் சந்தேகமே இல்லை. பாரதத்தின் பல்வேறு மொழிகளிலும் ராம கதை காவியமாகி, மக்களின் உள்ளத்தில் பதிந்திருக்கிறது. தென்னாட்டுக் கோவில்களிலும் வடஇந்தியத் தலங்களிலும் ராமாயணச் சிற்பங்கள் நிறைந்திருக்கின்றன. பண்டிதர்கள் பாராட்டும் நாட்டிய நாடகங்களிலும் பாமரர்கள் விடிய விடிய ரசிக்கும் தெருக்கூத்துக்களிலும் ராமாயணத்தின் பல்வேறு சம்பவங்கள் இடம் பெற்று மக்களை மகிழ்வித்திருக்கின்றன. ராமதாஸரும், தியாகராஜரும் தங்களுடைய அமர கானத்தால் ராமன் புகழைப் பரப்பி யிருக்கிறார்கள். சீதாராமன், கல்யாண ராமன், கோதண்டராமன், பட்டாபிராமன், சுந்தரராமன் என்று ராம நாமம் தமிழ் நாட்டில் வீட்டுக்கு வீடு தவழ்வதில் என்ன ஆச்சரியம்?

ஜப்பான், சீனா, திபேத், மலேயா, இலங்கை, தாய்லாந்து, ஜாவா, சுமாத்ரா, பாலி முதலிய தேசங்களிலும் ராமன் புகழ் பரவி யிருக்கிறது என்பது பலருக்கு ஆச்சரியமாக இருக்கலாம். பௌத்த மத நூல்களிலும் ஜைன மதப் புத்தகங்களிலும் கூட ராமகதையைச் சிற்சில மாறுதல்களுடன் காண முடிகிறது. தசரத ஜாதகக் கதைகள் என்னும் நூல் சீன மொழியில் இருக்கிறது.

தைரோ-நோ-யா-ஸு-யோரி என்னும் ஜப்பானிய அறிஞர், பன்னிரண்டாம் நூற்றாண்டில் எழுதிய ஹோபுட்ஸு-ஷு என்னும் நூலில் ராம கதை விரவி யிருக்கிறது. சீன தேசத்தில் லே-து-த்ஸிங்கே, த்ஸபோத்ஸான் சிங் முதலிய பௌத்த நூல்களிலும் தாய்லாந்து மொழியில் ராமகின் என்னும் பௌத்த நூலிலும் ராமாயணக் கதைகள் இருக்கின்றன.

ஜப்பானில் டோரா காகு என்னும் ஒரு வகை நாட்டியம் மன்னர் மாளிகைகளில் நடந்து வந்திருக்கிறது. பாரி-மாய் (வாலி நடனம்), கூட-மாய் (சீதா நடனம்), ஜா-கின்-ஜோ – நோமாய் (பெண் அணங்கின் நடனம்–சூர்ப்பனகையாக இருக்கலாம்.), கான்-டோ-லோ-டோ-ஒன்று-லோ-உபா-மாய் நடனம் (ஒரு பெண்மணிக்காக வடநாட்டாரும் தென்னாட்டா



இராமர்



சீதை



இராவணன்



ஜடாயு



ஹனுமான்



மாரீச மான்

ரும் போரிடும் காட்சியைச் சித்திரிக்கும் நடனம்.) இவ்வளவு காட்சிகளும் அந்த ஜப்பானிய நாட்டியத்தில் வருகின்றன. சுமாத்ரா, ஜாவா முதலிய தீவுகளிலும் மலேயா, தாய்லாந்து, இந்தோ-சீனு முதலிய நாடுகளிலும் ராமாயணம் ஒரு காலத்தில் பரவியிருந்தது. இப்போதுகூடப் பலவிதமான கூத்துக்களும் நடனங்களும் அந்த நாடுகளில் ராமாயணக் கதைகளைச் சார்ந்தனவாகவே இருக்கின்றன. நம் நாட்டு ஆலயங்களைப் போலவே அங்கேயும் முன்பு கோயில்கள் இருந்தன; நம் கோயில்களில் புராணம் வாசிப்பது போலவே அந்த நாடுகளிலும் ராமாயணக் கதைகள் வாசிக்கப் பெற்றன என்று பழைய கல்வெட்டுக்கள் கூறுகின்றன.

நம் நாட்டில், விஜயநகரத்தில் உள்ள ஹஜாரா ராமர் கோயிலில் உள்ள ராமாயணச் சிற்பங்கள் மிகவும் அற்புதமானவை என்று சொல்வார்கள். ஆனால் அதைவிடப் பலமடங்கு சிறந்த ராமாயணச் சிற்பங்களைக் கொண்டது ஜாவாவில் உள்ள பிரம்பானன் என்னும் கோயில். இந்தக் கோயில் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டில் கட்டப் பெற்றது. கிழக்கு ஜாவாவில் உள்ள சாண்டி ஜகோ என்னும் கோயிலிலும் சாண்டிபனதரான் என்னும் கோயிலிலும் ராமாயணச் சிற்பங்களைக் காணலாம். விஷ்ணுவின் வாகனமான கருடனைச் சித்திரிப்பதில் இந்தோனேஷியாவில் என்றுமே ஒரு மோகம் இருந்திருக்கிறது. இன்றுகூட இந்தோனேஷிய சர்க்காரின் சின்னம் கருடனே.

இந்தோனேஷியாவின் புகழ் பெற்ற ஆட்டங்கள் ராமாயணக் கதையையே அடிப்படையாகக் கொண்டவை. ஜாவா, சுமாத்ரா, பாலி முதலிய தீவுகளுக்கு ரவீந்திரநாத டாகுர் விஜயம் செய்தபோது இந்த நிழலாட்டங்களையும் கண்டு மிகவும் ரசித்துத் தம்முடைய 'ஜாவாயாத்திரை' என்னும் நூலில் குறிப்பிட்டிருக்கிறார்.

நம் நாட்டுப் பண்பாட்டைச் சித்திரிக்கும் இந்த ராமாயண நடனங்களைப் பெருமையுடன் இந்தோனேஷிய அரசினர் போற்றி வளர்த்து வருகிறார்கள். இதன் சிறப்பை உலகுக்குக் காட்டும் வகையில் தங்கள் நாட்டுத் தபால் தலைகளிலும் கண் கவரும் சித்திரங்களாக வெளியிட்டிருக்கிறார்கள். ராமாயண நாட்டிய நாடகங்களில் பிரதான பாத்திரங்களான ராமர், சீதை, ஹனுமார், ஜடாயு, தாமுகன், மாரீச மான் ஆகியவர்களின் நாட்டியத் தோற்றங்களையும் அவற்றின் பின்னணியில் ராமாயணச் சிற்பங்கள் நிறைந்த பிரம்பானன் கோயிலையும் சித்திரிக்கும் அருமையான ஆறு தபால் தலைகளைத்தான் இங்கே நீங்கள் கண்டு களிக்கிறீர்கள்.



# அத்தைமகள் முத்தம்மா!

தமிழழகன்

புல்லுக்கட்டை வெச்சுக்கிட்டுப்
போக்கிரியாய்ச் சிரிச்சுக்கிட்டு
வெல்லக்கட்டி அத்தைமவ
அண்ணே அண்ணே,—கையை
வீசி வீசிப் போறளேடா,
அண்ணே அண்ணே!

கொண்டை அள்ளி வளைச்சுக்கிட்டுக்
கூடப்பூவும் நுழைச்சுக்கிட்டுத்
தண்டைக் காலுக் கொலுசுக்காரி
அண்ணே அண்ணே,—மனம்
தவிக்கவுட்டுப் போறளேடா,
அண்ணே அண்ணே!

கொறநாடு மொரமொரக்கக்
குரங்குமனம் கிறுகிறுக்கத்
திருவிழாவில் பமவதான்
அண்ணே அண்ணே,—சின்னத்
தேருபோலப் போறளேடா,
அண்ணே அண்ணே!

தளுக்குங்குலுக்கும் நோட்டமாகத்
தத்தானத்தும் பாட்டுமாகப்
பழுக்கச் செவந்த உதட்டுக்காரி
அண்ணே அண்ணே,—என்னைப்
பார்த்துவிட்டுப் போறளேடா,
அண்ணே அண்ணே!

அக்கரைக்கும் பக்கமாக
அழகிருக்கும் சொர்க்கமாகச்
சர்க்கரைத்தேன் பேச்சுக்காரி
அண்ணே அண்ணே,—என்ன
சாகசமாய்ப் போறளேடா,
அண்ணே அண்ணே!

காக்காயைப்போல் இருந்தாலுமே
கறுத்தகுட்டி ஆனாலுமே
சொக்காகத்தான் போறளேடா
அண்ணே அண்ணே!—நல்ல
சொகுசினும் பொம்மையடா,
அண்ணே அண்ணே!

மத்தவங்க எத்தனைபேர்
மனசைக்கவ்வி இழுத்தாலென்ன?
அத்தைமவ முத்தம்மா போல்
அண்ணே அண்ணே,—ஒரு
அழகினாலும் கண்டதில்லை
அண்ணே அண்ணே!




Parle's Gluco
BISCUITS
OVEN FRESH
மேலானது!
ENRICHED WITH VITAMINS
சுவையுள்ள
ஆரோக்கியமளிக்கும்
மற்றும்
விட்டமின்
நிறைந்த
பார்லேயின்
க்ளூகோ
பிஸ்கட்டுகள்
இந்தியாவில் மற்றெந்த பிராண்ட்
பிஸ்கெட்டையும் விட அதிகம்
விற்பனையாகின்றன!
IS:1011
பார்லே ப்ராடக்ட்ஸ் மானுபாக்சரிங் கம்பெனி பிரைவேட் லிட்., பம்பாய்-57.

# நீலத் திரைக் கடல்

எஸ். உதயமூர்த்தி

எல்லையற்றுப் பரந்து விரிந்து கிடக்கிறது கடல். கடற்கரையில் நின்று பார்த்தோமானால் கண்ணுக்கெட்டியதூரம் வரை தண்ணீர்! அழகு மிக்க நீல நிறம் கொண்ட மாபெரும் நீர்ப்பரப்பு. ஆர்ப்பரித்து, கொந்தளித்து ஓயாத பேரலைகளைச் சதா எழுப்பியவண்ணம் இருக்கிறது. கடற்கரையில் நண்டுகள் அங்கும் இங்கும் ஓடுகின்றன. பல் வேறு வகையான சங்குகளையும், கிளிஞ்சல்களையும் அலை, கரையில் கொண்டு வந்து சேர்க்கிறது.







கடலில் கட்டுமரத்தைத் தூக்கிப் போட்டு மனிதன் மீன் பிடிக்கிறான்; பொருள்களையும் மனிதர்களையும் ஏற்றிக் கொண்டு கப்பல் பயணம் செய்கிறது. வேறு இடங்களில் நாம் காண முடியாத சில வகைப் பறவைகள் கடல் மீது நிதானமாகப் பறந்து செல்கின்றன. வயோதிகர்களும், இளைஞர்களும், யுவதிகளும்—ஏன், மனித குலமே—கடற்காற்றின் இனிமையில், பிசுபிசுப்பில் தங்களை மறந்து உல்லாசமாகப் பொழுதுபோக்குகின்றனர்.

கடல் வெறும் வேடிக்கைப் பொருள்தானா? கப்பல்கள் செல்வதற்கான வெறும் பாதைதானா? மோதி உடையும் அலைகளை எழுப்பி இயற்கை அன்னை விளையாடும் இடம்தானா?

கடல் அதிசயங்கள் நிறைந்த ஓர் இடம்; முழுதுமாக மனிதனால் புரிந்துகொள்ள முடியாத ஒரு புதிர். உயிர்க் குலமே கடலில்தான் உருப் பெற்று வளர்ந்தது. நமது அன்னைக்கெல்லாம் அன்னையாய் உயிர்ப் பிறப்பின் தொடக்கமாய் இருந்த இடம்—இருக்கும் இடம் கடல்தான். நமது உடலில் ஓடும் ரத்தத்தில் கடல் நீர்தான் ஓடுகிறது என்றால் கேட்பதற்கு வியப்பாகவும் மலைப்பாகவும் இருக்கிறதல்லவா? ஆம்! கடல் நீரில் காணப்படும் சோடியம், பொட்டாசியம், கால்சியம் உப்புக்களும் மற்ற ரசாயனப் பொருள்களும் நமது ரத்தத்தில் காணப்படுகின்றன. மருத்துவ இல்லங்களிலே உப்பு நீரை நமது ரத்தக் குழாய் வழியே செலுத்துவதை (saline water)க் கண்டிருப்பீர்கள். நமது ரத்தத்தில் கடல் நீர் இருக்கிறது; ஏனெனில் முதன் முதல் தோன்றிய உயிரின் உடலில் கடல் நீர்தான் ஓடியது. உயிரின் கடல் பிறப்பை, நமக்கும் கடல் அன்னைக்கும் உள்ள ரத்த சம்பந்தத்தை, அது காட்டுகிறது.

எடுக்க எடுக்கக் குறையாது மனித குலத்தின் அழியாத உணவுப் பண்டகசாலையாக விளங்குகிறது கடல். அங்கே மலைகள், சமவெளிகள், பாலைவனங்கள், பள்ளத்தாக்குகள், எரிமலைகள் எல்லாம் காணப்படுகின்றன. எதிர்காலத்தில் நமக்குத் தேவையான உணவையும் உலோகங்களையும் கடல்தான் கொடுக்கப் போகிறது என்று விஞ்ஞானிகளெல்லாம் அபிப்பிராயப்படுகிறார்கள்.

கடலிலிருந்து சத்துள்ள உணவுப்பொருளான மீன் கிடைக்கிறது. மீனிலிருந்து மீனெண்ணெய் கிடைக்கிறது. மீனுமீனுக்கும் செதிலிலிருந்து செயற்கை முத்துக்கான பூச்சுக்கள் செய்கிறார்கள். மீன் உடலிலிருந்து நல்ல தோல் செய்கிறார்கள்.

கடலிலே பயிர் செய்கிறார்கள். ஜப்பானில் கடல் பாசியைக் கடலில் பயிரிடுவதற்கு அரசாங்கம் வழி வகுக்கிறது. இப்பாசியிலிருந்து சாக்கலேட்டுகளும் சூப்புகளும் செய்து அமெரிக்காவுக்கும், ஐரோப்பாவுக்கும் ஏற்றுமதி செய்கிறார்கள்.

கடல் நீர் என்றதும் ஏதோ உப்புக் களஞ்சியம் என்ற எண்ணம்தான் நமக்கு உடனே எழுகிறது. கடல் நீரில் உப்பைத் தவிர முப்பத்திரண்டு தனிப் பொருள்கள் இருக்கின்றன. தாமிரம், வெள்ளி, நிக்கல், தங்கம், வனேடியம், ரேடியம், யுரேனியம் என்ற அருமையான உலோகங்கள் கடலுக்கடியில் சில இடங்களில் காணப்படுகின்றன. உப்பை மின்சாரம் மூலம் பிரித்து சோடியம் ஹைட்ராக்சைடு, துணி வெளுக்கும் சோடா, ரொட்டிச் சோடா, பொட்டோ

படம் கழுவும் ஹைப்போ, வெடி மருந்துப் பொருளான பொட்டாசியம் குளோரேட், பிளீச்சிங் பவுடர், ஹைட்ரோகுளோரிக் அமிலம் என்று பலவும் செய்கிறார்கள்.

கடல் நீரில் தங்கம் இருக்கிறது. எல்லாவற்றையும் எடுத்தால் ஒவ்வொரு மனிதனையும் லட்சாதிபதியாக்கி விடும் அளவுக்கு இருக்கிறது. ஆனால் அதை எடுப்பதற்குத் தங்கத்தின் விலையைவிட இப்போது அதிகம் செலவாகிறது!



இதுவன்றி புரோமின், அயோடின் என்ற மருந்துப் பொருள்கள் நிறையக் கிடைக்கின்றன. பிளாஸ்டிக் பல்புகள் செய்யவும், விமானங்கள் செய்யவும் ராக்கெட் செய்யவும் உபயோகமாகும் உலோகமான மக்னீஷியம் கடலிலிருந்துதான் எடுக்கப்படுகிறது. அமெரிக்காவிலும், பிரிட்டனிலும் கடல் நீரை முதலாகக் கொண்டு மாபெரும்





"நல்ல வேளை! இந்தத் தடவை என் தலை தப்பியது!"

"ஏன் சார்! பசங்க போட்ட வெடி உங்கள் தலையில் விழவில்லையே!"

"இல்லை. இந்தத் தடவை என் பெண்ணுக்குக் கலியாணம் ஆகி யிருந்தால் இந்தத் தீபாவளி தலை தீபாவளியா இருந்திருக்கும்."

---

தொழிலாக மக்னீஷிய உற்பத்தியை வளர்த்திருக்கிறார்கள்.

கடல் பற்றிய ஆராய்ச்சியிலிருந்து நமக்கு விந்தையான பல செய்திகள் தெரிய வந்திருக்கின்றன. கடலுக்கடியில் "திரவத் தங்கம்" என்று போற்றப்படும் பெட்ரோலிய எண்ணெய் ஊற்றுக்களைக் கண்டு பிடித்திருக்கிறார்கள். இவற்றிலிருந்து அமெரிக்காவில் எண்ணெய் எடுக்கிறார்கள். கடலின் அடியில் மாங்கனீஸ் பாறைகளும், ரசாயன உரங்களான நைட்ரேட், பாஸ்பேட் பாறைகளும் ஏராளமாக உள்ளன.

பல் விளக்க உபயோகிக்கும் பற்பசையையும் ஈரம் உறிஞ்சும் மருந்துத் துணியையும் ஜெல்லியையும் ஐஸ்கிரீமையும் சாப்பிடும் யாரும் கடலைப் பற்றி நினைக்காமல் இருக்க முடியாது. ஏன்? கடல் பாசியிலிருந்து எடுக்கும் ஆல்ஜினேட் என்ற பொருளிலிருந்துதான் அவை அனைத்தும் செய்யப்படுகின்றன.

கடலிலே ஓயாத பேரலைகள் கருநீலக் குன்றாக ஆடி எழும்பி, மோதி உடைகின்றன. அவ்வலைகளிலே மாபெரும் சக்தி ஆர்ப்பரிக்கிறது. இச்சக்தியை ஏன் வீணே விடவேண்டும் என்று சிந்தித்த விஞ்ஞானி இன்று அதிலிருந்து மின்சாரம் தயார் செய்கிறான்.

கடலினடியில் பேராறுகள் ஓடுகின்றன. அவற்றுக்குக் கரை கிடையாது; தரை கிடையாது. கரை, தரை இரண்டும் நீர்தான். அவ்வாறுகளில் சில இடங்களில் வெதுவெதுப்பான நீர் ஓடுகிறது. சில இடங்களில் குளிர்ந்த நீர் ஓடுகிறது. சுமார் இரண்டு மைல் அகலத்தில் பல மைல் தொலைவுக்கு அவை ஓடுகின்றன. அவற்றின் வேகமோ கங்கைப் பேராற்றைவிட ஆயிரம் பங்கு அதிகம். அவற்றில் செல்லும் நீரின் அளவோ பலன் பெரிய ஆறுகளைவிடப் பல்லாயிரம் மடங்கு உதிகம். இந்தக் கடல் நீரோட்டங்கள், கடல் மேற் அப்புக்கு அருகில் வெப்ப நீரோட்டமாகவும் அதற்கு பர நேர் கீழே, ஆழத்தில் குளிர்ந்த நீரோட்டமாகவும் வெப்ப நீரோட்டத்துக்கு எதிர்த் திசையிலும் செல்கின்றன. கடல் புதிர்கள் நிறைந்த இடம்.

சென்னை நகருக்கும் கடலுக்கும் நிறைய சம்பந்தம் இருக்கிறது. சென்னையில் கோடைக்காலம் வந்து விட்டால் எல்லோரும் இரண்டு விஷயங்களைப் பற்றித்தான் பேசுகிறார்கள். ஒன்று: பொசுக்கும் வெயில்; இரண்டு: தண்ணீர்த் தட்டுப்பாடு. குடி நீர்ப் பிரச்னை, அதிகாரிகளையும், நிபுணர்களையும் நகரத் தந்தைகளையும் பெரிதும் கலக்குகிறது. அண்டை மாநிலங்களிடம் யாசிக்கிறார்கள். கங்கையையும் காவிரியையும் இணைக்க முடியுமா என்று யோசிக்கிறார்கள். சென்னை நகரைச் சுற்றிக் கடல் இருக்கும் போது தண்ணீருக்கு ஏங்குவானேன் என்றுதான் விஞ்ஞானி கேட்கிறான்.

கடல் நீரைக் காய்ச்சி நீராவியைக் குளிர்வித்து பர்சியாவுக்கு அருகில் உள்ள குவாய்ட்டில் குடி நீர் பெறுகிறார்கள். இதில் எவ்வளவோ முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது. நாளொன்றுக்கு இம்முறை மூலம் ஐம்பது லட்சம் டன் குடிநீர் பெறுகிறார்கள்.

சூரிய சக்தியைப் பயன்படுத்தி, சூடேற்றியும் கடல் நீரிலிருந்து குடிநீர் பெறுகிறார்கள். கடல் நீரை உறைய வைப்பதன் மூலம் உப்புக்களைத் தனியே பிரிக்கிறார்கள்; பின் பனிக்கட்டியை உருக வைத்துக் குடி நீர் பெறுகிறார்கள். இன்றைய உலகின் கவனத்தைக் கவர்ந்திருப்பது, மின் சவ்வுகள் மூலம் நீரைப் பிரித்தெடுப்பதாகும். சில ரசாயன சவ்வுகளில் மின் சாரத்தை மாறி மாறிப் பாய்ச்சுவதன் மூலம் கடல் நீரில் உள்ள உப்புக்கள் சவ்வின் அருகில் தங்கி நல்ல நீர், சவ்வு வழியே வெளிச் செல்கிறது. இதுபற்றி ஆராய்ச்சி உலகெங்கும் நடைபெறுகிறது. கடல் நீர் குடி நீராகும் நாள் அதிக தூரத்தில் இல்லை என்று கூறலாம்.

மனிதன், சில இடங்களில் கடலையே பின் தள்ளிக் கடல் நீரை அப்புறப்படுத்தி விட்டான்! ஐரோப்பாவிலுள்ள ஹாலந்து நாட்டில் பல்லாயிரம் ஏக்கர் நிலப் பரப்பைக் கடலிலிருந்து மீட்டுச் சுவரெழுப்பி, வயல்களும், வீடுகளும் மாளிகைகளும் எழுப்பியிருக்கிறார்கள்.

கடலில், இமயமலையின் உயரத்தைவிட ஆழம் மிகுந்த பிரதேசங்கள் இருக்கின்றன. எவரெஸ்ட் சிகரத்தை அப்படியே பெயர்த்துப் பசிபிக் கடலுக்குள் தள்ளினால் சுமார் ஒரு மைலுக்கு மேல் சிகரத்தின் மீது கடல் நீர் நிறைந்திருக்கும்.

வானில் செல்லும் விமானம்கூடக் கடலை நம்பித் தான் செல்லவேண்டி யிருக்கிறது. ஏனெனில் கடல்தான் புயலையும், மழையையும், பனியையும் உண்டு பண்ணுகிறது; விமானப் போக்குவரத்தைப் பாதிக்கிறது.

பெரும் கூண்டுகளின் துணை கொண்டு கடலில் சுமார் 13,000 அடி ஆழம் வரை மனிதன் சென்று வருகிறான். அங்கு வாழும் உயிரினங்களைப் பற்றி அறிந்து, படம் பிடித்து வருகிறான். திமிங்கிலத்தைப் போல, வால்ரஸ் என்ற பிராணியைப் போல நீருக்குள் பல நாட்கள் இருக்கும் ரகசியத்தை மனிதன் கண்டு பிடித்து விட்டான். நீரில் கரைந்திருக்கும் காற்றை மீன்போல் சுவாசிக்க ஒரு கருவியை அவன் கண்டு பிடித்து விட்டான்.

மனிதனுக்கும் கடலுக்கும் நடக்கும் இப் போட்டியைக் கண்டால் யாரை யார் வெல்கிறார்கள் என்ற பிரமிப்பே ஏற்படுகிறது.

"ஒருகாலத்தில் தேவர்களும் அசுரர்களும் கடலைக் கடைந்தார்கள்; வெள்ளை யானையும் திருமகளும் அமுதமும் வந்தன" என்று புராணம் கூறுகிறது. இன்று விஞ்ஞானிகள் கடலைக் கடைகிறார்கள்; துருவுகிறார்கள். பல்வேறு பொருளை வாரிக் குவிக்கிறார்கள். கடலைச் சரியானபடி பயன்படுத்தினால் வேண்டிய செல்வமும், உணவும் பெறலாம் என்பதைத்தான் நமது புராணக் கதை மூலம் விளக்கினார்களோ?

# எங்கள் டீச்சர்




அந்தக் காலத்து மகா ராஜாக்கள்தான் கல்வி தேவதைக்கு எத்தனை பெரிய மனதுடன் ஆராதனை செலுத்தி யிருக்கிறார்கள். இல்லா விட்டால் இந்தப் பிரம்மாண்டமான கட்டடம் இங்கு எழும்பி விடுமா? ஒரு [illegible] என்று சொன்னதும் 'ஆ!' என்று வியந்து போகிறார்கள். கல்லூரிகள்கூட எங்கும் இப்படி இல்லை யென்று அயலூர்வாசிகள் சொல்லக் கேட்டிருக்கிறேன்.

அப்பொழுது நான் இந்தப் பள்ளியில் எட்டாவது வகுப்பு படித்துக் கொண்டிருந்தேன். இரண்டாவது வருஷமாக. நான் தோற்க ஆரம்பித்தது அந்த வருஷத்திலிருந்துதான் என்று ஞாபகம்.

அந்த நாட்களில்தான் எலிசபெத் தாமஸ் வந்து சேர்ந்தார். வட திருவாங்கூரைச் சேர்ந்தவர். வருகிறார் வருகிறார் வருகிறார் என்று கிடந்தது. வந்து விட்டார்.

பத்மாவதி டீச்சருக்கு ஒரு பெண் துணையில்லாமல், முப்பது நாற்பது ஆசிரியர்கள் மத்தியில் ஒற்றைக்கு ஒருத்தியாய் வேலை பார்ப்பது, நரக வேதனையாகத்தான் இருந்திருக்கும். வகுப்பிலேயே முறைப்பட்டுக் கொள்வாராம். 'பி' பிரிவைச் சேர்ந்த மாணவர்கள் எங்களிடம் சொல்வார்கள். "எப்படியும் இந்த ஸ்கூலை விட்டுப் போய்விட்டால் போதுமென்றும் விட்டது" என்பாராம். இன்ஸ்பெக்டர் வருகிறபோது டீச்சர், தம்முடைய குறையை முறையிடப் போவதாகவும் அவர்கள் பேசிக் கொண்டனர். "எனக்கு என்னவோ பத்மாவதி டீச்சர் ராஜினாமா செய்துவிட்டுப் போய்விடுவார் என்று தான் படுகிறது" என்று நிலைமையைப் பல கோணங்களில் ஆராய்ந்ததன் விளைவாக முடிவுக்கு வந்த பாவனையில் சொன்னான் சேஷன். அவன் பாவங்களில் பெரியவன். உயரத்திலும் பெரியவன்தானே? சண்டை மூண்டு விட்டால் பெஞ்சியைத் தரையில் தேய்த்துக் கூராக்கி எதிரியைக் குத்திக் கிழிக்க வருவதில் வல்லவன். அந்த நாட்களில் அவனுடைய பெயர் ஸ்கூல் வட்டாரங்களில் மிகவும் பிரபலமாக இருந்தது.

பத்மாவதி டீச்சரின் குறை நிவர்த்தியாகி விட்டது. இன்ஸ்பெக்டரின் விஜயம் வீண்போக வில்லை. எலிசபெத் தாமஸ் வந்து சேர்ந்தார்.





'அசெம்பிளி ஹால்' முன்னால் மாணவர்கள் கும்பலாகக் கூடி விட்டனர், புது டீச்சரைப் பார்க்க. பெண்களோ ஹாலுக்குள் பக்கவாட்டிலிருந்து கம்பீரமாக மேலே செல்லும் ஏணியின் விசாலமான படியின் விளிம்பில் நடுப் பாகத்தை மட்டும் அழுத்திப் பிடித்துக் கொண்டு, ஒருவர் மேல் மற்றொருவர் துவண்டு விழுந்தும் அருகில் நிற்கும் பெண்ணை விஷமத்தனமாகக் கீழ்ப் படிக்குத் தள்ளியும், கெலுகெலு கெலுகெலு வென நகைத்தும் அமர்க்களப்படுத்தியவாறு நின்றுகொண்டே உள்ளே பிரவேசித்த வாத்தியாரம்மாளை வெகு நுணுக்கமாக ஆராய்ந்தார்கள்.

பத்மாவதி டீச்சர், எதிர்ச்சாரி ஏணிப்படி வழியாக, படிகளில் கால் இடறாது சாக்லேட் கலர் பட்டுச் சேலையை இடது கை விரலால் நாசூக்காகத் தூக்கிப் பிடித்தபடி இறங்கி, மிடுக்குடன் நடந்து வந்து எலிசபெத்தின் கையை அன்புடனும் முகத்தில் செட்டான சிரிப்புடனும் பற்றி ஒரு குழந்தையை அழைத்துச் செல்வது போல் 'வெயிட்டிங் ரூம்'க்கு அழைத்துச் சென்றார். நிகழ்ந்தது இவ்வளவுதான். அந்த வேளையின் சாமர்த்தியம்தானோ என்னவோ! எல்லாம் கடவுளின் ஜோடனை போல் கண்கொள்ளாக் காட்சியாக அமைந்து விட்டது.

''யாரடீ அது?'' என்று ஒரு குட்டி, தோழியின் தோளைச் சுரண்டிக் கேட்டது. ஹெட்மாஸ்டர் பின்னால் நிற்பதை அது கவனிக்க வில்லை. அவர் கையை உயர்த்தி ''இங்கே என்ன கூட்டம்?'' என்று கத்தியதும், முட்டு வரையிலும் பாவாடையைச் சுருக்கியவாறு தெறித்தன அத்தனையும். (அடி, அசடுகளே! எத்தனை நாட்கள்தான் இப்படியே இருக்கப் போகிறீர்கள்?)

ஆனால் அவ்விருவரும் ஜோடியாய் வருகையில், அந்தக் குட்டி கேட்ட கேள்வி யாருடைய மனதில் தான் எழவில்லை? பதிலோ நாளுக்கு ஒன்றாக, வேளைக்கு ஒன்றாக, கோணத்துக்கு ஒன்றாக மாறி மாறித் தோன்றும். இருந்த அழகு அத்தனையையும் பாரபட்சமின்றி ஆளுக்குப் பாதியாகப் பங்கு வைக்கப்பட்டிருக்கையில், அதற்கு மேல் மனிதனுடைய குதர்க்கத்துக்கு விடை ஏது? ஆனால் பத்மாவதி டீச்சரின் அலங்காரம் ரொம்பவும் பகட்டாகி விட்டது.

இருவருக்கும் ஏறத்தாழச் சம வயது. ஜோடி

## சுந்தர ராமசாமி






யாக அவர்கள் வந்தால் சந்தோஷமும் துக்கமும் நெஞ்சை நிரப்பும். காலை இளம் வெய்யிலில் இருவரும் மெல்ல, அசைந்தாடி வருவார்கள். பூவும் சிரிப்பும் மெல்லிய வார்த்தைகளுமாக இருக்கும். காம்பௌண்டைத் தாண்டி, கட்டடத்தை வந்தடைய வெகு நேரமாகும். இடைவெளித் தூரம் குறையக் குறைய, முடிந்த மட்டும் ஒன்றாகப் பொழுதைக் கழிக்க விழையும் மனசின் உள்ளுணர்வில் கால்கள் பின்னிட்டு நடைபயிலும். இரண்டு எட்டுக்கு ஒரு தடவை நிற்பதும், பேசுவதும், நகர்வதும், நகர்வது போல் பாவனை கொள்வதும், நின்ற இடத்திலேயே நிற்பதுமாக எத்தனை பொழுதைக் கழித்துவிட முடியும்? மாடி வராண்டாவின் தூவானக் கூரை ஜோடிக் கால்களை மறைக்கும் வரையிலும் அங்கேயே நிற்போம். அவர்கள் மறைந்த சில விநாடிகளுக்கெல்லாம் 'பரீட்சை ஹால்' ஏணியின் வாயிலில் ஜோடிப் பூவும் தலையும் முளைத்தெழும் காட்சியின் விநோதம் எங்களுக்கு ஒரு நாளும் அலுத்ததில்லை.

எங்கள் மனசும் எண்ணமும் அவர்களைச் சுற்றிப் படிய, எங்கள் மேல் அவர்கள் கொண்டிருந்த பாசமும், பாடம் கற்றுத் தருகையில் வெளிப்பட்ட அவர்கள் திறமையும் மட்டுமல்ல காரணங்கள். அவர்கள் ஒருவருக்கொருவர் கொண்டிருந்த நேசமும் தோழமை உணர்ச்சியும் எங்கள் மனசை வெகுவாகக் கவர்ந்தன. அவர்கள் மனசுக்குள் மலர்ந்திருந்த அந்தரங்கம் எங்கள் இதயங்களிலும் எதிரொலித்தது. அவ்வெண்ணமே சுகந்தமாக இருந்தது. அவர்கள் மணப் பிணைப்புக்குத் தெய்வ சௌந்தரியம் ஏற்ற நிறமும் கற்பனையுமாக மாணவர் உள்ளம் புனைந்த கதைகள் அநேகம்.

நட்பின் கருதி கலையாமல் அப்படியே அவர்கள் இருந்திருந்தால் எவ்வளவோ நன்றாக இருந்திருக்கும். எனினும், எதுவும் நாம் ஆசைப்படுகிறபடி நடந்துவிடக் கட்டாயம் இல்லை.

எலிசபெத் தாமஸுக்கும், பத்மாவதிக்கும் நடுவில் வெப்பக் காற்று வீச ஆரம்பித்து விட்டது.

* * *

எங்களுக்கும், 'பி' பிரிவு மாணவர்களின் தரத்துக்கும் ஏணி வைத்தாலும் எட்டாது. எல்லாப் பரீட்சைகளிலும் சிரசு எண்ணுத்தகை அவர்களுக்குத்தான். இதற்கு 'பி' பிரிவு, தலையாய மூளைகளின் சேமிப்புக் கிடங்கு என்பது அர்த்தமல்ல. அவர்களுடைய விடைத் தாள்கள் பத்மாவதி டீச்சரின் திறமைக்கு அத்தாட்சி. மண்டை ஓட்டைக் கழற்றிப் பாடங்களை உள்ளே வைத்து மூடி விடுவதில் அவர் காட்டுகிற சாமர்த்தியம் அலாதியானது. அவருடைய திறமையை ஆசிரியர்கள் அனைவருமே — பொறாமை அவர்கள் மனத்தைக் களங்கப்படுத்தியிராத வரை — ஒப்புக் கொள்வார்கள். சென்ற வருஷம் 'சீதாலக்ஷ்மி அம்மாள் நினைவுப் பரிசு' வழங்குகையில், "ஸ்ரீமதி பத்மாவதி அம்மாள் மனசு வைத்தால் ஒரு பெருச்சாளிக்குக்கூட 'பித்தகோரஸ் தியர'த்தைக் கற்றுக் கொடுத்து விடுவார்" என்று ஹெட்மாஸ்டர் சொன்னது முக்காலும் உண்மை.

அந்த ஆண்டும் கால் வருஷப் பரீட்சையில் பத்மாவதி டீச்சரின் மாணவனான பி. ராமன்தான் கணக்கில் முழுசாக நூறு மார்க்கையும் தட்டிக் கொண்டு சென்றான். எங்கள் வகுப்பில், படிப்பில் சூடிகை என்று கருதப்படும் கண்ணாடிக்காரி சரோஜினிக்கு எழுபதுக்கு மேல் எம்பவில்லை. மொத்த மாணவர் நாற்பத்தியேழு பேரில் நான் உள்பட முக்கால் வாசி பெயில். ஒற்றை இலக்கம் ஒரு டஜனுக்கு மேல். இரண்டு மூன்று பேர்களுக்கு சைபர்!

இந்த நிலைமையில்தான் நாங்கள் எலிசபெத் டீச்சரிடம் எங்களை ஒப்படைத்துக் கொண்டோம். வகுப்புக்கு வந்த முதல் நாளே, கால் வருஷப் பரீட்சையில் எங்களுக்குக் கிடைத்த மார்க்குகளை வரிசையாகக் கேட்டுக் கொண்டு வந்தார். அவமானமாகத்தான் இருந்தது. எவ்வளவு ஏமாற்றம் ஏற்பட்டிருக்கும்! இருந்தாலும் வெளியே காட்டிக் கொள்ளாமல் 'ஒரு சுலபமான கணக்கு' என்று சொல்லியவாறு கரும்பலகையில் எழுத ஆரம்பித்தார். அந்தச் சுலபமான கணக்கும் எங்களைப் பெரும்பாடு படுத்தி விட்டது. அநேகருக்கு வழி வழியாய் வந்தும் விடை வரவில்லை. தொடர்ந்து சோதித்ததில் ஏழாம் வகுப்புக் கணக்குகள் கூடப் பலருக்கு எட்டவில்லை என்பதும் வெளிச்சமாயிற்று. எலிசபெத் தாமஸ் சிரித்தவாறு, "கீழ் வகுப்பிலிருந்து, கைகளைத் தரையில் ஊன்றி நகர்ந்து நகர்ந்து வந்திருக்கிறீர்கள் போலிருக்கிறது" என்றார்.

அசட்டுச் சிரிப்புச் சிரித்தோம்.

"போனது போகட்டும். மேல் வகுப்புக்கு உங்கள் அத்தனை பேரையும் சிப்பாய் மாதிரி அணிவகுத்துப் போகவைக்க என்னால் முடியும்" என்றார்.

கை தட்டாத குறைதான். மகிழ்ந்து போனோம்.

கண நேர மௌனத்துக்குப் பின், "உங்கள் ஒத்துழைப்பும் கொஞ்சம் தேவை" என்று சொல்லி முடித்தார். வெகு அழகாக இருந்தது.

தலைகள் பலமாக அசைந்தன.

முதல் நாளே அவர் எங்களை முந்தானையில் கட்டிக் கொண்டு விட்டார்.

அன்றிலிருந்து அவர் மேற்கொண்ட உழைப்பு கடினமானது. அடியைப் பிடித்துச் சொல்லித் தர ஆரம்பித்தார். எத்தனை தடவை வேண்டுமானாலும், ஒரே பாடத்தைத்தான், திரும்பத் திரும்பச் சொல்லித் தர அலுக்காத மனசு அவருக்கு. வாரம் தவறாமல் வகுப்புப் பரீட்சைகள் நடந்தன. ஒவ்வொரு நாளும் வீட்டுப் பாடம். இதற்கு முன் கடமையிலிருந்து தவறி விட்ட ஆசிரியர்களுக்காகவும் எங்களுக்காகவும் அவரே தண்டனை அனுபவித்துக் கொண்டார் போலும். அவர் மேற்கொண்ட சிரமமும், சிரத்தையும், எங்களைக் கடைத்தேற வைப்பதில் அவர் காட்டிய கரும வைராக்கியமும் அவர் பேரில் மிகுந்த அனுதாபத்தை ஏற்படுத்தின. அவருடைய திட்டம் வெற்றி பெறுவதற்காகவே நாங்கள் மனசைக் கொடுத்துப் படிக்க ஆரம்பித்தோம் என்றும் சொல்லலாம். அத்துடன் அவர் பாடம் சொல்லித் தந்த முறையும் கவர்ச்சிகரமானது. எங்களை ஜீவ காருண்யத்துடன் பார்க்கத் தெரிந்து கொண்டோம்.

ஒரு நாள் டீச்சர் பேசிய பேச்சு எங்களைத் திகைப்பில் ஆழ்த்தி விட்டது. "இந்த வருஷம் 'சீதாலக்ஷ்மி அம்மாள் நினைவுப் பரிசு' நமக்குத்தான் கிடைக்கப் போகிறது" என்று ஒரே போடாய்ப் போட்டு விட்டார். என்ன இது? எங்களால் அதைப் பெற முடியுமா? இறுதிப் பரீட்சையில் கணக்கில் முழுசாக நூறு மார்க்கையும் வாங்கி விடுவது இலேசான காரியமா?

நாங்கள் வாயைத் திறக்கவில்லை.

"என்ன ஒருவரும் பேசக் காணோம்... சரோஜினி..... என்ன....?" என்று தூண்டினார் டீச்சர்.

சரோஜினி குண்டலம் அசையத் தலையைக் கவிழ்த்துக் கொண்டாள்.

"பரிசு இந்த வருஷம் நமக்குத்தான் கிடைக்கப் போகிறது. சர்வ நிச்சயம்" என்றார் மீண்டும்.

நாங்கள் குளிர்ந்து போனோம். ஏன்? அவர் வாக்குப் பலிக்கக் கூடாது என்பதுண்டா? உறுதியினாலும், உழைப்பினாலும் எதைத்தான் சாதிக்க முடியாது?

நாள் ஆக ஆகப் பரிசு அந்தத் தடவை எங்களுக்குத்தான் என்ற நம்பிக்கை எங்கள் மனத்திலும் பலத்து விட்டது. 'பி' பிரிவு மாணவர்கள் எதிர்ப்பட்டால் தலை நிமிர்ந்து நடந்தோம்.

இது காரணமாக ஒரு தடவை சண்டைகூட மூண்டது.

ஒரு நாள் காலையில் எங்கள் வகுப்புக்கு முன்னால், நான், ரவீந்திரன் தம்பி, தேவேச சர்மா, கோவப்பன், கிருஷ்ணசாமி, அப்புக் குட்டன், சாமு ஆகியோர் நின்று கொண்டிருந்த போது சேஷனும், அவனுடைய சகாக்களும் பி. ராமனும் அவனுடைய விசிறிகள் சிலரும் அங்கு வந்து சேர்ந்தனர்.

ஏதோ பேச்சுவாக்கில் கிருஷ்ணசாமி, "இந்த வருஷம் பரிசை நாங்கள் கொத்திக் கொண்டு போகப் போகிறோம்" என்று சொல்லி வைத்தான். அவ்வளவுதான். சேஷன் ஆயத்தமாகி விட்டான்.

"யார் சொன்னது?"

"டீச்சர்தான் சொன்னார்."

"உங்கள் டீச்சருக்கு ஜோஸ்யம் தெரியுமோ... ?"

கோவப்பன் முன்னால் வந்தான்.

"ஜோஸ்யம் தெரியாது. நன்றாகப் பாடம் சொல்லித் தரத் தெரியும். மாணவர் திறனை மதிக்கத் தெரியும். போய் விட்டு வா" என்றான்.

கோவப்பன் ஆகஸ்டு தியாகி. பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தை எதிர்த்துப் புரட்சி செய்ததை யொட்டி ஒரு நாள் இரவு சிறைவாசம் செய்தவன். அவன் வார்த்தைகளில் சொல்வதென்றால் 'தமிழின் ஓர் எளிய காதல'னும்கூட. அவனுக்கு எதிராக வருகிறவனை மாணவர் சமூகம் பகிஷ்கரிக்கும் நிலை அந்நாளில் இருந்தது.

சண்டை முற்றி விட்டது.

"பி. ராமனைக் கணக்கில் முறியடிக்க இந்தியாவில் ஒரு பயலும் இல்லை" என்றான் சேஷன்.

தந்தி விலாசம்: "JEEVAN", மதராஸ் & எல்லா கிளை ஆபீஸ்கள்
டெலிபோன் நெம்பர்: மதராஸ் ஆபீஸ்: 32118, மதராஸ் பங்களா: 85457
மதுரை: 3114, விஜயநகரம் சிடி: 30, ராய்ப்பூர்: 890 & கட்டக்: 728

# K. M. S. L.

# சுந்தரராமன் & ஸன்

நூல் வியாபாரம் & ஏஜண்டுகள்

31, தங்கசாலை தெரு — — — சென்னை-3

கிளை ஆபீஸ்கள்:

மதுரை (மதராஸ் ஸ்டேட்)
காகினாடா & விஜயநகரம் சிடி (ஆந்திர பிரதேஷ்)
ராய்ப்பூர் (மத்திய பிரதேஷ்)
கட்டக் (ஒரிஸ்ஸா ஸ்டேட்)

○●○

விநியோகஸ்தர்கள்:

## மதுரை மில்ஸ் கம்பெனி லிமிடெட்

மதுரை - - அம்பாசமுத்திரம் - - தூத்துக்குடி

---

யாவரும் விரும்புவது

மணத்திலும் குணத்திலும் நிகரற்ற

## வி. எஸ். அண்டு சன்ஸ்

# பெப்பர்மெண்டுகளே!

சுத்தமானவை! சுவை மிக்கவை! சத்து நிறைந்தவை! சக்தியுடையவை!

★

தயாரிப்பாளர்கள்

## தென்னிந்திய பெப்பர்மெண்ட் தொழிற்சாலை

ஸ்தாபிதம்: 1925 கும்பகோணம்

சென்னை விற்பனை டெப்போ: 2-121, ஆதியப்ப நாயக்கன் தெரு, சென்னை-1

''பி. ராமன் சாப்பிட்டான்'' என்று கீச்சுக் குரலில் கத்திய சாமு, தொடர்ந்து ''சாப்பாட்டு ராமன்'' என்று திருத்தமும் செய்தான்.

''பல்லை உடைத்து விடுவேன்'' என்றான் சேஷன்.

''உடை, பார்ப்போம்'' என்று சொல்லியவாறு அவன் அசௌகரியப்பட வேண்டாம் என்று எண்ணியது போல் சாமு தன்முகத்தைச் சேஷன் முகத்தருகே கொண்டு சென்றான்.

சேஷன், சாமுவின் பல்லை உடைக்கவில்லை. சும்மாவும் இருந்தானில்லை. சாமுவைப் பிடித்துத் தள்ளியவாறு ''பத்மாவதி டீச்சருக்கு ஜே!'' என்று கத்தினான். அவனுடைய சகாக்களும் ''ஜே!'' என்று கத்தினார்கள். இதற்கு மேல் ஆகன்டு நியாயியால் சும்மா இருக்க முடியவில்லை. அந்தப் பள்ளிக்கூடமே அதிரும் குரலில் ''எலிசபெத் டீச்சருக்கு'' என்றான். நாங்கள் அடிவயிற்றிலிருந்து, ''ஜே!'' என்று கத்தினோம்.

''மகாத்மா காந்திக்கு!''

''ஜே!''

சேஷன் பென்சிலை உருவித் தரையில் தேய்க்க ஆரம்பித்து விட்டான். ரத்தம் சிந்தப்பட்டிருக்கும் என்றுதான் எண்ண வேண்டியதாக இருக்கிறது. நல்லவேளை. மணி அடித்து விட்டது. நாங்கள் வகுப்புக்குள் புகுந்தோம்.

இந்த விஷயம் எலிசபெத் டீச்சர் காதில் விழுந்ததும், ''எதற்கு அவசியமில்லாத சண்டை?'' என்று எங்களைக் கடிந்து கொண்டார். அது மட்டுமல்ல. நாங்கள் பத்மாவதி டீச்சரைக் கேலி செய்தோம் என்று அவரே புகார் செய்ததாகவும் டீச்சர் சொன்னார்.

கோலப்பன் எழுந்து நின்று, ''நம்மால் பரிசு பெற முடியாது என்கிறார்கள். இழிவுபடுத்துகிறார்கள்'' என்று உரக்கச் சொல்லி விட்டு ''ரத்தம் கொதிக்குது'' என்று முணுமுணுத்தான்.

ஃ ஃ ஃ

எலிசபெத் டீச்சரின் தன்னம்பிக்கையும் எங்களுடைய உழைப்பும் வீண்போகவில்லை. அரை வருஷப் பரீட்சையில் மார்க்குகளை அள்ளிக் கொண்டு வந்து விட்டோம். சரோஜினிக்கு நூற்றுக்கு நூறு. கண்ணுடிக்காரி கொடியை நட்டுவிட்டாள். விடைத் தாள்களைத் திருத்திய பத்மாவதி அம்மாளே தன் கையால் போடும்படி ஆகி விட்டது.

கணக்கு மன்னன் பி. ராமனுக்கு அந்தப் பரீட்சையில் கிடைத்த மார்க் இப்போது என் நினைவில் இல்லை. ஆனால் நூற்றுக்கு நூறு பெற வில்லை என்பது நிச்சயம். ஏனெனில் பி. ராமனும், அவனுடைய விசிறிகளும், சேஷன் கூட்டாளிகளும் எங்கள் டீச்சர் ரொம்பவும் கடினமாகக் கேள்வித் தாளை அமைத்து விட்டதாகக் குற்றம் சாட்டினார்கள்.

''மூளை வேணும்டா, மண்டுகளா!'' என்றான் கோலப்பன்.

மீண்டும் சண்டைக்கும் சச்சரவுக்குமான சூழ்நிலைதான் நிலவி வந்தது.

''ஸ்கூல் விட்டு வெளியிலே வாங்க. அப்பொழுது தெரியும்'' என்று கறுவினான் சேஷன்.

''ஹா, மூட்டை! ஹா, கொசு! ஐயோ பயமாயிருக்கே!'' என்று கோலப்பன் 'பி' பிரிவு மாணவர்களின் வயிற்றெரிச்சலைக் கிளப்பி விட்டான்.

விடைத் தாள்களை விநியோகம் செய்த அன்று தலைமையாசிரியர் எங்கள் வகுப்புக்கு வந்து, எங்கள் முன்னிலையிலேயே டீச்சரை வெகுவாகப் பாராட்டினார். ஒரு ஆசிரியைக்கு இதை விடவும் மகிழ்ச்சி அளிக்கும் விஷயம் ஏது? பூரித்துப் போய் விட்டார். நாணத்தால் முகம் சிவந்து பார்வை காலடியில் லயித்து விட்டது. தலைமையாசிரியரை வழியனுப்ப எழுந்து நின்ற எங்களை மீண்டும் உட்காரச்சொல்லவும் பிரக்ஞையின்றி, விழிகள் எங்கள் திசை பார்த்திருக்கையிலும் எதையும் உணராத ஒன்றாகி, காலமும் இடமும் மன வெளியிலிருந்து கழன்று போய்ச் சுய லயிப்பில் மிதந்தபடி நின்று கொண்டிருந்தார். பெருமிதம் கண்களிலும் முகத்திலும் பிரவாகம் எடுத்து ஓடியது.

விழிகளில் பார்வை திரும்பியதும் டீச்சர் சிரித்தார். போகப் போகக் குழந்தை மாதிரி வாய்விட்டே சிரிக்க ஆரம்பித்து விட்டார். நாங்களும் சிரித்தோம். சிறந்த மாணவர்களுக்கு உதாரணமாக நாங்கள் திகழ்கிறோம் என்று தாராளமாகப் பாராட்டினார். சரோஜினியின் அருகே சென்று அவள் முதுகில் தட்டிக் கொடுத்தார். சரோஜினி எழுந்து நின்றாள். அப்பொழுது சரோஜினி முணுமுணுத்தது எங்கள் காதில் விழவில்லை. ஆனால் அவளுடைய உதடுகள் அசைய அசைய டீச்சரின் முகம் கோரமாக மாறியது. அவரால் நிற்கவும் முடியவில்லை. அப்படியே நாற்காலியில் உட்கார்ந்து கொண்டார். எங்கள் முன்னால் உடைபட்டு விடக் கூடாது என்ற வீம்பில் துக்கத்தை விழுங்கிப் பார்த்தும், அது திமிறிக் கொண்டு வந்தது. கழுத்தும் முகமும் உப்பிச் சிவந்து விட்டன. டீச்சர் என்ன இது?

மணி அடித்தது.

டீச்சர் எழுந்து நின்றார்.

''சரோஜினி, டீச்சர் சொன்னதாகவா அந்தப் பெண் சொன்னாள்?''

டீச்சரின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தோம்.

''ஆமாம், டீச்சர்!''

டீச்சரின் கண்கள் நிறைந்து விட்டன. அவர் கண்கள் எங்கள் முகங்களைச் சந்திக்காமல் எதிர்ச் சுவரில் படிந்தன.

கனகவரத்தில், ''கேள்விகளைச் சொல்லித் தந்தேனா?'' என்று கேட்டார். அந்தக் குரலே மனத்தைத் தொட்டது.

அவர் கேட்ட கேள்வியின் பொருள் அப்பொழுது எங்களுக்கு மட்டுப்படவில்லை. ஒன்றும் பேசக் கூடாமல், பிண்டம், பிண்டமாய் விழித்தபடி இருந்தோம்.

''சொல்லித் தந்தேனா?'' என்று கேட்டார் மீண்டும்.

அவர் எங்கள் பதிலை எதிர்பார்த்து நிற்கையில், அமைதியில் கரைந்த அந்த ஒரு நிமிஷமும் மனத்தைப் பிழிந்து விட்டது. ''உண்மை கடவுளுக்குத் தெரியும்'' என்று முனகியவாறு அவர் வெளியேறிச் சென்று விட்டார்.

எங்கள் டீச்சர் மேல் மலை போல் ஒரு அபாண்டத்தைச் சுமத்த பத்மாவதி டீச்சருக்கு எப்படித்தான் மனசு வந்ததோ? கேள்விகளைப் பரீட்சைக்கு முன்னாலேயே எங்களிடம் சொல்லி விருக்கிறாராம். என்ன கொடுமையான வார்த்தை!

உண்மை எங்கள் மனச்சாட்சிக்குத் தெரியும். எங்களிடம் அவர் எதுவும் சொல்ல வில்லை. சொல்லப் போனால் எங்கள் டீச்சர்தான் கேள்விகளை அமைத்தார் என்பதுகூட அன்று வரையிலும் எங்களுக்குத் தெரியாது. மறந்தும் இதுபற்றி அவர் பிரஸ்தாபித்தது இல்லை. மாதிரிக் கேள்விகளைப் போட்டுக் கோடி காட்டியதாகவும் நினைவு இல்லை. வெறும் அபாண்டம். முன்னால் சொல்லித் தந்து பின்னால் தட்டிக் கொடுத்துத் தன்னையே ஏமாற்றிக் கொள்ளும் அசடா எங்கள் டீச்சர்! மண்ணைப் பொன்னாக்கத் தெரிந்தவர் அவர். அவர் தண்ணீர் வார்த்தால் எருக்கில் ரோஜா மலராதா? ஆள் ஆளாய் வந்து எங்களைப் பார்த்து உதட்டைப் பிதுக்கி விட்டுச் சென்ற ஆசிரிய மணிகள் எத்தனை பேர்? கைவிரித்தவர்கள் எத்தனை பேர்? 'எடுத்த எடுப்பிலேயே உங்களால் எதைத்தான் சாதிக்க முடியாது?' என்று கேட்டு நம்பிக்கையின் ஒளியை எங்கள் இதயங்களில் பாய்ச்சியவர் அல்லவா அவர்? தலை நிமிரச் சொன்னார். நிமிர்ந்தோம். இது ஒரு தவறா?

நன்றாகச் செய்து விட்டோம் என்பதால்



நம்ப முடியாமல் ஆகி விடுமா? சாட்சாத் சரஸ்வதி, உங்கள் மாணவர்கள் அத்தனை பேரையும் மடியில் போட்டுக் கொண்டிருக்கிறாள் என்றே இருக்கட்டுமே. எங்களையும் அவள் ஓரக் கண்ணால் பார்க்கக் கூடாது என்பதுண்டா? சொன்னவர் திறமையும், கேட்டவர் உழைப்பும் காற்றிலா போய் விடும்? அருவை..... வெறும் அருவை... இல்லை, டீச்சர், நீங்கள் சொல்லித் தரவில்லை.''

மறு நாள் எலிசபெத் டீச்சர் வரவில்லை. இனி மேல் அவர் வரமாட்டார் என்று ஹேஷ்யம்கூட குப்பென்று கிளம்பி விட்டது. அப்படியானால் எங்கள் கதி என்னாகும்? பழையபடி 'ரிங் மாஸ்டர்'களிடம் அகப்பட்டு அல்லல்பட வேண்டும் என்பதுதான் எங்கள் தலைவிதியா?

நல்ல வேளை. மறு நாள் மணி அடித்துக்கொண்டிருக்கையில், அலை அலையாய் எழுந்த மணியின் நாதத்துக்கு ஆட்பட்டு வரவேண்டாம் என்றிருந்த மன உறுதி தளர்ந்து ஓடி வந்தவர் போல், டீச்சர் உள்ளே நுழைந்தார்.

அன்றும் சரி, அதற்குப் பின் வந்த நாட்களிலும் சரி, அவரையும் பத்மாவதி டீச்சரையும் எந்தச் சந்தர்ப்பத்திலும் நாங்கள் ஒன்றாகப் பார்த்ததில்லை. அவர் வேறு, இவர் வேறு என்றாகி விட்டது. பள்ளிக்கூடத்திலும் நடமாட்டம் ஆளுக்கொரு இடமாய்ப் பதிந்து விட்டது. ஜோடிக் கால்கள் மறைந்ததும் ஜோடித் தலைகள் முளைத்ததும், நின்று நின்று பேசியதும், சேர்ந்து சிரித்ததும்.. எல்லாம் பழங்கதைகள் ஆகிவிட்டன.

அன்று வகுப்புக்குள் நுழைந்த டீச்சர் ஒரு துயர சம்பவம் நடந்து விட்ட சுவட்டையே காட்டிக் கொள்ளவில்லை. எப்பொழுதும் போல் சிரத்தையோடும் உற்சாகத்தோடும் பாடங்கள் எடுத்தார். கொப்புளிக்கும் பேச்சாகவே இருந்தது.

இறுதிப் பரீட்சை நெருங்கிக் கொண்டிருக்கும் போது டீச்சர் மீண்டும் ஒரு நாள் அந்தப் பழைய பேச்சையே தூக்கிப் போட்டார். ஒரு துயர சம்பவத்தையும், ரசாபாசமான தூஷணையையும் ஞாபகப் படுத்தக் கூடிய அப்பேச்சு, சிறிதும் தயக்கம் இன்றி அவர் வாயில் பிறக்குமென நான் எண்ணவே இல்லை.

சீதாலக்ஷ்மி அம்மாள் நினைவுப் பரிசு எங்கள் வகுப்புக்குக் கிடைக்க வேண்டுமாம்!

''நமக்குத்தான் கிடைக்கும். வேண்டுமென்றால் பாருங்களேன்'' என்று எங்களுக்கு எதிராகச் சவால் விடும் பாவனையில் சொன்னார்.

''இந்தத் தடவை பரிசு நமக்குத்தான் டீச்சர்'' என்றான் கிருஷ்ணசாமி.

''உனக்கும் அப்படித்தான் தோன்றுகிறதா? பேஷ்! பேஷ்!'' என்று சொல்லிச் சந்தோஷப்பட்டார்.

என்ன வேடிக்கை! இந்த அசட்டுக் கிருஷ்ணசாமி சொல்வதைக் கூடத் தேவவாக்கு மாதிரி எடுத்துக் கொண்டு சந்தோஷப்படுகிறாரே!

''ஆனால் ஒரு விஷயம்'' என்று சொல்லி விட்டு, தம் கை நகத்தைப் பார்த்தபடி ஒரு கணம் மௌனத்தில் ஆழ்ந்தார். ''கேள்வித் தாள்கள் இந்தத் தடவை வெளியூரில் தயாராகின்றன. முன்பு போல் சொல்லித் தர முடியாது'' என்று சொல்லி விட்டுத் துயரம் தோய்ந்த சிரிப்புச் சிரித்தார்.

நெஞ்சில் தைத்த முள் அங்கேயே தான் இருக்கிறது என்பதை அன்று அவ்வார்த்தைகள் எனக்கு உணர்த்தின.... காலம், முள்ளைப் பிடுங்க விட்டு விடாமல் கையால் பொத்திப் பேணுகிறார் போலும்.

இறுதிப் பரீட்சையில் நாங்கள் பரிசு பெற்று விட்டோமென்றால் அவருடைய திறமையும் எங்களுடைய தரமும் நிரூபணமாகி விடாதா? அவ்வாறு நிகழ்ந்து, பரிசை, தலைமையாசிரியர் எங்கள் டீச்சரின் கரங்களில் அளிக்கும் போது எழும் கரகோஷம், அபாண்டத்தை உமிழ்ந்த ஆத்மாவை எத்தனை வலுவாய்த் தாக்கும்? அந்தக் கணத்திலேயே சத்தியம் வெளிப்பட்டு அவர் மீது படிந்திருக்கும் களங்கமும் ஓடிப் போய் விடாதா? இத்தனைக்கும் அவர் எங்களை அல்லவா இப்போது நம்பிக் கொண்டிருக்கிறார்?

பரீட்சையும் வந்து விட்டது.

போர்முனைக்குச் செல்லும் யுத்த வீரர்களின் மன நிலையை டீச்சர், எப்படியோ எங்களுக்கு ஏற்படுத்தி விட்டார். எங்களுடைய வீரத்தையும், சாகசத்தையும் கடைசிக் கண்ணியாக நம்பி, ஒரு தேசமே காத்துக் கொண்டிருப்பது போல் ஒரு பிரமை. பழைய பாடங்களைப் புரட்டிப் புரட்டிச் சொல்லித் தருவதும், தனித் தனியாக எங்கள் சந்தேகங்களைத் தீர்த்து வைப்பதும், சனிக் கிழமைகளைக் கூட விட்டு வைக்காமல் வகுப்புக்கள் நடத்துவதுமாகச் சதா சர்வகாலமும் இதே வேலையில் அழுந்திக் கிடந்தார், டீச்சர்.

எந்தக் கோணத்தில் அலசிப் பார்த்தாலும், அவருடைய ஆசை அவசியம் நிறைவேறியிருந்திருக்க வேண்டிய ஒன்று என்ற முடிவுக்குத்தான் வர முடியும். அதிலிருந்து பிறக்கும் சந்தோஷத்தை அடைய அவர் முற்றிலும் தகுதியானவர். அவரைப் போன்ற ஒருவரின் ஸ்பரிசம் படுகிற போதுதான், கிண்ணமோ, தம்ளரோ பரிசாகிறது. அவர் கையில் அதை அளிப்பதற்கும், அந்தக் காட்சியைப் பார்ப்பதற்கும், அந்த நிமிஷத்தில் கரகோஷம் செய்வதற்கும் ஒருவனுக்குச் சந்தர்ப்பம் கிடைப்பது கூட ஒரு விதத்தில் அதிர்ஷ்டம் என்றுதான் சொல்ல வேண்டும்.

எங்களுக்கு அந்த அதிர்ஷ்டம் வாய்க்கவில்லை. இறுதிப் பரீட்சை என்பதே எங்களை விடவும் எலிசபெத் டீச்சரைச் சோதிக்க வந்த ஒன்றாகி விட்டது. கனவு பொய்த்து விட்டது என்பதுகூடப் பெரிசல்ல; அதைத் தாங்கிக் கொள்ளலாம். எல்லோர் முன்னிலையிலும், அவமானப்பட்டு, தலை கவிழ்ந்து நிற்கும்படி ஆகி விட்டது. அந்தக் கணநேரம் பலவீனத்துக்கு அவர் ஆட்பட்டு விட்டதை விதி என்று சொல்லலாம்; பலவீனம் என்றும் சொல்லலாம். இங்கும், எங்கும் போல் வார்த்தைகள் அர்த்தமற்றவைகளாகவே ஒலிக்கின்றன. ஆனால் எலிசபெத் டீச்சர் போன்ற ஒருவரின் வாழ்வில் இது போன்ற ஓர் அற்ப நிகழ்ச்சி ஊடுருவி விடுவதில் அமைந்திருக்கும் சோகம், இருபது ஆண்டுகளுக்குப் பின்னும் இன்று எண்ணிப் பார்க்கையிலும் மனதைத் தொடுகிறது.

கடைசி நாள் கணக்குப் பரீட்சை நடந்து கொண்டிருக்கையில் அந்தச் சம்பவம் நடந்தது.

பரீட்சை சமயம் முடிய ஐந்து நிமிஷங்கள்தான் இருந்தன. அப்பொழுது விடைத் தாள்களைக் கொடுப்பதற்காகச் சரோஜினி எழுந்து நின்றாள். அவள் அருகே வந்த எலிசபெத் டீச்சர், ''இன்னும் ஐந்து நிமிஷம் இருக்கிறதே. மீண்டும் பாரு'' என்று மெல்லிய குரலில் சொன்னது, இரண்டொரு மேஜைகள் தள்ளியிருந்த என் காதில் விழுந்தது. டீச்சர் குரலில் வித்தியாசம் தொனித்த உணர்வில் நான் அவர் முகத்தைக் கவனித்தேன். முகம், எதையோ இழந்து விட்டிருந்தது.

டீச்சர் சொன்னதற்காக மட்டும் மீண்டும் அமர்ந்து விடைத் தாள்களைப் புரட்டினாள் சரோஜினி.

கடைசி மணியும் அடித்தது.

எலிசபெத் டீச்சர் அவசரமாகச் சரோஜினி அருகில் வந்து, ''கடைசிக் கணக்கு வரையும் பார்த்தாயா? என்ன அவசரம்?'' என்று குனிந்தபடி, அருகே அமர்ந்திருந்த மாணவர்களிடம் விடைத் தாள்களை வாங்கிக் கொண்டே சென்றார்.

சரோஜினி சர்ரென்று கடைசிப் பக்கம் திருப்பி, கீழுதட்டைப் பல்லால் கடித்தபடி, ஏதோ திருத்தம் செய்வதை நான் பார்த்தேன்.

''உங்கள் நடவடிக்கையை நான் ஆட்சேபிக்கிறேன்'' என்ற குரல் ஹால் நெடுகிலும் எதிரொலித்தது.

பத்மாவதி டீச்சர் பத்ரகாளி மாதிரி நின்று கொண்டிருந்தார். எலிசபெத் டீச்சர் அவர் நின்ற பக்கம் திரும்பிப் பார்க்கவில்லை. அவர் தம் முகத்தை யாரும் பார்க்க விடாமல் ஜன்னலைப் பார்த்தபடி நின்று கொண்டிருந்தார்.

தடதட வென்று ஓசையெழப் பத்மாவதி டீச்சர் வெளியே சென்றார். எலிசபெத் டீச்சர் முதல் நாள் வந்த அன்று, அதே ஏணிப் படியில் பத்மாவதி டீச்சர் இறங்கி வந்த சித்திரம் என் மனதில் விரிந்தது.

விசாரணை ஆரம்பமாயிற்று.

ஆரம்பத்தில் ஹெட்மாஸ்டர் கேட்ட கேள்விகளுக்கு எலிசபெத் டீச்சர் பதில் எதுவும் சொல்லாமல் அப்படியே சிலையாய் நின்று கொண்டிருந்தார். அவருடைய மனசு பாறையாய் உறைந்து விட்டாற் போல் இருந்தது.

''இதுதான் என்னுடைய கடைசிக் கேள்வி'' என்று கூறி விட்டு, தலைமையாசிரியர், '' 'கடைசிக் கணக்கு வரையிலும் பார்' என்று சரோஜினியிடம் கூறிய போது அவள் தவறாக எழுதியிருந்த விடையைத் திருத்திவிட வேண்டும் என்ற எண்ணம் உங்கள் மனதில் இருந்ததா?'' என்று கேட்டார்.

நீண்ட நேர மௌனத்துக்குப் பின் டீச்சர், ''இருந்தது'' என்று சொன்னார்.

ஹெட்மாஸ்டர் மாடிக்குச் சென்று விட்டார்.

நான் வராண்டாவுக்கு வருகையில், எங்கள் டீச்சர், கிழக்கோரச் சுவரண்டையில் ஒரு நிழல் மாதிரி நகர்ந்து கொண்டிருப்பதைப் பார்த்தேன்.

அதற்குப் பின் நான் அவரைச் சந்திக்கவில்லை. வேலையை ராஜிநாமா செய்து விட்டு, கோட்டயத்துக்கே சென்று விட்டதாகப் பையன்கள் பேசிக் கொண்டனர்.

# 'அனாஸின்'

## நரம்புத் துடிப்பால் ஏற்படும் தீராத தலைவலியைப் போக்குகிறது




தலைவலி ஏற்படுவதற்கு நூற்றுக்கு தொண்ணூறு காரணங்களை உங்களால் யாதென்று சந்தேகிக்கக்கூட முடியாது— உதாரணமாக, முதுகு, கழுத்து, தலை உச்சியிலுள்ள தசைகளில் ஏற்படும் விறைப்புநிலை காரணமாகவும் தலைவலியுண்டாகும். இந்த விறைப்புநிலை, சிறிய இரத்தக் குழாய்களிலும், நரம்புகளிலும் அழுத்தத்தை விளைவித்து வலியை உண்டாக்குகிறது. இந்த வலியின் காரணமாக விறைப்பு நிலையும் நரம்புத் துடிப்பும் அதிகமாகி தலைவலியைக் கடுமையாக்குகிறது.

'அனாஸின்' விஞ்ஞான முறைப்படி நான்கு மருந்துகள் சேர்ந்த ஒரு கலவையாகும். ஆகையால் அது ஒரு டாக்டரின் குறிப்புபோல பாதுகாப்பு அளிக்கிறது. 'அனாஸினி'ல் உள்ள விசேஷ மருந்துச் சேர்க்கை நரம்புத் துடிப்பைத் தளர்த்துகிறது, விறைப்பு நிலையிலிருந்து விடுவிக்கிறது. உடனேயே தலைவலியிலிருந்து நிவாரணமளிக்கிறது. 'அனாஸின்' துரிதமாக தீராத தலைவலியை நிறுத்துகிறது. எப்பொழுதும் வீட்டில் 'அனாஸின்' வைத்திருங்கள்.

2 வில்லைகளாக சுகாதார முறையில் ஸெல்லோபேன் தாள்களில் பாக் செய்யப்பட்டும், குடும்ப உபயோகத்திற்காக 32வில்லைகள் கொண்ட பாட்டில்களில் மோசடிக்கு இடங் கொடாதவாறு சீல் செய்யப்பட்டும் கிடைக்கும்.




*Registered User:* GEOFFREY MANNERS & CO. LTD.


உங்கள் குழந்தைக்கு இந்நிலை ஏற்பட்டால்
மானேர்ஸ்
கிரைப் மிக்சர் கொடுத்து.
MANNERS
GRIPE MIXTURE
அது சிரித்து
மகிழ்வதைக் கண்டு
அனுபவியுங்கள்.
உன்னத தரத்தின் இந்த
சின்னத்தைக் கவனியுங்கள்.
இது ஒரு மானேர்ஸ்
தயாரிப்பு
GEOFFREY MANNERS & CO. LTD. BOMBAY • DELHI • CALCUTTA • MADRAS


அன்றாட அலுவல்களை
ரோபஸ்டா
காபி
அருந்தி ஆரம்பியுங்கள்
களைப்பின்றியும் குதூகலமாகவும் இருக்க ரோபஸ்டா காபி அருந்துங்கள். அது ருசி மிக்கது - விலையிலும் மலிவானது - மேலும் கெட்டியான டிகாக்ஷன் அளிக்க வல்லது
COFFEE BOARD
காபி போர்டு • பெங்களூர்-9
CB-323 T

Phone: **61111 to 61115** Grams: DASPRAKASH

# Hotel Dāsaprakash - Madras

Is An International Caravanserai

- Over 150 Rooms: Large Number Air-conditioned: with Three Electric Lifts.
- Telephones in Most Rooms.
- Air-Conditioned Halls for Meetings & Conferences.
- Soda Fountain: Ice Cream Parlour: Cold Coffee Bar.
- "Prakash Mantap" (Open Air Theatre) for Social, Religious, Cultural & Educational Activities and Wedding Receptions.
- Ten Delectably lit Roof Gardens, to accommodate 1500 Guests at a time.
- Our Monthly Moonlight Dinner: Special attraction of the Town.
- Special Vegetarian Cuisine in Western Style for Overseas Visitors.

★

HAVE THE HOLIDAY OF YOUR LIFE

*By Staying at*

# Hotel Dāsaprakash - Ooty

Situated in Enchanting Surroundings

Phone: **434** Grams: DASPRAKASH

★

VISITORS TO BRINDAVAN GARDENS

will find their stay

AT

# Hotel Dāsaprakash - Mysore

MOST ENJOYABLE

Phone: **742** Grams: DASPRAKASH

★

— A HOME AWAY FROM HOME —

FINEST VEGETARIAN HOTELS IN THE EAST

# Dāsaprakash Group of Hotels

MADRAS - MYSORE - OOTY

---

சேவைக்கும் பாதுகாப்புக்கும் சிறந்தது

# பாண்டியன் பாங்க்

லிமிடெட்



சென்ட்ரல் ஆபீஸ்: மதுரை

ரிஜிஸ்டர்டு ஆபீஸ்: திருமங்கலம்

•

எங்கள் வாடிக்கைக்காரர்கள், பங்குதாரர்கள், அபிமானிகள் அனைவருக்கும்

**எமது தீபாவளி வாழ்த்துக்கள்!**

•

நிர்வாகக் குழு

சேர்மன்: P. V. மக்கே Esq.

மதுரை மில்ஸ் கம்பெனி லிமிடெட்

டைரக்டர்கள்:

திவான்பகதூர் ஸ்ரீ N. ராமசுவாமி அய்யர்,

B. A., B. L., (Padmasri)

அட்வகேட், திருச்சிராப்பள்ளி

ஸ்ரீ P. C. M. கணபதி செட்டியார், மதுரை

ஸ்ரீ S. நாராயணசுவாமி,

பார்ட்னர், சித்ரா அண்டு கம்பெனி, சென்னை

A. E. கூப்பர் Esq., டைரக்டர்

A & F. ஹார்வி லிமிடெட், மதுரை

---

மக்கள் சேவையில் 83 கிளை ஆபீஸ்கள்

---

P. V. மக்கே
சேர்மன்

K. L. சுப்பிரமணியன்
ஜெனரல் மானேஜர்



# அன்பின் உரிமை

**அநுத்தமா**

மீனு குழாயடியில் முகம் கழுவிக் கொண்டிருந்தாள். சமையலறையில் அண்ணன் ராமநாதன் தன் தாயிடம் சொல்லிக் கொண்டிருப்பது அவள் செவியில் தெளிவாக விழுந்தது. சோப்பு நுரையைக் கழுவுவது போல் அவள் நிறைய நீரை வாரி வாரி இறைத்துக் கொண்டாள். குபுகுபுவென்று பொங்கி வரும் கண்ணீர் நிற்க மறுத்தது.

''மீனுவிடம் கண்டிப்பாகச் சொல்லி விடு, அம்மா! ராஜாவை நாம் வைத்துக் கொள்ள முடியாது இனிமேல்'' என்று எவ்வளவு தீர்மானமாகக் கூறி விட்டான் அண்ணன்!

ராஜா மீனுவின் ஒரே மகன். அது மட்டுமா? அவள் உயிரோடிருப்பதற்கு அவனே கொழுகொம்பு. அவன் மூன்று வயதுக் குழந்தையாக இருந்த போது மீனு தன் கணவனை இழந்து விட்டாள். அரியலூர் ரயில் விபத்து அவள் மண வாழ்க்கையை வாயில் போட்டுக் கொண்டு விட்டது. மருதையாறு அவன் உடலைக்கூட அவளுக்குத் தரவில்லை. மீனுவை உடனே படிக்கவைத்து வேலைக்கு அனுப்பி விட்டார்கள். குழந்தை முதலில் அவள் பெற்றோரிடம் வளர்ந்து வந்தான். இன்று அவனுக்கு ஒன்பது வயதாகி விட்டது. கவலையின்றி இருக்க வேண்டிய நிலைமைதான் மீனுவுக்கு. ஆனால் விதியின் பயனோ, என்னதான் காரணமோ ராஜாவின் சுபாவம் சரியான நிலையில் வளரவில்லையே! இன்று அண்ணன் கடைசித் தீர்ப்பு தந்து விட்டான். மகனை எங்கு அழைத்துச் 'செல்வது' தான் இப்போதைய ஒரு மாணவியின் பிரச்னை. அங்கு அவனை அழைத்துச் செல்ல வழியில்லை.

மீனு முகத்தைக் கழுவிக் கொண்டு கொடியில் தொங்கும் ஒரு துண்டில் துடைத்துக் கொண்டிருந்தாள். உள்ளத்து வேதனையெல்லாம் அதில் துடைத்து விட முடியுமா? அப்படியே முகத்தைத் திறக்காமல் தான் மூடிக் கொண்டிருக்க முடியுமா? அண்ணன் அருகில் நிற்பதை உணர்ந்து அவள் மெல்ல நிமிர்ந்து பார்த்தாள்.

''ஏதாவது ஏற்பாடு செய்ய வேண்டியதுதான், மீனு! அவரவர்கள் பளுவை அவரவர்கள்தான் சுமக்க வேண்டும். அதைச் சமாளிக்க அவரவர்கள் வழி தேட வேண்டியதுதான். என்னால் முடிந்ததைச் செய்து விட்டேன். இனி அவன் இங்கு இருந்தால் எனக்கு அவமானம்தான் ஏற்படும் போலிருக்கிறது.''

மீனுவுக்கு மேலே பேச முடியவில்லை. துக்கம் அவள் நெஞ்சை அடைத்தது. இப்படி ஒரு மகன் வாய்த்திருக்கிறானே என்று மனம் குமுறியது. அவனை அழைத்துச் செல்ல வழியில்லையே என்று வேதனை துளைத்தது. தன் கணவன் ஒருவன் இல்லாததனாலல்லவா இப்படி யெல்லாம் நேருகிறது என்று ஏக்கம் வாட்டியது. தன்னை மீறி இனந் தெரியாத கோபம் அவளை ஆட்கொண்டது.

மீனு தனியே ஓரிடத்தில் போய் அமர்ந்து கொண்டாள். வீணே சண்டை விட்டு, குறை கூறிப் பயனில்லை என்று தோன்றி விட்டது அவளுக்கு. ராஜா ஐந்து வயதுவரை தாத்தா, பாட்டியிடம் தான் வளர்ந்தான். பிறகுதான் மீனுவின் தந்தை வாயுத் தொந்தரவில் ஒரு பக்கம் அடித்துப் படுக்கையில் கிடந்து விட்டார். அப்பொழுது தன் புக்ககத்தினரிடம் விட்டிருந்தாள். ஒரு வருடம் அங்கே இருந்தான். அவனை அவர்கள் திரும்ப இவளிடமே அனுப்பி விட்டார்கள்.

''அவர் களுடைய ரத்தக் கலப்பான மனிதன் உயிரோடில்லை. குழந்தையிடம் எப்படி ஒன்றிவிடுவார்களாம்?''

என்று பலரும் சொன்னார்கள். மீனு மீண்டும் பிறந்தகத்துக்கு அவனை அழைத்து வந்தாள். இங்கு வந்து மூன்று வருடங்களாகி விட்டன. தனியே யோசித்து மீனுவின் மூளையே சோர்ந்து விட்டது போல் தோன்றியது. அன்று அவள் ஜெயித்தாள் ஆக வேண்டும். அவள் தன் போக்கில் எல்லாவற்றையும் எடுத்து வைத்துக் கொண்டிருந்தாள். அப்பொழுது 'டங்'கென்று ஓசை கேட்டது. திரும்பினாள் அவள். ராஜா 'திரு திரு'வென்று விழித்துக் கொண்டு நின்றிருந்தான். மீனுவின் கடிகாரம் தரையில் விழுந்து கிடந்தது. நிமிஷம் முள் சுழன்று ஓர் ஓரமாகப் புரந்து விட்டது. கண்ணாடி பெயர்ந்து தனியே வந்துவிட்டது. அவள் கடிகாரத்தைக் கையில் எடுத்தபோது ராஜா மெல்ல நழுவுவதைப் பார்த்தாள். இடக் கையால் அவனைப் பிடித்தாள். அவன் முகத்தை உற்று நோக்கினாள். மகனின் முகத்தில் இப்பொழுது இலக்கமே இல்லை. அவன் கண்களிலே ஒருவித குரூரம் நிழலாடியது. உதட்டில் உதாசீனம் தோற்றமளித்தது.

''ராஜா, நீ என்னோடு வந்து விடடா. உன் துணிமணி யெல்லாம் கொண்டு வா. எடுத்து வைத்து விடலாம்'' என்றாள் மீனு. கடிகாரத்தை அப்படியே பெட்டியில் போட்டாள்.

'ஏன்தான் இப்படிச் செய்கிறாயோ?' என்று அலற வேண்டுமென்று தான் தோன்றியது மீனுவுக்கு. ஆனால் தன்னையும் அறியாமல் எதனாலோ சாந்தமாகப் பேசி விட்டாள். ராஜாவும் அவளையேநோக்கி விட்டு, ''சரி'' என்று கூறி வெளியில் போனான்.

ராஜா தன் பெட்டியை எடுத்துக் கொண்டு



ஜெயபா

வந்தான். மீனு அவனோடு கூட அமர்ந்து பெட்டியைத் திறந்தாள். துணிமணி களை அப்படியே அடைத்து வைத்திருந்தான். மீனு மடித்து மடித்து அடுக்க ஆரம்பித்தாள். பெட்டியின் அடியில் என்னென்னவோ சாமான்கள் கிடந்தன. மூடியில்லாத பேனா, சைக்கிளின் சிறு மறை ஒன்று. சீவப்படாத பல நிறப் பென்சில்கள், பித்தான்கள், பணப்பை ஒன்று, ஒரு பேனாக் கத்தி......

'இவை அனைத்தையும் எங்கிருந்து எடுத்தானோ தெரியவில்லையே, ஆண்டவனே!' என்று நினைத்த வண்ணம் அவள் அவைகளைப் பெட்டியின் அடியில் எடுத்து வைத்தாள்.



தான் வேலை செய்யும் இடத்துக்குச் சென்றவுடனேயே அவனை ஒரு பள்ளிக்கூடத்தில் சேர்த்து விட்டாள். அதோடு சேர்ந்து மாணவர் விடுதியும் இருந்தது. மகனை அங்கு விட்டுவிட்டு வரும் போது மீனுவுக்கு நெஞ்சை அடைத்தது. இதுவரை அவனை விட்டுப் பிரியும் போதெல்லாம் தன் சொந்த மனிதர்களிடம் விட்டு விட்டு வருவாள். இப்பொழுது தனிமையில் வேற்றிடத்தில் விட்டு வர அவள் மனம் துடித்தது. அவனைச் சேர்த்து அணைத்துக் கொண்டாள். அவன் விலகி அவளோடு அணையாமல் விரைத்துக் கொண்டு இருகைகளாலும் அவளைத் தள்ளிய படி இருந்தான். மீனுவுக்கு இந்தச் செய்கை சுருக்கென்றது. அவன் உள் ளுணர்வு அவளையே குற்றஞ் சாட்டியது. இதுவரை விடுமுறை நாட்களில் தன் மகனிடம் அவள் நெருங்கியதே கிடையாது. அதிகமாக எடுத்துக் கொஞ்சி, உறவாடி விட்டால் பிறகு ஏங்கி விடுவானோ என்று பயந்து தன் மனத்தை அடக்கிக் கொண்டு வந்து விடுவாள். இப்பொழுது அவன் விலகுவதில் என்ன ஆச்சரியம் இருக்கிறது? தன் கண்களைத் துடைத்துக் கொண்டு, ''ராஜா! நன்றாகப் படி. நல்ல பையன் என்று பெயர் எடுக்கப் பார். நீ முன்னுக்கு வந்து பெரியவனாக வேண்டும் என்றுதான் நான் கஷ்டப்பட்டு வேலை செய்கிறேன்....என்ன?'' என்றாள் மீனு.

அவள் பேச்சை அவன் காதில் வாங்கியதாகவே காட்டவில்லை. ''நீ சீக்கிரம் போயேன்'' என்று எரிச்சலுடன் கூறி விட்டான் ராஜா.

மீனு தலைமை உபாத்தியாயரிடம் சொல்லி விட்டுத் தன்னிருப்பிடம் திரும்பிவிட்டாள்.

ராஜா படித்துக் கொண்டு வந்தான். ஆனால் அவனைப் பற்றிப் புகார்கள் வந்த வண்ணம் இருந்தன. மீனு போய் அவ்வப்பொழுது ஆகவாசம் சொல்லி விட்டு வருவாள்.

''அவன், தான் படிக்காததோடு இல்லை, மற்றப் பிள்ளைகளையும் துஷ்டத்தனமான செயல்களில் தூண்டிவிடுகிறான். பெரியவர்களிடம் மரியாதை இல்லை. இரண்டொரு சமயம் திருடக் கூடச் செய்தான். நாங்கள் எவ்வளவு தான் கண்டிக்க முடியும்? இவனும் விடுதியே கெட்டு விடும் போல் இருக்கிறது'' என்று தலைமை உபாத்தியாயர் கண்டிப்பாகச் சொன்னார்.

---

மீனுவின் கண்களில் நீர் கசிந்தது. கைக் குட்டையால் அவள் கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள். பிறகு வினயத்தோடு தலைவரை நோக்கி, ''உங்களுக்குப் புண்ணியமுண்டு. பெற்றோருக்கு அடுத்தபடி ஆசிரியர்தானே? அவனுக்குத் தகப்பனாரின் ஆதரவு கொடுத்து வைக்கவில்லை. இனி நீங்கள்தான் அவனை உங்கள் மகன் போல் நினைத்துக் கண்டித்துச் சரி செய்ய வேண்டும்'' என்றாள்.

தலைவர் சிரித்தார். தலைவரின் அறை வாசலில் யாரோ நிற்பது தெரிந்து அவள் தன் குரலைத் தாழ்த்திக் கொண்டாள். வழியில் நின்றிருந்த மனிதரும் நகர்ந்து இடம் விட்டார். மீனு தன் சிந்தனையில் சிக்கியவளாய் மகனைத் தேடிச் சென்றாள். அவன் விளையாட்டு மைதானத்தில் வேடிக்கை பார்த்துக் கொண்டு தனித்து நின்றான். ''ராஜா!'' என்று அருகில் போய் அழைத்தபிறகு திரும்பி வந்தான்.

''நீ ஏனடா விளையாடவில்லை?''

'' உனக்கென்ன அதைப் பற்றி ?'' என்று எடுத்த எடுப்பில் திருப்பிக் கேட்டான் அவன்.

''என்னைத் தவிர வேறு யாருக்கடா உன்னைப் பற்றிக் கவலை? மறுபடியும் அப்படிப் பேசினால் உதை பிய்த்து விடுவேன், நினைவிருக்கட்டும் !'' என்று கோபித்தாள் மீனு.

அலட்சியமாகச் சிரித்தான் அவன்.

அன்பு, அன்பான மனிதர்கள்—இரண்டும் புரியாதவனாக இருக்கிறான் என்பதை ஜனிக்க முடிந்தது. அதனால் மீண்டும் மெதுவாக, ''உனக்கு ஏதாவது சாமான்கள் வேண்டுமா? பிஸ்கெட் மட்டையா, ஹார்லிக் குப்பியா, இல்லை பாட்மிண்டன் மட்டையா....?'' என்று கேட்டாள் தாயார்.

''நீ உடனே வாங்கித் தந்து விடுவாயாக்கும் !''

''ஏன் தராமல்? வேறு யாருக்கடா வாங்கித் தரப் போகிறேன்? இன்னும் இரண்டு வருஷங்கள் பொறுத்தால், நீயும் நானும் தனியாக ஒரு வீட்டில் இருக்கலாமே? இப்படி வந்து வந்து பார்க்க வேண்டாமே?''

''ஏன் வளவள வென்று பேசுகிறாய்? நீ போயேன். எல்லாரும் பார்த்துக் கொண்டே சிரிப்பார்கள்!''

''பார்க்கட்டுமேடா. பெற்ற அம்மாவுடன் பேசுவதில் என்ன அவமானமிருக்கிறது? உன் மாமா பிள்ளைகள் அம்மாவிடம் கழுத்தைக் கட்டிக் கொண்டு கொஞ்சிப் பேசவில்லையா?''

''ஐயோ! நீ போயேன்!'' என்று அலறிய பையன், அவள் பேச்சைக் கேட்கப் பிடிக்காதவன் போல் காதைப் பொத்திக் கொண்டான். மீனு அவன் முதுகை வருடினாள். அவன் ஆத்திரத்தோடு அவள் கையை உதறித் தள்ளி விட்டு அப்பால் நகர்ந்தான்.

''சரி, நான் போய் வருகிறேனடா, ராஜா! நீ நல்ல பிள்ளையாக இரு !'' என்றாள்.

மகன் ஒரு விநாடி தாயையே பார்த்தான். பிறகு குறும்பாகச் சிரித்துக் கொண்டு, ''எனக்கு ஒரு வெள்ளிப் பேனா வாங்கித் தாயேன்'' என்றான்.

சம்பந்தமற்ற அவன் பேச்சு அவளைக் கலக்கியது. ''ஆகட்டும், பார்க்கிறேன்'' என்று கூறி விட்டு அவள் தன் வீட்டை நோக்கி நடந்தாள்.

ராஜாவின் மனம் இனம் தெரியாமல் கரடு முரடாகி விட்டது என்பதை அவள் அறிவாள். அவனைத் தன்னிடமே வைத்துக் கொண்டிருந்தால் இப்படி நேர்ந்திராது என்று அவளுக்குத் தோன்றியது. தன் குழந்தைகளை ஆதரவோடு பேணி, அதிகாரத்தோடு அதட்டும் அன்னை இந்தப் பையனை



பட்டும் ஏன் இப்படி விட வேண்டும்? என்னவோ மனசுக்குள் ஒரு வித பயம் தோன்றி விடுகிறது போலும்.

அன்று இரவெல்லாம் மீனுவுக்கு உறக்கமே இல்லை. அந்த ஒரு வாரமும் மெல்லப் பல்லைக் கடித்துக் கொண்டு தள்ளினாள். மகன் கேட்ட வெள்ளிப் பேனா அவளுக்குக் கிடைக்கவில்லை. ஆனால் வெள்ளி போல் முலாம் போட்டது ஒன்று கிடைத்தது. அதை வாங்கிக் கொண்டு போனாள்.

தலைமை உபாத்தியாயரைக் காணும் போதே அவள் உள்ளம் 'திக் திக்' என்று அடித்துக் கொண்டது. என்ன புதிய புகார் வருமோ என்று பயந்தவண்ணம் வராத சிரிப்பை வரவழைத்துக் கொண்டு அவர் எதிரே நின்றாள்.

''வாருங்கள் அம்மா'' என்று அவர் அழைத்த மாதிரியில் மீனுவுக்குச் சிறிது தெம்பு பிறந்தது.

''உங்கள் மகனுக்கு ஓர் ஏற்பாடாகியிருக்கிறது. எங்கள் பள்ளியில் ஒருவர் இருக்கிறார். நிரம்பப் படித்தவர். ஆனால் எப்பொழுதோ மூளைக் கோளாறு ஏற்பட்டு நினைவுச் சக்தி போய் விட்டது. அதனால் அவருக்கு ஆசிரியர் வேலையைக் கொடுக்க முடியவில்லை. வெறுமனே மேற்பார்வையாளராக இருந்து வருகிறார். அவர் அன்று நீங்கள் வந்த போது வாசற்படியில் நின்றிருந்தார். நீங்கள் சொன்னதெல்லாம் கேட்டிருக்கிறார். உங்கள் மகனை அவர் பார்த்துக்கொள்கிறாராம்.

மீனு கைகளைக் குவித்துக் கடவுளுக்கு நன்றி செலுத்தினாள்.

''ஆனால் ஒரு நிபந்தனை. அவர் உங்களை ஒரு மாதம் இந்தப் பக்கம் வர வேண்டாம் என்று கேட்டுக் கொள்கிறார். இன்றுகூட நீங்கள் அவனைப் பார்க்காமல் போய் விடுங்கள்.''

''இந்தப் பேனாவை அவனிடம் கொடுத்து விடுங்கள். நிஜ வெள்ளி கிடைக்கவில்லை. பிறகு வாங்கித் தருகிறேன் என்று சொல்லுங்கள்'' என்று கூறி விட்டுப் போய் விட்டாள் மீனு.

ஒரு மாத காலம் தள்ளுவது அவளுக்கு மிகவும் கடினமாக இருந்தது. ஊரில் உள்ள தன் பெற்றோரிடமும், அண்ணனிடமும் அவளுக்கு இருந்த கோபம் இப்பொழுது தணிந்து விட்டது. அவர்கள் நிலையில் அப்படித்தான் இருப்பார்கள் போலும் என்று தானே தெளிந்து கொண்டு விட்டாள்.

தீபாவளி நெருங்கிக் கொண்டிருந்தது. மீனு ராஜாவுக்காகத் துணிகள் வாங்கிச் சேர்த்தாள். பட்டாசு கட்டுகளை வாங்கினாள். பிறகு அவனையே அழைத்துச் செல்ல வேண்டும் என்று ஓர் ஆசை தோன்றவும் வாங்க வேண்டியதை நிறுத்திக் கொண்டாள். தலைமை உபாத்தியாயரைக் காணச் சென்றாள்.

''உங்கள் பொறுமையை நான் மிகவும் மெச்சுகிறேன். ஒரு மாத காலம் எப்படியோ தள்ளி விட்டீர்களே?''— என்று புகழ்ந்தார் தலைமை ஆசிரியர்.

''என் நன்மைக்குத்தானே? நீங்கள் இவ்வளவு சிரமம் எடுக்கும்போது.... ராஜா எப்படியிருக்கிறான்?''

''பார்க்கிறீர்களா?'' என்று கேட்டு, மணியை அடித்து ஆளிடம் சொல்லி அனுப்பினார் அவர்.

ராஜா வந்தான். வந்தவுடனே மீனுவினால் தன் கண்களையே நம்ப முடியவில்லை. அவன் உருவத்திலே ஏதோ மாறுதல் ஏற்பட்டு விட்டிருந்தது. இன்னது என்று அவளால் கண்டுகொள்ள முடியவில்லை. ஆசிரியரை வணங்கும்போதும், தன்னைக் காணும் போதும் ஏதோ ஒரு குணம் ஏற்பட்டிருப்பதாகத் தோன்றியது.

''உன் அம்மா உன்னைக் கடைக்கு அழைத்துப் போக வந்திருக்கிறார்கள்.



போய் வருகிறாயா?'' என்று கேட்டார் ஆசிரியர்.

''நான் கணக்குப் போட வேண்டும், சார்!'' என்று சொன்னவன், தலையைக் கவிழ்த்துக் கொண்டான்.

''ஏன்? பள்ளிக்கூடம்தான் முடிந்து விட்டதே?''

''கணக்குப் பரிட்சையில் நான் தவறி விட்டேன். அதனால் பள்ளி முடிந்த பிறகும் வகுப்பில் இருந்து கணக்குப் போடும்படி கணக்குமாஸ்டர் சொன்னார்!''

மீனுவைப் பார்த்தார் ஆசிரியர். அவள், ''சரி, அப்படியானால் நானே வருகிறேன்'' என்றாள்.

''வேண்டாம், நான் கணக்குமாஸ்டரிடம் சொல்கிறேன். நீங்கள் அழைத்துச் செல்லுங்கள்.''

''வேண்டாம், சார். நானக்கே போகிறேன்'' என்றான் ராஜா.

மீனு திரும்பி விட்டாள். தன்னோடு அவன் வரவில்லையே என்று ஏமாற்றம் இருந்தாலும் அவன் கூறிய பதில் அவளுக்கு ஓரளவு ஆறுதலைத் தந்தது. மறுநாள் மாலை மீண்டும் மகனைக் காண ஆவலோடு ஊசி மேல் இருப்பது போல் நிம்மதியின்றி ஒவ்வொரு விநாடியையும் பிடித்துத் தள்ளினாள் தாயார்.

அன்று மாலை அவள் கிளம்பத் தயாராக இருந்த போது ராஜாவே அவளிடத்துக்கு வந்து விட்டான். ''எப்படிடா வந்தாய்? உன் தலைமை ஆசிரியருக்குத் தெரியுமா?'' என்று கவலையோடு கேட்டாள் மீனு.

சிரித்தான் ராஜா. ''சர்மா சார்தான் என்னை இங்கு கொண்டு விட்டார்.''

''சர்மா சாரா?''

''மேற்பார்வையாளர்....''

''அவரை நான் பார்க்கவேண்டுமே?'' என்று ஆவலோடு கேட்டாள் மீனு.

''அவர் யாருடனும் பேச மாட்டார். அப்பொழுதே போய் விட்டார்.''

மீனு மேலே பேசாமல் கிளம்பத் தயாரானாள். அவனுக்காக வாங்கி வைத்திருந்த துணிகளை எடுத்துக் கொண்டு கிளம்பினாள். தையல் கடையில் அளவு கொடுத்து விட்டு மற்றக் கடைகளுக்குச் சென்றாள். பட்டாசு வகைகளைத் தானே பொறுக்கிக் கொண்டான் ராஜா.

''இன்னமும் ஏதாவது வேண்டுமா? பிஸ்கெட் பாட்....''

''வேண்டாம். எனக்கு வேறு ஒன்று வேண்டும். வாங்கித் தர உனக்குத் தெரியாதே?''

''என்னது அது?''

''சின்ன உளி.'' ராஜா நிமிர்ந்து அவளை நோக்கினான். மீனு அப்பொழுது தான் பையனின் முகத்தை நோக்கினாள். அவன் கன்னத்தில் மூன்று விரல்கள் படிந்து சிவந்திருந்தது.

''ராஜா! இதென்னடா?''

''ஒன்றுமில்லையே?'' என்றான் ராஜா.

''உன்னை சர்மா சார் அடித்தாரா?''

''இல்லே. இல்லவே இல்லே. நான் கதவில் இடித்துக் கொண்டு விட்டேன்.''

''ராஜா! சர்மா சாருக்கு ஒரு சமயம் மூளைக் கோளாறு இருந்ததாம். அவரிடம் ஜாக்கிரதையாகப் பழக வேண்டும் அப்பா!'' என்றாள் மீனு.

''அவருக்கொன்றும் பைத்தியமில்லே'' என்று சொல்லும் போது கோபத்தினால் ராஜாவின் முகம் சிவந்து விட்டது. மீனு அவனை முதுகில் தடவிக் கொடுத்தாள். அவன் அவளை உதறித் தள்ளி விட்டு நகர்ந்தான்.

''ராஜா! எனக்கு உளியெல்லாம் வாங்கத் தெரியாது. அதனால் உன் சர்மா சாரையே வாங்கித் தரச் சொல். நான் பணம் தந்து விடுகிறேன்.''

''அவர் என்னிடம் பணம் வாங்கிக் கொள்ள மாட்டார்.''

''பின்னே, நீயே வாங்கக் கற்றுக் கொள். இல்லாவிட்டால் அவருக்குப் பணிவிடைகள் செய்தாவது....''

ராஜா சட்டென்று தன் தாயின் கையைப் பற்றினான். மீனுவுக்கு உடலே பதறியது. என்றோ அவன் குழந்தையாக இருந்த சமயத்துக்குப் பிறகு இன்றே அவன் தானாக அவளிடம் அணுகியது. அதை அனுபவிக்கக் கூடத் தெரியாது திணறினாள் அவள்.

''சரி! நீ சொல்வதுதான் சரியான வழி'' என்றான் அவன். அவள் முகம் பளிச்சிட்டது. கண்கள் ஒளிர்ந்தன.

மீனு அவனை மீண்டும் பள்ளியில் கொண்டு சேர்த்தாள். வரும் முன் அவளால் கட்டுப் படுத்த முடியாமல் அவன் இரு கன்னங்களையும் தன் கைகளில் அள்ளி ஒரு முறை உச்சி மோந்து விட்டுத் திரும்பினாள். ராஜா திமிறவில்லை. ''ஜாக்கிரதையடா'' என்று எச்சரித்தாள் தாயார், நெஞ்சடைக்க.

''பயப்படாதே'' என்றான் மகன்.

மீனு திரும்பிப் பாராமல் வேகமாக வெளியேறி விட்டாள். அவள் மகன் அவளையே பார்த்துக் கொண்டு நின்றான் என்பது அவளுக்குத் தெரியாது.

மீனுவின் மூளையில் சதா மகனின் கவலைதான். பைத்தியக்கார மனிதனிடம் ஒப்படைத்து விட்டோமே. குழந்தையை என்ன செய்து விடுவாரோ? அவசர புத்தியில் செய்த காரியமாக முடியுமா? மற்றப்படி பையன் சிறிது முன்னேறியிருக்கிறானே? சிந்தித்துச் சிந்தித்து அவள் உள்ளமே மரத்துவிட்டது. அவள் தன்னை அன்றாடக் கடமைகளில் மூழ்கடித்துக் கொண்டாள். ஆனால் தன் குழப்பத்தையெல்லாம் ஊருக்கு எழுத மனமில்லை அவளுக்கு. அவரவர் பளுவை அவரவர்களே தாங்க வேண்டியதுதான் என்று தலைவன் சொன்ன பேச்சு அவள் மனத்தில் நின்று விட்டது.

''கடவுளே! எனக்கு மனவுறுதியைக் கொடு. என் குழந்தையை நீயே காப்பாற்ற வேண்டும்'' என்று பிரார்த்தனை செய்த வண்ணம் இருந்தாள் அவள்.

தீபாவளிக்கு ஊருக்கு வரும்படி அவளுக்குக் கடிதம் வந்தது. ராஜா வந்தால் அழைத்துச் செல்லலாம் என்று அவள் அவன் பள்ளிக்கூடத்துக்கு விரைந்தாள். தலைமை ஆசிரியரின் அறையில் யாரோ பேசுவது கேட்டு வெளியே தயங்கி நின்றாள் அவள்.

''சர்மா! நீங்கள் இந்தக் கடிதங்களுக்கெல்லாம் பதில் எழுதி வாருங்கள். நான் கையெழுத்துப் போடுகிறேன்'' என்று கூறுவது கேட்டது.

அந்தச் சர்மாவைப் பார்க்க வேண்டும் என்று அவள் ஆவலோடு இருந்தாள். ஆனால் அவர் ஒரு துண்டினால் முகத்தைத் துடைப்பது போல் முகத்தை மறைத்துக் கொண்டு அவளைத் தாண்டிச் சென்று விட்டார் வேகமாக. அவர் செல்லும் போது அவர் முதுகுப் புறத்தைப் பார்த்தாள். சிறிது நொண்டி நடந்தார் அவர். தனக்கு மிகவும் நெருங்கிய உறவினரைக் காண்பதுபோல் ஓர் உணர்ச்சிப் பெருக்கு அவள் உடலில் பரவியது. ஆயின் என்ன செய்வது? அந்த மனிதர் விசித்திரமான மனமுடையவராக இருக்கிறாரே!

தலைமை ஆசிரியர் மீனுவின் வேண்டுகோளைக் கேட்டுக் கொண்டார். ''ஆகட்டும், அம்மா! நான் அனுப்பப் பார்க்கிறேன்'' என்றார்.

மீனு ராஜாவைப் பார்க்காமலே திரும்பி விட்டாள்.

நாளை தீபாவளி என்றிருக்க மீனு மீண்டும் பள்ளிக்கூடம் போனாள். தலைமையாசிரியர் எங்கோ வெளியே சென்றிருந்தார். அதனால் அவள் அங்கேயே காத்துக் கொண்டிருந்தாள். பொழுதுபோகாமல் ஜன்னல் வழியே எட்டிப் பார்த்த போது ராஜா விளையாடிக் கொண்டிருப்பது தெரிந்தது. அவன் இருக்குமிடத்தை தேடிச் சென்றாள் அவள். தோட்டத்தில் ஒதுக்குப் புறமாக ஒரு கொட்டகையில் தச்சு வேலை நடந்து கொண்டிருந்தது. மீனு அங்கு சென்றாள். அப்பொழுது தான் ஒரு வெடிக்குத் தீ வைத்து விட்டு ராஜா ஓடி வந்து கொண்டிருந்தான். அவனுடைய விளையாட்டு வேகத்தில் கையிலிருந்த நெருப்புக் குச்சியைப் பின் பக்கமாகப் போட்டு விட்டுப் பின்னுக்காகவே நடந்து வந்தான். நெருப்புக் குச்சி மரச் சிராய்த் துகள்கள் மீது விழுந்ததை அவன் பார்க்கவில்லை. அவனது அந்தச் செய்கையினால் தீ விபத்து ஏற்பட்டால்? அதற்காகத் தன் மகன் குற்றவாளியாகித் தலை குனிந்து தண்டனையை அனுபவிக்க வேண்டுமே என்பதை எண்ணியபோது தாயுள்ளம் தவித்தது. மீனு விரைந்தோடினாள்.

''ராஜா, நெருப்பு!'' என்று அவள் கத்திக் கொண்டு ஓடி நெருப்பை அணைக்க விரைந்தாள். ஆனால் அதற்குள் அங்கு வைக்கப்பட்டிருந்த வெடி எழும்பி — வெடித்த வேகத்தில் மீனுவின் முகத்தில் அடித்து விட்டது.

''ஐயோ! அம்மா!'' என்று கண்ணைப் பிடித்துக் கொண்டு அலறி விழுந்து விட்டாள் மீனு. பள்ளிக்கூடத்தின் பல மூலைகளிலிருந்தும் ஆட்கள் ஓடி வந்தனர். அவளை உடனே சிகிச்சை இல்லத்துக்கு அழைத்துச் சென்றனர்.

ஆஸ்பத்திரியில் கண்ணில் கட்டுடன் படுத்துக் கிடந்தாள் மீனு. அதிர்ச்சியில் அவளுக்கு நினைவு தவறி, காய்ச்சல் கண்டு விட்டது. மூன்று நாட்கள் விடாமல் அடித்த பிறகு அவள் மெதுவாகத் தெளிவு பெற்றாள். கண்ணைத் திறந்து பார்த்த போது அவள் அண்ணன் அருகில் இருந்தான். ''அண்ணா, ராஜாவுக்கு ஒன்றும் அடியில்லையே? நெருப்பு அணைந்ததா?'' என்று கேட்டாள் மீனு.

''அம்மா! இதோ நான் இருக்கிறேன்'' என்று ராஜாவின் குரல் கேட்டதும் அவள் உடலெல்லாம் புல்லரித்தது. அவள் வாய் நிறைய ''அம்மா!'' என்று அழைத்தது அவளை எங்கோ எடுத்துச் சென்றது.

''மீனு, நீ இன்னமும் ஒரு மாதம் இங்கு இருக்க வேண்டியிருக்கும். நான் போய் அம்மாவை ஒத்தாசைக்கு அனுப்புகிறேன்'' என்றார் அண்ணா.

''அண்ணா, உங்களுக்கெல்லாம் என்னால் தீபாவளிப் பண்டிகை கெட்டு விட்டதோ?'' என்று கேட்டாள் மீனு.

''அசடு. பண்டிகைக்கு என்ன? என்றைக்குக் கொண்டாடினாலும் போயிற்று. உடம்பு சுகமாகட்டும்.''

''அண்ணா! அம்மாவையோ வேறு யாரையுமோ அனுப்ப வேண்டாம். நானே குணமான பிறகு ஊருக்கு வருகிறேன்'' என்றாள் மீனு.

''ஆமாம், மாமா. நான் அம்மாவைப் பார்த்துக் கொள்கிறேன்'' என்றான் ராஜா உறுதியாக.

ஒரு விநாடி மருமகளின் முகத்தை நோக்கினார் மாமா. பிறகு தெளிந்து ''செய்யடா, ராஜாப் பயலே!'' என்று அவன் முதுகில் தட்டிக் கொடுத்தார்.

''அண்ணா, ராஜாவைப் 'பார்த்தாயா?'' என்று மீனு மெல்லக் கேட்டாள்.

அண்ணனின் கண்களில் நீர் பனித்தது. ''மீனு! நீ உன் மகனுக்குப் புது வாழ்வளித்து விட்டாய்.''

மீனு நிம்மதியுடன் கண்களை மூடி நித்திரையில் ஆழ்ந்தாள். மீண்டும் விழிக்கும் போது ராஜா அருகில் அமர்ந்திருந்தான். ''ராஜா! நீ பள்ளிக்கூடம் போகவில்லை?'' என்று கேட்டாள் அன்னை.

''போய் விட்டுத்தான் வந்தேன்.''

''தீபாவளிச் சட்டையைப் போட்டுக் கொண்டாயா?''

''கடையிலிருந்து வாங்கவில்லை... அம்மா, சர்மா சார் உன்னைப் பார்க்க வந்திருக்கிறார். ஹெட்மாஸ்டருங்கூட இருக்கிறார்....''

''வரச் சொல்.''

ராஜா அவர்களை அழைத்து வரக் கிளம்பினான்.

தலைமை ஆசிரியர்தான் அவள் அருகில் வந்து அமர்ந்தார். மீனுவின் கண்ணுக்காக அறையையே இருட்டாக்கி வைத்திருந்தார்கள். அதனால் மற்றவரை அவளுக்குச் சரியாகத் தெரியவில்லை.

''அம்மா, உங்களுக்கு அதிர்ச்சி தாங்கச் சக்தியிருக்கிறதா?'' என்று எடுத்த எடுப்பிலேயே கேட்டார் தலைமை ஆசிரியர்.

''சொல்லுங்கள். என் வாழ்வை நடத்த எனக்கு வலிமை இருக்கிறது.''

''உங்களுக்கு இனி ஒரு கண் தெரியாது என்கிறார்கள். நேரே விழியிலேயே வெடித்து விட்டது வெடி....''

''அங்கே பந்தல் ஒன்றும் பற்றிக் கொண்டு விடவில்லையே?'' என்றுதான் மீனு கேள்வி கேட்டாள்.

''அங்கே விபத்து ஒன்றும் நேரவில்லை. நான் சொல்ல வந்திருப்பவையே பெரிய விஷயங்கள். ஒன்று உங்கள் கண். மற்றதும் உங்கள் வாழ்க்கையைப் பாதிக்கக் கூடியதே. இதோ சர்மா சார் வந்திருக்கிறார். அவரைத் தெரிகிறதா, பாருங்கள்?''

மீனு நிமிர்ந்து நோக்கப் பார்த்தாள். பருமனாக, முகம் விகாரமடைந்த ஒரு நொண்டி மனிதனையே அவள் கண்டாள்.

''அருகே வந்தால் பார்ப்பேன்'' என்றாள் அவள் ஆயாசமாக.

''மீனு!'' என்று அந்த உருவம் அருகில் வந்து குரல் கொடுத்தது.

அதைக் கேட்டதும் ''ராஜா!'' என்று உரக்கக் கூவி விட்டாள் மீனு.

ராஜா பக்கத்தில் வந்து அவளைப் பிடித்து அணைத்துக் கொண்டான். ''அம்மா, இதோ இருக்கிறேனே? சர்மா சார் மிகவும் நல்லவர், அம்மா. பார்க்கத்தான் அவர் அப்படி இருக்கிறார்'' என்று அவள் காதோடு ஆசுவாசப் படுத்தினான் அவன்.

''அது இல்லையடா, மண்டு! அவர் அவர்தானடா உன்...அப்பா...அவரைக் கிட்டே வரச் சொல்லடா!'' சர்மா சார் அருகில் வந்து கட்டிலில் அமர்ந்தார்.

''இதென்ன கோலம்! ஏன் இத்தனை நாட்கள்? நான் எதைக் கேட்பது என்றே தெரியவில்லையே?'' என்று பேசத் தெரியாமல் தத்தளித்தாள் மீனு.

''நீ ஒன்றும் கேட்க வேண்டாம், மீனு. நான் செய்த அசட்டுத்தனத்தை நானே சொல்லி விடுகிறேன். அரியலூரில் அடிபட்ட போது எங்கிருந்தோ ஒரு இராவக ஜாடி உடைந்து என் உடம்பில் கொட்டி விட்டது. அதனால் முகம் கோரமாகி விட்டது. விபத்தினால் ஒரு காலும் நொண்டியாகி விட்டது. நான் நினைவிழந்து கிடந்தேன் போலும். என்னைப் பற்றிய தகவல் யாருக்குமே தெரியவில்லை. ஒரு புதரில் எறியப் பட்ட நான் ஒரு கிராமத்தினரால் எடுத்துச் செல்லப் பட்டேன். அங்கே என் உடல் நிலை சரியானதும் பார்த்தால் எனக்கே அருவருப்பாக இருந்தது. இந்தக் கோலத்துடன் மீண்டும் தெரிந்த மனிதர்கள் மத்தியில் வரக் கூடாது என்று தோன்றி விட்டது. அதனால் மாற்றுப் பெயருடன் எங்கெங்கோ திரிந்து இங்கு வந்து சேர்ந்தேன். தலைமை ஆசிரியரிடமுள்ள நட்பினால் இங்கு தங்கி விட்டேன். நீ முதல் நாள் ராஜாவை அழைத்து வந்தபோதே பார்த்தேன். இங்கிருந்து போய்விட வேண்டும் என்று எண்ணிக் கொண்டே இருந்தேன். பிறகுதான் ஒரு நாள் நீ ராஜாவுக்காகப் பேசியதைக் கேட்க நேர்ந்தது. தவற்றை உணர்ந்தேன். கடமையில் தவறி, குழந்தையையும் உன்னையும் கைவிட்டதாக மனசாட்சி உறுத்தியது. அதனால்தான் ராஜாவைத் திருத்த மேற்கொண்டேன். அவனும் என்னிடம் ஒன்றிக் கொண்டான்.''



''அதுதான் பெரிய அதிசயமாக இருந்தது எனக்கு'' என்றாள் மீனு.

''கடவுள் வைத்த உறவே இருக்கிறதே!'' என்று வியந்தார் தலைமை ஆசிரியர்.

''அப்பொழுதும் நான் யார் என்று காட்டிக் கொள்ள நினைக்கவில்லை. இந்த விபத்தினால் உனக்குக் கண் போய் விட்டது என்றதும் மனம் கேட்கவில்லை. நீ ஏற்றுக் கொள்வாயானால் உன்னை நான் இனி பார்த்துக் கொள்கிறேன்'' என்றார் சர்மா சார்.

''ராஜா, கேட்டாயாடா எல்லாம்?'' என்றாள் மீனு, மகனை அணைத்தபடியே.

''அப்பா! இனி உங்களை நாங்கள் விடுவோமா?'' என்றான் ராஜா.

''மீனு, உன்னைப் பெயர் வைத்து அழைக்கிறேன். நீ என் பெண் போல. இனி என் வீட்டில் வந்து இருங்கள்'' என்றார் தலைமையாசிரியர்.

''நீங்கள்தாம் எங்கள் தெய்வம்'' என்றாள் மீனு, கரங்குவித்து.

''கண் தெரியவில்லையே என்று நீ கவலைப்படக் கூடாது. என்ன?''

''ஒரு கண் போனால் என்ன? இப்பொழுது புதியதாக இரண்டு கண்களைப் பெற்று விட்டேனே? அவையிரண்டுமே நீங்கள் எனக்கு அளித்த ஆசீர்வாதப் பரிசுகள்தாமே?'' என்றாள் மீனு.

சர்மா கட்டிலில் அமர்ந்திருந்தபடியே முகத்தைத் துண்டால் மூடிக்கொண்டிருந்தார். அவர் உடல் குலுங்கியது. மீனு ஒரு கையை நீட்டி அவரைத் தொட்டாள். ராஜா தன் தகப்பனாரைத் தழுவிக் கொண்டான். தலைமையாசிரியரும் கண்களைத் துடைத்துக் கொண்டார்.

''அன்பு கலங்கும்போது நேருவது தான் புனிதக் கண்ணீர் — அது கங்காஸ்நானத்துக்கு ஒப்பானது'' என்றார் தலைமையாசிரியர்.

''ராஜா!'' என்று மீனு அழைத்தாள்.

''நான் முன் போல இல்லையம்மா. இப்பொழுதெல்லாம் நான்தான் வகுப்பிலும் விளையாட்டிலும் முதல்வன். சர்மா சார்... இல்லை, அப்பாதான் எனக்கு வழி காட்டினார். நேர்மையான செயல்களினால்தான் மனிதர்களை வெல்ல முடியும் என்று சொல்லித் தந்தார். அந்தப் பத்து ரூபாயைக் கூடத் திருப்பித் தந்து விட்டேன் நான், அம்மா!''

''தெரியுமடா!'' என்றாள் மீனு.

''குழந்தையை அடித்துக் கொன்று விட்டேன் நான்'' என்றார் சர்மா, விக்கல்களுக்கிடையே.

''இல்லை, அடித்து உருவாக்கினீர்கள், சார். அவனுக்கென்று ஆதரவான ஒரு கை இல்லாமல்தானே அவன் கோணலாக மாறி விட்டான்? ஒரு தாயின் சலுகையும், தகப்பனின் கண்டிப்புமே மனிதனை உருவாக்கும் சாதனங்கள்.—அவர்கள் இல்லையேல், மற்றவர்கள் அந்த இடத்தைச் சரிவர நிரப்புபவர்களாக இருக்க வேண்டுமல்லவா?''

தலைமையாசிரியர் விடை பெற்றுக் கொண்டு போய் விட்டார். ஒன்றுபட்ட குடும்பம் மௌனத்தில் கலந்து இன்புற்றது.

''உனக்காகச் செய்தேன்'' என்று ராஜா ஒரு கண்ணாடியைக் காட்டினான். அழகான பெட்டி உருவத்தில் அது அமைந்திருந்தது.

மீனு அன்போடு வாங்கினாள்.

''நானும் தான், மீனு'' என்று ஒரு குங்குமச் சிமிழைக் காட்டினார் சர்மா. கடைசல் பிடித்து அழகான வேலைப்பாட்டுடன் இருந்தது அந்த மரச்சிமிழ்.

''இந்தத் தீபாவளிக்கு நீங்கள் இரண்டு பேருமாக என் வாழ்வையே பரிசாக அளித்து விட்டீர்கள்!'' என்றாள் மீனு, சிரித்துக் கொண்டே.

வெளியே கோயில் மணிகள் கணகண வென்று ஆமோதித்தன.

# IT IS HERE!

*Super Select*

# FIAT

# 1100



1. Engine with More Power, increased Fuel Economy and better Acceleration.

## To give you New driving pleasure

Yes, the New Fiat 1100 Super Select will give you better motoring comfort with these special and new features :-



2. Swivelling Draught Deflectors on the front door windows to increase the flow of breeze which will give you cool driving comfort.

3. Full width utility shelf under the dash board.



4. Fuel tank filler housed in fender wing with hinged lid and lock—



5. New Grille—which gives it a new slick look.

Fiat has always been famous for: **Roadability, Economy and Speed**

***AVAILABLE IN 5 ENCHANTING COLOURS***

Manufactured by :

**THE PREMIER AUTOMOBILES LTD. BOMBAY 70.**

SISTA'S-PAL 423 A.





# அன்னையும் கன்னியும்

பிரான்சு தேசத்தில் இரண்டு சிறுகதைகள். ஒன்று: கடவுள் முதல் முதலில் மனிதனைப் படைத்து இந்தப் பூலோகத்துக்கு அனுப்பி வைக்கிறார். ஆனால் மனிதன் இந்தப் பூமியில் காலூன்றி நிற்கவில்லை. கடவுள் இருக்கும் அந்தச்சுவர்க்க பூமிக்கே திரும்பிவிடுகிறான். கடவுள் பார்க்கிறார். அந்த மனிதனை இந்த நிலவுலகிலேயே நிறுத்திக் கொள்ள இன்பப் பொருள்களான பூஞ்சோலை, வண்ணமலர், இனிய பழங்கள், இசைத் தும்பி, வெள்ளருவி, நீரோழி இன்னும் என்ன எல்லாமோ கொடுத்துத் திரும்பவும் அவனை மண்ணுலகத்துக்கே அனுப்பி வைக்கிறார். இவை ஒன்றும் அவன் விரும்பும் இன்பத்தை அளித்து விடவில்லை. ஆதலால் திரும்பத் திரும்ப சுவர்க்கத்துக்கே ஓடி விடுகிறான் மனிதன். கடைசியாகக் கடவுள் ஒரு யுக்தி செய்கிறார். ஒரு பெண்ணைப் படைத்து அந்த மனிதனுடன் இந்தப் பெண்ணையும் சேர்த்து உலகத்துக்கு அனுப்பிவைக்கிறார். அவ்வளவுதான்! உலகத்துக்குப் பெண் துணையோடு வந்த மனிதன் சுவர்க்கத்திற்குத் திரும்பவே இல்லை. இது ஒரு கதை.

இரண்டாவது கதை:—

கடவுளின் பரம விரோதியான சைத்தான் மனிதனைக் கெடுக்க எண்ணுகிறான். பூமிக்கடியில் தங்கத்தையும் வைரத்தையும் புதைத்து வைக்கிறான். மரங்களில் இருந்து மதுவைக் குடம் குடமாகப் பொழிய வைக்கிறான். கடலுக்கடியில் முத்தையும் பவளத்தையும் பரப்பி வைக்கிறான். 'அத்தனையும் உனக்கே' என்று வாரி வாரிக் கொடுத்து மனிதனை மயக்கப் பார்க்கிறான். இந்தப் பொன்னாலும், பொருளாலும், மண்ணாலும், மதுவாலும் அவனைக் கெடுக்கவே முடியவில்லை. கடைசியில் ஒரு பெண்ணைப் பிடித்து அவனிடம் அனுப்பி வைக்கிறான். அவ்வளவுதான்; மனிதன் கெட்டே போய்விடுகிறான். இப்படி ஒரு கதை.

இரண்டு கதைகளுமே கலைஞனது கற்பனையில் உதித்தவைதான். பெண் மனிதனை வாழ்விக்க வந்தவள்; அவனுக்கு அளப்பரிய இன்பத்தை அளிக்கக்கூடியவள் என்ற அடிப்படை எண்ணத்திலே உருவானதுதான் முதல் கதை. இல்லை, எவ்வளவோ ஒழுக்கமாக வாழும் மனிதனும் பெண்ணால் கெட்டொழிந்து போய் விடுகிறான் என்ற கருத்தில் எழுந்தது இரண்டாவது கதை.

பெண் என்பவள் மனிதனை வாழ்விப்பவளா, தாழ்விப்பவளா என்பதை பிரான்சு தேசம் மட்டுமின்றி, உலகமெல்லாம் ஆராய்ந்திருக்கிறது; இரு கோணங்களிலும் அலசிப் பார்த்திருக்கிறது.

ஆனால் தமிழன் இன்னும் கொஞ்சம் ஆழ்ந்து சிந்தித்திருக்கிறான். எப்படியோ பூமியிலே வந்து நிலைத்து விட்ட ஆணும் பெண்ணும் தங்களைப் படைத்த தலைவனை அறிய முற்படுகிறார்கள். மனிதன் சொல்கிறான், அந்த இறைவன் ஆணாகத்தான் இருக்க வேண்டும் என்று. பெண் சொல்கிறாள் - பரம்பொருள் பெண்ணான இறைவியாகத்தான் இருக்கிறாள் என்று. இவர்களுடைய விவாதம் தீர்ந்தபாடாக இல்லை. கடைசியில் இருவருக்கும் பிறக்கிறான் ஒரு பிள்ளை. அவன் வளர்ந்து பெரியவன் ஆகிறான். அவனிடமே சொல்கிறார்கள் தங்கள் விவாதத்தை. விடையையும் கேட்கிறார்கள். அவன் சொல்கிறான்: கடவுள் தாயாக இருக்கிறாள் என்று. மேலும் சொல்கிறான் — இறையிடத்தில் ஆண்மையுமில்லை,

---

மேலே: தாராசுரம் அன்னபூரணி. கீழே: செப்பேலி வடிவம்

## தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

பெண்மையுமில்லை. தாய்மை தான் நிறைந்திருக்கிறது என்று. உண்மைதானே! அந்தப் பிள்ளையின் கண்கண்ட தெய்வம் தாய் தானே! அந்தத் தாய் சுட்டிக் காட்டிய பின்தானே தந்தையைத் தெரிந்து கொள்கிறான்? அன்னையிடம் அன்பைப் பெறுகிறான்; அப்பனிடம் அறிவைப் பெறுகிறான். அன்பைச் சொரிபவளாக அம்மையும், அறிவை வளர்ப்பவனாக அப்பனும் அமைகிறார்கள். அதனால் தான் கடவுளை மனிதன் முதல் முதலில் தாய் உருவிலேயே வழிபடத் தொடங்கி யிருக்கிறான்.

'பால் நினைந்து ஊட்டும் தாயின்' அன்பைக் கசிந்து கசிந்து பாடிய மாணிக்கவாசகப் பெருமான் மேலும் இறைவன் அருளை நினைந்து,

தாயாய் முலையைத் தருவானே
தாராது ஒழிந்தால், சவலையாய்
நாயேன் கழிந்து போவேனோ

என்று இரங்கி நைகிறார். இன்னும் திருநாவுக்கரசரும்,

ஈன்றாளுமாய், எனக்கு எந்தையுமாய்
உடன் தோன்றினராய்

என்றும், மற்றொரு பதிகத்தில்,

தாயவன் காண்
உலகிற்குத்
தன்னொப்பிலாத
தத்துவன் காண்

தஞ்சை
போகசக்தி
இருந்த கோலம்





திருக்குறுக்கை போகசக்தி-நின்ற கோலம்

என்றும் பாடிப் பாடி மகிழ்கிறார். இப்படித் தாயான தத்துவமாகவே இறை வழிபாடு மனித உள்ளத்தில் ஆதியில் எழுந்திருக்கிறது. 'பேசரிய உயிரை எல்லாம் பெரும்போகம் சுவை அளித்து ஆக அகத்தும் அடியார் உளத்து அப்பனுடன் இருக்கும்' அன்னையைக் கண்டு தொழாத கவிஞன் இல்லை. கசிந்து பாடாத கவிஞன் இல்லை.

இந்த உலகத்திலே பிறந்த மனிதன் முதலில் உண்ணத் தெரிந்திருக்கிறான். பின்னர் உடுக்கத் தெரிந்திருக்கிறான். பின்னுல் இருக்க, படுக்க இடம் தேடியிருக்கிறான். உண்டு உடுத்து உறங்கத் தெரிந்த மனிதனது வாழ்வு இவைகளில் மட்டும் நிறைவு பெறாது இருந்திருக்கிறது. இன்ப உணர்வுக்கு ஏங்கியிருக்கிறான். அப்படி இன்பம் தேடி அலைந்த மனிதன் தான் ஓங்கி உயர்ந்த மலையைக் கண்டு, அதனுடைய அழகை காம்பீர்யத்தைக் கண்டு அதிசயித்து நின்றிருக்கிறான். அகன்று பரந்த கடலைக் கண்டு அந்தக் கடலில் விளையும் முத்தையும் பவளத்தையும் பார்த்து, அந்தக் கடல் அலைகள் எழுப்பும் இன்னிசையைக் கேட்டுத் தன் வசம் இழந்திருக்கிறான். முன்னமேயே இறைவனைத் தாய்மை உருவிலே கண்டு தொழக் கற்ற இந்த மனிதன் மலையையும் அலையையுமே உருவகப்படுத்தி மலைமகளாக, அலைமகளாக அந்த அன்னையை நினைந்திருக்கிறான். இந்த மலை மூலமாக, அலை மூலமாக ஆரம்பித்த அன்னை வழிபாடு அவன் உள்ளத்தில் எழுந்த அழகுணர்ச்சி காரணமாக அந்த அன்னையையே உலகுக்கு அன்போடு அறிவையும் நல்கும் நல்ல கலைமகளாகவும் உருவகப்படுத்தியிருக்கிறது. இப்படித்தான் மலைமகள், அலைமகள், கலைமகளாக அன்னை அவன் எண்ணத்தில் தோன்றியிருக்கிறாள். இப்படி மூன்று அன்னையரை உருவாக்கிய அவன் மூவரையும் ஒருவராகவே காணும் பேற்றுக்குத் தவம் கிடந்திருக்கிறான். இப்படி மூவரும் ஓர் உருவாய் இணைந்து நிற்கும் அன்னையே தேவர் மூவர்க்கும் முதற் பொருள்; அவர்கள் செய்யும் முத்தொழிலுக்கும் அடிகோலும் பராசக்தி அவளே என்றெல்லாம் எண்ணியிருக்கிறான். இப்படி எண்ணியவன் உள்ளத்திலே,

மூவர்க்கும் முதற் பொருளாய்,
முத் தொழிற்கும் வித்தாகி
நாவிற்கும் மனத்திற்கும்
நாடரிய பேரொளியாய்
தேவர்க்கும் முனிவர்க்கும்
சித்தர்க்கும் நாகர்க்கும்
யாவர்க்கும் தாயாகும்
எழிற் பரையை வணங்குவாம்

என்ற பாடல் எழுந்திருக்கிறது. இந்தப் பராசக்தியாம் அன்னை தான் எண்ணற்ற திருப் பெயர்களோடு எழில் நிறைந்த எத்தனையோ உருவங்களில் நம் நாட்டில் உள்ள கோயில்களில் எல்லாம் எழுந்தருளியிருக்கிறாள். நெல்வேலியில் அவளை வடிவன்னை என்பர். மதுரையில் அம் கயற்கண்ணியென அவள் நிற்பாள். ஆனைக்கா அகிலாண்ட நாயகியும் அவளே. தஞ்சையில் பெரியநாயகியாகவும், குடந்தையில் மங்களாம்பிகையாகவும், திருக்கடவூரில் அபிராமியாகவும் விளங்குகிறாள். காஞ்சியில் காமாட்சியாகவும், காசியில் விசாலாட்சியாகவும் இருப்பவளும் அவளேதான். இவர்களில் கலையுலகில் பிரசித்திபெற்ற ஒரு சிலரை அறிமுகப் படுத்துவதே இக்கட்டுரையின் நோக்கம்.

'நீ'க்கெலாம் புகழும் திருநெல்வேலி'யில் இருப்பவளே வடிவன்னை. அவள் தன் பெயருக்கு ஏற்பச் சிறந்த வடிவுடையவளாக உருப் பெற்றிருக்கிறாள். கருவறையில் நிற்கும் அந்த வடிவன்னையை எட்ட இருந்து காண்பதாலும், அவள் வடிவு முழுவதையும் ஆடை அணிகள் மறைத்துக் கொண்டிருப்பதாலும் அவளது அழகு முழுவதையும் கண்டு மகிழ்வது சாத்தியமில்லாது போய் விடுகிறது. என்றாலும் கலைஞர்கள் நம்மைச் சும்மா விட்டு விடுவார்களா? அவளையே அழகொழுகும் செப்புச் சிலை வடிவிலும் நிறுத்தியிருக்கிறார்கள். கம்பீரமான தோற்றத்தோடு அவள் நிற்கும் ஒயில் மிக மிக அழகானது. அவளையே காண்கிறீர்கள் முதல் பக்கத்திலே. இரண்டே திருக்கரங்களோடு சமைக்கப் பட்டிருந்தாலும் அவளது வடிவில் தாய்மையையும் இறைமையையும் சேர்த்தே படைத்து விடுகிறான் கலைஞன். இவளைத் தரிசிக்கச் சென்ற கலைஞன் அவளிடம் ஒரு சிபாரிசு கேட்கிறான். பல முறை நெல்வேலி நாதர் சந்நிதிக்குச் சென்று தன் குறைகளையெல்லாம் பன்னிப் பன்னிச் சொல்லியும் கேளாது வாளாவிருக்கும் அந்த அப்பனிடம் இந்த அன்னையையே சிபாரிசு செய்யச் சொல்கிறான். அப்படி விடுக்கும் வேண்டுகோளையும், ஏதோ பணிந்து தணிந்து கூறுவதாக இல்லை. கொஞ்சம் மிடுக்குடனேயே அவளுக்குச் சவால் விட்டுக் கேட்





(மேலே)
தஞ்சை கலைக்கூடத்து நாராயணி

(கீழே)
கன்னியாகுமரி


லிப்டன்
LAOJEE
லாவோஜி
டீ
LIPTON'S
LAOJEE
THE DUST TEA
FOR THE HOTEL
LIPTON'S
LAOJEE
THE DUST TEA
FOR THE HOTEL
லாவோஜி
டீ
LAOJEE
சிக்கனத்தின் சின்னம்
சிறப்பின் சிகரம்


SPARE PARTS
FOR ALL ENGLISH CARS...
TYRES FOR CARS & TRUCKS...
Silver Exide BATTERIES
AT COMPETITIVE PRICES
Exide
GRAMS: "CARSPARES"
PHONE: 65737
Contact
THE GENERAL AUTOMOBILES
18, GENERAL PATTER'S ROAD, MOUNT ROAD,
MADRAS - 2


பண்டிட்
டி.கோபாலாச்சார்லுவின்
அருணா
ஸ்திரீகள் டானிக்
ஆயுர்வேதாஸ்ரமம்
(பிரைவேட்) லிமிடெட்,
சென்னை-17

கிறான். அத்தனை பிடுக்குக்கும் உரிமை உடையவன் தானே கவிஞன்? அவன் கேட்கும் கேள்வி இதுதான்:

> ஆய்முத்தும் பந்தரில் மெல்லணைமீது
> உன் அருகிருந்து
> 'நீ முத்தம்தா' என்று அவர்
> கேட்கும் வேளையில் நித்தநித்தம்
> வேய் முத்தரோடு என்னுறைகள்
> எல்லாம் மெல்லமெல்லச் சொன்னும்
> வாய் முத்தம் சிந்திவிடுமோ
> நெல்வேலி வடிவன்னையே!

இப்படிக் கேள்வி கேட்கும் பக்தனை, அன்னை உதாசீனம் செய்ய முடியுமா? அவன் வேண்டுகோளை நிறைவேற்ற அவன் சொல்லிக் கொடுத்த நேரத்தையும் காலத்தையும் உபயோகப்படுத்திக் காரிய சித்தியும் அளித்திருப்பாள். நல்லதோர் அன்னையையும் அவள் மூலம் பக்தன் அடையும் நன்மையையுமே நினைந்து கொண்டு மேலே நடக்கலாம்.

தான் பெற்ற பிள்ளைகளைப் பராமரிப்பதில் அன்னையின் முதற்கடமை, அவன் பசியை ஆற்றுவது தானே? சின்னப் பிள்ளையாய் இருந்தால் பாலூட்டு வாள். ஒன்றிரண்டு வயது கழித்ததும் அன்னம் ஊட்டுவாள். பின்னர் அவன் வளர்ந்து பெரியவனாகும் காலத்தில் அவனுக்கு அறுசுவை கூடிய உணவு படைத்து அவன் உண்பதைக் கண்டு மகிழ்வாள். இந்தத் தாய் மையை நினைத்த கலைஞன் அவளை **அன்னபூரணி** என்றே அழைத்திருக்கிறான். அன்னபூரணியின் வடிவம் காசி விசுவநாதர் ஆலயத்தை ஒட்டிய கோயில் ஒன்றில் இருக்கிறது. பொன்னால் செய்யப்பட்ட அன்னபூரணி ஒருத்தியும் அங்கே உட்கார்ந்திருக்கிறாள். காஞ்சி காமாக்ஷி கோயிலில் அவள் சந்நிதியின் நுழை வாயிலில் ஓர் அன்னபூரணி சிறியதொரு வடிவில் இருக்கிறாள். ஆனால் நான் உங்களையெல்லாம் வேறோர் அன்னபூரணியிடமே அழைத்துச் செல்ல விழைகிறேன். தன்னிக ரில்லாப் பேரழகுடன் பொலியும் அந்த அன்னபூரணி இருக்கும் இடம் கும்பகோணத்தையடுத்த தாராசுரம் ஐராவதேசுவரர் கோயிலாகும். அந்தக் கோயிலில் நுழைந்ததும் நம் கண்முன் வருவது ராஜகம்பீரன் மண்டபம். அந்த மண்டபத்தின் உள் பக்கத்தில் மேற் புறத்துச் சுவரில் ஒரு சிறிய மாடத்தில் கிழக்கு நோக்கியவளாய் நிற்கிறாள் அவள். நான்கு அடி உயரமே உள்ளவளாய் நல்ல கருங்கல்லில் உருவாகி யிருக்கிறாள். மக்கள் பசிப்பிணி ஆற்றும் ஆர்வம் அவள் முகவிலாசத்தில் தெற்றெனத் தெரிகிறது. அவள் உதடுகளில் அரும்பும் இளநகை நமது பசியையே மறக்கச் செய்கிறது. இடக்கையில் அமுத கலசம் ஏந்தி நிற்கும் இந்த அன்னபூரணி உலகையே புரக்கப் புறப்பட்டவள்தான் என்று தோன்றுகிறது. அவளைக் காணும்போது 'அம்மா தாயே, நீ மூடி வைத்திருக்கும் அமுத கலசத்தைத் திறந்து, விரைவிலே மக்கள் பசியும் பிணியும் இன்றி, வசியும் வளனும் பெற்று வாழ வகை செய்வாய் அம்மா!' என்று பிரார்த்திக்கவே தோன்றி யது எனக்கு. கலை உலகில் இவளைச் சௌபாக்கிய சுந்தரி என்றும் அழைக்கிறார்கள். தான் சகல சௌபாக்கி யங்களையும் பெற்றிருப்பதுடன் மக்களுக்கும் அந்தச் சௌபாக்கியங்களை வழங்கும் சுந்தரி அவள். ஆம்! மக்கள் பசியை அகற்றி விட்டால் மற்ற சௌபாக் கியங்க ளெல்லாம் விரைவிலேயே வந்து குவிந்து விடாதா என்ன?

உலக மக்களது பசியையகற்றுவது இந்த அன்ன பூரணி என்றால், அந்தக் காத்தற் கடவுளாம் மகா விஷ்ணுவின் வேலை பாதிக்கு மேல் தீர்ந்து விடுகிறதே



பெண்: மாப்பிள்ளை தீபாவளி பிரஸண்டாக இந்த நெக்லேஸ் வாங்கி வந்திருக்கிறார்.

பாட்டி: யாருக்கு, எனக்கா?

என்று கேட்கத் தோன்றும். வெறும் உண்டியும் உடையும் மட்டும் மனிதனது தேவை என்றில்லை. எத்தனை எத்தனையோ பொருள்களுக்கு அல்லவா ஆசைப் படுகிறான் மனிதன்? அந்த ஆசையையெல்லாம் பூர்த்தி செய்ய வேண்டியவனும் அவன்தானே? அந்த நிலையில் தான் தன் அண்ணனை அந்தப் பரந்தாமனுக்கும் நல்ல பக்கத் துணையாக நிற்கிறாள். அவன் ஏந்திய சங்கையும் சக்கரத்தையுமே அவனிடமிருந்து பெற்று மக்களுக்கு எல்லாம் அபயம் அருளுபவளாய் நிற்கும் அந்த அன்னை யையே நாராயணி என்கிறார்கள் கலைஞர்கள். இந்த நாராயணியை எல்லாக் கோயில்களிலும் காண முடி யாது. அவளது வடிவில் சிறந்தது ஒன்று தஞ்சைக் கலைக்கூடத்தில் இருக்கிறது. சமபங்க நிலையில் சாந்த சொரூபியாக இருப்பவளே யானாலும், காத்தல் தொழிலுக்கு ஏற்ற கருணை நிறைந்தவளாகவே காட்சி தருகிறாள்.

இப்படி அண்ணன் வேலையில் மட்டும்தான் இவள் பங்கு பெறுகிறாள் என்றில்லை. 'காதல் ஒருவனைக் கைப்பிடித்து அவன் காரியம் யாவினும் கைகொடுத்து' நிற்கும் தமிழ்ப் பெண் குலத்தில் பிறந்தவள் ஆயிற்றே. ஆதலால் இறைவனது காரியங்களுக்கும் சக்தி தரு பவள் அவளாகத்தானே இருக்க வேண்டும்? ஆம்! அப்படி சக்தி அருளுபவளாக இருக்கும் அன்னையையே போக சக்தி என்று வடிக்கவும் நம் கலைஞர்கள் மறக்க வில்லை. சோழ நாட்டில் உள்ள சிவத்தலங்களில் எல் லாம் கருவறையிலே லிங்க உருவில் இருக்கும் இறைவன் பக்கலிலேயே அவனுக்கு எல்லா சக்திகளும் அருளுபவ ளாக போக சக்தியும் இருப்பாள். சில இடங்களில் நின்ற கோலத்திலும் சில இடங்களில் இருந்த கோலத்திலும் சேவை சாதிப்பாள். அந்த போக சக்திகளில் எல்லாம் தலைசிறந்த சக்தியாக இருப்பவள்தான் தஞ்சைப் பெருவுடையார் கோயிலில் உள்ள போக சக்தி. அவள் இருக்கிற ஒய்யாரம்தான் என்ன? ஒரு காலை மடக்கி ஒரு காலைத் தொங்கவிட்டு, கையை ஆகுய வாதமாக

வைத்து நம்மை எல்லாம் தன் பக்கம் அழைத்து அருள் புரிபவளாக அல்லவா இருக்கிறாள்? வயிற்றில் உள்ள மடிப்புகள் எல்லாம் அவள் எண்ணரிய பிள்ளைகளைப் பெற்றவள் என்றல்லவா கூறுகின்றன? கலை உலகில் கம்பீரமாகக் கொலுவீற்றிருக்க வேண்டிய இவள், சிறிய வடிவிலே பெருவுடையார் கருவறையிலே ஒரு பக்கமாக ஒதுங்கியே உட்கார்ந்திருக்கிறாள். அங்கு சென்றால் அர்ச்சகரிடம் கேட்டு, அவள் இருக்கும் இடத்தைத் தேடித் தரிசிக்க மறந்து விடாதீர்கள்.

இப்படியே எத்தனை எத்தனை அன்னையரையோ நீங்கள் பார்த்திருக்கக் கூடும். உலகெல்லாம் புரக்கின்ற இந்த அன்னையையே கன்னியாகவும் கண்டிருக்கிறார்கள் கலைஞர்கள்.

தாயாகவும், மனைவியாகவும், மகளாகவும் இருப்பவளல்லவா பெண்? பெண் என்றாலே பொதுவாக மகள் என்றும் பொருள் வந்து விட்டதல்லவா? சிவ பெருமானின் சதியாகவும், ஆனைமுகனுக்கும் ஆறுமுகனுக்கும் (ஏன், நமக்குமே) அன்னையாகவும் தேவியைக் கண்ட நம் தமிழ்ப் பெருமக்கள், மனைவியாகவோ தாயாகவோ ஆகாத கன்னி மகளாகவும் இறைவியை வழிபட வகை செய்திருக்கிறார்கள்.

மனிதனுக்கு இம்மையில் வாழ்வு அளிக்கத் தாய்மை உருவில் தோன்றியவள் மறுமையிலும் அருள் புரியக் கன்னி வடிவிலே தவக்கோலம் கொண்டு நிற்கிறாள். அவள் இறைவனோடு தொடர்பு கொள்ளும் உறவு ஏதோ உடல் உறவு அல்லவே. உணர்வில் கலந்த உறவாக இருப்பதனாலேயே கன்னித் தன்மை அழியாமல் தாய்த் தன்மையும் பெறுகிறாள். 'அகிலாண்ட கோடி ஈன்ற அன்னை' தான் என்றாலும் 'பின்னையும் கன்னி என மறைபேசும் ஆனந்த ரூபமயிலாக' இருக்கிறாள் அவள் என்கிறார் தாயுமானவர். தாயும் ஆனவரே அன்னையின் கன்னித் தன்மையைக் கூறிவிட்டார் என்றால் அதற்குமேல் 'அப்பீல்' ஏது? இந்தக் கன்னியாம் அன்னையைக் காண ஒரு நடையே நடக்கவேணும். ஆம்! அந்தத் தென் குமரிக்கே செல்ல வேணும். 'நீலத்திரை கடல் ஓரத்திலே நின்று நித்தம் தவஞ் செய்யும் குமரி'யைக் காண வேணும். இவளை மணம் புரிய வந்த இறைவனும் கடைசியில் ஏமாந்தல்லவா திரும்பியிருக்கிறான்? கையில் அக்கமாலை ஏந்தி நிற்கும் அவளது தவக்கோலம்தான் எத்துணை அழகு வாய்ந்தது? கன்னியாகவே இருந்து உலகுயிர் அனைத்திற்கும் அருள் புரிவது என்பது எளிதான காரியமா என்ன? அந்த அரிய காரியத்தையும் கன்னிக்குமரி செய்கிறாள் என்று கற்பனை பண்ணியிருக்கிறார்கள் கலைஞர்கள். உலகெலாம் காக்கும் ஒரு தனிக் கடவுளை அன்னையாகவும் கன்னியாகவும் கற்பனை பண்ணத் தெரிந்த கலைஞர்கள் நம்மவர் என்று அறிகிற போது தமிழனாகப் பிறந்த நாமும் பெருமிதம் அடையலாம் தானே?

# உயர்வு

இருளில் ஒளியும் உண்டே!—அந்த
இருளில் இருளும் உண்டே!
இருளில் ஒளியைக் காணில்—உலகில்
இடர்ப்பான் உண்டோ கிளியே?

கனியில் இனிப்பும் உண்டே!—அந்தக்
கனியில் கசப்பும் உண்டே!
கனியில் இனிப்பைக் காணில்—நெஞ்சக்
கவலை யுண்டோ கிளியே?

மதியில் நிறைவும் உண்டே!—அந்த
மதியில் குறைவும் உண்டே!
மதியில் நிறைவைக் காணில்—சிந்த
மயக்கம் உண்டோ கிளியே?

மலரில் மணமும் உண்டே!—அந்த
மலரில் இன்மை உண்டே!
மலரில் மணத்தைக் காணில்—மனத்தில்
மாற்றம் உண்டோ கிளியே!

நெல்லில் மணியும் உண்டே!—அந்த
நெல்லில் பதரும் உண்டே!
நெல்லில் மணியைக் காணில்—மருட்சி
நிலைப்ப துண்டோ கிளியே?

கடலில் முத்தும் உண்டே!—அந்தக்
கடலில் நத்தை உண்டே!
கடலில் முத்தைக் காணில்—உள்ளக்
கலக்கம் உண்டோ கிளியே?

மண்ணில் பொன்னும் உண்டே!—அந்த
மண்ணில் கரியும் உண்டே!
மண்ணில் பொன்னைக் காணில்—சிந்தை
வாட்டம் உண்டோ கிளியே?

சிரிப்பில் தூய்மை உண்டே!—அந்தச்
சிரிப்பில் வடம் உண்டே!
சிரிப்பில் தூய்மை காணில்—வருந்தும்
சிறுமை உண்டோ கிளியே?

அன்பில் இன்பம் உண்டே!—அந்த
அன்பில் துன்பம் உண்டே!
அன்பில் இன்பம் காணில்—எங்கும்
அயர்ச்சி உண்டோ கிளியே?

ஒளியில் ஒளியும் உண்டே!—அந்த
ஒளியில் இருளும் உண்டே!
ஒளியில் ஒளியைக் காணில்—வேறோர்
உயர்வும் உண்டோ கிளியே?





என். எஸ். சிதம்பரம்.

# நாடோடிப் பாடல்கள்

நாடோடிப் பாடல்கள்தான் எத்தனை எளிமையானவை! மக்களின் மன இயல்பை எவ்வளவு அழகாகச் சித்திரித்துக் காட்டுபவை! இயற்கைச் சூழலில் இன்பமாகக் கள்ளங்கபடமின்றி வாழும் மக்களின் குண இயல்பையும், அவர்கள் வாழும் முறையையும் எத்தனை சிறப்பாக எடுத்துக் காட்டுபவை! கேரளம், தமிழ்நாடு, ராஜஸ்தானம் - இவற்றில் வழங்கி வரும் சில நாடோடிப் பாடல்களை எழில்மிகு காட்சிகளாக அடுத்து வரும் பக்கங்களிலேயே காண்கிறோம். நம் தமிழ்நாட்டிலே வழங்கி வரும் கும்மி போலவே கேரளத்திலும் 'கைகொட்டிக் களி' என்னும் கும்மிப் பாட்டு வழக்கில் இருந்து வருகிறது. இதோ ஒரு பூமயில் பாடுவதைப் பாருங்கள்.

"குன்னகத்தொரு காவுண்டு,
காவினடுத்தொரு காவுண்டு:
காவுகாணுன் போருன்னோ
பூங்குயிலே பெண்ணே நீ?"

"குன்றுக்குப் பக்கத்திலே தாழ்வரையில் தோப்பு ஒன்று உண்டு. அதனை அடுத்து ஓர் அம்மன் கோயில் இருக்கிறது. அதைக் காணப் போகலாம். வருகிறாயா, பூங்குயிலே!" என்று கேட்கிறாள் பூமயில் ஒருத்தி.

பூங்குயிலுக்கு ஒரே ஆனந்தம்.

"குன்னகத்தொரு காவுண்டோ?
காவினடுத்தொரு காவுண்டோ?
காவு காணுன் நேரம் ஞான்
பூமயிலே பொன்னுரே!"



"அப்படியா? குன்றுக்குப் பக்கத்திலே தோப்பு இருக்கிறதா? அதனை அடுத்து அம்மன் கோயில் இருக்கிறதா? பொன்னான பூமயிலே! நானும் கோயில் காண வருகிறேனடி!" என்று கூறிப் புறப்பட்டு விடுகிறாள்.

அப்படிப் புறப்பட்ட பூமயிலும் பூங்குயிலும், புறப்பட்ட காரியத்தை மறந்து செய்யும் காரியத்தைப் பாருங்கள்! பூங்காவில் புகுந்து பூக்களைப் பறித்துச் சேகரிக்கிறார்கள்; அப்படியே மரத்தடியிலே அமர்ந்து மாலை தொடுக்கிறார்கள். யாருக்கோ?

மாலை தொடுத்த பின் அம்மனைத் தரிசிக்கும் எண்ணம் அப்படியே போய் ஆடிப் பாடி விளையாடும் திட்டம் உருவாகிறது! ஆடிப் பாடி ஓய்ந்ததும், ஓடையிலே இறங்கி நீந்திக் குளித்து மகிழ்கிறார்கள்!

பொழுது புலர்ந்ததும் புறப்பட்டவர்கள் அந்திப் போது மயங்கி விளக்கு வைக்கும் நேரத்தில் குளியலை முடித்துக் கொண்டு வீட்டுக்கு வருகிறார்கள்! இந்தக் காட்சியை ஓவியர் ரமணி நம் கண்முன் நிறுத்துகிறார்.



கேரளப் பூமயிலும் பூங்குயிலும் நீராடி மகிழ்வதைக் கண்ட நம் தமிழ்நாட்டுப் பூங்கோதை ஒருத்திக்கும் ஆசை பிறந்து விடுகிறது. நீராடுவதில் கேரள நங்கையையும் மிஞ்சி விடுகிறாள். அவள் நீரில் தலையாற்றும் அழகை இன்றும் பார்த்துக் கொண்டிருக்க வேண்டும். அதோடு ஆருயிர்க் காதலனும் அருகில் இருந்து விட்டால் ஆனந்தத்துக்குக் கேட்க வேண்டுமா? அந்த ஆனந்தத்தில் பாட்டு பிறக்கிறது. அந்தப் பாட்டிலிருந்து பார்க்கப் பார்க்கத் தெவிட்டாத ஓவியமும் பிறக்கிறது. பாட்டைப் பாடிப் பாருங்கள். அதோடு ஓவியர் சாகர் தீட்டியிருக்கும் படத்தைப் பார்த்து மகிழுங்கள்.

**ஆலம் விழுதுபோலே – குட்டி**
**அந்தப்பிள்ளை தலைமயிரை**
**ஆறுஒன்னும் பார்க்காமல்தான் – குட்டி**
**ஆத்துறளாம் ஆத்துக்குள்ளே.**

**ஆத்திலே தலைமுழுகி – குட்டி**
**ஆயிரங்கால் பட்டுடுத்தி**
**கூத்துப்பக்கம் உட்கார்ந்துநீ – குட்டி**
**போட்டுக்கோடி வெற்றிலையை**

**மூக்குச்சிவந்த பொண்ணே – அடி**
**மூணுபணம் கேட்டபொண்ணே**
**நாக்குச்சிவந்த பொண்ணே – குட்டி**
**நான்தாண்டி உன்புருசன்**

**காப்புக் கலகலென்னக் – குட்டி**
**கைவளையல் ரெண்டும்மின்ன**
**மூக்குத்திவேறே மின்னக் – குட்டி**
**முகமுங்கூட மின்னுதடி**

**செக்கச் சிவந்திருப்பாள் – குட்டி**
**செட்டிமகள் போலிருப்பாள்**
**வாரி முடிஞ்சிருப்பாள் – குட்டி**
**வந்திருப்பாள் சந்தைக்கடை.**

**கோடைமழை பெய்யுதடி**
**குலையெல்லாம் நடுங்குதடி**
**கூசாமல் என்பிறகே–தங்கரத்தினமே,ஓடிக்**
**குடைசைக்குள்ளே வந்திடடி பொன்னு**
**ரத்தினமே**

மாரிக் காலம். நீர்ப் பஞ்சமுள்ள மார்வாரிலும் கூட அந்த ஆண்டு நல்ல மழை. குளம் குட்டைகள் நிறைந்துவிட்டன. அந்தி சாயும் நேரம். கிராமத்துப் பெண்கள் பலர் குடிதண்ணீர் எடுத்து வருவதற்காகப் புறப்படுகிறார்கள். தங்களை நன்றாக அலங்கரித்துக் கொண்டு. அவர்களிடையே ஒருத்தி. அவள் மட்டும் அப்படி முகவாட்டம் அடைந்திருப்பானேன்? சம்பாதிக்கப் போகிறேன் என்று திருமணமான புதிதிலேயே வெளியூர் சென்ற அவள் கணவன், ஆசை முகம் மறக்கும் அளவுக்கு வெளியூரில் பலகாலம் தங்கிவிட்டான்!

அவள் நினைவில் லயித்தவளுக்கு நீர் மொள்ளக் கூடத் தோன்றவில்லை. அப்பொழுது தூரத்தில் ஒருவன் ஒட்டகத்தில் வருவது தெரிகிறது. அருகில் வந்தவன் அவளைப் பார்க்கிறான். அவள் முகவாட்டத்தைப் பார்க்கிறான். அவளை அடையாளமும் கண்டு கொள்ளுகிறான். ஆனால் அவள்தான் அவனை அடையாளம் கண்டு கொள்ளவில்லை. "தூக்கிப் போடு, குடத்தை! உன் அருமை தெரியாத கணவனை மறந்து என்னோடு வந்து விடு. ஒட்டகத்தில் என் பின்னால் ஏறிக் கொள்!" என்கிறான். கணவன் மனைவியைப் பின்னால் ஏற்றி உட்கார வைத்துக் கொள்வது ராஜஸ்தானத்து வழக்கம். அவன் தன் மனைவிதான் என்பதைச் சொல்லாமல் சொல்கிறான். ஆனால் அவளோ அயலான் தன்னை இப்படி அழைப்பதா என்று ஆத்திரமடைந்து சீறி விழுகிறாள்:



"உன் நாக்கை அறுக்க. இப்படித் தாறுமாறாகப் பேசும் உன்னைப் பாம்பு பிடுங்க!" – என்றெல்லாம் திட்டி விட்டு வீட்டுக்கு ஓடோடி வருகிறாள். தன் மாமியாரிடம் நடந்ததைச் சொல்லிப் புலம்புகிறாள்.

இதே சமயம் ஒட்டகத்தோடு அவன் வீட்டை அடைகிறான். அன்னை தனயனின் வரவைக் கண்டு ஆனந்தமுறுகிறாள். 'அசட்டுப் பெண்ணே! அவன் உன் கணவன்தானேடி!" என்கிறாள். பாவை நாணிக் கண் புதைக்கிறாள். அப்புறம் அந்தக் குடும்பத்தில் நிலவிய ஆனந்தத்தைக் கேட்க வேண்டுமா?

கேரளப் பெண் கும்மி (கைகொட்டிக்களி) அடிக்க, தமிழ் மங்கை மகிழ்ந்து பாட, மார்வாரிப் பெண்ணும் தன் வீட்டில் மங்களத் தீபாவளி கொண்டாடுகிறாள். நாமும் பார்த்து மகிழுவோம்.





## தொழில்தான் முன்னேற்றத்தின் அடிகோல்!

விசேஷ தினமான தீவாளியில் நாம் யாவரும் ஐசுவரியத்திற்கும், செழிப்புக்கும் காரணமான தேவி லக்ஷ்மியை வணங்குகிறோம். செழிப்பான கிருஷிக்கும், கடல்வழி விவசாயத்திற்கும் மற்றும் தொழில் முன்னேற்றத்திற்கும் லக்ஷ்மியின் ஆசீர்வாதத்தை வேண்டி புதிய வருஷத்தின் செழிப்புக்காகவும், சந்தோஷத்திற்காகவும் அஸ்திவாரம் இட்டுக் கொள்ளுகிறோம். கிர்லோஸ்கர் எஸ்.எம்.பி. வகை என்ஜின் கிருஷியின் செழிப்பிற்கும், கடல்வழி விவசாயத்திற்கும் மிகவும் உபயோகமான மெரின் என்ஜின், மற்றும் மும்முரமான தொழிலின் சேவைக்கு மிகவும் இன்றியமையாத கிர்லோஸ்கர்-எம்.ஏ.என். என்ஜின்களும் இருந்தால்தான் நீங்கள் திட்டமிடும் முன்னேற்றம் பூரணமாகும். நிச்சயமாக கிர்லோஸ்கர் என்ஜின்கள் முன்னேற்றத்தின் சின்னம்-தேவி லக்ஷ்மியின் அவதாரம் என்றுகூடச் சொல்லலாம்!









# கிர்லோஸ்கர் டீஸல் என்ஜின்கள்

கிர்லோஸ்கர் ஆயில் என்ஜின்ஸ் லிட்., கிர்கி, பூனா-3





# தேடித்தவித்த திரு

நெஞ்சு குறுகுறுக்கப் – பல
நீண்ட புனைந்துரைகள்
விஞ்சைக்கனவுகள் வேதனைகள்

எத்தனையெத்தனை கற்பனைகள்
இங்குநான் கண்டிருந்தேன் – முடிவில்
அத்தனைநினைவும் நீயானாய்
அத்தனைவடிவும் நீயானாய்

சித்தக்கனவுகள் செய்கைமறதி
சேரும் அனைத்தும்
மொத்தம் நீயானாய்
மீதியனைத்தும் பொய்யானால்
இத்தனைநாளும் தேடியகற்பனை
இவளெனக் கண்டுகொண்டேன்.

– கண்டபின்னால்

இடைவிட்டு நெகிழ்ந்த
பட்டுச் செவ்விதழ்
பட்டுப் புலர்ந்திடவே

நடைகெட்டுத் தளர்ந்து – நின்
நளினச் சிறடி
நலிந்து கிடந்திடவே

படைகொட்டும் வேல்விழி
பலபேசப் பேசிடவே
பாதிதிறந்த மாதுளைமுத்தெனத்

தடைதட்டும் சிறுபுன்னகை
தறிகெட்டுக் கிறங்கிவர – நீ
தயங்கித் துவண்டதுதான்

முன்னைத் தினங்களில் – சில
மோகக் குறும்புகள்
முனைந்து முனைந்தாடிக்

கன்னங் கனிந்ததுவும் – என்
கன்னங் கலந்ததுவும்
கைகட்டித் தழுவியதும்

பின்னைத் தினங்களில் – நீ
பயிலா திருந்ததனால்
பிறழ்ந்து தளர்ந்தனையோ ?

என்ன துயரந்தான் – உனை
அலைத்து வருத்தியதோ ?
அல்லல் படுத்தியதோ ?

மண்ணை மிதித்தறியோம்
மண்ணில் நடந்தறியோம்
மலரினில் நடந்ததுண்டு

கண்ணினைக் கண்கள்கவ்வப் – பல
காதல்கள் செய்ததுண்டு
காசினி முற்றிலும்

எண்ணிவியந்து பேசிமகிழ்ந்திட – நாம்
இன்பவுலகினை யாண்டிருந்தோம்
இந்தஉலகினை மறந்திருந்தோம்

மண்ணில் பிறந்துவிட்டோம் – இனி
மனிதரில் கலந்துவிட்டோம்
மனங்களில் உயர்ந்துவிட்டோம்

எண்ணற்ற வேதனைகள் – பல
இடையூறு தடைகோள்கள்
எத்தனையோ இருந்தாலும்

நண்ணுற்ற பிறவியெலாம் – இங்கு
நாமிருவர் பிரிந்ததில்லை
நாமிருவர் பிரிவதற்குக்

கண்ணற்ற குருடர்கள்போல் – சிறு
கலகச்சூதுகள் புரிந்திடுவோர்
கண்ணெதிரே பலருண்டு.

– இருந்தாலும்

நம்முள் பிரிவுசிறிதில்லை – இது
நானிலமொப்பிடும் பேருண்மை – நீ

களித்துக் களித்துச்
சிரித்ததுவும் கனவுகள்பற்பல
கண்டது கண்டனவும்

ஒளித்து ஒளித்து – விழி
ஓரம் சொருகிடப்
பார்த்தது பார்த்ததுவும்

தேடித்தவித்த திருவானாய் – நான்
தேடிக்குவித்த திருவானாய்
ஓடிஒளிந்து – சில விளை
யாடல்கள் ஆடிமகிழ்ந்ததுவும்
மாடிநிலவினைச் சிரிப்பில்
மகிழ்ந்து பகிர்ந்ததுவும்
திருட்டுப் புரிபவர்போல்
திமிறித்திமிறித் தழுவியதும்
திருமணக்கைகள் இணைந்ததுவும்
இருட்டு நினைவுகள்போல்
இன்றெருபோயின போயினவோ?
குருட்டுச் சிறுமைகள்பேசிடுவோர்
கூடியிருந்து சிரித்தாலும்
மருண்டு பயந்திடநாம் – வெறும்
மானிடச் சாதியில்லை
தேவர்கள் நாமிருவர் – இங்கு
தெய்விகம்செய்திடல் நம்தொழில்.





மணிவண்ணன்

# 'சிவில்' சிங்கராயர்




**தற்காப்புப் பாயிரம் :**

இது ஒரு கதையுமல்ல; இதில் வரும் சம்பவங்கள் பெயர்கள் எவையும் கற்பனையுமல்ல. அத்தனையும் நூற்றுக்கு நூறு உண்மை. எதற்குச் சொல்கிறேன் என்றால், இதைப் படித்து முடித்து விட்டு, கதைக்குரிய அந்த அம்சம் இல்லே, இந்த அம்சம் இல்லே என்று யாரும் சண்டைக்கு வரக் கூடாது. இதில் சுவாரசியமான பகுதிகள் எதுவுமில்லா விட்டால், நமது நாயகர் திரு சிங்கராயர் அப்படிப்பட்ட காரியம் எதுவும் செய்யவில்லை என்றுதான் நினைத்துக் கொள்ள வேண்டுமே யொழிய என் மீது பழி சொல்லலாகாது. ஒரு வேளை ரசிக்கக் கூடிய அம்சங்கள் ஏதாயினும் இருந்தால், தயவு செய்து அந்தப் பெருமையை அடியேன் பக்கம் தள்ளி விடுங்கள். திரு சிங்கராயர் அது விஷயத்தில் தகராறுக்கு வரும் பட்சத்தில் நானே என் செலவில் சுப்ரீம் கோர்ட் வரையில் போய்ப் பார்த்துக் கொள்கிறேன்!

★

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து அறுபத்திரண்டாம் வருஷம் பிப்ரவரி மாதம் மூன்றும் தேதியன்று மகர ராசியில் எட்டுக் கிரகங்கள் கூடிய போது பெரிய பெரிய மாறுதல்கள் சம்பவிக்கப் போகின்றன என்று அனைவரும் எதிர்பார்த்து ஏமாற்றமடைந்தார்களல்லவா? அந்தச் சந்தர்ப்பத்தில் திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள அழகனூர் வாசிகள் மட்டும் துளிக்கூட அந்த ஏமாற்றத்தை அனுபவிக்கவில்லை. மாறாக, எதிர்பார்த்ததை விட மகத்தான பலாபலன்களை அனுபவிக்கும் பேற்றை எய்தி உய்வுற்றனர். அதற்குக் காரணம் அக் கிரகச் சேர்க்கையின் பலன் எதுவும் அழகனூருக்கு மட்டுமென்று பிரத்தியேகமாக ஏற்றுமதி செய்யப்பட்டதாலல்ல; மகர ராசியில் அந்தக் கிரகங்கள் பிரவேசித்துக் கொண்டிருந்த போது, வான சாஸ்திரக் கணக்குக்கு வராத கிரகம் ஒன்று அழகனூருக்குள் பிரவேசித்ததே காரணம். அந்தப் புதிய கிரகம் பூர்வீகத்தில் அவ்வூர்வாசியாகவும், நடுவில் சென்னை ஹைகோர்ட்டில் பெஞ்ச் கிளார்க்காகவும் இருந்து மேற்படி தினத்தில் ரிட்டையராகிச் சொந்த ஊருக்குத் திரும்பிய திருவாளர் 'சிவில்' சிங்கராயர் அவர்களே!

சிங்கராயரின் சாதனைகளைப் பற்றித் தெரிவிக்கு முன் அவருடைய பிறப்பைப் பற்றிய தேவரகசியம் ஒன்று பூலோகத்தில் இன்னும் பேச்சாகப் பிரஸ்தாபப்பட்டு வருவதைக் குறிப்பிட்டுத் தான் ஆக வேண்டும். அதாவது, மகாவிஷ்ணு பத்து அவதாரங்களை எடுத்த போதெல்லாம் அவருக்குப் பிரைவேட் செக்ரட்டரியாக இருந்து காரியாதிகளைக் கவனித்துக் கொண்டிருந்த நாரத முனிவருக்குத் தாமும் ஓர் அவதாரம் எடுக்க வேண்டும் என்று ஆசை பிறந்ததாம். உடனே அவர் தம் திரிலோக சஞ்சார வேலைக்கு ஓர் அறுபது எழுபது வருஷங்கள் லீவு போட்டு விட்டு அழகனூருக்கு வந்து சிங்கராயராக அவதாரம் எடுத்து விட்டாராம்! இதை நம்புபவர்கள் நம்பலாம்; நம்பாதவர்கள் தள்ளி விடலாம். ஆனால் ஒன்று மட்டும் உறுதி. பிள்ளைப் பிராயத்திலிருந்தே சிங்கராயருடைய நடவடிக்கைகளில் காணப்பட்ட 'நாரத லீலா' முத்திரைகளைக் கொண்டு ஊரார் அனுமானித்ததே அந்த ஊகம்.

அழகனூரை விட்டுச் சென்னை ஹைகோர்ட்டில் கிடைத்த பெஞ்ச் கிளார்க் உத்தியோகத்தை மேற்கொள்ளச் சிங்கராயர் பயணமான போதே அந்தக் கல்யாண குண விசேஷங்கள் அவரிடம் பொருந்தியிருந்தன. அவர் ரிடையராகி மீண்டும் ஊருக்குள் காலெடுத்து வைக்கும் போது வெறுமனே அந்தக் குணங்களோடு மட்டும் திரும்பியிருந்தால் அவரால் எந்த ஒரு பிரளய மாற்றத்தையும் ஊருக்குள் உருவாக்கியிருக்க முடியாது. ஆனால் அவரோ இருதய சுத்தியோடு அரியதொரு கிராம சேவையில் தம்மை ஈடுபடுத்த மகத்தான திட்டங்களுடன் பிறந்த மண்ணில் இறங்கினார். பென்ஷன் வாங்கியவர் கடைசிக் காலத்தை நிம்மதியாகக் கழிக்காது அந்தக் கிராம சேவையில் ஈடுபட முனைந்ததற்குச் சில சந்தர்ப்ப விசேஷங்களால் அவருக்குத் தம் சொந்த ஊர்க்காரர்களுடன் ஏற்பட்டிருந்த ஒரு மனத்தாங்கலே காரணமாக இருந்தது.

புராதன காலம் தொட்டு அழகனூர் வாசிகள் ஒரே ஒரு விஷயத்தில் மட்டும் மிகவும் பின்தங்கிய வகுப்பினராக

தாமரைமணாளன்



இருந்து வந்தனர். சிங்கராயர் ஒருவரைத் தவிர அல்லூர்வாசிகளில் வேறு எவரும் எந்தவொரு அற்பக் கேஸுக்காகவாவது கோர்ட் வாசற்படி மிதித்தவர்களல்லர். வருடந்தோறும் எவ்வளவோ வக்கீல்கள் பட்டம் பெற்று நாட்டுக்குள் இறங்கி வேலை செய்தும், சட்டசபையில் தினந்தோறும் புதுப்புதுச் சட்டங்கள் மசோதாக்கள் பிறப்பிக்கப்பட்டும் தம் ஊர்வாசிகளுக்குச் சட்ட ஞானம் ஏற்படவில்லையே என்று சிங்கராயருக்கு வெகு நாட்களாக மனக்கிலேசம் சொல்லி முடியாது. தமது முப்பது வருட 'சர்வீஸில்' தினந்தோறும் தம் சொந்த ஊரிலிருந்து ஒரு வழக்காவது வராதா என்று எதிர்பார்த்து எதிர்பார்த்துக் களைத்துப் போய் விட்டார். ஒவ்வோர் ஊரிலும் மனிதர்கள் எப்படி முன்னேறி இருக்கிறார்கள்! அடுத்த வீட்டுப் பையன் கோலி விளையாடியதால் தன் வீட்டுச் சுவரிலுள்ள காரை பெயர்ந்து விழுந்த சங்கதியை ஹைகோர்ட் வரை விசாரணைக்குக் கொண்டு வரக் கூடிய சட்ட ஞானிகளைப் பெற்றுப் பல ஊர்கள் பெருமையடைந்து



கொண்டிருக்க, தம் ஊர் மக்கள் மட்டும் இப்படி சட்ட ஞான சூன்யர்களாக இருப்பதைக் கண்டு அவருடைய கிராமப் பற்று ரோஷத்தால் பொங்கி வெழுந்தது. அப்பொழுதே அவர் தமது பென்ஷன் கால வேலைத் திட்டத்தை வகுத்து விட்டார். கடந்து போனது போகட்டும். இனித் தம்மாலாவது தம் கிராம மக்கள் நாலு ஊர் வாசிகளைப் போல் நாலு கோர்ட்டுகளைப் பார்க்க வேண்டும்; அதுவே தாம் தமது கிராமத்துக்குச் செய்யும் சேவை என்று விசுவாசப் பிரமாணம் எடுத்துக் கொண்டு விட்டார்.

இப்படியொரு புனருத்தாரணத் திருப்பணித் திட்டத்துடன் ஊர் திரும்பிய சிங்கராயர் உடனடியாகத் தம் எண்ணத்தைச் செயல்படுத்தவும் ஆரம்பித்து விட்டார். அவருடைய வைராக்கிய சேவையில் வெகு விரைவில் அழகனூரில் பெரும் வியாஜ்ஜியப் புரட்சி உருவாகி அதன் பலனாக மகத்தான 'சிவில் சகாப்தம்' மலர்ந்தது.

நம் வீட்டுக் கொல்லைப் புறத்தில் காய்த்துத் தொங்கும் புடலங்காயை— அடுத்த வீட்டுக்காரி பறித்துக் கொண்டால், அதிகபட்சம் திருடியவளை ஜாடையாக நாலு வசவு வையலாம் என்று தான் வெகு காலமாக அழகனூர்ப் பெண்கள் நினைத்துக் கொண்டிருந்தார்கள். ஆனால் அதை முதல் தர வியாஜ்ஜியமாக்கி ஜில்லா கோர்ட் வரை கொண்டு போகலாம் என்ற விவரத்தை முதன் முதலாகத் திரு சிங்கராயர்தான் அவர்களுக்கு நிரூபித்துக் காட்டினார். புடலங்காயைப் பறி கொடுத்தவளிடம் போய், "உன் கொல்லைப் புறத்துக்குள் அடுத்த வீட்டுக்காரியின் கை அத்துமீறிப் பிரவேசித்தது ஒரு சிவில் பாயிண்ட். புடலங்காயைப் பிடுங்கியது ஒரு கிரிமினல் பாயிண்ட். இரண்டு பாயிண்டுகளுக்கும் அவளை ஆறு மாசமாவது கம்பி எண்ண வைத்து விடலாம்!" என்றார். புடலங்காயைப் பறித்தவளிடம் போய், "நன்றாகக் காய்த்த பிறகும் காயைப் பறிக்காமல் விட்டு வைத்திருந்து உன்னைப் பறிக்கத் தூண்டியது அவளுடைய குற்றம். கிரிமினல்படி குற்றம் செய்வதைவிடக் குற்றம் செய்யத் தூண்டுவது தான் பெரிய குற்றம். அவள் வழக்குப் போட்டால் நீயும் விடாதே!" என்று யோசனை கூறினார். மறுநாள் பார்க்க வேண்டுமே! பெண்கள் இருவரும் பிராதும் கையுமாகப் பஞ்சாயத்துக் கோர்ட்டு வாசலில் நின்றார்கள்!

முன்பெல்லாம் வயற்புறத்தில் ஒருவருடைய வயலுக்குப் பாய்ந்த தண்ணீரை இன்னொருவர் அடைத்துத் தம் வயலுக்குப் பாய்ச்சினால், சம்பந்தப்பட்டவர்கள் இருவரும் பரஸ்பரம் மண்வெட்டிக் காம்புகளால் அடித்துக் கொண்டு நான்கு நாட்கள் காயத்தோடு கிடப்பார்கள். ஐந்தாம் நாள், ஒடிந்த மண்வெட்டிக் கிளைச் சரி செய்யத் தச்சப்பட்டறைக்குப் போகும் இடத்தில் நடந்ததை மறந்து ஒருவர் மடியிலிருந்து இன்னொருவர் ஓசி வெற்றிலை பாக்கு எடுப்பதன் மூலம் சமரசமாகி விடுவார்கள். இப்படி அநாகரிகமாக மண்வெட்டியால் அடித்துக் கொள்வதும், உடனடியாக 'மான ரோஷமில்லாமல்' சமாதானமாகி விடுவதுமான பழக்கங்களை அறவே ஒழித்துக் கட்டிய பெருமை சிங்கராயரைச் சாரும். அவருடைய சிவில் சகாப்தம் உருவான நாள்முதலாக முற்றிலும் புதிய முறையில் இந்த மாதிரிப் பிரச்னைகள் கையாளப்பட்டு வந்தன. ஊருக்குள் இப்பொழுது எந்த மண்வெட்டிக் கலவரமும் கிடையாது. வயற்புறத்தில் இன்று சண்டை போடுபவர்கள் நாளைக் காலையில் அந்த வயல்களை ஒத்தி வைத்துப் பணம் பெற சப் ரிஜிஸ்ட்ரார் ஆபீஸ் வாசலில் நிற்பார்கள். அதற்கு மறுநாள் வக்கீல் வீட்டுத் தாழ்வாரத்தில் குந்திக் கொண்டிருப்பார்கள் — சிங்கராயரின் ஆலோசனைப்படி 'ஹைகோர்ட்' வரையில் போய்ப் பார்த்து விடுவதற்காக!

வெவ்வேறு குடும்பங்களைச் சார்ந்தவர்கள் மட்டுமல்லாது ஒரே குடும்பத்தினுள்ள நபர்களும் தம் சிவில்தனத்தின் பலனை அனுபவித்தால் தான், சிவில் சகாப்தம் ஒரு பூரண வெற்றியை அடைய முடியும் என்பதற்காகக் குடும்ப உள் விவகாரங்களுக்குள்ளேயும் அதைத் தீவிரமாகப் பிரயோகிக்கச் சிங்கராயர் தவறுவதில்லை. உதாரணத்துக்குச் சமீபத்தில் நிகழ்ந்த ஒரு சம்பவத்தைக் குறிப்பிடலாம்.

அன்று உள்ளூர் வெற்றிலை பாக்கு அண்ட் மளிகைக் கடை வாசலில் கிடந்த பெஞ்சியில் உட்கார்ந்து கொண்டிருந்தார் சிங்கராயர். அப்போது கோடரியைத் தோளில் போட்டுக் கொண்டு காட்டுக்கு விறகு வெட்டப் புறப்பட்ட கப்பன் 'போயிலைக் கட்டை' வாங்கக் கடை வாசலுக்கு வந்தான். அவனைக் கண்டதும் சிங்கராயரின் சிவில் மூளை சிலிர்த்தெழுந்தது.

"என்ன கப்பா, ஒரு மாதிரியா மெலிந்திருக்காப் போலிருக்கியே?" என்று கடையை விரித்தார் சிங்கராயர். எவனை எப்படிப் பேச்சுக்கிழுத்துக் குழைய வைப்பது என்ற மனோதத்துவம் சிங்கராயருக்குத் தண்ணீர்ப் பாடம். பொதுவாகவே எல்லாருக்கும் தாம் தினம் தினம் மெலிந்து கொண்டிருப்பதாக ஓர் அபிப்பிராயம் இருக்கும். அதுவும் இப்படியொரு 'பெரிய மனுஷரே' கண்டு பிடித்துச் சொல்ல வேண்டுமென்றால் அப்பாவிப் பாமரனுகிய கப்பனுக்கு எப்படியிருக்கும்!

'என்னங்க செய்றது?" என்று அசட்டுச் சிரிப்புடன் காலைத் தேய்த்துக் கொண்டு அவர் முன் வந்து நின்றான்.

"ஏன் அப்பா?" என்று அவன் வாயைக் கிளறினார் சிவிலார். கப்பன் பதில் சொல்லத் தெரியாமல் திணறினான். சிங்கராயர் அவனை விடவில்லை. "வீட்டில் உன் சம்சாரம் சரியா சம்ரக்ஷணை பண்றதில்லையா?" என்று அடியெடுத்துக் கொடுத்தார்.

கப்பனுக்கு 'அப்படித்தான் இருக்கும்' என்று தோன்றியது. அதோடு ஒருநாள் அவன் மனைவி அவனிடம் சண்டை பிடித்துக் கொண்டு சமையல் செய்யாமலிருந்து அவனைப் பட்டினி போட்ட விஷயமும் ஞாபகத்துக்கு வந்தது. உடனே குமுறலுடன், "ஆமாங்க, வீட்டுலே கட்டுனவள் சரியில்லே. நாம ஒடம்பை முறிச்சு ஒண்ணு அரை சம்பாரிச்சுக் கொண்டு கொடுக்கிறதை வச்சி நமக்குச் சரியா ஆக்கிப் போட்டாத்தானே!" என்றான்.

"அப்படியா?" என்று அவனிடம் வார்த்தையை வாங்கிக் கொண்டு ஆளை அனுப்பி விட்டார் சிங்கராயர்.

சாயங்காலம் கப்பனின் மனைவி காளியாத்தா உப்பு, புளி வாங்க வரும் நேரத்தை அனுசரித்து அவர் கடை வாசலுக்குப் போய் விட்டார். அவள் வந்ததும் மெல்ல அவளிடம் பேச்சுக் கொடுத்தார்.

"என்ன காளி! ஒரு சேதி கேள்விப்பட்டேனே, உண்மைதானு?" என்று ஆரம்பித்தார்.

''என்ன சொல்றிய நயினு?'' என்று பரபரப்புடன் கேட்டாள் காளி.

''ஏதோ என் காதிலே விழுந்ததைச் சொல்றேன். நீ என் பேரைச் சந்தியிலே இழுக்கப் படாது. ஆமாம். நீ உன் புருஷனுக்குச் சரியா சோறு போடாமல் அவனுடையதையும் சேர்த்து நீயே துன்னுடறயாமே, அப்படியா?'' என்று பாணத்தை விட்டார் செங்கராயர்.

உடல்பதற, ''எந்தப் பேமானி சொன்னான்?'' என்று கொதித்தாள் காளி.

''நான் என்னத்தைக் கண்டேன்? உன் புருஷன்தான் ஊரிலே எல்லாரிடமும் சொல்லிக் கொண்டிருக்கிறானாம். என் காதிலேயும் விழுந்தது'' என்று தம் பணியைச் செய்துமுடித்தார் செங்கராயர்.

அவ்வளவுதான்; ஒரணுவுக்கு உப்பு வாங்கி விட்டு நாலணா கொடுத்த காளி, கடைக்காரரிடம் மீதிச் சில்லறையைக் கூட வாங்கிக் கொள்ள நிதானமில்லாமல் வீட்டை நோக்கிப் படபடப்புடன் விரைந்தாள்.

அன்றிரவு கப்பன் வீட்டில் ஏக ரகளை. ''உனக்குப் போடாமல் நானே எல்லாத்தையும் துன்னுடறேன்னு ஊர் முழுக்கச் சொன்னியாமே'' என்று காளி கத்த, ''எந்தப் பயல் சொன்னான்?'' என்று கப்பன் திரும்பிக் கத்த, ''எவனும் சொல்வான், நீ சொன்னியா, அதைச் சொல்'' என்று அவள் குரைக்க ''ஓகோ, எந்தப் பயல் கிட்டேயும் போய்க் கேட்கிற அளவுக்குப் போயிட்டியா?'' என்று அவன் ரசாபாசமாகக் கேட்க விஷயம் வேறு பாதையைப் பிடித்து வெகுவாக முன்னேறி விட்டது. கடைசியில், 'இப்படி அசிங்கம் பிடிச்ச புத்திக்காரனோடே வாழுறதைவிடப் பிச்சை எடுத்துக் காலந் தள்ளலாம்'' என்று வயிற்றெரிச்சலுடன் கத்தி விட்டுத் தன் ஆயா வீட்டுக்கு நடையைக் கட்டி விட்டாள் காளி.

இது நடந்து இரண்டு நாட்களுக்குப் பின் செங்கராயர் மீண்டும் கப்பனைத் தேடிப் பிடித்துத் துக்கம் விசாரிப்பது போல் எல்லாவற்றையும் விசாரித்து விட்டு, ''நீ கவலைப்படாதே. உன்னை மதிக்காமல் அவ ஆத்தா வீட்டுக்குப் போயிட்டாளில்லே, நீ அவளை வகை வைக்காதே. போகாமல் இன்னொரு கலியாணம் பண்ணிக்கோ'' என்றார். அவனும், ''அதுதான் சரிங்க. அடுத்த அறுவடையாகட்டும். நெல்லே விற்று உங்க கையிலே கொடுத்துடறேன். நீங்களே பார்த்து முடித்து வைத்து விடுங்க'' என்று சொல்லியிருக்கிறான். இந்த விஷயம் அக்கம் பக்கம் இல்லாவிட்டாலும் உள்ளூர் பஞ்சாயத்துக் கோர்ட் வரையாவது போகும் என்பது செங்கராயரின் அபிப்பிராயம். அதற்குத் தோதாகக் காளியின் அண்ணன் 'ரவுடி' செங்கானுக்குக் கப்பனுடைய இரண்டாம் கலியாண யோசனையைப் பற்றிச் செய்தி சொல்லி அனுப்பியிருக்கிறார். அவ



குமுகா—

உங்கள்

# சேமிப்பு

விரைவில் பெருக சிறந்த திட்டம்

எங்கள்

## ரெக்கரிங் டிபாசிட் திட்டம்

பிரதி மாதம் தொடர்ந்து செய்யும்
டிபாசிட் தொகையான :

| | ரூ. 10 | ரூ. 100 | ரூ. 500 |
|---|---|---|---|
| 46 மாதங்களில் ரூ. | 500 | 5,000 | 25,000 |
| 86 மாதங்களில் ரூ. | 1,000 | 10,000 | 50,000 |

ஆகப் பெருகும்

தி
## யுனைடெட் கமர்ஷியல் பாங்க்
லிமிடெட்

தலைமை ஆபீஸ் : கல்கத்தா

செலுத்தப்பட்ட
மூலதனம் ... ரூ. 2,00,00,000
ரிஸர்வ் நிதி ... ரூ. 2,35,00,000

இந்தியா முழுவதிலும் வெளி நாடுகளிலும் கிளைகள் * உலகமெங்கும் ஏஜெண்டுகள் * எல்லாவிதமான பாங்க் அலுவல்களுக்கும் வசதி உண்டு

G. D. பிர்லா
சேர்மன்

S. T. சதாசிவன்
ஜெனரல் மானேஜர்

# எங்கள் தமிழ் வெளியீடுகள்

| | |
|---|---|
| மஹாத்மா காந்தி-போட்டோ ஆல்பம் (ராஜாஜி முன்னுரையுடன்) | ரூ. 10.00 |
| விஞ்ஞானத்தின் சில அம்சங்கள் ... (வி. வி. இராமன்) | 1.75 |
| எஸ்டேட் வரி (வெகுஜன வெளியீடு) ... | 1.25 |
| பாரதநாட்டுக் கிராமியக் கதைகள் | 1.00 |
| வெளிநாட்டுக் கிராமியக் கதைகள் | 0.75 |
| இந்தியா : இன்றும் நாளையும் ... (ஜவாஹர்லால் நேரு) | 0.75 |
| இந்திய அரசியல் அமைப்பு ... | 0.75 |
| சுபிட்சப் பாதை ... (கே. சடகோபன்) | 0.75 |
| தீ. ஜாக்கிரதை ! ... | 0.75 |
| ஆதிவாசிகள் ... | 0.50 |
| மெட்ரிக் அளவை முறை ... | 0.35 |
| பஞ்ச சீலம் ... | 0.35 |
| தீண்டாமை ஒழிப்பு ... | 0.25 |
| நோயற்ற வாழ்வு ... | 0.25 |
| பாரதப் பண்பாடு ... (ஹுமாயூன் கபிர், சர்தார் பணிக்கர்) | 0.20 |
| ஆதாரக் கல்வி - வினு விடைகள் ... | 0.20 |
| மது விலக்கு - வினு விடைகள் ... | 0.10 |
| ஜனநாயக அரசாங்க ஊழியர் ... (கோவிந்த வல்லப பந்த்) | 0.06 |

*தபால் பாக்கிங் செலவுக்காக விலையில் 12½% சதவீதம் அல்லது குறைந்த பட்சம் 10 ந. பை. சேர்க்கவும். ரிஜிஸ்தர் செலவு 50 ந. பை. தனி. ரூ. 25 அல்லது அதற்குமேல் புத்தகங்கள் வாங்கினால் தபால் செலவு தள்ளுபடி.*

## PUBLICATIONS DIVISION

"ANANTHA SAGAR"

8, SANTHOME HIGH ROAD, MADRAS-4

DA 62/338

ருடைய அபிப்பிராயப்படி உடனடியாகக் காரியம் நடக்காத பட்சத்தில், உண்மையிலேயே கப்பலை இரண்டாம் கலியாணம் பண்ண வைத்து விவகாரத்தை 'ஜீவனாம்சக் கேஸாக'த் தள்ளி விடலாம் என்ற யோசனையும் அவர் வசம் இருந்து வருகிறது.

ஒன்றா, இரண்டா? இப்படிப் பலப்பல.

எந்தக் கோணத்திலிருந்து பார்த்தாலும் தம்முடைய அபரிமிதமான வெற்றியைக் கண்டு சிங்கராயர் நூற்றுக்கு நூறு பூரித்துப் பெருமைப்படலாம் என்றாலும், அவருடைய ஒன்பது சதுர அங்குல பரப்புள்ள இதயத்தில் ஒரு சதுர அங்குலப் பரப்பு சூன்யமாகவே இருந்தது. அதற்குக் காரணம் இதுதான்: அவர் உருவாக்கியுள்ள எண்ணிலடங்கா வழக்குகளில் எந்த வழக்கை எடுத்துக் கொண்டாலும் நவரசங்களுக்குள் ஒரே ஒரு ரசத்தைத் தவிர மற்ற எட்டு ரசங்களிலொன்றைப் பற்றியதாகவே இருந்தது. அந்த ஒரே ஒரு ரசம் மட்டும் ஒரு வழக்கிலும் இடம் பெறவில்லை. அதுதான் சிருங்கார ரசம்! அதனால்தான் அவர் புகழில் ஒன்பதில் ஒரு பாகம் நிறைவெய்தாமலே இருந்தது.

அவருடைய சிவில் சகாப்தம் தொடங்கிக் கிட்டத்தட்ட ஆறுமாத காலத்துக்குப் பிறகுதான் அந்தக் குறை நிவர்த்தியானது!

அன்றொரு நாள் பொழுது சாய்ந்த வேளையில் ஊர் குளத்தங்கரை வழியாக வந்து கொண்டிருந்த சிங்கராயர் முற்றிலும் எதிர்பாராமல் ஒரு ரம்மியமான காட்சிக்குச் சாட்சியானார்.

குளத்தங்கரைச் சரிவிலிருந்த நந்தவனத்தின் மறைவில் உள்ள புல்வெளியில் அந்தக் காட்சி நடந்து கொண்டிருந்தது.

இரண்டு கைப்பிடி புல்லை அரிவதும், ஒரு முறை நாலடித் தொலைவில் நின்று கொண்டிருந்த 'அவனை'க் கடைக்கண்ணால் பார்த்து முறுவலிப்பதுமாக ஒரு பெண்ணும், அவள் கூடையில் அரிந்து போட்டிருந்த புல்லை ஒவ்வொன்றாக எடுத்து வாயில் வைத்துக் கடிப்பதும் பின் அதை எடுத்து அவள் மீதே விளையாட்டாக எறிவதுமாக ஓர் இளைஞனும், கிராமத்துச் சொல் வழக்குப்படி 'இஷ்டமாகப் பேசிக் கொண்டிருந்த' காட்சியே அது.

"போ, மாமா! நீ இப்படி நேரங் கெட்ட நேரத்தில் பக்கத்திலே நின்னுக்கிட்டிருக்கிறது எனக்கு ஒருமாதிரியாயிருக்கு. யாராவது பார்த்தா வசையாப் போயிடும்" என்று சிணுங்கினாள் அந்தப் பெண்.

"என்ன, பின்னே! இதுக்கெல்லாம் பயப்படுறியே, நீ என்ன நாலுகோட்டை விரைப்பாட்டுக்குச் சொந்தக்காரியா, இல்லே நான்தான் பத்தாயிரம் ரூபாயை ரொக்கமா பாங்கிலே கட்டி வைச்சிருக்கேனா? பணம் இருந்தாத்தான் பகை வரும். நமக்குக் குறுக்கே எவன் வருவான்?" என்றான் அவன்.

"தைரியத்தைப் பாரு! எல்லாம் பெரிய நினைப்புத்தான்!" என்று சிரித்தாள் அவள்.

இது நாகரிகமுள்ள எந்த மூன்றாம் மனிதனும் கண்டும் காணாததுபோல் ஒதுங்கிப் போக வேண்டிய காட்சிதான். ஆனால் சிங்கராயர் நாகரிக, அநாகரிகப் பேதங்களைக் கடந்த நிலையில் லோக உபகாரத் திருச் சேவையில் ஊறிக் கிடப்பவராதலால் மறைவிலிருந்து அதைக் கவனித்துக் கொண்டு நின்றார்.

அன்றிரவு சிங்கராயர் தூங்கவில்லை. எப்படி அவரால் தூங்க முடியும்? அந்த ஊரில் அவர் ஒருவர் இருப்பதையே மதிக்காமல் அவருடைய திறமைக்குச் சவால் விடுவது போலல்லவா அவன் பேசினான்! அவர்களுடைய இஷ்டத்துக்குக் குறுக்கே எவனும் வரமாட்டானாமே! சிங்கராயர் தம் ஜீவன் இருக்கும் வரை அழகனூரை அப்படி நாதியற்றுப் போக விடுவாரா?

சிங்கராயரின் தரத்துக்கும் இது ஓர் அற்பமான கேஸ்தான். அந்தப் பெண் தேவானையின் தாய் பொன்னம்மாள் ஒரு விதவை. அதுவும் வருமானத்தைப் பொறுத்த அளவில் பாரத நாட்டின் உண்மையான பிரஜை. இந்தியாவின் மாதாந்திர தேசிய வருமானமாகிய இருபத்து நான்கு ரூபாய்தான் அவளுடைய வருமானம். தேவானையின் தாய்தான் இப்படி யென்றால் அவளை மாலையிடுவதற்காக முண்டாசை உயர்த்திக் கட்டிக் கொண்டு வலைப் பனியனும் வாயில் ஜிப்பாவுமாகத் திரிகிறானே, 'நந்தவனக் காதலன்' வேலு, அவன் நிலை இன்னும் ஒரு படி இறக்கம். அவன் வெளியூரிலிருந்து பிழைக்க வந்து அவ்வூர் மைனர் பஞ்சாயத்தில் பதினெட்டு ரூபாய்ச் சம்பளத்தில் பியூன் வேலை பார்ப்பவன். மொத்தத்தில் இரு தரப்பாரும், மானம், வெட்கம், ஊர்ப் பகை இத்தியாதி சங்கதிகளுக்கு மற்றவர்களைவிடச் சற்று அதிகமாகவே பயந்தாக வேண்டிய ஜென்மங்கள். பொன்னம்மாளிடம் போய், "இந்தாம்மா, உன் மகள் நடக்கிற நடை சரியில்லை" என்று ஒரு மிரட்டல் மிரட்டி விட்டு, வேலுவிடம் வந்து, "இந்தா பயலே, எக்குத் தப்பா நடந்தியானால் உன் வேலை போயிடும், ஆமா!" என்று ஓர் அதட்டலும் போட்டு விட்டால் விவகாரம் ஒரே நாளில் பைசலாகி விடும். சாமான்யர்கள் யாரும் இப்படித்தான் செய்வார்கள். இப்படித்தான் செய்யத் தோன்றும். ஆனால் சிங்கராயரோ தம் இயல்புக்கும் பெருமைக்கும் உகந்ததாகப் புதுமையானதொரு திட்டத்துடன் அந்த விவகாரத்தைக் கையாண்டார்.

மறுநாள் காலையில் தூங்கி விழித்ததும் முதல் வேலையாக வேலுவை அவன் இருப்பிடத்துக்குச் சென்று பேட்டி கண்டார் சிங்கராயர். எழுபத்தைந்து நிமிடங்கள் நீடித்த அந்தப் பேட்டியின் போது பிரகாசித்ததைப் போல், அவ்வளவு ஜாஜ்வல்யமாக வேறு எந்தச் சந்தர்ப்பத்திலும் சிங்கராயருடைய ராஜதந்திரம் ஒளிவிட்டதில்லை.

ஆரம்பத்தில் கிட்டத்தட்ட ஒரு மணி நேரம் வேலுவுடைய கடந்த கால தேக சௌக்கியத்தை விசாரித்தும், தற்கால அசௌக்கியத்துக்கு வருத்தம் தெரிவித்தும், அவனுடைய சம்பளத்தை உயர்த்திக் கொடுக்கத் தவறிய பஞ்சாயத்து நிர்வாகத்தை, அவசியமானால் பஞ்சாயத்தையே ஒழித்துக் கட்ட வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்தியும் லோகாயதமாகப் பேசி அவன் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட பின்னர்தான், "எப்பா, எத்தனை நாட்கள் இப்படி ஒண்டியாக் கஷ்டப்படுறே, உனக்கு ஒரு கலியாணத்தைப் பண்ணி வச்சிடலாம்னு பார்க்கிறேன். நீ ஏதாவது பெண் பார்த்திருக்கிறியா?" என்று காரியாம்சத்துடன் வார்த்தை கொடுத்தார்.

"பொண்ணு கிடைக்க வேண்டாமுங்களா?" என்று நாசூக்காக மழுப்பினான் பையன்.

"அப்போ அந்தப் பெண் தேவானையைக் காதல் பண்ணினியே, அதைக் கைவிட்டுட்டியா?" என்று திடுமெனக் குறுக்கே இறங்கினார் சிங்கராயர்.

பையன் மிரண்டு விட்டான் மிரண்டு. "தேவானையையா, உங்களுக்கு எப்படி?..." என்று குழறினான்.

சிங்கராயர் தோள் குலுங்கச் சிரித்தவாறு, "என்னப்பா, இந்த ஊரிலே எது எது நடக்குதுன்னு கண்டுபிடிச்சு அதது எப்படியெப்படி நடக்கணும்னு யோசனை சொல்லிக் கவனிக்கிறதைத் தவிர எனக்கு வேறே என்ன வேலை? நீ என்னைப் பற்றிக் கவலைப்படாதே! நீ சரின்னு சொல்லு. உனக்கும் தேவானைக்கும் நானே கலியாணம் பண்ணி வைக்கிறேன்" என்றார்.

அது வரை ஏனோதானோ வென்று நினைத்துக் கொண்டிருந்த வேலு, "எல்லாம் உங்க தயவுங்க" என்று தலைக்கு மேல் கையை உயர்த்திக் கும்பிட்டேவிட்டான். 'நேற்று சவடால் பேசின பயல் இப்போ கும்பிடுகிறான். கும்பிடட்டும், கும்பிடட்டும்' என்று பெருமிதத்துடன் தலையைக் கம்பீரமாக ஆட்டிக்கொண்டு அடுத்தபடியாக ஒரு 'கலம்பக' வெடி குண்டை வீசினார்.

"இந்தாப்பா வேலு, நான் என்னவோ சுலபமாச் சொல்லிட்டேனே தவிர, தேவானை விஷயம் அவ்வளவு இலேசுப்பட்டதில்லே. இரண்டு வாரங்களுக்கு முன்னாலே அவ ஆத்தா பொன்னம்மாள் என்னண்டை வந்து லபோ லபோன்னு அழுதாள். 'நீங்க இருக்கிற இடத்திலே இப்படி அநியாயம் நடக்கலாமா? அந்த ஊர்பேர் தெரியாத வேலுப் பயல் கெட்ட எண்ணத்தோட என் மகளைச் சுத்துறான். அவனை இந்த ஊரை விட்டே விரட்டுங்க' அப்படின்னாள். நான்தான் அவளைச் சமாதானப்படுத்தி, 'கவலைப்படாதே, பஞ்சாயத்து போர்டு பியூன் வேலைக்கு இன்னோர் ஆள் கிடைச்சதும் அவனை ஊரை விட்டுத் துரத்திடுவோம்' அப்படின்னு சொல்லி அனுப்பினேன்" என்றார்.

"என்னங்க, இப்படிச் சொல்றீங்களே!" என்று அலறினான் வேலு.

சிங்கராயர் அவனுடைய தோள்களைத் தட்டி, "பயப்படாதே! அவளைச் சமாதானப்படுத்தத்தான் அப்படிச் சொன்னேன். ஆனால் அப்பவே என் மனசிலே எப்படியும் உன் பக்கம் இறங்கி வேலை செஞ்சு காரியத்தை மங்களமா முடிச்சுடணும்னு முடிவு பண்ணி விட்டேன். ஏன்னு உலகம் நல்லாயிருக்கணும்னு உண்மையான காதல் ஜெயிச்சாகணும்" என்று காதல் பேரிகை கொட்டி விட்டு, "ஆனா ஒண்ணு" என்று நிறுத்தினார்.

"என்னங்க?" என்று ஆவலுடன் கேட்டான் வேலு.

"உன் காரியம் வெற்றி பெறணும்னு பழைய காலத்திலே காதல் பண்ணின

வங்க மாதிரி நீ கோழையாயிருக்கப் படாது. நீ பயந்தாங்கொள்ளியா இருந்தால் காரியத்தைச் சாதிக்க முடியாது.''

''என்ன செய்யணும், சொல்லுங்க?''

''பேசாமல் தேவானையைக் கூட்டிக் கொண்டு ஒரு நாள் ராத்திரி உன் சொந்த ஊரைப் பார்த்துக் கிளம்பி விடு. அந்தக் கிழவி பொன்னம்மாவை நான் கவனிச்சுக்கிறேன். வேணும்னு உன் கைச் செலவுக்குக்கூட ஒரு ஐம்பது ரூபாய் தருகிறேன்'' என்று உருவேற்றினார் சிங்கராயர்.

காதல் இளைஞனோ அதைக் கேட்டுப் பாகாய் உருகி, ''நீங்கதான் கடைசிவரை எனக்குத் துணையாக இருந்து காப்பாற்றணுமுங்க'' என்று நெடுஞ்சாண்கிடையாக அவர் காலில் விழுந்தான்.

''அப்படியே காப்பாற்றுறேண்டா, எழுந்திரு'' என்று அவனுக்கு வரம் கொடுத்து ஆட்கொண்ட சிங்கராயர், உடனடியாக அவனை 'மதுரை வீரன் வேலை'க்குத் தயார் பண்ண ஆரம்பித்தார். தேவானை பயப்படாமல் எப்படிச் சமாளிக்க வேண்டும் என்பதில் ஆரம்பித்து, ஒவ்வொரு கட்டத்திலும் எழக் கூடிய நெருக்கடிகளையும் அவற்றைச் சமாளிக்க வேண்டிய வழி முறைகளையும் எடுத்துரைத்து விட்டு, கூட்டோடுகூடாக 'ஓட்டத்'துக்கு ஒரு நாளையும் குறிப்பிட்டுக் கொடுத்து விட்டு விடைபெற்றுக் கிளம்பினார்.

சிறிது தூரம் வந்ததும், 'அந்தக் கிழவி பொன்னம்மாவையும் முன்னேற்பாடாக ஒரு கலக்குக் கலக்கி வைக்கலாமா?' என்றோர் எண்ணம் அவருக்குத் தோன்றியது. மறுவினாடியே மனத்தை மாற்றிக் கொண்டார். 'சேச்சே! இப்பவே அவளிடம் சொன்னால், ஊர் முழுக்க ஒப்பாரி வைத்துக் காரியத்தை நடக்க விடாமல் பண்ணி விடுவாள். முதலில் அந்தப் பயல் பெண்ணை இழுத்துக் கொண்டு ஓடட்டும். அப்புறம் நாலு ஆட்களை விட்டு விரட்டிப் பிடித்து, இந்தக் கிழவியை 'பதினாறு வயதான என் பெண்ணை ஏமாற்றிக் கடத்திக் கொண்டு போனான். அப்படின்னு போலீஸிலே சொல்ல வைத்து 'ஏ' கிளாஸ் கிரிமினல் கேஸாக்கி விடலாம்!'

குறிப்பிட்ட சுபயோக சுபதினமும் வந்தது. மாலையிலேயே வேலனை ரகசியமாக அழைத்து மீண்டும் ஓட வேண்டிய வழிகளைத் தெளிவாகக் கூறிக் கைச்செலவுக்கும் பணத்தைக் கொடுத்து அவனைத் தயார் பண்ணி விட்டார் சிங்கராயர். இரவு மூன்று மணிக்குக் காதலர்கள் ஊர் எல்லையைக் கடந்து விட வேண்டும் என்று திட்டம்.

இரவு இரண்டரை மணிக்கெல்லாம் தம் திட்டம் செயலாவதைக் கண்கூடாகக் கண்டு மகிழ ஊரை யொட்டியிருக்கும் ரோட்டுப் புறத்தில் சற்று மறைவாகக் கொட்டும் பனியையும் பொருட்படுத்தாமல் காத்து நின்றார் சிங்கராயர்.

சரியாக மூன்று மணிக்கு 'விர்'ரென்று ஒரு கார் அவரைக் கடந்து ஊருக்குள் ஓடியது. காருக்குள்ளிருந்த நபரை அடையாளம் தெரிந்து கொண்டதும் அவருக்குத் திக்கென்றது. அது வேலனேதான்! 'சே, என்ன முட்டாள்தனமாகப் போச்சு. கூவிருட்டிலே ஆரவாரம் தெரியாமல் கூட்டிக் கொண்டு போடா என்றால் ஊரை எழுப்புகிறாற்போல் காரைக் கொண்டு போகிறானே!' என்று ஒருகணம் குழம்பினார். ஆனால் உடனே மனத்தைத் தேற்றிக் கொண்டார். 'பரவாயில்லை. கடத்தா விட்டாலும், கடத்த முயற்சி செய்து பிடிபட்டாலும் அதுவும் 'கிரிமினல்'க்குள்ளே வருமே!' என்று அவர் கிரிமினல் செக்ஷன்களை ஆராய்ந்து கொண்டிருந்த போதே போன கார் திரும்பி விட்டது.

கட்டுக் கடங்கா ஆர்வத்துடன் கவனித்துப் பார்த்தார். பையன் சூரன்



தான்! காரில் ஓர் ஓரத்தில் தேவானை இருந்தது தென்பட்டது!

வெற்றிப் பெருமிதத்துடனும், உடனடியாக அடுத்த நடவடிக்கையை மேற்கொள்ளும் உத்தேசத்துடனும் பொன்னம்மாவின் குடிசையருகே சென்ற சிங்கராயரைக் கதவில் தொங்கி ஆடிக் கொண்டிருந்த பூட்டும், பக்கத்துக் குடிசையிலிருந்து எழுந்த இரு பெண்களின் பேச்சுக் குரலும் வரவேற்றன.

''என்னடி, பொன்னம்மா ஆச்சி தேவானை கல்யாணத்தை இப்படிக் காதும் காதும் வச்சாப்போல முடிச்சுட்டாளே!''

''பாவம், அவ என்னடி செய்வா? ஊருக்கெல்லாம் தெரிவிச்சு வெற்றிலை பாக்கு வைக்கணும்னாலும் பத்து ரூபாய் செலவாகும். அதுக்கு எங்கே போவாள்? எல்லாச் செலவையும் மாப்பிள்ளை வேலுதான் செய்யறான்.''

''இருந்தாலும் இப்படித் திடீர்னு ஒரு நாளைக்குள்ள முடிஞ்சது பெரும் ஆச்சரியம்தான்.''

''திடீர்னு ஒண்ணுமில்லே. இது மாப்பிள்ளை அது பொண்ணுன்னு ஆச்சி ரொம்ப நாட்களாகவே முடிவு பண்ணினதுதானும். வேலு பொன்னம்மா ஆச்சிக்கு உறவுக்காரன்தான். அவனுக்குத் தாய் தகப்பன் கிடையாது. தேவானையைக் கட்டிக்கிட்டுப் போயிடலாம்னு இங்கே வேலை பார்த்துக் கிட்டிருந்திருக்கிறான். வயசுப் பொண்ணு இருக்கிற வீட்டிலே இருக்கப்படாதுன்னு 'யாரோ எவரோ' மாதிரி தனியா இருந்திருக்கிறான். இரண்டு பேர்கிட்டேயும் பணம் திரண்டு வராமல் கல்யாணம் தள்ளிக் கிட்டே இருந்ததாம். கடைசியிலே இன்னிக்குத்தான் வேளை வந்திருக்கு. எல்லா விவரமும் ஆச்சி இப்பத்தான் சொன்னாள்.''

''இன்னிக்கு எப்படியாடி திடீர்னு முடிவாச்சு?''

''அது பெரிய கூத்து. இப்ப புதுசா 'பிஞ்சான்' வாங்கிக்கிட்டு ஊரோடு வந்து, இங்கேயிருக்கிற புத்தி கெட்ட அம்பிகளைக் கலக மூட்டி கோர்ட்டு, வாய்தான்னு அலைய வச்சிக் கொண்டிருக்குறதில்லே ஒரு நாரத முனி, அது அந்தப் பையன் வேலுகிட்டே போய் விஷயம் தெரியாம என்னென்னவோ புளுகிக் கிட்டு, 'நான் பணம் தரேன். அந்தப் பொண்ணைக் கட்டிக் கொண்டு ஓடிப் போயிடு'ன்னு சொல்லிச்சாம். அவனும் உடனே ராத்திரியே போய் வாடகைக்குக் காரை அமர்த்திக் கொண்டு வந்து பொண்ணையும் தாயாரையும் அழைச்சுக் கிட்டுப் போயிட்டான். இனிமே அங்கேயே ஒரு வேலை வெட்டி செஞ்சுக்கிட்டு இருந்துடுவாங்க போலிருக்கு.''

''பயல் கெட்டிக்காரன் தாண்டி. அந்தக் கலகக்காரக் கிழவன் தலையிலேயே கையை வச்சுட்டானே! நல்லா வேணும் அந்தக் கோள்மூட்டிக்கு'' என்று கெக்கலி கொட்டிச் சிரித்தாள் ஒருத்தி. மற்றவளும் அவளுடன் சேர்ந்து பலமாகச் சிரித்தாள்.

அந்தப் பெண்களின் சிரிப்பொலி வேய்ங்குழல் நாதமாக அந்த வட்டாரமெங்கும் பாய்ந்து பரவியது. ஆனால், பொன்னம்மாவின் குடிசைப் பக்கமாக வரும்போது ஆறடி உயரமாக இருந்து அச்சமயம் நாலே கால் அடி உயரமாகக் குன்றிக் குறுகி நின்று கொண்டிருந்த உருவத்தின் காதுகளில் மட்டும் அந்தச் சிரிப்பொலி அசல் வேய்ங்குழலாக அதாவது மூங்கில் குழலாகப் பாய்ந்தது! அத்துடன் அந்தக் கணத்திலேயே அழகனூர் கிராமம் என்றென்றும் மறக்க முடியாத மாபெரும் சரித்திர மாற்றம் ஒன்றும் சம்பவித்தது.

பெண்களின் சிரிப்பால் எத்தனையோ சாம்ராஜ்யங்கள் அழிந்ததாகச் சரித்திரம். அந்த நியதியே அன்றும் பலித்து விட்டது. நிறுவப்பட்ட ஆறு மாத காலத்துக்குள் அழகனூரில் மகோன்னதமாகப் பிரகாசித்த சின்ன சகாப்தம் மேற்படி பெண்களின் மேற்படி சிரிப்பால் மேற்படி வினாடியில் அஸ்தமனமாகியது!

நெஞ்சையடைக்கும் வேதனையுடன்தான் அந்த அஸ்தமனத்தைப் பற்றிக் குறிப்பிட வேண்டியிருக்கிறது. அதோ, பொன்னம்மாவின் குடிசை மறைவிலிருந்து வெளியேறித் தள்ளாடித் தள்ளாடி நடந்து போகிறாரே அந்த சகாப்த கர்த்தாவாகிய சின்ன சிங்கராயர், அவர் இனி மீண்டும் ஊருக்குள் நடமாடப் போகிறாரா? மாட்டவே மாட்டார்! தேற, பரிதாபத்துக்குரிய அழகனூர்வாசிகளே! உங்களிடையே தோன்றிய சட்ட ஞானம் ஒழிந்தது! பஞ்சாயத்துக் கோர்ட் கட்டிடமே, உன் தாழ்வாரம் இனி வெறிச்சோடிப் போய்விடும்!

விளைவு தெரியாமல் சிரித்து விட்ட, பொன்னம்மா குடிசைக்கு அடுத்த குடிசைவாழ் பெண் பேதைகளே! இனி உங்கள் கணவர்கள் கோர்ட், வாய்தா என்று வெளியே போக மாட்டார்கள். அதனால் அவர்களுக்குப் பொழுது போக வேறு வழியில்லாமல் உங்கள் சமையலைக் குறை கூறி வம்புச் சண்டை போட்டே பொழுதைப் போக்கப் போகிறார்கள்! அனுபவியுங்கள்! இதுவே உங்கள் அறியாமைக்குச் சாபமாகும்!


டன்லபில்லோ
மெத்தைகள் தலையணைகள் குஷன்கள்
எல்லா
சந்தர்ப்பத்திற்கும்
மகிழ்ச்சி அளிக்கும்
உகந்த
பரிசு


உண்டால்
உள்ளம்
மகிழும்!
அவ்வ்...வளவு ருசி! ஒவ்வொரு துண்டு ரொட்டியும் அமிர்தமாக இருக்கிறது! சூரியன் மார்க் கோதுமை மாவில் தயாராகும் ரொட்டிகள், கேக்குகள், பிஸ்கோத்துகளை குழந்தைகள் மிகவும் விரும்புகின்றனர். இயற்கை அளிக்கும் ஏற்றம் மிகுந்த கோதுமையை சுகாதாரமான முறையில் அரைத்து தயாரிப்பதால் சூரியன் மார்க் கோதுமையில் ஆக்கப்படும் உணவுகள் உடல் உரமும் உற்சாகமும் அளிக்கின்றன.
தயாரிப்பவர்கள்:
செஞ்சுரி பிளவர் மில்ஸ் லிமிடெட்,
330, தம்பு செட்டி தெரு,
மதராஸ்-1.
போன்: 21043 21044 & 21045
தந்தி: "MATHOORAN"
சூரியன்
மார்க்
மைதா
சூஜி
ஆட்டா

# பரிசு

இன்ஜினீயர் சேதுராமனிடமிருந்து கடிதத்தோடு ஒரு திருமண அழைப்பிதழும் வந்திருந்ததைக் கண்டு திடுக்கிட்டார் மகாதேவன்.

"என்ன அப்பா! இப்படித் திக்பிரமை பிடித்துப் போய் நிற்கிறீர்கள்? என்ன எழுதியிருக்கு?" என்று கேட்டாள் அவர் செல்வ மகள் மரகதம்.

"சேதுராமனுக்கென்ன நம் மரகதத்தைப்பண்ணிக் கொள்ளக் கசக்கிறதோ? இவ்வளவு அழகுள்ள பெண்ணைப் பண்ணிக் கொள்ளக் கொடுத்து வைத்திருக்கணுமே? சம்மதம் என்று எழுதிவிருப்பான்!" என்றான் அவர் பிள்ளை ராமு.

"டேய்! நீ சொல்லலாம்டா. அவன் என்ன எழுதியிருக்கான், தெரியுமோ? மரகதத்தைப் பிடிக்கவில்லையாம். வேறு இடத்தில் கலியாணம் நிச்சயமாகியிருக்காம். திருச்சியில் கலியாணத்துக்கு எல்லாரும் புறப்பட்டு வரணும்னு எழுதியிருக்கான்! கலியாணப் பத்திரிகையும் வேறு அனுப்பியிருக்கிறான்!"

"ஏனப்பா! நம்ம வீட்டுக்கு நாலைந்து தடவை அவன் நடந்ததைக் கண்டு நீங்க மயங்கி விட்டீர்கள்! அவனுக்கு நம்ம வீட்டிலே சொஜ்ஜியும் பஜ்ஜியும் பண்ணிக் கொடுத்ததிலே தப்பு இல்லே! என்னையும் கொண்டு போய் அவன் முன்னாலே நிறுத்தி வைச்சேளே, அதுதான் எனக்குப் பிடிக்கல்லே!" என்று அங்கலாய்த்தாள் மரகதம்.

"என்ன அம்மா! அப்படிச் சொல்லிப்பட்டே? அவனே ஜாதகத்தைக் கொண்டு வந்து கொடுத்து நடையாக நடந்ததை நீங்க மறந்துட்டேளா?"

"அண்ணா! நீ இப்பவே போய்ச் சேதுராமன் கலியாணத்துக்காக அப்பாவுக்கு ஒரு டிக்கெட் புக் பண்ணிவிட்டு வந்துவிடு! அப்பாவை அவன் எத்தனை நாள் அஷ்டோத்தரம் சொல்லிக் கூப்பிட்டிருக்கான்! அவர் போகாமல் இருக்கலாமோ?" என்று கூறிச் சிரித்தாள் மரகதம்.

"அவன்கிட்டே நான் ரொம்ப நம்பிக்கை வைத்திருந்தேன். இப்படிச் சமயத்திலே காலை வாரி விடுவான்னு நான் நினைக்கல்லே!" என்று கூறினார் மகாதேவன். அவர் நம்பிக்கை சிதைந்ததை அவரது வார்த்தைகளே வெளிப்படுத்தி விட்டன.

"நல்ல காலம்! நான் பிழைச்சேன். அந்த முரடனைத் தலையிலே கட்டி வாழ்நாள் முழுதும் அவன் ரகளையைச் சகிச்சிண்டிருக்கும்படியா இல்லாமே இப்பவாவது கதி மோட்சம் கிடைச்சதே!" என்று தன்னைச் சமாதானப்படுத்திக் கொண்டாள் மரகதம்.

"நீங்களெல்லாம்தான் அவனுக்கு எதிரிகள். என்கிட்டே விட்டிருந்திர்களானால் இந்தக் கலியாணத்தை முடிச்சுட்டு மறு காரியம் பார்த்திருப்பேன்!"

"அப்பா! உங்க ஞாபக மறதியை நன்னாப் பயன்படுத்திண்டுட்டான் சேதுராமன். ஐந்து வருஷங்களுக்கு முந்தி நடந்ததை நீங்க மறந்துட்டு இப்ப இப்படிப் பேசறீங்க!" என்றான் ராமு சிரித்துக் கொண்டே.

"என்ன நடந்தது?" என்றார் மகாதேவன் தலையைச் சொறிந்து கொண்டு.

"நல்ல ஞாபகமறதி!" என்று சிரித்தாள் மரகதம்.

சேதுராமன் மகாதேவன் வீட்டுக்கு எதிர் வீட்டு அறையொன்றில் குடியிருந்து இன்ஜினீயரிங் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தான். அவனுக்கு ஹோட்டலில் சாப்பாடு; சீட்டு ஆடுவது பொழுதுபோக்கு. இளவட்டம் சேதுராமனுக்கு எப்பொழுதும் துடுக்குத்தனம் அதிகம். யாரையும் துச்சமாகப் பேசும் குணம் படைத்தவன். திடீரென்று கோபம் வந்தால் அவனுக்குக் கண் மண் தெரியாது. அதுவே விபரீதமாக முடிந்தது.

வாசலில் அன்று ஒருவன் மாம்பழம் விற்றுக் கொண்டு சென்றான். மரகதத்தின் தந்தை மகாதேவனிடம் மாம்பழக் கூடைக்காரன், "மாம்பழம் வேண்டுமா?" என்று கேட்டான்.

"எனக்கு வேண்டாமப்பா!" என்று கூறிவிட்டு வாசலிலேயே நின்று கொண்டிருந்தார் மகாதேவன்.

மாம்பழக் கூடைக்காரன் எதிர் வீட்டை நோக்கியும் கேட்டான்.

"ஏய்! வாசலிலிருந்தே 'கத்தாதே. அறைக்கு அருகே சென்று கேளு!" என்றார் மகாதேவன்.

மாம்பழக் கூடைக்காரன் அந்த அறை வாசலில் வந்து நின்றுகொண்டு, "சாமி! மாம்பழம் வேண்டுமா?" என்று உரக்கக் கத்தினான்.

சேதுராமன் கோபத்துடன் வந்து, "ஏனப்பா, இப்படி உரக்கக் கத்தறே? நீ மாம்பழம் கொண்டு வந்திருக்கேன்னு தெரியுது. இப்படி வீடு இடியும்படியாகக் கத்த வேண்டாம்!" என்று கூறினான்.

மாம்பழக் கூடைக்காரன் தான் தப்பித்துக் கொள்வதற்காக, "சாமி! எதிர்த்த வீட்டு ஐயாதான் பக்கத்திலே போய்க் கத்துன்னு சொன்னாரு. எனக்கு என்ன தெரியும்?" என்று கூறி மெதுவாக நழுவினான்.

"ஏய்! என்னைச் செவிடுன்னு யாரடா சொன்னது? எதிர்த்த வீட்டுக்காரரா சொன்னார்?" என்று கத்திக் கொண்டே மகாதேவனிடம் விர்ரென்று வந்தான் சேதுராமன்.

"சார்! நீங்க இப்படிச் சொல்லுவீங்கன்னு நான் கனவிலேகூட நினைக்கலே!" என்று ஆத்திரம் கொதிக்க வார்த்தை கிடைக்காமல் திண்டாடினான் சேதுராமன்.

"என்ன சேதுராமன்! என்ன? என்ன நடந்தது?" என்று கேட்டார் மகாதேவன் திகைப்போடு.

"சார்! இந்தப் பூனையும் பாலைக் குடிக்குமாங்கிற கதையிலே கேட்டீங்க. நான் செவிடன்னு

டி.எஸ்.மணி





இந்த ஊர் முழுவதும் தமுக்கு அடிக்கணும்கிற ஆசையா உங்களுக்கு? நல்லபடியா நடந்துக்க கத்துக்குங்க சார்!'' என்று உக்கிரத்தோடு உறுமினான்.

மகாதேவன் அவனைச் சமாதானப்படுத்த எடுத்துக் கொண்ட முயற்சிகள் பயனற்றுப் போயின. அவை அவன் காதில் விழவில்லை! இதற்குள் அக்கம் பக்கங்களிலுள்ளவர்கள் ரகளையைக் கண்டு வாசலில் கூடிவிட்டனர். அதன் விளைவு என்ன தெரியுமா?

'சேதுராமன் செவிடாம்!' — அந்தத் தெரு முழுவதும் பரவி விட்ட செய்தி அது. அவனுக்குக் காது கேட்காது என்ற தைரியத்தில் அவனைப் பரிகாசம் செய்தவர்கள் பலர்.

சேதுராமனுக்குத் தன் குறை தெரியவில்லை. மகாதேவன் கட்டிக்காட்டியதனால்தான் இப்படித் தன் நிலை ஊர் சிரிக்கும்படியாகி விட்டது என்ற எண்ணம் ஆழப் பதிந்து விட்டது. அந்த விஷ எண்ணம் பல்கிப் பெருகி வளர்ந்து அவன் உள்ளத்தை ஆக்கிரமித்துக் கொண்டிருந்தது. மகாதேவனை எப்படியாவது பழி வாங்கி விடுவது என்று நிர்மானித்து விட்டான். அதற்குச் சமயத்தை எதிர்பார்த்திருந்து ஐந்து வருடங்களுக்குப் பிறகு அவர் மகளை மணந்து கொள்வதாக வாக்களித்து, அந்த வாக்கைக் காற்றில் பறக்க விடுவதன் மூலம் தீர்த்துக் கொண்டான்.

மகாதேவன் அன்று காலைப் பத்திரிகையைப் புரட்டிக் கொண்டிருந்தார். மரகதம் அப்பொழுதுதான் குளித்து விட்டுத் தலையைக் கோதிக் கொண்டே முன் அறைக்கு வந்தாள். ராமு கையில் சோப்புப் பெட்டியுடன் பின்கட்டுக்குக் குளிக்கக் கிளம்பினான்.

''அப்பா! நாளை சேதுராமனுக்குக் கலியாணம்! நான் இன்று ராத்திரி திருச்சிக்குப் போகலாம் என்றிருக்கிறேன்!''

''என்னடாது! நீயா போகப் போகிறே? அன்று அப்படி ஆத்திரப்பட்டவன், இன்று அவன் கலியாணத்துக்குப் போகணும்னு துடிக்கிறயே? இந்தக் காலத்துப் பிள்ளைகளே..''

மரகதம் விஷமச் சிரிப்பொன்றை உதிர்த்தாள். அதன் காரணம் என்னவோ?

திருச்சியில் கலியாண வீடு. இன்ஜினியர் சேதுராமன் உள்ளத்தில் உவகை பொங்க மற்றொரு பெண்ணுக்குத் தாலியைக் கட்டினான். மகிழ்ச்சிக் குதூகலத்தில் மூழ்கியிருந்தவனுக்குத் திடீரென்று அதிர்ச்சி ஏற்பட்டது. கலியாணத்தில் யாரை எதிர்பார்க்கவில்லையோ, அவன் வந்து நின்றால் அவனுக்கு எப்படியிருக்கும்? தூக்கிவாரிப் போட்டது அவனுக்கு. மரகதத்தின் சகோதரன் ராமு தன் அடாத செயலைப் பொறுத்துத் தன் கலியாணத்துக்கு வருவான் என்று சேதுராமன் கனவிலும் எதிர்பார்க்கவில்லை. அவனை எப்படி வரவேற்பது என்று வார்த்தை கிடைக்காமல் திண்டாடினான்.

ராமு விறுவிறுவென்று நேராகக் கலியாணத்தை நடத்தி வைக்கும் சாஸ்திரிகளின் அருகில் வந்து, ''சாஸ்திரிகளே! இதை மாப்பிள்ளைப் பையனுக்கு ஓதிவிட்டு விடுங்கள். எனக்கு உடனே ரயிலுக்குப் போக வேணும்!'' என்றான்.

சாஸ்திரிகள் நிலைமையைச் சமாளித்துக் கொண்டு, ''ரோசனே ரோசமான சோபனக் சோபமான விவாஹ சுபமுகூர்த்தத்திலே.... உங்க பேரு....?'' என்று இழுத்தார்.

''மாப்பிள்ளை நண்பன் ராமுவின் பிரஸண்டேஷன்!''

''மாப்பிள்ளையோட நண்பன் ராமுவின் பிரஸண்டேஷன் என்ன இது?'' என்று ராமுவின் பக்கம் திரும்பினார் சாஸ்திரிகள்.

''ஹியரிங் எய்ட் !''

''ஹியரிங் எய்டா? அப்படீன்னா?'' என்று இழுத்தார் பக்கத்திலிருந்தவர்.

''காது கேட்கும் கருவி மாப்பிள்ளைக்கு!'' என்று கூறி வெற்றிப் புன்னகை புரிந்தான் ராமு.

''ஹியரிங் எய்ட்.... லட்சம் கட்டி வராகன் ! இந்தாங்கோ மாப்பிள்ளே!'' என்று கையை நீட்டினார் சாஸ்திரிகள்.

''அட! மாப்பிள்ளைக்குக் காது செவிடா? அதுதான் வரதட்சிணையில்லாமல் பெண்ணைக் கலியாணம் செய்துக்க வந்துட்டார் !''

''டேய்! இன்ஜினியர் டமாரச் செவிடாமடா !''

''அதுதானே கேட்டேன்! இப்படிக் குறையில்லாட்டா மனுஷன் சம்மதப் பண்ணிப்பானா ?''

கொல்லென்ற சிரிப்பு, கெக்கலி கொட்டிய நகைப்பு அந்தக் கலியாணக் கூடம் முழுதும் பரவியது. தான் வந்த காரியத்தை, பழி தீர்க்கும் படலத்தை வெற்றிகரமாக முடித்துக்கொண்டு வெளியேறினான் ராமு. இன்ஜினியர் சேதுராமனின் முகம் பேயறைந்தது போல் மாறியது.



கிருஷிக்காரர்களுக்கு தீபாவளி ஒரு சந்தோஷமான நாள். மற்ற நன் நாளைப் போலவே அது மிகவும் இன்பத்துடன் இருந்து நல்ல இனிப்புப் பண்டங்களுடன் விருந்துண்ணவேண்டிய நாள்.

கிருஷிக்காரர்களும் தினம் தினம் அதிகமாக சீனி உபயோகிக்கின்றனர். கிராமங்களிலும் தேயிலைக்கு சீனி போட்டு அருந்துவது சாதாரணம். ஆனால் சீனி சேர்த்த தித்திப்புப் பண்டம் தீபாவளி போன்ற விசேஷ நாட்களில்தான் தயாரித்து உண்டு களிப்பார்கள். இதிலேதான் தீபாவளியின் ஆனந்தமான வரவழைப்பு இருக்கிறது.

சிரமத்துடன் உழைப்பவர்களுக்கும் கூட சீனி இன்பமூட்டி இதமளிக்கிறது. அருமையான சீனி, கிழக்கத்திய நாடுகளில் முதல் ஸ்தானம் வகிக்கும் சீனி ஆலைகளில் ஒன்றாகிய வால்சன்ட்-நகரில் இருந்து கிடைக்கிறது. வால்சன்ட் நகரில் இருந்து கிடைக்கும் பளபளக்கும், வெள்ளை சர்க்கரைத்துண்டுகள் கரும்பில் இருந்து நல் ருசிக்காக தயாரிக்கப்பட்டு, தினமும் லக்ஷக்கணக்கானவர்களுக்கு இன்பமூட்டுகிறது.

# கிருஷிக் காரர்கள் கொண்டாடுகின்றனர் தீபாவளி

## சீனி

தாராளமாக சாப்பிடுங்கள்



வாழ்க்கையின் இன்பத்தை நல்ல இனிப்புப் பண்டங்களுடன் அனுபவியுங்கள்

வால்சன்ட்நகர் இன்டஸ்ட்ரீஸ் லிட்., வால்சன்ட்நகர், பூனா ஜில்லா.

WN/EMS-1/62 (T)

TOM & BAY







# வெற்றி எட்டுத் திக்கும் எட்ட...

ரா. கணபதி




உலகையெல்லாம் காப்பதற்காகத் தான் ஈசன் சிவ சக்திகளுடன் போராடினான்; போரில் வெற்றி கண்டான்; வெற்றி கொண்ட உற்சாகத்தில் ஆனந்த நடனமும் ஆடினான். அந்த நடனத்தின் மூலமே தனது வெற்றியை எட்டுத் திக்குகளிலும் பிரகடனம் செய்தான். ஆனால் உலகையெல்லாம் காத்ததற்கு அடையாளமாகவா இருந்தது அந்த ஆட்டம்? அதுதான் இல்லை. ஈசனின் திரு நடம் எப்படி எட்டுத் திசையிலும் பரவியது என்பதைப் புஷ்ப தந்தர் தமது 'சிவ மஹிம்ன ஸ்தோத்திர'த்தில் சொற்களின் களி நடத்தால் சித்திரமாகத் தீட்டி விடுகிறார்.

ஐயனின் பூம்பாதம் புரியும் ஆட்டத்திலேயே பூவுலகு முழுதும் தன் இறுதிக் காலம் வந்து விட்டதோ என்று அஞ்சி நடுங்குகிறதாம்; பிரபஞ்ச வெளியெல்லாம் - நட்சத்திர மண்டலமெல்லாம் - அவனது திருக்கரங்கள் துலவும் நெளிவிலேயே மொத்துண்டு திணறுகின்றனவாம். அவனுடைய ஜடாபாரத்திலிருந்து அலைப்புண்ட சுருள்கள் வானுலகத்தையும் சவுக்கு கொண்டு வீறுகின்றனவாம்.

'நல்ல கூத்து அடித்தாய் போ! சகல லோகத்தையும் ரட்சிப்பதற்காக நீ புரியும் கூத்தில் லோகமே நடுநடுங்கிப் போகிறது. பெரியவர்களின் நன் மகிமை கூடத் தாங்க முடியாதது போலிருக்கிறதே' என்கிறார் புஷ்ப தந்தர். It is too dangerous to be too good என்று பெர்னார்ட் ஷா பேசிய பாணியில் நாசூக்காக நிந்தா ஸ்துதி செய்கிறார்.

இந்தத் திருநடனத்தையே 'அஷ்ட திசையும் கிடுகிடென்ன' என்று கோபால கிருஷ்ண பாரதியார் அவர்களும் பாடியிருக்கிறார்.

உலகைக் காக்கும் தாண்டவத்தில் அந்த உலகையே நடுங்கச் செய்ததன் தாத்பரியம் என்ன என்று சிந்தனை ஓடுகிறது. அநுபவ பூர்வமாக நுகரும் உணர்வுகளுக்கெல்லாம் பகுத்தறிவுப்படி விளக்கம் காண முயல்வது அவசியமோ, அழகோ அல்லதான்; எனினும் சிவ பெருமானின் அண்டம் கலக்கும் தாண்டவத்துக்குப் புத்தி பூர்வமாகவும் ஒரு விளக்கம் தோன்றுகிறது. மேகங்கள்












சமன்றும், சத்தியும், குழுதியும், மோதியும் தானே மழை ஏற்படுகிறது? தயிரைக் கடைந்து, உடைத்து, மசித்துத்தானே வெண்ணெயைப் பெறுகிறோம்? அதே போல் சகல புவனங்களும் உள்ளடங்கிய நம்முடைய இதயத்தையும் இறைவன் தனது கோமளமான பாதத்தால் மிதித்தும், துவைத்தும் கலக்குறச் செய்தால் தான் அன்பு மழையையும், ஆனந்த வெண்ணெயையும் நாம் பெற முடியும் போலும். தன்னைப் புறப் பொருட்களிலும், புறப் பொருட்கள் யாவற்றையும் தன்னிலும் காணுமாறு கூறும் மறை மொழிப்படி அண்ட சராசரங்களையெல்லாம் நம் அகத்துக்குள் கண்டு அதனில் ஆண்டவனின் ஆடிய பாதத்தையும் தியானித்தால் இந்த விளக்கம் பொருத்தமாகவே தோன்றும்.

மருந்தைக் குலுக்கினால் தானே அது உட்கொள்ளத் தகுதி பெறுகிறது? அதே போல விசுவம் முழுவதையும் தன் ஆட்டத்தால் குலுக்கி அதன் தெய்வீகத்தை ஆண்டவன் புலப்படுத்துவதாகவும் கொள்ளலாம்.

ஆக, வெளித் தோற்றத்துக்குக் கோரமாகவும் பயங்கரமாகவும் தோன்றும் இறைவனின் செயல்களும் அருள் மயமானவையே என்று தெளிகிறோம்.

வெற்றி பெற்ற **பின்** ஆடிய நடனம் பற்றி இவ்வளவும். வெற்றி பெறு**முன்** புரிந்த சமரும் இதே போல — அல்லது இதை விட—குரூரமாகவும், அச்சமூட்டுவதாகவும்தானே காண்கிறது? ஆனால் அதுவும் இதே போன்ற—அல்லது இதை விட அதிகமான கருணை மிகுதியில் எழுந்தது தான்.

**அறத்திற்கே அன்பு சார்பு என்ப**
**அறியார்**
**மறத்திற்கும் அஃதே துணை.**

என்ற பொய்யா மொழியை மெய்யாக்கிக் காட்டும் மறக் கருணையே ஈசுவரனது வீரச் செயல்கள். ஈரத்தில் பிறந்ததே ஈசனின் வீரமும்.

எட்டுத் திக்கும் எட்டும் வெற்றி நடனத்துக்கு முன் ஐயன் காட்டியருளிய வீரப்பிரதாபம் நம் தமிழகத்தின் எட்டுத் திருத் தலங்களில் தேங்கித் ததும்புகிறது. தமிழகத்திலும் சோழ மண்டலத்தில் ஆறும் நடு நாட்டில் இரண்டுமாகவே இந்தத் திவ்வியமான திருப்பதிகள் அமைந்துள்ளன. அஷ்ட வீர ஸ்தானங்களாகிய இந்த எண் பதிகளையே **அட்ட வீரட்டம்** என்று போற்றுகிறோம்.

சிவபெருமான் இந்த எட்டு க்ஷேத்திரங்களிலும் வெற்றி கண்டது வெஞ் சமர் புரிந்தல்ல; அட்டஹாஸம் புரிந்தே எதிரியை அவன் புறம் கண்டான் என்றும் அஷ்ட வீரட்டஹாஸம் என்பதே அட்ட வீரட்டமாயிற்றென்றும் சொல்வதுண்டு.

**பூமன் சிரம் கண்டி; அந்தகன்**
**கோவல்; புரம் அதிகை**
**மாமன் பறியல்; சலந்தரன் விற்குடி;**
**மாவழூர்**
**காமன் குறுக்கை; இயமன் கடவூர்;**
**இக்காசினியில்**
**தேமன்னு கொன்றையும் திங்களும்**
**சூடி தன் சேவகமே**

என்ற பழம் பாடல் ஒன்று இந்த எட்டு க்ஷேத்திரங்களையும் கோத்துத் தருகிறது. இந்த எட்டு க்ஷேத்திரங்களுக்கும் சென்று ஆங்காங்கு உறையும் வீர மூர்த்தியை நேரில் கண்டு, கண்டவாறே சித்திரமாக எழுதிக் கொண்டார் நமது








ஓவியர் 'வினு' அவர்கள். இப் பகுதியில், பாடல் கூறும் வரிசைக் கிரமத்திலேயே அந்தத் திருத்தலங்கள் யாவற்றுக்கும் வாசகர்களையும் அழைத்துச் சென்று தரிசனம் செய்விக்கிறார்.

**பூமன் சிரம் கண்டி** என்று முதலில் பேசப்படும் திருக்கண்டியூர் தஞ்சையிலிருந்து திருவையாறு செல்லும் சாலையில் உள்ள க்ஷேத்திரமாகும். இங்கு பூமன் எனும் பிரம்மதேவனின் ஒரு சிரசைத் துண்டித்துக் கண்டித்திருக்கிறான் நீலகண்டன். இந்த வரலாற்றை ''ஊரொடு நாடலைதான் அறியும்'' என்று பாடியிருக்கிறார் வாகீசப் பெருந்தகை. அது அவர் காலத்தில். ஆனால் நாம் ஸ்தல புராணத்தைப் பார்த்தே பிரம்ம சிரக்கண்டனம் பற்றிய வரலாற்றை அறிகிறோம்.

ஆதியில் பரமேசுவரனைப் போலவே பத்மசம்பவனுக்கும் ஐந்து முகங்கள் இருந்தனவாம். இதனால் உமாதேவி உட்படப் பலரும் ஆள் மாறாட்டம் செய்து கொண்டனர் என்பதற்காகவே, பிரமனது தலையொன்றை வாங்கிவிட்டானாம் பசுபதி. இந்த வரலாற்றின்படி சிரக் கண்டனத்தை ஒரு தண்டனையாகக் கொள்வதற்கில்லையல்லவா? ஈசனின் வீரத்தையொட்டி எழுந்த திருச்செயலாகவும் இது தோன்றவில்லை அல்லவா? பின்னர் இவ்வூரை எப்படி வீரட்டமாகச் சொல்ல முடியும்?

வீரட்டத்தில் கண்டியூர் இடம்பெற உரிய அந்தஸ்தை அளிக்கிறது வேறொரு லீலை. சகல ஜீவராசிகளையும் படைக்கும் சதுர்முகனுக்கு – இல்லை, அப்போது அவனும் பஞ்சமுகனாகத்தான் இருந்தான்–திலோத்தமையிடம் சற்றே மனசு சென்றது. யாவரையும் படைக்கும் தந்தையின் ஸ்தானத்தில் உள்ளவனுடைய உள்ளத்தில் மோக படிந்ததைக் கண்டே கால கண்டன் அவனது சிரசில் ஒன்றைக் கண்டனம் செய்தான்.

இந்தக் கதையில் காணும் பிரம்மன் பழிக்கப்பட வேண்டியவனாகத் தோன்றினாலும் திருக்கண்டியூர் கோயிலில் கற்சிலை வடிவில் காணும் பிரம்மனோ தன் தோற்றப் பொலிவால் நாம் அவனைப் பணியுமாறே செய்கிறான். அவனுக்குப் பக்கலில் அமைந்துள்ள கலைவாணியையும் காணும் போது நம் மனதில் வேறுவித எண்ணங்களே எழுகின்றன. 'படைப்பு என்று ஏற்படும்போது அதில் காமமும் சேர்ந்து விடுகிறது. ஆனால் பிரம்மனோ காமமில்லாமல், துறவி நிலையிலிருந்தே அல்லவா சிருஷ்டித் தொழிலைப் புரிகிறான்? வாணிகாந்தன் என்று கூறினாலும் வாணியின் பங்கு இல்லாமலே அவனாக மட்டிலுமே அல்லவா உலகையெல்லாம் ஆக்குகிறான்? அநாதியான ஜீவர்கள் உய்வதற்காகவே அல்லவா அவர்களை மீண்டும் மீண்டும் படைக்கிறான்? ஜபமாலையும் கமண்டலுவும் தாங்கித் தவ முனியாகத் திகழும் இவனை மாகள்ளவனாக எண்ணவும் முடியுமோ?' என்றே சிந்திக்கிறோம்.

தான் கண்டனம் செய்த அயனுக்கு இப்படி அழகிய சிலா வடிவில் தனது திருக்கோயிலிலேயே இடம் தந்து நல்ல பெயரும் வாங்கித் தருகிறான் கண்டியூர் வீரட்டேசுவரன். அதோடு, மற்ற வீரட்டங்களில் தனது வீரத்தை வெளிப்படுத்தும் விக்கிரகங்களாகத் திகழ்பவன் இங்கு மட்டும் தனக்கு அத்தகைய வீர விக்கிரக உருவு எதையும் தரிக்கவில்லை.

அப்பரும் சம்பந்தரும் பாடிப் பரவிய பெருமான் பிரம்ம சிரக் கண்டீசுவரன். 'கண்டியூர் கண்டியூர் என்றுரைப்பீராகில் கடுக நும் வல்வினையைக் கழற்றலாமே' என்கிறார் அடிகள். தொன்மை வாய்ந்த இந்தத் திருக்கோயிலுக்குப் பல்லவர்களும் சோழர்களும் கைங்கரியம் செய்தது இங்குள்ள கல்வெட்டுக்களிலிருந்து தெரிகிறது. அட்டவீரஸ்தானங்களில் ஒன்று என்பதோடு ஸப்த ஸ்தானங்களினும் ஒன்றாகும் இந்தத் தலம். 'எழில் சேர்ந்த கண்டியூர் வாழ் மங்களநாயகி புணரும் இன்னடைச் சடை வீரட்டேசனே' என்று உமாபதி சிவாசாரியார் பாடும் அந்த மங்களாம்பிகையின் அருள் பொங்கும் திரு உருவைக் கண்டு களிக்கவே கண்டியூர் செல்லலாம்.

வீரட்டப் பதிகளில் பாடப்பட்ட தேவாரப் பதிகங்களில் ஒரு விசேஷம், அநேகமாக எந்த வீரட்டத்தைச் சேர்ந்த பாடலிலும் ஏனைய வீரட்டங்களைப் பற்றியும் குறிப்பு இருப்பதே யாகும். இதற்கேற்ப ஆளுடைப் பிள்ளைகள் தமது கண்டியூர் பதிகத்தின் கடைசிப் பாடலில்,

**அமரரானவர் ஏத்த அந்தகன்**
**தன்னைச் சூலத்தில் ஆய்ந்ததே**

என்று அந்தகன் வதையைப் பாடுகிறார். உயிரினங்களுக்கு அந்தத்தை விளைவிக்கும் அந்தகனாகிய யமனை அவர் பாடுகிறாரா, இருளின் உருவான அந்தகாசுரனைக் குறிக்கிறாரா என்று நிச்சயமாகக் கூற இயலாது. இருந்த போதிலும் முதலில் கூறிய அட்டவீரட்டப் பழம் பாடலையொட்டி அவர் அந்தகாசுரனைப் பற்றிச் சொல்வதாகவே கொண்டு அந்தகாசுரனை ஒறுத்த **திருக்கோவலூருக்குச்** செல்வோம்.

விழுப்புரத்துக்கும் திருவண்ணாமலைக்கும் இடையே உள்ள கோவலூர் நடுநாட்டின் நடுநாயகமான தலை நகராகத் திகழ்ந்த பண்டைப் பெருமை வாய்ந்தது. முதலாழ்வார் மூவரும் ஒன்று கூடி திவ்வியப் பிரபந்தம் அருளிய திவ்விய தேசம் அது. ஔவையார் விநாயகர் அகவலை அளித்தது இங்கிருக்கும் வீரட்டேசுவரர் ஆலயத்தில் உள்ள விநாயகரின் திருமுன்னர்தான். ஔவையார் அளித்த பாரி மகளிரை மணந்து கொண்டு பெரும் புகழுடன் திகழ்ந்த தெய்வீக மன்னன் என்ற திருமுடிக்காரியின் காலத்திலிருந்து — அதாவது சங்க காலத்திலிருந்து – சரித்திரப் பிரசித்தி வாய்ந்த ஊர் திருக்கோவலூர்.

புராணங்களோ அதற்கும் புராதனமாக அப்பதி பெற்றிருந்த பெருமைகளை எடுத்துக் கூறும். இலக்குமியாகிய திருவும், காமதேனு எனும் கோவும், மகாபலி எனும் வலியும் இங்கு இறைவனைத் தொழுதமையாலேயே இவ்விடம் திருக்-கோ-வலூர் எனப் பெயர் பெற்றதாக அறிகிறோம். இங்குதான் அந்தகாசுரனை ஆண்டவன் சம்ஹாரம் செய்திருக்கிறான்.

கதிரவனையும், சீதமதியையும் கண்களாகப் பெற்றவன் கைலாய நாதன். எனவே அவனது நயனங்களை தேவி ஒரு முறை விளையாட்டாகப் பொத்தியபோது மூவுலகிலும் இருள் சூழ்ந்தது. அந்த இருளே இறுகி அந்தகன் என்ற அசுரனாயிற்று. அவனைப் பரமேசன் தனது சூலத்தால் ஆய்ந்து அழித்த இடமே திருக்கோவலூர்.

ஈசனது வில்லாகிய பினாகத்திலிருந்து தோன்றிய பினாகினி எனும் தென்பெண்ணைக் கரையில் உள்ளது கோவல் வீரட்டானம். 'வளம் கொள் பெண்ணை வந்துலா வயல்கள் சூழ்ந்த கோவலூர்' என்று இவ்வூரைப் பாடுகிறார் சம்பந்தர். ஆஸ்திகர்களின் கவனம் தேவைப்படும் நிலையில் உள்ளது இக்கோயில். சிற்ப விசேஷமும், சாந்நித்தியமும் விசேஷமாக உள்ள ஆலயம் இது. அந்தகனை வதைத்த சூலத்தோடு திவ்விய தரிசனம் அளிக்கும் வீரட்டரது விக்கிரகம் மறக் கருணையின் மறக்க முடியாத சின்னம் என்றே சொல்லலாம்.

இருளில் பிறந்த அந்தகனைக் கொன்ற இறைவன் நம் அக இருளையும் நீக்குவான் என்பதை உணர்த்துவதே போல, இவ்வூர் பதிகத்தில் 'இருளற நோக்க மாட்டாக் கொத்தையேன் செய்வ தென்னே?' என்று கேட்கிறார் அப்பர் சுவாமிகள்.

இங்குள்ள விநாயகர் ஔவையின் சொன்மாலை பெற்றிருப்பது போல முருகனும் அருணகிரியின் திருப்புகழ் பெற்றிருக்கிறான். இவர்களை யெல்லாம் தரிசித்தபின் தனிக் கோயிலில் வதியும் பிருஹந்நாயகியையும் பணிந்து புனிதம் பெறுகிறோம்.

பிருஹந்நாயகி என்ற திருநாமத்துடனேயேதான் மூன்றாவது வீரட்டமாகிய **திரு அதிகையிலும்** திகழ்கிறாள் தேவி.

திரு அதிகையும் நடு நாட்டைச் சேர்ந்ததுதான். கடில நதி எனப்படும் கருட நதிக் கரையில் பண்ருட்டிக்கு அருகே இருக்கிறது இந்தப் பதி. இங்குள்ள திரிபுராந்தகேசுவரனாகிய வீரட்டேசுவரன்தான் முப்புரங்களையும் எரித்த மூப்பன்.

தாரகாட்சன், கமலாட்சன், வித்யுன்மாலி என்ற மூன்று அரக்கர்கள் மூன்று கோட்டைகளாக வடிவெடுத்துத் தாம் நினைத்த இடத்துக்கெல்லாம் பறந்து சென்று அப்படியே அமர்ந்து நாடு நகரங்களைக் கூண்டோடு கைலாயமாக அழித்து வந்தார்கள். இன்றைய 'ராக்கெட் பேஸ்'களையும் ஏவு கணைகளையும் சேர்த்து நினைப்பூட்டும் இந்த அசுரர்களுடன் அமர் செய்யக் கயிலையங்கிரியோனே வந்தான். சந்திர சூரியரைச் சக்கரமாகவும், பூமியைத் தேர்த் தட்டாகவும், மேரு மலையை வில்லாகவும், வாசுகியை நாணாகவும், வாசுதேவனை அம்பாகவும், வாணிகாந்தனை சாரதியாகவும் கொண்டு படாடோபமாக வந்தான். 'சங்கல்ப மாத்திரத்தால் எதையும் சாதிக்கவல்ல பரம்பொருளுக்கு இத்தனை ஆடம்பரம் தேவையில்லைதான். தனது படைப்






புக்களுடன் விளையாடிய கோலாகலமே இவ்வளவு யுத்த வன்னத்தரும்' என்கிறார் புஷ்பதந்தர். ஆம். இத்தனை சாமக்கிரிகளைச் சேர்த்து வந்தாலும் அவற்றைச் சற்றும் பயன்படுத்தாது சிரித்தே புரமெரித்தான் சிவபெருமான் என்று புராணங்களும் கூறும். எனினும் திரிபுர சம்ஹாரத்தைப் பாடிய நால்வர் மட்டும் மாலவனுக்கே 'கிரெடிட்' கொடுக்கிறார்கள். ஈசுவரன் வில்லே வளைத்துத் திரிபுரர்களை அழித்ததாக அவர்கள் திரும்பத் திரும்பக் கூறுவது, அந்த வில்லின் அம்பாகிய விஷ்ணு மூர்த்திதான் வதம் செய்தார் என்பதைத்தானே கூறாமல் கூறுகிறது?

வதை எப்படி நிகழ்ந்தாலும் சரி. அதைவிட முக்கியம் இங்கு ஈசுவரன் நிகழ்த்திய அறக் கருணையேயாகும். திரிபுர தகனம் செய்தவன் மீண்டும் அவ்வசுரர்களுக்கு உயிர் அளித்து இருவரைத் தமது துவாரபாலகராகவும், ஒருவனைக் குடமுழவ வாத்தியமிசைப்பவனாகவும் நியமித்துக் கொண்டிருக்கும் அருட்பான்மையை என்னவென்பது?

.....குடமுழவம் வீணைதாளம்
குறாடைய சிறுபூத முழக்கமாக் கூத்தாடுமே

என்று இதனைத்தான் நாவுக்கரசப்பெருமான் பாடுகிறாரோ ?

பாடுவது இருக்கட்டும்! 'ஆடுமே' என்று அதிகை வீரட்டேசனை அவர் ஏன் குறிப்பிட்டார்? இத்தலத்து சம்ஹாரமூர்த்தி வில்லேந்திய ராமன் போலத் தோற்றமளிக்கிறானே ஒழிய ஆடக் காணோமே என்றுதான் நாம் நினைப்போம். ஆனால் நம் திருஷ்டி வேறு, பரம பக்த கோமணிகளின் திருஷ்டி வேறு போலும். ஏனெனில் ஞானசம்பந்தப் பாலருவாயருக்கும் நடராஜனாகத்தான் இக்கோயிலில் ஈசன் தரிசனம் தந்திருக்கிறான்.

**ஈதம் உமைபாடக் கெடில வடபக்கம்**
**வேத முதல்வன் நின்றாடும் வீரட்டானத்தே**

என்று அவள் பாட அவன் ஆடுவதை அழகுற வர்ணித்திருக்கிறார் அவர்.

நாவுக்கரசர் பிறந்த இடம் என்ற தனிப் பெருமையும் இத்தலத்துக்கே சேரும். 'என்ன, திருவாரூர் அல்லவா அடிகளின் பிறப்பிடம்?' என்று கேட்கிறீர்களா? திருஆமூரில் பிறந்தது மருணீக்கியார். அவரே சமண மதத்தைத் தழுவித் தர்மசேனரானார். அவரைச் சைவத்துக்கு ஆட்படுத்துவதற்காகச் சோதரி திலகவதியார் இறைவனுக்கு விண்ணப்பம் விடுத்தது அதிகையில்தான். (சாமும் குடலையுமாக இன்றும் திலகவதியார் இங்கு எழிலார்ந்த சிலை உருவில் விளங்குகிறார்.) அதன் மேல் ஈசுவரன் மருணீக்கியாருக்குச் சூலை நோயை உண்டாக்க, அவரும் அதிகை வீரட்டேசனையே சரண் புகுந்து 'கடுகின்றது சூலை தவிர்த்தருளீர்' என்றும், 'வலிக்கின்றது சூலை தவிர்த்தருளீர்' என்றும் தேன் தமிழில் பாடிப் பிரார்த்தித்தார். சூலை நோயைப் போக்கிய பிரான் அப்போதுதான் மருணீக்கியாராகப் பிறந்து தர்மசேனராக வளர்ந்தவருக்கு 'நாவுக்கரசர்' என்ற விருதை வழங்கினார். எனவே மருணீக்கியார் தமது மருள் நீங்கப் பெற்று நாவுக்கரசராக ஜனித்த இடம் அதிகை என்று கூறலாம் அல்லவா?

இறைவன் அந்தண வடிவம் கொண்டு சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குத் திருவடி தீட்சையளித்த தலமும் இதுவே.

வரலாற்று விசேஷத்துடன் மூர்த்தி விசேஷமும் வாய்ந்த அற்புதமான ஆலயம் அதிகை வீரட்டானம்; கதைச் சிற்பங்கள் இங்கு ஏராளம். ஆற்றங்கரையை அடுத்தோர் இனிய கிராமத்தில் விஸ்தாரமான ஆலயம். ஒரே ஒரு குறை. இந்த அழகையெல்லாம் நுகர அடியார் கூட்டம் போதிய அளவு இல்லாததுதான்.

மும்மலங்களையும் இறைவன் அழிப்பதே திரிபுர தகனம் எனச் சொல்வதுண்டு. அவற்றில் உடலுக்குரித்தான மலம் ஆணவம். அணுக்களைக் குறிக்கும் மாக ஆணவம். இந்த ஆணவத்தின் உச்சியிலிருந்த தட்சனை சிவபெருமான் சம்ஹரித்து மீண்டும் உயிர்ப்பித்த வீரட்டானம் பரசலூர் என்று வழங்கப்படும் **திருப்பறியலூர்** ஆகும். மாயூரம் தாலுகாவில் செம்பொன்னார் கோயிலுக்கு அருகே உள்ளது பொன்னார் மேனியனின் இந்தத் திருக்கோயில். ஈசன் தன் மாமனாராகிய தட்சன் தலையைப் பறித்தமையால் இவ்வூர் திருப்பறியலூர் என வழங்கப்படுகிறது.

# திருப்பறியலூர்

இன்று சின்னஞ் சிறிய கிராமமாக இருப்பினும் முன்பு புலமை மிக்கோர் பலர் கொடி கட்டி வாழ்ந்த நகரம் இது. 'கொடிகட்டி வாழ்ந்த' என்பது உபசாரத்துக்குச் சொன்னதல்ல. 'தெருவிற் கொடி சூழ் திருப்பறியலூர்' என்கிறார் முத்தமிழ் விரகர்.

உமையம்மையைத் தன் மகளாகவும், மகாதேவனை மருமகனாகவும் பெற்றிருந்தும் தட்சன் அந்த அருமை பெருமையை அறிந்தானில்லை. சிவபெருமானை விடுத்து ஏனைய தேவரை யெல்லாம் அழைத்து இந்தத் திருப்பறியலூரில் தான் — அப்போது அதன் பெயர் தட்சபுரம் — ஏகன் வேள்வி செய்தான். அழைப்பின்றியே அங்கு வந்து சேர்ந்தாள் உமை, பெண்ணுள்ளத்தின்பாசம் காரணமாக. தன் கணவனை நீக்கியும், பழித்தும் தட்சன் செய்யும் யாகத்தைக் காணக் காணப் பொறாது ஹோமகுண்டத்திலேயே வீழ்ந்து தன் பொன்னுடலை நீத்தாள் அந்தக் கற்புத் தெய்வம். இதனை அறிந்த ஈசன் சீற்றமுற்றுத் தனது சடையை உருவி அடிக்க அதனின்று எழுந்த வீரபத்திரனும் வீரர்களும் தட்சபுரம் அடைந்தனர். தேவர்களையெல்லாம் மாய்த்தனர். தட்சனின் தலையை வெட்டி வீழ்த்தினன் வீரபத்திரன். எனினும் கிருபாநிதியாகிய கங்காதரன் அங்கு எழுந்தருளி தட்சனை ஆட்டு முகத்துடன் உயிர்ப்பித்தான். தட்சன் வேண்டுகோளுக்கிணங்கி அங்கு லிங்க வடிவிலும் எழுந்தருளினான்.

ஈசுவராம்சமான வீரபத்திரனேதான் இங்கு சம்ஹார மூர்த்தியாக கருப்பெற்றிருக்கிறான். ஈசனின் வீரத்தில் எழுந்த ஒரு துளிதானே வீரபத்திரன்? எனவே இதுவும் வீர ஸ்தானங்களில் ஒன்றாகவே மதிக்கப்படுகிறது.

சிறிய, அழகிய, சுத்தமான ஆலயத்தில் வீரட்டானேசரும், வீரபத்திரரும், இளங்கொம்பனாளும் (இளம் கொடியம்மை என்றும் சொல்கிறார்கள்) இனிக்க இனிக்கத் தரிசனம் அளிக்கிறார்கள்.

சுந்தர பாண்டியன் காலத்தைச் சேர்ந்த கல்வெட்டு உட்பட மூன்று கல்வெட்டுக்கள் கொண்ட திருப்பறியலூர் சம்பந்த சுவாமிகளின் பாடல் பெற்ற தலமாகும்.

**பிர**மனது செருக்கைக் காய்ந்த இடம் பறியலூர். தனது சினத்தையே இறைவன் சம்ஹரித்த தலம்தான் **திருவிற்குடி**. நீரின் நடுவில் திட்டாக உயர்ந்து விளங்கியதால் இவ்வூருக்குத் திட்டை என்றும் பெயர் வழங்கியிருக்கிறது. 'கோத்திட்டைகுடி வீரட்டானம்' என்றே இதனைப் பாடுகிறார் அப்பர் பெருமான். வன்தொண்டர் பாடலொன்று 'கோத்திட்டையும் கோவலூரும் கோயில் கொண்டீர்' என்று மோனையணியுடன் பரமோனைப் பரவுகிறது.

இந்திரன் மிகவும் செருக்கு அடைந்து விட்டானென்று உணர்ந்த சிவபிரான் அவன் கயிலைக்கு வருகையில் தானே துவாரபாலகனாக வடிவெடுத்து அவன் முன் நின்றான். 'ஈசனைக் காணலாகுமா ?' என அமரேசன் வினவியபோது வேண்டுமென்றே வாய் திறவாதிருந்தான். உடனே இந்திரன் தன் வஜ்ராயுதத்தால் தானனாகத் தோன்றிய தேவதேவனைத் தாக்கினான். வஜ்ராயுதம் பொடிப் பொடியாகச் சிதறியது. ஈசுவரன் கோபாக்கினி ஜொலிக்க இந்திரன் முன்பு நின்றான். தேவராஜன் அஞ்சி ஒடுங்கி அவனது அடிகளில் வீழ்ந்தான். அக்கணமே இறைவன் உளம் குளிர்ந்தது. அவனுக்கு அநுக்கிரகம் புரிந்தான்.

எனினும் அவனது கோப ஜ்வாலை கடலில் விழுந்து ஒரு மகவாயிற்று. ஜலம் தரித்ததால் ஜலந்தரன் என்று பெயர் பெற்ற அம்மகவை வருணன் பிரம்மனிடத்து அளித்தான். அசுர குணம் பெற்றிருந்த அந்தச் சிசுவின் சின்னம் பிரம்மனது தாடியை இழுக்க, பிரம்மனது கண்களில் நீர் துளித்து அந்த நீர் குழந்தையின் மீதே விழுந்தது. ஜலந்தரன் என்ற பெயர் இதனால் உறுதிப்பட்டது.

பிரம்மனிடமிருந்து பெற்ற பல வரங்களின் பலத்தால் உலகை யெல்லாம் ஹிம்சித்து ஏக சக்கிராதிபத்தியம் வகித்த ஜலந்தரனின் முன் ஈசன் முனிவனாகத் தோன்றினான். கால்பெருவிரலால் மண்ணில் ஒரு வட்டமிட்டு, ''எதையும் செய்ய ஆற்றல் உள்ளதாகக் கூறும் நீ இந்த மணல் வட்டத்தைப் பெயர்த்துத் தாங்குவாயா?'' என்று ஜலந்தரனிடம் கேட்டான். ஜலந்தரனும் பிரம்மப்பிரயத்தனம் செய்து அந்த மணல் சக்கரத்தைத் தூக்கித் தலையில் வைத்துக் கொண்டான். அக்கணத்திலேயே அது கூரிய ஆழியாகி அவனது உடலை இரண்டாகப் பிளந்து தள்ளி விட்டு இறைவனின் கரகமலத்தை அடைந்தது.






பாலாழியில் துயிலும் அரியங்கையனேயே காண்கிறோமோ என்று எண்ணுமாறு சக்கரமேந்தி நிற்கிறான் திருவிற்குடியில் உள்ள சங்காரமூர்த்தி – சங்காரமூர்த்தி. இடது கீழ்க் கரத்தால் அவன் முத்திரை காட்டுவதும் எங்கும் காணக் கிடைக்காததோரு விசேஷமாகும்.

திருமாதுருக்கும் இவ்வூருக்கும் ஒரு தொடர்பு உண்டு. இவ்வூருக்குப் பெயர் ஏற்பட்டதே மாலவன் காரணமாகத்தான். ஜலந்தராசுர வதத்துக்கு ஒரு முக்கியமான உதவி புரியும்பொழுது அவனது வில் விழுந்த இடமே இந்த விற்குடி. இதே போலச் சுற்றியுள்ள ஊர்களுக்கும் பெயர் ஏற்பட்டதற்குக் காரணம் கூறப் படுகிறது. ஜலந்தரனுக்குப் பயந்து சுரர் குடிபுகுந்த இடம் சுரக்குடி (சொரக்குடி) என்றும், கங்காளனுகிய ஈசன் தேவர்க்கு அருள் புரிந்த இடம் கங்காளஞ்சேரி என்றும், திருமாலின் வாள் வீழ்ந்த இடம் வாழ்க்குடி என்றும் சொல்கிறார்கள். ரமணீயமான தீர்த்தங்கள் சூழ்ந்த ரம்மியமான க்ஷேத்திரம் திருவிற்குடி.

'ஏலா சுகந்திகேசா' என்று லலிதா த்ரிசதீ போற்றும் தேவி இங்கு ஏலவார் குழலி என்ற திருநாமத்துடன் துலங்குகிறாள். இங்கு வாழும் முருகப் பெருமானை 'முத்தர்புகழ் விற்குடிப் பதியில் இச்சையுற்று மகிழ் தம்பிரானே' என்று துதித்திருக்கிறார் அருணகிரியார். அப்படி முமுட்சுக்களான முத்தர் புகழ் திருவிற்குடியில் இலங்கும் வீரட்டேசனைப் 'பொருகரி உரி போர்த்து விளங்கும் மேனியனாக'க் கண்டு தொழுதிருக்கிறார் திருஞானசம்பந்தர்.

அப்படிக் கரியின் தோலை உரித்த பெருமானைக் காண வேண்டுமானால் திருவாரூருக்குச் சில மைல்கள் வடக்கே உள்ள திருவிற்குடியிலிருந்து மாயூரத்துக்குத் தெற்கே ஏழு மைலிலுள்ள **வழுவூரை** அடைய வேண்டும். அங்குள்ள கஜ சம்ஹாரரைக் கண்ட பின் 'விற்குடியிலிருந்துதானு வழுவூருக்கு வரலாம்; வியன் உலகிலிருந்தே வரலாமே!' என்று தோன்றும். நம்முடைய பக்தியும் கலையும், பக்தி என்ற கலையும், கலைப் பக்தியும் முற்றி உருவான பல திவ்விய மூர்த்தங்கள் நிறைந்தது வழுவூர். கஜசம்ஹாரர் மட்டுமின்றி, பிட்சாடனர், மோகினி முதலிய விக்கிரகங்களும் நம்மை மோகிக்கச் செய்வனவாகும்.

இங்குள்ள ஞான சபையிலே நவ தாண்டவங்களில் ஒன்றாக, திருமேனியை வளைத்து, உள்ளங்கால் தெரியுமாறு குழைந்து நெளிந்து ஆடும் கஜ சம்ஹார மூர்த்தி என்றும் நம் உள்ளத்தை விட்டு நீங்க மாட்டான். செயல் வீரமாயினும் அவனது உடலில் காணும் நளினம்–உலோகத்தில் காணும் நளினம்–நம் உள்ளத்தையும் மென்மையாக்குகிறது.

பிரளய காலத்தில் சகல புவனங்களும் அழிந்த போதிலும் இந்த க்ஷேத்திரம் மட்டிலும் அழியாது வழுவிய படியால் வழுவூர் என்று பெயர்பெற்றிருக்கிறது. இந்தப் பிராசீனமான புரியில்தான் கஜாசுரன் பிரம்மனிடமிருந்து வேண்டிய பலமெல்லாம் பெற்றது. 'எனினும் உன் பலமெல்லாம் பரமேசனிடம் செல்லாது' என்று சதுர்முகன் கூறியதையும் மறந்து ஈசுவரனிடம் வாலாட்டினுன் கஜமுகாசுரன். (அந்த வாலைக்கூட இன்று கஜ சம்ஹார விக்கிரகத்தில் எவ்வளவு அழகாகக் காண்கிறோம்?)

சிவபிரான் அப்படியே மத்த யானையின் மத்தகத்தின் மீது தனது திருக்காலை — வேதங்களும் வேதியரும் தேடிக் காணுத பாதத்தை — ஆழப் பதித்து நர்த்தனமிட்டான். கஜாசுரனது சர்மத்தை உரித்துப் போர்த்துக் கொண்டு விட்டான். தனது திருமேனி முழுவதையும் அணையும் பேற்றினை ஓர் அசுரனுக்கு அளித்து விட்டான். இதனுலேயே இங்கு ஆண்டவன் 'கிருத்திவாஸன்' என்று அழைக்கப்படுகிறான்.

அழிவுத் தொழிலைக் காட்டாத அருளாளனுக வருமாறு ஈசுவரனை வேண்டும் ஸ்ரீ ருத்திர மந்திர மொன்றுண்டு. அதில் ஆயுதங்களைத் தரிக்காமல் எழுந்தருளுமாறு ஈசனை வேண்டும் போதே, பினாகவில்லை மட்டும் தாங்கி, தோலையும் அரைக்கசைத்து கிருத்திவாஸனுக வருமாறு கோரப்படுகிறது. இங்குள்ள கிருத்திவாஸனே ஏராளமான ஆயுதங்களை அணிபவன். தனது எழில்மிகு அங்கங்களை யானைத் தோலால் மறைத்துக் கொள்ளாமல் தனக்குப் பின்னும் திரை போலவே அதனை விரித்துக் கொண்டு காட்சி யளிக்கிறான் வழுவூர் சம்ஹாரமூர்த்தி.






யானையை உரித்த போது அதனுள் இறைவன் மறைய, அசுரன் ஐயனை விழுங்கி விட்டதாக அன்னை நடுங்கியதை 'வேழம் உரித்து உமை அஞ்சக் கண்டு' என்று பாடுகிறார் அப்பர். அப்படி அஞ்சிய அம்மை தனது பொற்பாதத்தைத் திருப்பிப் பிறந்த வீடு திரும்ப எண்ணமிடுவதையும், அப்போது அவள் இடையில்பாங்குற அமர்ந்துள்ளகுழந்தை குகன் யானையிலிருந்து தந்தை வெளிப்படுவதைக் கண்டு 'அதோ அப்பா' என்று விரலால் சுட்டிக் காட்டுவதையும் உலோகச் சிலையில் கண்ணும் கருத்தும் லயிக்கும்படி காண்கிறோம். இந்த ஞான சபை தில்லைக் கனகசபையை நினைவூட்டுகிறது. தில்லையில் போலவே இங்கும் ரஹஸ்ய யந்திர பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறது. சுமார் இருபதாண்டுகளுக்கு முன் நம் காமகோடிபீடாதிபதிகளின் ஆசியுடன் அது புதுப்பிக்கப்பட்டிருக்கிறது.

அப்பனைச் சுட்டிக் காட்டும் சுப்பிரமணியனும் திருப்புகழ் பெற்று தனி சந்நிதியில் காட்சி அளிக்கிறான். ஆறுமுகனை அணைந்த அம்பிகை இளங்கிளை நாயகி என்ற அழகு சொட்டும் பெயரில், அழகுசொட்டும் மூர்த்தியாகத் தனிக் கோயிலில் விளங்குகிறாள்.

கஜ சம்ஹார மூர்த்தி தனக்கென்று தனித் தேவாரப் பதிகங்கள் பெறாமல் இதர தலத் தேவாரங்களிலேயே பாடப் படுகிறான். இவ்வாறு பாடப் பெற்ற வைப்புத்தலமாகிய வழுவூரில் ஈசனது ஐந்து முகங்களும் ஐந்து தீர்த்தங்களாகப் பாவிக்கப்படுகின்றன. இவற்றில் ஈசான தீர்த்தம் பிரகாரத்தின் முழு அகலத்தையும் வியாபித்து, சந்நிதியின் முன்பாக அமைந்து உள்ளத்தை அள்ளுகிறது.

தாருகாவனமும் வழுவூர்ப் பகுதியில் தான் இருந்தது என்று கூறப்படுகிறது. இங்கு பிட்சாண்டவனும் மோகினியும் விசேஷமாக விளங்குவதற்கு இதுவே காரணமாகும். புராதனப் பிரசித்தியோடு சரித்திரப் பிரக்யாதியும் பெற்றது வழுவூர். 'வழுவூர்' என்னுமல் 'வழுகூர்' என்கின்றன கல்வெட்டுக்கள். பல சோழ மன்னர்களும், ஜடாவர்மசுந்தர பாண்டியனும், இதர மன்னர்களும் கோயிலுக்குப் பணி புரிந்திருக்கிறார்கள்.

யானையை அடக்கும் ஈசனின் ஆற்றலை ஆதிசங்கர பகவத் பாதர்கள் சிவானந்த லஹரியில் பாடியிருக்கிறார். 'மனம் என்னும் மத யானையை ஞானத் தறியில் பிணைப்பாயாக' என்று ஐயனைக் கோரியிருக்கிறார்.

இந்த மனத்தைக் குரங்காகவும் பாவித்துப் பாடியிருக்கிறார் ஆசாரிய சங்கரர். காமவிகாரத்தால் சதா சஞ்சரிக்கும் குரங்காகச் சொல்கிறார். காமமகற்றிய தூயனாக ஈசன் விளங்குவது **திருக்குறுக்கையில்**.

தட்சன் வேள்வியில் தேவி பிராணத் தியாகம் செய்து கொண்ட பின் தட்சிணாமூர்த்தியாகத் தவமியற்றத் தொடங்கி விட்டான் சிவபெருமான். அந்த தட்சிணாமூர்த்திக்கும் ஹிமவான் மகளாகப் பிறந்திருந்த தேவிக்கும் தோன்றும் புத்திரன்தான் சூரபதுமன், தாரகன், சிங்கமுகன் முதலிய பொல்லா அரக்கரை அழிக்க முடியும் என்றறிந்தனர் வானோர். ஈசனுக்கும், அவனுக்குப் பணிவிடை புரியும் ஹைமவதிக்கும் பிரேமையுண்டாக்குவதற்காகக் காமனை அனுப்புகின்றனர்.

அவன் வந்து சேர்ந்த இடம்தான் இந்தக் குறுக்கை. தான் எங்கே காமன் மீது கோபமுற்று விடுவோமோ என்று

தன்னையே கட்டுப்படுத்திக் கொண்டு ஈசுவரன் முதலில் திரும்பிஅமர்ந்திருக்கிறான். அதற்கடையாளமாகவே இன்றும் இங்கே கீழ்ப்புறம் மேல்புறம் இரண்டிலும் நந்தியும் பலிபீடமும் உள்ளன. அப்படியும் விடாமல் மலர் பாணத்தை இறைவன் மீது எய்தான் கரும்பு வில்லோன். (அந்த மலரையும் இன்று நாம் லிங்கத்தில் காண்கிறோம்.) அப்புறம் என்ன? ஈசுவரன் நெற்றிக் கண்ணைத் திறந்து காமனை எரித்துவிட்டான்.

ஈசனிடம் ரதி முறையிட்டதன் பேரில் அவளுக்கு மட்டும் மதனவேள் கட்புலனாவான் என்றும், ஏனையோருக்கு உருவிலியாகவே இருப்பானென்றும் ஈசன் அருளியது நமக்குத் தெரிந்ததுதான். ஆனால் அந்த மதனன் நமது கண்ணுக்கும் புலனாகும்படி விக்கிரக வடிவில் கொழுகொழுவென்று, சதியாகிய ரதி சமேதனாக இந்தக் குறுக்கையில் இருப்பது நம்மில் பலருக்குத் தெரிந்திராது. அவனுக்கு நேர் எதிரே காமனங்க நாசினி சபை என்றும் சம்புவிநோத சபை என்றும் பெயர் பெற்ற சந்நிதியில் பூர்ணாம்பிகை சமேதனாக யோகீசுவரன் குடிகொண்டிருக்கிறான். இவன்தான் இங்கு சம்ஹார மூர்த்தி என்று சொல்கிறார்கள். ஆனால் அவனது கருணையையும், அவனுக்கு நேர் எதிரேயுள்ள மன்மத தம்பதியையும் காணும்போது இங்கு வெற்றிக்கு முன்பிறந்த வீரத்தைக் காணாது, வெற்றிக்குப் பின்பிறந்த பரிவையே காண்பதாகத் தோன்றுகிறது.

இவன் யோகி என்றால் இவனை மணந்தவளோ ஞானி. மெய்ஞ் ஞானம் எத்தனை எழில் நிறைந்ததோ அத்தனை எழிலும் நிரம்பப் பெற்றவள் திருக் குறுக்கையில் விளங்கும் ஞானாம்பிகை.

குறுக்கையின் சூழலிலேயே தெளிவும் சாந்தியும் காண்கிறோம். பெருமை வாய்ந்த குறுக்கைத் தலம் மாயூரத் தருகேயுள்ள நீடூரிலிருந்து ஐந்து மைல் தொலைவிலுள்ளது. தினமும் தேவ கங்கையைத் தமது நீண்ட கையினால் தருவித்து இறைவனுக்குத் திருமுழுக்காட்டியவர் தீர்க்க பாகு முனிவர். இவ்வூரில் அவரது கரத்தைப் பிள்ளையார் குறுகச் செய்து, இங்குள்ள சூல தீர்த்தம் தேவகங்கையினும் சிறந்தது என்று உணர்த்தியதாலேயே குறுக்கை எனப் பெயர் பெற்றிருக்கிறது இத்தலம்.

'யமன் பிரியமற்றவனைப்போலிருந்து மனிதனுக்கு நன்மை செய்கிறான்; காமனோ பிரியமுள்ளவனைப் போலிருந்து அவனுக்குத் தீங்கு இழைக்கிறான்' என்பது பகவத்பாதர் வாக்கு. இந்த யமனும் மெய்யடியாரை மெய்யாகவே துன்புறுத்தியதுண்டு. அதற்காக ஆண்டவனிடம் தண்டனை பெற்றதும் உண்டு. காம தகன மூர்த்தியைக் கண்ட கண்களோடு கால தகன மூர்த்தியையும் காணச் செல்வோம். அட்டவீரட்டத்தில் கடைசித் தலமான **திருக்கடவூரில்** வதிகிறான் இவன்.

சிவபூஜையில் ஈடுபட்டிருந்த மார்க்கண்டேயரின் உயிரைக் கவர்ந்திழுக்க யமதர்மன் வந்து லிங்கத்தையும்சேர்த்து, பாசக் கயிற்றை வீசியதையும் அப்போது லிங்கம் பிளந்து இறைவன் வெளிப்பட்டுக் காலனைக் காலால் உதைத்துக் கொன்று காலகாலனானதையும் நாம் அறிவோம்.

அந்த வீர சாகஸத்தைப் புரிந்தது மாயூரம்–தரங்கம்பாடி ரயில் மார்க்கத்திலுள்ள திருக்கடவூரில்தான்.

'மார்க்கண்டேயர் வாழ்ந்தது காசியில் அல்லவா? மிருத்யுவதம் எப்படி இங்கு நிகழ்ந்தது? அதே போல ஹைமவதி ஈசனுக்குப் பணி புரிந்ததும் ஹிமாலயத்திலல்லவா? குறுக்கையில் இருக்க முடியாதே?' என்றெல்லாம் வினா எழலாம். யோசித்துப் பார்த்தால், இந்த வினாக்களெல்லாம் சற்றும் பொருளற்றவை என்றே தோன்றும். எது ஸ்தூலம், எது சூட்சமம்; எது பௌதிகம், எது மானஸிகம்; நனவு எங்கு முடிகிறது, கற்பனை எங்கே தொடங்குகிறது; எது நனவு, எது கற்பனை என்பதெல்லாமே அவரவர் மனப் பக்குவத்தைப் பொருத்த விஷயம். சரித்திர ரீதியிலும் பூகோள ரீதியிலும் கேள்வி கேட்கத் தெரியாத பாக்கியசாலிகள் தங்கள் ஆத்மாவின் சாரத்தைத் திறந்து கொண்டு நமது திருத்தலங்களுக்குச் சென்றால் அந்தச் சாரத்தின் வழியே சரித்திரத்தையும் பூகோளத்தையும் கடந்த [illegible] பொருள் [illegible]ளிர்ந்த, சுகந்தமான அருட் [illegible] பூத்திருவாகத் தெரிந்து [illegible] ஒளிர்விக்கும். அப்போது நமது புல்லிய வினாக்களெல்லாம் [illegible] எழும்பாது இழை படியும்.



திருக்கடவூரில் விசாலமான ஆலயத்தில் எழுந்தருளியுள்ள கால சம்ஹார மூர்த்தியை [illegible] கண்டு விட்டால் சந்தேகமெல்லாம் இருந்த இடம் தெரியாமல் போய்விடும். சம்ஹார மூர்த்தியென்றாலும் தண்மையில் இவனும் [illegible]மூர்த்தியாகவே காட்சி தருகிறான். [illegible] காலைத் தூக்கிய நிலையில் யமனை அவன் சூலத்தால் குத்தும் அமைப்பும், சகல ஜீவராசிகளுக்கும் பாசக் கயிறு வீசும் யமன் மீது [illegible] பாசம் வீசி இழுத்துச் செல்லும் [illegible] காணக் காணப் பரவசமாக்கும் [illegible]. யமனைக் கண்டு மார்க்கண்டேயர் பீதி அடையலாகாது [illegible] அவருக்கு ஒரு சிநேகி[illegible] பக்கத்திலுள்ள தேவியின் [illegible] ஆனது. யமன் [illegible] பூபாரம் பெறுகிறது. [illegible] இடம் முறையிட்டான். எனவே யமனுக்கு மீண்டும் உயிரளித்து, தனக்கு எதிரிலேயே விக்கிரகமாக வைத்துக் கொண்டுள்ள கால சம்ஹாரன், 'இதோ என் பக்தனைத் துன்புறுத்தியபோது நீ பட்ட அவஸ்தையை என்றும் மறவாதே' என்று அவனுக்கு எச்சரிப்பது போலத் தனது கை விரலால் காலடியிலுள்ள யமனைக் காட்டும் பாவனை நம்மைச் சொக்க வைக்கிறது. காலத்தை வென்று கனகப் பிழம்பாகக் காணும் இந்த மூர்த்தி கனகசபேசனை ஞாபகமூட்டுகிறான். 'கன்றிய காலனைக் காலால் கடிந்தான் அடியவற்காச் சென்று தொழுமின்கள் தில்லையுட் சிற்றம்பலத்து' என்று இரு மூர்த்திகளையும் இணைத்தே மெய்யடியார்கள் பாடியுள்ளனர். இங்குள்ள மிருத்யுஞ்ஜய சக்கரம் மார்க்கண்டனுக்குப் போலவே நமக்கும் அமர நிலையை அளிக்கும் என்கிறார்கள்.

இக்கோயிலின் மூலவரும் அமரத்துவம் தரும் அமிருதகடேசுவரன்தான். பாற்கடலில் கடைந்து பெற்ற அமுத கலசமே இந்த வீரட்டானத்திலுள்ள மூலத்தான லிங்கமாயிருக்கிறது. பிறகுதான் அமுதகடேசன் தனது அருள்விலாசத்தால் அமுதத்தை ஒரு ஞானவாவியில் வெளிப்படுத்தினான். அதனை எடுத்து ஒளித்து வைத்த கள்ளவாரணப் பிள்ளையார், தேவர்கள் விக்நேசுவர பூஜை செய்த பின்னர் அதனை அவர்களுக்கு அளித்திருக்கிறார்.

திருக்கடவூரைக் குறித்து இப்படி எத்தனையோ பல ஐதிஹ்யங்கள். மூவரும் பாடிய இந்த க்ஷேத்திரத்தில்தான் குங்கிலியக் கலய நாயனார், காரி நாயனார் ஆகியோரும் சிவப் பணி புரிந்திருக்கின்றனர். அருணகிரிநாதர் இங்கு எழுந்தருளியுள்ள முருகனைப் பாடிப் பணிந்திருக்கிறார். முதல் ராஜ ராஜனிலிருந்து கிருஷ்ண தேவராயர் வரையில் பலர் இவ்வாலயத்துக்குத் திருப்பணி செய்துள்ளதைக் கல்வெட்டுக்கள் பல கூறுகின்றன. பழம் புகழோடு இன்றும் இதன் மகிமை குன்றாது அருமையாகப் பராமரித்து வருகின்றனர் சிவதருமம் செழிக்கச் செய்யும் தருமபுர ஆதீனத்தார். இவ்வாறு புகழ் மங்காது விளங்கும் கடைசி வீரட்டேசனை கால சம்ஹாரனைப் பணிந்து மனசே இல்லாமல் சந்நிதியிலிருந்து புறப்படுகிறோம். அட்ட வீரட்டங்களின் பெயரையும்

**நாவில் நவின்றுரைப்பார்க்கு**
**நணுகச் சென்றால்**
**நமன் தமரும் சிவன் தமர்**
**என்றகல்வர் நன்கே**

என்பது அப்பரது திருமொழி. அட்ட வீரட்டத்தையும் தரிசிப்பதால் நம்மைக் காலனது தூதன் நெருங்க மாட்டான்; அதாவது காலம் விழுங்காத திருப்பணிகளை நாம் புரிவோம் என்கிறார் அப்பர் அடிகள். காலத்துக்கு இரையாகாத அந்நிலையைக் கடவூர் கால சம்ஹாரன் ஒருவனே அளிக்க வல்லவனல்லவா?

எட்டுவீரட்டானத்தையும் தரிசித்து, சுவாமி சந்நிதியிலிருந்து வெளியேறுகையில் எட்டுத் தலமும் விரிந்த ஈசனது வீரமும், எட்டுத் திக்கும் பரவிய அவனது வெற்றியும், அந்த வெற்றியில் மலர்ந்த திரு நடமும் நினைவில் மிளிர்கின்றன. இத்தனை வல்லபம் அவனுக்கு எங்கிருந்து வந்தது என்று வியப்புறுகிறோம். அந்த 'நிருத்த சக்தி வாழ்க' வென்று கவிஞனோடு பாடியபடி வெளிப் பிராகாரத்திலுள்ள ஓர் ஆலயத்தை அடைகிறோம். அங்கே அந்த நிருத்த சக்தியே சின்னஞ் சிறிய உருவமும் பெண்மை பெரிய பேரெழிலுமாக, அபிராமியாகத் தரிசனம் தந்தருளுகிறாள். சரபோஜி மன்னரிடம் அமாவாசையைப் பௌர்ணமி என்று தவறுதலாகக் கூறிய அபிராமி பட்டரைக் காப்பதற்காகத் திருச் செவியணிந்த மணித் தோட்டினை வானில் வீசி அமாவாசையையே பூர்ணிமையாகச் செய்த பூரணி அவள். அபிராமி பட்டர் அருளிச் செய்த அந்தாதியை அவள் முன்பாடி, அந்தமும் ஆதியுமற்ற பரம் பொருளின் அனந்தமான வீரப் பிரதாபங்களை மீண்டும் மனசில் வாங்கிக் கொண்டு அந்தகன் மாய்ந்த திருக்கடவூரிலிருந்து புறப்படுகிறோம். அமுதக் குடத்தில் உறைந்த பெருமான் நம் அகமும் அமுதமானால் அங்கு வந்து குடி புகுவான் என்று நம்பிப் புறப்படுகிறோம்.


எமது
தீபாவளி
வாழ்த்துக்கள்
Spartan
AUTOMOBILE LACQUER FINISHES
Spartan
INDUSTRIAL FINISHES
SPARTAN SUPERFINE PRODUCTS
Spartan
SUPERFINE PREPARED PAINT
Enamelised
Spartan
Plastic PAINT
ஸ்பார்ட்டன்
பெயிண்டுகள்
அடிஸன்ஸ் பெயிண்ட்ஸ் & கெமிகல்ஸ் லிமிடெட்
செம்பியம், சென்னை-11
அங்கத்தினர்: இந்தியன் பெயிண்ட் அஸோஸியேஷன்
A-P.C 82



மனமார்ந்த
தீபாவளி
வாழ்த்துக்கள்
SPARK PLUG
FUEL INJECTION PUMPS & NOZZLE HOLDERS
WORLD FAMOUS
BOSCH (GERMAN) QUALITY
MICO
FILTERS
NOZZLES
ELEMENTS & DELIVERY VALVES
FILTER INSERTS
for DIESEL
and PETROL
ENGINES
MOTOR INDUSTRIES CO., LTD.,
BANGALORE
Sales Houses at:
BOMBAY-2: 41, Queen's Road
CALCUTTA-16: 91A, Park Street
MADRAS-2: 1/155, Mount Road
NEW DELHI-1: Ghaziabad Engg. Co.,
44, Janpath.


அவள்: ஏ மணி! வெளியில் போய் மழை நின்று விட்டதா என்று பார்த்துவா!
அவர்: டேய் பேபி! வந்து அத்தைக்கு ஒரு முத்தம் கொடு!
குழந்தை: ஏன், நான் இப்ப என்ன தப்பு செய்தேன்?
பஸ்ஸில் ஏகக் கூட்டம். குழந்தை சமத்தா பக்கத்தில் நின்ற பாகவதரின் அங்க வஸ்திரத்தை கெட்டியா பிடிச்சிண்டு வருது!
பார்! இப்ப கை இல்லே!
பார்! இப்ப கால் இல்லே!
பார்! இப்ப பல் இல்லே!
டமார்
முதலாளியும் சிப்பந்திகளும்
1
2
151



*In your hopes and joys*

lies our greatest inspiration. In sharing your faith and dreams, our greatest satisfaction!

Inspired by your courage, we at Pfizer-Dumex are constantly striving to produce more effective and purer drugs to help you on your way to recovery...to give you new hope...to bring health and happiness into your life again ...to make your world a better place to live in. Towards this we shall continue to work with dedication and perseverance!

Pfizer Science for the world's well-being

**PFIZER PRIVATE LIMITED**

---

தென்னகத்தின் தொழிற் பெருநகரமான கோவையில் இந்தத் தொழில் 1947 ஆம் ஆண்டு எங்கள் முதன் முயற்சி என்று தெரிவித்துக் கொள்ளப் பெருமைப் படுகிறோம். தற்போது அனேக இயந்திரங்கள் பலரால் இயங்கிறதும் எங்கள் ராதா போரிங் மெஷின்களின் சாதனைகளைச் சிறுபலூர் பஞ்சாயத்து கோபி சமூக நலத் திட்டம், குந்தா மின்சார நிலையத்திலும் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம். வீட்டு உபயோகத்திலிருந்து விவசாயம், பஞ்சாயத்துக்கள், முனிசிபாலிடிகள் வரை உங்கள் தண்ணீர்ப் பஞ்சத்தை ராதா போரிங் இயந்திரங்களால் தீர்க்க முடியும் என்பதை உறுதியாகக் கூறுகிறோம்.





தந்தி
கோர்பேரல்

# ராதா இண்டஸ்ட்ரீஸ்

100' அடி ரோடு, டாடாபாத், கோயமுத்தூர்-12

போன்
பேக்டரி- 2067
இருப்பிடம்-4756



# கிளி இல்லாக் கூண்டு

வை. சுப்பிரமணியம்

அந்த இடத்தை அடைந்தபோது நிலவு உதயமாகியிருந்ததைக் கண்டேன். அது எனக்குச் சற்றுப் பழக்கமான இடம்தான். முன்பு இரண்டு மூன்று தடவைகள் முகாமிட்டிருந்த போதும் அதே இடம்தான் அளிக்கப்பட்டிருந்தது. அந்த ஜன்னலருகில் இருந்த சிமெண்ட் மேடையும் அப்படியேதான் இருந்தது. கண்ட கண்ட இடங்களில் நாற்காலிகள் போடுவதற்குப் பதிலாக, எங்கள் இலாகாவின் சிக்கனக் கொள்கையை யொட்டிப் பல இடங்களில் நிரந்தரமாகச் சிமெண்ட் மேடைகளைக் கட்டிவிட்டிருந்தனர். இந்த ஏற்பாட்டில் சௌகரியமும் உண்டு; அசௌகரியமும் உண்டு. இந்த ஜன்னல் புறத்தைப் பொறுத்தவரை நான் இந்த ஆசனத்தைச் சௌகரியமாகவே கருதினேன்.

'கோட்'டையும் சட்டையையும் கழற்றிவிட்டு ஜன்னல் பக்கம் மேடைமீதுவந்து அமர்ந்து கொண்டேன். பிற்புறம் நோக்கியபோது என்னை அழைத்து வந்திருந்த வண்டியைச் சாய்த்து வைத்திருந்தது தெரிந்தது.

ஜன்னல் வழியே வெளிப்புறத்தைப் பார்த்துக் கொண்டிருப்பது எனக்கு அலுக்காத ஓர் அலுவல். இப்போது முழு நிலவு நீல வானத்தை நிறம் மாற்றப் புறப்பட்டது போல் பளிச்சென்று துலங்கியது. எதிரே பரந்து கிடந்த ஆற்றில் சற்று முன் புது நீர்க் குழம்பம் குழப்பிக்கொண்டிருந்த நீர்ப் பரப்பு நிலவின் முயற்சிக்குக் கட்டுப்பட்டதுபோல் வெளிறிட்டுக் கிடந்தது. ஆற்றைத் தாண்டி அப்பால் தெரிந்தவைகளில் கண்டிராக்டர் வீடு முதன்மையாயிருந்தது. இரு மாடிகளுக்கு மேல் மங்களூர் ஓடுகள் வேய்ந்த ஒற்றை அறை மறைப்பு எதுமின்றித் தெரியும். அந்த வீட்டைச் சூழ்ந்து இன்னும் சில ஓட்டுக் கட்டடங்களும், ரைஸ்மில்லின் பெரிய வெளிட்ட ஆஸ்பெஸ்டாஸ் கூரையும், அதன் பின்னால் தென்னை மரங்களும் தெரியும். அவை யெல்லாம் இப்போது நிலவு மெழுகிய சோபைச் சின்னங்களாய் அழகுறத் தெரிந்தன.

'புஷ்பா!' — இதன் உச்சரிப்புக்குரிய முறையில் என் உதடுகள் ஒரு முறை அசைந்தன. அதன்பின் ஒரு முறை; மூன்றாம் முறை நான் ஒலித்தது என் செவிகளிலேயே கேட்டது. வேறு யாரேனும் கேட்டிருப்பார்களோ என்று ஓர் ஐயம் என்னைத் திரும்பிப் பார்க்கத் தூண்டியது. கதவின் மேல் ஒரு சிறு சத்தம்; விரல் மடித்து 'டொக்'கென்று யாரோ தட்டினார்கள்.

''யாரது? உள்ளே வரலாம்!'' என்றேன் இரைப்புடன்.

கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்த உருவத்தைச் சிறிது பரபரப்புடனும் முன்னெச்சரிக்கையோடும் கவனித்தேன். அந்த டிவிஷன் சூபர்வைசர் வந்து கொண்டிருந்தார். இதுவும் வழக்கமானதுதான்; நான் முகாம் இட்டிருந்த சிறிது நேரத்தில் அவர் வந்து சம்பிரதாய சௌக்கியம் விசாரிப்பது முதலில் தொடங்குகிற படலம்.

''பிரயாணம் சௌகரியமாயிருந்ததா? குறித்த நேரத்தில் வண்டி வந்ததா?''

''ஓ! சௌகரியம்தான். ஆற்றங்கரை மேல் தார் ரோடையும், வானத்தில் மழையையும் நாம் எதிர்பார்க்காதவரையில் சௌகரியம்தான் ... இன்னும் எத்தனை நாளைக்குத் தார் போட்டுக் கொண்டிருப்பார்கள்?''

''சீக்கிரம் முடிந்து விடும். மழையினால் தான் இப்படி இழுத்துக் கொண்டு



போகிறது. இன்றைக்குத்தான் மழை இல்லே; ஒரு வாரமாக இந்தப் பக்கம் வானம் பொத்துக் கொண்டே ஊற்றுகிறது!''

''எனக்கு ஓலே வைத்து அழைத்திருப்பதிலிருந்து அது தெரிகிறதே! எத்தனுவது மைலில் கரைக்கு 'டேஞ்ச'ராம்? ரிவெட்மெண்ட் கட்டவேண்டியதுதானு? நாளேக்குப் போய்ப் பார்ப்போம்..... ஒன்று: இந்தக் குதிரை வண்டி வேண்டாம். எத்தனே மைலானுலும் நடந்து கூடப் போய் விடலாம். மண் கட்டிகளில் குதிரை காலேப் பெயர்த்துக் கொள்கிற கஷ்டத்தை இனி மேல் நான் பார்க்க மாட்டேன்.''

''அதற்கென்ன? மாட்டு வண்டியில் போகலாம். இரட்டைச் சோடையில் மாட்டு வண்டி சுலபமாகப் போகும்.''

''சரி; பார்ப்போம்.''

அவர் விடைபெற்றுக் கொண்டார்.

அறைக் கதவுக்குப் பின்னுல் அவர் உருவம் மறைந்ததைப் பார்த்த பிறகு திரும்பியதும் ஜன்னலுக்கு வெளியே புஷ்பாவின் உருவம் தெரிந்தது. உருவெளித் தோற்றம்தான். அத்துடன் பலப்பல எண்ணங்கள்....

முதன் முறை முகாமிட்டிருந்த சில நாட்களில் ஒரு நாள் ஆற்றங்கரையோடு நடந்து கொண்டிருந்தேன். என்னேத் தொடர்ந்தும் எதிர்த்தும் ஒரே பச்சை மணம். கரையோரத்தில் நாணல்கள், நொச்சி, ஆடு தொடா இலே ஆகியவற்றின் ஒன்று கலந்த மணம் ஆற்றின் புது நீர்ப்பரப்பையும் தொட்டுக் கொண்டு கமகமவென்று வீசியது. வயக் கணக்கில் மூங்கில் பொத்துக்கள் இட்ட சத்தத்தையும் தென்னே மட்டைகள் விசிறுற் போல் சலசலத்த சத்தத்தையும் மேவிக்கொண்டு சதங்கைகளின் சத்தம் முன்னேறிக் கேட்டது. தலே நிமிர்ந்து பார்த்தேன். வளேவிலிருந்து ஒரு வில் வண்டி வெளிப்பட்டு வந்து கொண்டிருந்தது.

என்னேத் தாண்டும்போதும், தாண்டிய பிறகும் வண்டிக்காரனின் கண்களும் உள்ளிருந்தவர்கள் இரண்டு பேர்களின் கண்களும் என்னேயே வெறித்துப் பார்ப்பது தெரிந்தது. மறு நிமிஷம் வண்டிக்காரன் வண்டியை நிறுத்திவிட்டு, பின்புறம் வந்து ''இஞ்சினீர் ஐயா போய்க்கிட்டிருக்காங்க; பாத்துட்டு வரேன்'' என்று அவர்களிடம் மெதுவான குரலில் கூறினுன். ஆயினும் எனக்குத் தெளிவாகக் கேட்டது.

வண்டிக்காரன் வேக நடையில் என்னேத் தொடர்ந்து முன்னுல் வந்து நின்று, ''எசமான், கும்பிடறேன். கண்டிராக்டர் ஐயா வீட்டு வண்டிதான் அது. அவங்க மகளும் ஆயாவும் போறுங்க. அவங்களே இறக்கிட்டு உங்களுக்குத்தான் வண்டி கொண்டார இருந்தேன்'' என்று கூறினுன்.

நான் வண்டி வேண்டாம் என்று சொல்ல இங்கிதமான வார்த்தைகளேத் தேடிக் கொண்டிருந்தபோது வண்டிக்குள்ளிருந்தவர்களும் இறங்கி வந்து என் முன்னே நிற்பதைக் கண்டேன்.



"எக்ஸ்க்யூஸ் மீ...." என்று ஆங்கிலத்தில் பேசத் தொடங்கிய குரலைக் கேட்டு நிமிர்ந்து வியப்புடன் பார்த்தேன். கண்டிராக்டரின் மகள்தான் பேசினாள்: "நீங்கள் நடந்து வரும்படி நேரிட்டது என்னால்தான். வண்டி வேட்டிருந்தீர்களாம். உடனே கட்டிக் கொண்டு போகும்படி அப்பா வண்டிக்காரனிடம் சொன்னார். நான்தான் ஓர் அவசர வேலையாகப் போக வேண்டியிருந்ததால் சாயங்காலம் அனுப்பலாம் என்று சொல்லிப் புறப்பட்டேன். இப்போது வேண்டுமானால் நீங்கள் வண்டியில் போங்கள். நானும் ஆயாவும் நடந்து போய்க் கொள்ளுகிறோம்."

"வேண்டாம். நாளைக்குப் பார்த்துக் கொள்ளலாம். நான் 'காம்ப்'புக்குக் கிளம்பிய போது என் தாயார் உடல் நிலை சரியில்லாமல் இருந்தார்கள். போய்ப் பார்த்து விட்டுக் காலையில் திரும்பலாம் என்று நினைத்தேன். நாளைக்குப் பார்த்துக் கொள்ளலாம்" என்று சொல்லிக் கொண்டு வார்த்தை முடிகிற சமயம் ஒரு முறை அவள் கண்களை ஏறிட்டு நோக்கினேன். சற்றுத் தொலைவில் வண்டிக் கட்டில் நிலைகொள்ளாமல் புருபுருத்த காளைகள் மாதிரி அவள் கண்களும் புருபுருத்துக் கொண்டு எட்டுத் திக்குகளிலும் சென்று மீண்டு கொண்டிருந்தன. பின்னர் அவள் விடை பெற்றுக் கொண்டு வண்டியைப் பார்க்கத் திரும்பினாள்.

விடுதிக்குச் சென்ற போது நன்றாக இருட்டி விட்டது. எனக்குரிய மாடி அறையில் மட்டும் பளிச்சென்று ஒரு விளக்கு உண்டு; மற்ற இடங்கள் இருளோடு குலவிக் கொண்டு கிடந்தன.

காலையில் சென்னையில் வெளியாகி, மாலையில் அங்கே புதிதாய்க் கிடைக்கும் செய்தித் தாளை எடுத்து வைத்துக் கொண்டு ஜன்னல் அருகில் உட்கார்ந்தேன். இரண்டு மூன்று செய்தித் தலைப்புக்களுக்குப் பிறகு பார்வை வெளியே நீள ஓடியது. கண்டிராக்டரின் வீடு மின்சார ஒளிக்கோலமாகத் தெரிந்தது. ஒளியைத் துழாவி மீண்ட கண்கள் வேறு இருக்கை கண்டு நிலைத்தன. கேட் அருகிலிருந்த மேடை மேல் அவள் உட்கார்ந்திருந்தாள். கைப் புத்தகத்தில் முகம் முற்றும் மறைந்திருந்தது.

நான் இருந்த அறைக்கு நேர் கீழாக ஆற்று நீர் மட்டும் சலசலக்காவிடில் அந்தக் காட்சி முழுதும் ஓர் ஓவியமே போல்தானிருக்கும். வெகு நேரம் அவள் முகம் சலனம் பெறவில்லை. புத்தகத்தை முடித்து விட்டுத்தான் தலை நிமிர்வாளோ என்று எண்ணிய என் மனத்தின் சிறு வேட்கையைத் திடீரென்று உணர்ந்ததும் என் உடல் சிலிர்த்தது.

நாலைந்து நாட்கள் தொடர்ந்து இதே காட்சிதான் நடந்து கொண்டிருந்தது.

அன்றைக்கு ஏதோ ஒரு மேற்பார்வை அலுவல் முடிந்து திரும்பிக் கொண்டிருந்தேன். நடப்பதை விரும்பி, எனக்காக வந்திருந்த வாகனத்தை முன்பே அனுப்பி விட்டு ஆற்றங்கரையோரம் நடந்துவந்து கொண்டிருந்தேன்.

ஓரிடத்தில் வேலியோரம் அவள் நின்று கொண்டிருந்தாள். தந்தத் துண்டம் போன்ற அவளது கரம் வேலி மேல் படர்ந்து எதையோ பறித்துக் கொண்டிருந்தது. என்னைக் கண்டதும் அவள் முகத்தில் ஒரு குறுநகை கழிந்தது.

"வாருங்கள், சார்! நீங்கள் என்ன இங்கே காம்ப் போட்டிருக்கிற அத்தனை நாட்களிலும் இந்த ராஜன் வாய்க்காலைக் காலடிகளால் அளந்தே கணக்கெடுத்து விடுவீர்கள் போலிருக்கிறதே!" என்றாள்.

இவ்வளவு சரளமான பேச்சை நான் எதிர்பார்க்கவில்லை. ஆனால் அப்படியொன்றும் அவள் பெண்மையைப் புறக்கணித்து, நாணத்தையும் அச்சத்தையும் ஏறக்கட்டியிருந்த இரண்டுங்கெட்டானாகவும் தோன்றவில்லை. படிப்பினால் ஏற்பட்டிருந்த நகர வாசனையும், அவள் தகப்பனுக்கும் எனக்கும் இலாகாபூர்வமாக ஏற்பட்டிருந்த உத்தியோகத் தொந்தமும் அவளை அப்படிச் சுதாவாகப் பேச வைத்தன என்பதைப் புரிந்து கொண்டேன்.



"ஏண்டா பையா உங்கப்பா உன் மாதிரிதான் இருப்பாரா?"

"இல்லே! அவர் இன்னும் வயசான வரா இருப்பார்!"

"நான் காலடிக் கணக்கு எடுப்பதாகக் கொண்டாலும் அது சரியா தவறு என்பதை நிரூபிக்கிற விசை உங்களிடம் இருக்கிறதே!" என்றேன்.

"எப்படிச் சொல்கிறீர்கள்?"

"நீங்களும் விடாமல் நடந்து கொண்டுதான் இருக்கிறீர்கள்!"

"அது எனக்குப் பதினைந்து வருஷப் பழக்கமாயிற்றே. நடுவில் படிப்புக்குப் போன ஐந்தாறு வருஷங்கள்தான் இந்தப் பழக்கம் இல்லாமல் விட்டிருந்தது."

பேசிக் கொண்டே அவள் கோவைப் பழங்களைப் பறித்து ஒரு பையில் போட்டுக் கொண்டிருந்தாள்.

"எதற்கு இந்தப் பழங்கள்?" என்று கேட்டேன்.

"கோவைப் பழம் எதற்கு முக்கியமாகப் பயன்படும்? நீங்கள் இஞ்சினீயராயிற்றே – சொல்லுங்களேன்!" என்றாள் அவள், கழுத்தை வளைத்துச் சிரித்தபடியே. அந்தச் சிரிப்பு ஒரு சித்திரத்தின் நிரந்தரச் சிரிப்பை நினைவூட்டியது.

"கோவைப் பழத்தைப் பற்றி இஞ்சினீரிங் காலேஜில் ஓர் அட்சரம் கூடச் சொல்லித் தரவில்லை. ஆனால் கிளிகள் இதைக் கொத்தி ருசித்துச் சாப்பிடும் என்று எனது ஐந்தாவது ஆறாவது வயதிலேயே தெரிந்து கொண்டிருக்கிறேன்."

"கிளிக்காகத்தான் இது. சரியாகச் சொன்னீர்கள்...."

"ஒரு கிளிக்கா இந்தப் பை நிறையப் பறிக்க வேண்டும்?"

"கொடுத்த மார்க்கை அழிக்க வேண்டும் போல் இருக்கிறதே! ஒரு கிளி என்று உங்களிடம் சொன்னேனா?"

"கிளிக்காகத்தான் என்று ஒருமையில் சொன்னால் ஒரு கிளி என்றுதான் அர்த்தம்.... எத்தனை கிளிகள் நீங்கள் வளர்க்கிறீர்கள்?"

"ஒரு டஜன் கிளிகள்!"

நான் ஒன்றும் புரியாமல் வேறு திசையில் வெறித்து நோக்கினேன்.

"எனக்கு ஏதாவது பைத்தியம் பிடித்திருக்கிறதோ என்று ஆராய்கிறீர்களா?"

சடக்கென்று திரும்பி, "நான் அப்படி ஒன்றும் நினைக்கவில்லையே!" என்றேன்.

"இது ஒன்றைச் சொன்னதால் மட்டும் நீங்கள் எதுவும் நினைக்காமல் இருக்கிறீர்கள் போலிருக்கிறது. நான் இன்னும் என்னென்ன வளர்க்கிறேன் என்று தெரிந்தால் நான் பைத்தியம் என்பதைத் தீர்மானமே செய்து விடுவீர்கள்....."

"அப்படி ஏன் சொல்லவோ நினைக்கவோ வேண்டும்?.... இன்னும் என்னென்ன?"

"சொல்லட்டுமா? மான் வளர்க்கிறேன். ஓஹோஹோ! ஒருமைதான் முதலில் வருகிறது; மான்கள், நாய்கள், பூனைகள், புறாக்கள், மயில்கள், மீன்கள், சீமை எலிகள்..... ஒன்றே ஒன்றை ஒருமையில்தான் சொல்ல வேண்டும். ஒரு புலிக் குட்டி....."

என் வியப்பு எல்லை கடந்து விட்டது. வேறு திசை எங்கிலும் நோக்காமல் அவளையே கூர்ந்து நோக்கினேன். அவள் தன் கண்களுள் இரண்டு வண்டுகள் வளர்த்து வருவதைக் கூறவில்லை. நானே கண்டு கொண்டேன். பறித்த ஒரு கோவைக் கனியைக் கை விரல்களிடையே பிடித்துக் கொண்டு சிரித்தபடி நின்றாள். சிரிப்பையும் சேர்த்து அவள் தோற்றமே இப்போது ஒரு முழுச் சித்திரம்! அவள் இதழ்கள் இரண்டு கோவைக் கனிகள்; கைவிரல்கள் எல்லாம் கோவைக் கனிகளே; பாதங்களில் என் கண் பதிந்தது. கோவை ரசம் பூசிய செந்தாளங்கள் என அவை விளங்கின.

"எங்கள் வீட்டுக்கு ஒரு நாளைக்கு வாருங்களேன். நீங்கள் காட்சிசாலை பார்க்காத குழந்தை என்று உங்களை அழைக்கவில்லை. ஆயினும் என் காட்சிசாலைக்குப் பார்வையாளரைச் சேர்க்கும் ஆர்வத்தில்தான் அழைக்கிறேன்...." என்றாள் அவள்.

அவள் வேலியோரம் முன்னேறத் தொடங்கினாள். காரியத்தில் கண்ணுயிருப்பது கண்டு நான் நகர்ந்தேன்.

அதன் பிறகு நான் அவள் வீட்டுக்குச் செல்லவே இல்லை. ஆனால் பிறகும் இரண்டு முறைகள் இப்படியே ஆற்றங்கரையில் அவளைச் சந்தித்து விட்டதால் எனக்கு அவர்கள் வீட்டுக்குச் செல்வதில் தயக்கம் இல்லை. தவிர, கண்டிராக்ட

ருடன் இலாகாப் பேர்வழியான நான் அப்படி ஒரு நெருக்கம் வைத்துக் கொள்வதையும் விரும்பவில்லை.

**சோ**டை நடுவில்தான் எனது இரண்டாவது முகாம் வாய்த்தது. இதற்கு இடையில் ஓடிய நாட்களில் அவளது நினைவு என் உள்ளத்தில் வான் நிறைந்த நட்சத்திரங்களின் பெருக்கம் போல் பெருகி விட்டது. மனக் கண்களால் அவளைக் காணாத நேரம் என் உள்ளம் எப்போதாவது மரத்த சில நிமிஷங்கள்தாம்.

இந்தத் தடவை நான் வந்து இரண்டு நாட்களாகியும் அவளைக் காண வில்லை. ஆற்றில் நீர் வற்றி மணல் சோடை விட்டிருந்தது. அக்கரைத் தொடர்புக்கு ஆற்றில் இறங்கியே போகலாம். இரவு நேரங்களில் கண்டிராக்டர் வீட்டு முகப்பில் ஒளி விளையாடுவதும் காணப்படவில்லை. நீல பல்பின் ரேகைகள் மட்டும் முனகிப் பெய்யும் மழைத் தாரைகள் போல் தோற்றம் காட்டின.

மூன்றும் நாளன்று இரவு எனக்குச் சாப்பாடு தயாராக இருப்பதாக ஆள் வந்து சொன்னதும் எழுந்த போது, வாசற்படியில் நிழல் தட்டியது கண்டு நின்றேன். அவனுடன் கூட வரும் ஆயா நின்றிருந்தாள். வாய் பேசாது உ·வலை என் முன் நீட்டிக் கொண்டிருந்தாள். அவள் கையில் ஒரு துண்டுக் காகிதம் தெரிந்தது. அதை வாங்கிப் பார்த்தேன்.

''புஷ்பா என்று போட்டிருக்கிறதே, யார்?'' என்று அவளிடம் கேட்டேன்.

''கண்டிராக்டர் மகள்தான். நீங்கள் போன தடவை வந்தபோது பார்த்திருக்கிங்களே.....''

நான் அவளுடன் பழகியிருந்தும் பெயர் அறிய வாய்ப்பில்லை. புஷ்பா! எவ்வளவு அழகான பெயர்! பெயரைச் சொல்லும்போதே புஷ்பம் போல் நினைவில் வருகிற அவளுடைய இப்போதைய நிலை...

''புஷ்பா எங்கே இப்போது?'' என்று கேட்டேன்.

''இரண்டாவது மாடிக்கு மேலே ஒரு தனி அறை இருக்கு பாருங்க, அதிலே இருக்கு. நான்தான் அதற்கு முன்னெல்லாம் துணை; இப்போ காவல்....''

''இதென்ன திடீரென்று? மனசுக்கு மிகவும் கஷ்டமாக இருக்கிறதே'' என்று எனக்கும் ஆயாவுக்குமாகப் பொதுவாகச் சொல்லிக் கொண்டு அந்தத் துண்டுக் கடிதத்தை இன்னொரு முறை படித்துப் பார்த்தேன் :

> ''இரண்டு நாட்களாக முகாம் விடுதியின் மாடி அறையில் விளக்கு எரிவது கண்டு நீங்கள் இருப்பதை உறுதிப்படுத்திக் கொண்டு இதை எழுதுகிறேன். நீங்கள் இங்கே வந்தால் உங்கள் உடம்பின் பொன் துகள்கள் உதிர்ந்து விடுமென்றோ என்னவோ வரமாட்டேனென்கிறீர்கள். நானும் வெளியில் விடப்பட மாட்டேன். இந்தக் கேள்விக்கு மட்டும் விடை எழுதி அனுப்புங்கள்.
>
> ஆற்று வெள்ளத்துக்கு அணைபோட முடிகிற உங்களால் உணர்ச்சி வெள்ளத்துக்கு அணை போட முடியுமா?
>
> மற்றவர்கள் என் சித்தப்பிரமை தெளியவில்லை என்று நினைப்பது போல் நீங்களும் நினைத்து விடாதீர்கள்.
>
> — புஷ்பா.''

''இப்போ அதைப் பார்த்தா நல்லா ஆயிட்ட மாதிரிதான் இருக்குங்க. அதுவும் அப்பாரு ரொம்பப் பிடிவாதக்கார மனுஷரா இருக்காருங்க. உள்ளாரயே போட்டுப் பூட்டி வை; பட்டணத்திலே யிருந்து டாக்டரை வரவழைக்கப் போகிறேன், அது இதுன்னு சொல்றாரு. ஒரு ஏற்பாடும் பண்ண மாட்டேங்கறாரு. நீங்க வந்து பார்த்தீங்கன்னு நல்லா யிருக்கும்'' என்று கூறினாள்.

நான் அந்தத் துண்டுக் கடிதத்தின் ஒரே கேள்விக்கு மனத்தத்துவ முறையில் அடியும் நுனியும் காணச் சிந்தித்துக் கொண்டிருந்தேன்.

''புஷ்பாவுக்குத் தகப்பனார் இருந்தும் இல்லாதவராகத்தான் இருக்கிறார் போல் இருக்கிறது!'' என்றேன்.



இதுவரை என்னிடம் அதிகம் பேசக் கூச்சப்பட்டுக் கொண்டு நின்ற ஆயா என்னுடைய இந்தக் கருத்துக்கு மேல் ஆரம்பித்தாள்:

''நீங்க சொல்றது சரிதாங்க. பெண்ணைப் பெத்துட்டாப் போதுமா? நிறையப் படிக்க வைச்சிருக்காரு. புஷ்பாவும் உலகத்திலேயே ஒரு அதிசயப் பொண்ணு மாதிரி என்னென்னவோ படிச்சு, என்னென்ன செய்துகிட்டிருக்கும் தெரியுமா? இவ்வளவு இருந்தும் என்னங்க பிரயோசனம்? அதுக்கு வேண்டிய வாழ்க்கையை அதுக்குக் கொடுக்க வேண்டியது பெத்தவங்க கடமை இல்லையா?''

''புஷ்பாவுக்கு வாழ்க்கை அளிக்க அவர் ஏன் முயற்சி எடுத்துக் கொள்ள வில்லை?''

''அவர் எதிலேங்க சேத்தி? அவருக்குப் பணம் சம்பாதிக்கிறதைப் பத்திய நினைப்புக்கே இருபத்திநாலுமணி நேரம் பத்தலே; பெண் கலியாணத்தைப் பத்தி நினைக்க எங்கேங்க நேரம்? புஷ்பா தன்னை மறந்து தன்னுடைய உலகத்திலே இயங்கிக்கிட்டிருக்கிறதைக் கடைசியிலே இடித்துக் காட்டிப் பேசினார் அவர். இப்படி யெல்லாம் பைத்தியம் பிடிச்சாப்போலக் கிளியும் பூனையும் வளர்த்துக்கிட்டிருந்ததனாலேதான் நிசமாகவே பைத்தியம் பிடிச்சுட்டுதுன்னு சொல்லிக் கத்தினாரே பார்க்கலாம் ஒரு நாள்! நான் அதிர்ந்து போயிட்டேங்க. நீங்க ஒரு தடவை வந்து புஷ்பாவைப் பாருங்க. அதுக்கு நல்லா ஆயிடுச்சு. வீணா அநியாயமாத்தான் அதை அறையிலே அடைச்சு வைச்சிருக்காருங்க!''

''இந்த மாதிரி நிலை ஏற்படக் காரணமாக ஏதாவது நடந்ததா, உனக்குத் தெரியுமா ஆயா?'' என்று கேட்டேன்.

''ஒரு நாள் ஒரு கிளி புஷ்பாவோட அஜாக்கிரதையாலே தப்பிப் போயிடுச்சுங்க. ஆஸ்திரேலியாவிலே யிருந்து வரவழைச்ச கிளியாம் அது. அது போனது முதலே ஒரு மாதிரியா குணம் மாறிச்சு புஷ்பாவுக்கு. அதைச் சாக்கா வைச்சு அதுக்குப் பைத்தியப் பட்டமே கட்டிட்டாரு அவங்க அப்பா....''

பழம் கனிந்தபின் எத்தனை நாளைக்குக் கனிவு நிலையிலேயே இருக்க முடியும்? அது நலிய ஆரம்பித்து விட்டது. ஓர் ஊசி முனைத் துவாரமே அந்தக் கனியை வீணடிக்கப் போதுமானது போல் கிளி பறந்த சம்பவம் புஷ்பாவின் மன முதிர்ச்சியை அதிர்ச்சியாக மாற்றி விட்டது! அவளுடைய நிலையின் சிகிச்சைக்கு அவளே தன் துண்டுக் கடிதத்தில் கோடி காண்பித்திருக்கிறாள்!

அப்போதே அவளைப் பார்க்கப் புறப்பட்டுச் சென்றேன்.

அறை முழுதும் இருள் விரட்டி ஒளியைத் தேக்கும் ஒற்றை விளக்கு போல் நடுவில் ஒரு நாற்காலியில் உட்கார்ந்திருந்தாள் அவள்.

''புஷ்பா!'' — முதன் முறையாக அழைத்ததால் என்குரல் ஏறி இறங்கிற்று.

அவள் நிமிர்ந்து கொண்டே கைப் புத்தகத்தை 'மடக்'கென்று மூடினாள்.

''உடம்பு எப்படி இருக்கிறது?''

"என் உடம்புக்கென்ன? சித்தம் எப்படி இருக்கிறதென்று கேளுங்கள். என்னைப் பொறுத்த வரை நான் நன்றாயிருக்கிறேன். என் தகப்பனாரின் நோக்கில் நான் இன்னும் பைத்தியமே. அதற்கு என்ன கணக்கு வைத்திருக்கிறாரோ? அரையோ, முழுசோ!"

என் மனம் சங்கடப்பட்டது. அவள் தெளிவாகப் பேசினாள். சித்தம் சரியாகாவிடினும், சராசரி மனித சுபாவத்துக்கு அது ஒரு படி மேலேயே இருந்தது.

"என் காட்சிச் சாலையை யெல்லாம் உங்களுக்குக் காட்ட வேண்டுமென்று எனக்கு ஆசையாயிருக்கிறது. ஆனால் எனக்குக் கட்டுப்பாடு இருக்கிறது, வெளியில் போகக் கூடாதென்று. நான் சிறை வைத்த கிளி ஒன்று பறந்து போய் விட்டது; உங்களுக்குத் தெரியுமா?"

"ஆயா சொன்னாள்."

"அந்தக் கிளியின் பிரிவு என்னை ஒரு மாதிரியாக மூன்று நாட்களுக்கு ஆக்கியிருந்தது என்பது உண்மைதான்; ஆனால் நான் சிறையிலிருந்த நிலையில் அதன் துக்கத்தை அநுபவித்துப் பார்த்து விட்டேன்."

"நான் உங்கள் தகப்பனாரைப் பார்த்துப் பேசுகிறேன், புஷ்பா. நீங்கள் இங்கே இருக்க வேண்டாம். வெளியில் வாருங்கள்; என்னோடு கொஞ்ச தூரம் ஆற்றங் கரையில் உலவி விட்டு வரலாம், புறப்படுங்கள்" என்றேன். என் உடல் இதைச் சொன்னபோது புல்லரித்தது.

புஷ்பா என்னை நிமிர்ந்து முகம் மலர நோக்கினாள். மலர்ந்த கண்களிலும் ஒரு மருட்சி. ஏக்கத்தின் இழையோட்டம்.

"வேண்டாம், ஸார்; எக்ஸ்க்யூஸ்மீ" என்றாள். நான் வற்புறுத்தி அவளை அழைத்தேன்.

"நீங்கள் இந்தச் சிறையிலிருந்து என்னை விடுதலை செய்யத் துடிக்கிறீர்கள்; இதுகாறும் தடித்த பெண்மைக் கூச்சத்தைச் சிறிது ஒதுக்கி விட்டுச் சொல்கிறேன்: என் தகப்பனார் என்னை வாழ்வுக்குள்ளேயே சிறை வைத்து விட்டுத் தன் கடமையை மறந்திருக்கிறாரே. அதற்கு நீங்களோ நானோ என்ன செய்ய முடியும்?" என்றாள் புஷ்பா.

ஒரு நிமிஷம் யோசிக்க வேண்டியிருந்தது எனக்கு.

"நான் சொல்கிற பதிலுக்காக என்னைத் தவறாக நினைத்துக் கொள்ள வேண்டாம். இந்த விடுதலைக்குப் பொறுப்பு எடுத்துக் கொள்வது போல் நான் உங்களுடைய வாழ்வுக்கும் வரவேற்பு அளிக்க முன் வருகிறேன்...." என்றேன். தூண்டிய திரிபோல் புஷ்பா உயிர் சிந்த ஒரு முறை சிரித்தாள். பிறகு அவள் என்னோடு வெளியில் வந்தாள்.

ஒரு மணி நேரம் ஆற்றங்கரையோடு உலவி விட்டு, பழைய நினைவுகளில் அமிழ்ந்து புஷ்பா அமுதம் வழங்குவது போல் பேசியதையும் அநுபவித்து விட்டு அவளோடு திரும்பினேன்.

"இருபத்தி நான்கு வருஷங்களுக்குப் பிறகு வந்த இந்த நாள் என்னால் தாங்க முடியாத அளவுக்கு அதிசயத்தை ஏற்படுத்தியிருக்கிறது!" என்று சொல்லி விட்டுப் புஷ்பா வீட்டு வாசலில் தயாராக நின்றுகொண்டிருந்த ஆயாவுடன் உள்ளே போனாள்.

ஆறு மாதங்கள் வரை எனக்கு அந்த ஊரில் முகாமிட வாய்ப்பில்லை. என் நினைவு புஷ்பாவைச் சுற்றியே இருந்தது. முன் போல் புதிதாகப் புஷ்பித்த புஷ்பம் போல் அவள் அங்கே வளைய வந்து கொண்டிருப்பாள். அவளும் அவள் மயிலும் நிற்கிற காட்சி, ஒரு சமயம் வண்ணப் புறாக்கள் வளையம் வளையமாக மேலும் கீழும் இறங்கிப் பறந்து கொண்டு அவள் இறைத்துள்ள தினியைக் கொத்தும் காட்சி தோன்றும்; அவள் இப்போது வாழ்க்கையும் பெறப் போகிற நம்பிக்கை பெற்று விட்ட முழுமைப் பெண்!

இந்த நினைவுகளின் தெம்பில் இன்று கிடைத்த முகாமையும் சாக்கிட்டுக் கொண்டு இங்கு வந்தேன். புறாக்கள் இறுதியாக ஒரு முறை சடசடத்து விட்டுக் கூண்டுக்குள் அடைவது போல் என் நினைவுகளினின்று நான் மீண்டபோது—

எதிரே பளிச்சென்று ஏதோ மின்னியது. எதிர் வீட்டு முகப்பின் நீல விளக்குத்தான். நடுவில் அணைந்ததை நான் கவனிக்கவில்லை. மீண்டும் இப்போது 'போகஸ்' விளக்குகளின் வெண்ணொளியும் நீல ரேகைகளும் கலந்து ஒரு புதிய மோகன ஒளியை ஏற்படுத்தின. அந்த ஒளியிடையே ரோஸ் நிறம் தெரிந்தது. அந்த நிறம் மேல் கவிய, முகம் புத்தகத்துள் கவிய அவள் அங்கே காணப்பட்டாள். 'விருட்'டென்று நான் எழுந்து விட்டேன். ஆறு மாதங்களாக நான் தலை காட்டாததற்குரிய கேள்விக்குப் பதில் தயாரிக்க முனைந்தது மனம்.

நின்று கொண்டு ஜன்னல் வழி அந்தக் காட்சியில் லயித்திருக்கையிலேயே என் கண்கள் கூசாயின. உள்ளிருந்து வேகமாக வெளி வந்த ஒரு வாலிபன் அந்தப் புத்தகத்தை 'வெடுக்'கென்று பிடுங்கிப் பின்புறம் மறைத்துக் கொண்டு அவள் முகத்துக்கெதிராகக் குனிந்தான். அவள் தலையும் தாழ்ந்தது. இருவருடைய சிரிப்பொலியையும் காதுகள் கேட்கவில்லையே தவிர அதன் அளவு, மாத்திரை, எதிரொலி எல்லாவற்றையும் என் மனம் கேட்டது.

'புஷ்பா' என்று ஒரு முறை என்னுள் அழைத்துக் கொண்டேன். அழைப்பு அல்ல அது; அரற்றல்தான்!

அவள் எழுந்து அந்தப் புத்தகத்தை அவனிடமிருந்து பறிக்க முயன்றாள்... அவன் தலைக்கு மேல் அதை வைத்துக் கொண்டு பாய்ச்சக் காட்டினான். என் மனம் கூட அந்த ஏமாற்றத்தினால் கரைந்தது. இல்லை, ஒருவழியாக அருவியாகியிருந்த மனம் மலை மேலிருந்து சரிகிற கட்டம். இரண்டு பேரும் அந்த ஒளியில் விளையாடியது சில விநாடிகளில் என் நெஞ்சில் ஏறிக்கொண்டு திகைப்பது போல் இருந்தது. இரவு முழுதும் விகாரம் பொழிந்து வேதனை வளர்த்த பொழுதாகவே கழிந்தது.

விடியற்காலையில் மனசுக்குள்ளிருந்த பரபரப்பினால் கால்கள் தாமாகவே ஜன்னல் புறம் சென்றன. கண்டிராக்டர் வீட்டு முகப்பில் என்ன நடக்கிறது என்று பார்க்கிற வேகம்! முன்னிரவில் புரியாததொரு புதிராகக் காணப்பட்டது இன்னதென்று இப்போது புரிந்தது. மனம் நுணுக்குற்று, ஒன்றையும் நிதானிக்க முடியாமல் தவித்தது.

கீழே பார்த்தபோது ஆயா என் விடுதியின் முன்புறம் வாதா மரத்தைச் சுற்றிப் பெருக்கிக் கொண்டிருந்தாள். நான் வேகமாகக் கீழிறங்கிச் சென்றேன். என்னைக் கண்டதும் கையிலிருந்ததைக் கீழே போட்டு விட்டுக் கும்பிட்டாள்.

"நான் இங்கேதாங்க வேலை பார்க்கிறேன், டிபார்ட்மெண்ட் சம்பளம்!"

"புஷ்பாவுக்குக் கலியாணம்—"

"அங்கேதாங்க நடக்கணும்!" என்று ஆயா மேல் நோக்கிக் கும்பிட்டாள்.

"என்ன ஆயா?" — திகைத்தேன்.

"நம்மை ஏமாத்திட்டுப் புஷ்பா...."

"என்ன நேர்ந்தது? எப்படி? ஏன் ஆயா அப்படிப் பைத்தியம் பிடித்தாற் போல் உளறுகிறே? நான் புஷ்பாவை நேற்றிரவு பார்த்தேனே! வீட்டு முன்னால் இன்னும் யாருடனோ!...."

ஒரு கணம் ஆயாவின் கண்கள் நிதானித்து என் பக்கம் திரும்பின.

"நீங்க பார்த்தது புஷ்பா இல்லே. அது ஜயந்தி! புஷ்பா கூடப் பிறந்தது. இரட்டைப் பிறவிங்க!"

மின் வெட்டும் எச்சரிக்கையின்றி இடி கேட்டது போல் அதிர்ந்தேன். என் கால்கள் தொய்வது போல் உணர்ந்தேன். வாதா மரக்கிளையைப் பிடித்துக் கொண்டு, "என்ன நேர்ந்தது? எப்படி ஆயா இது ஏற்பட்டது?" என்றேன்.

"நீங்க நினைக்கிற மாதிரி அது ஒண்ணும் பண்ணிக்கிலேங்க. அது ரொம்பப் புத்திசாலியாச்சே! தெய்வத்தையே அது கூப்பிட்டிருக்கும் போலிருக்கு. முதல் நாள் புஷ்பாவாகப் படுக்கையிலே படுத்தது; மறு நாள் தெய்வமாக் கிளம்பிப் போயிட்டுதுங்களே...." என்று மேலும் ஏதோ பேசிக் கொண்டிருந்தாள்.

சிறிது நேரம் சென்றபின் நான் மறுபடியும் என் அறைக்குத் திரும்பினேன்.

எதிர் வீட்டு வாசலில் வண்டி வந்து நின்றதைச் சதங்கைச் சத்தம் கேட்டுத் தெரிந்து திரும்பினேன். வண்டிக்குள் ஏற நேற்று நான் கண்ட வாலிபன் வந்து நின்றான். புஷ்பாவின் உருவில் ஜயந்தியும் வந்து நின்றாள். இவள் வேறு என்று எப்படிக் கொள்ள முடியும்? ஓர் அணு எங்காவது படைப்பில் பிசகியிருந்தால் தானே? இருவரையும் ஏற்றிக் கொண்டு வண்டி கிளம்பியது.

'புஷ்பா' என்று மீண்டும் என் மனம் அரற்றியது. அந்த அறை துயரம் நிரம்பக் காத்திருந்தது போல் தோன்றியது.

சற்று முன் கீழே ஆயா தன் வார்த்தைகளால் கூறியது இப்போதுதான் என் காதுகளில் தன் ஒலி வடிவில் கேட்டது. அதன் அடக்கம் இதுதான். இரட்டைப் பிறவிகளாக இருந்த புஷ்பாவையும் ஜயந்தியையும் கண்டிராக்டர் திருஷ்டிப் பட்டு விடப் போகிறதே என்று பிரித்து, ஜயந்தியைப் பட்டணத்தில் உறவினர் வீட்டில் வைத்திருந்தார். புஷ்பாவின் பிரிவு அவர் கண்களைத் திறந்து, மூன்று மாதங்களில் ஜயந்திக்குக் கலியாணத்தை நடத்தி வைக்கச் செய்தது....

துயரில் கரைந்து இறுகியபின் என் உள்ளம் எண்ணியது: இரண்டு உடல்களில் பகிர்ந்து புகுந்த உயிரின் ஒரு பாதி வாழ்க்கையை இன்னொரு பாதிக்குத் தியாகம் செய்து மறைந்தது. எஞ்சியுள்ள என்னைப் பொறுத்த வரையில் நான் வெறும் கூண்டுதான்!


புனித ஸ்நானம் செய்து
புத்தாடை உடுத்தி இருக்கும்
இந்நன்னாளில் எமது
தீபாவளி
வாழ்த்துக்கள்!
மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல்
கார்ப்பொரேஷன் லிமிடெட்
மேட்டூர் அணை R. S. சேலம் ஜில்லா
மானேஜிங் ஏஜெண்ட்ஸ்:
சேஷசாயி பிரதர்ஸ் பிரைவேட் லிமிடெட்

# ஐ.ஏ.எஸ். மாப்பிள்ளை

நாடோடி




காட்சி 1

தொழிலதிபர் அருணாசலம்: இதோ பார்! கண்ட ஜாதகத்தைக் காண்பித்து என் கழுத்தை அறுக்காதே. என் பெண்ணை ஐ. ஏ. எஸ். மாப்பிள்ளைக்குத்தான் தரப் போகிறேன். ஆகவே ஐ. ஏ. எஸ். என்ற மூன்று எழுத்துக்கள் இருந்தால் பாரு. இல்லாவிடில் விட்டுவிடு.

அவர் மனைவி பாகீரதி: எஸ் எஸ் எஸ்.

அருணாசலம்: (கோபத்துடன்) என்ன எஸ் எஸ். என்று சொல்லிப் பழிக்கிறாய்? நான் ஒரு 'எஸ்' சொன்னால் நீ மூன்று 'எஸ்' சொல்லுகிறாயே!

பாகீரதி: நான் ஒன்றும் உங்களைப் பழிக்க வில்லை. நீங்கள் சொன்னதற்கு எஸ் எஸ் எஸ். அதாவது சரி, சரி, சரி என்று மூன்று தடவை சொன்னேன்.

அருணாசலம்: உன் வேடிக்கையையெல்லாம் ஒரு பக்கமாக மூட்டை கட்டிவை. நான் சொல்வதை முழுதும் கேள். எந்த ஜாதகமாக இருந்தாலும் பிள்ளையாண்டான் பெயருக்குப் பின்னால் ஐ. ஏ. எஸ். என்ற இந்த மூன்று எழுத்துக்கள் இருக்கின்றனவா, பாரு. இல்லாவிடில் ஜாதகத்தைத் தூக்கி அப்பால் எறிந்து விடு.

பாகீரதி: எதற்காக ஜாதகத்தைத் தூக்கி அப்பால் எறியணும்? உங்களுக்கு வேண்டாத ஜாதகங்களை உங்கள் அக்காவுக்குக் கொடுத்தால் ஆச்சு. அவரும் தானே தம் பெண்ணுக்கு மாப்பிள்ளை தேடிக் கொண்டிருக்கிறார்?

அருணாசலம்: எண்டியம்மா! அக்காவோடு இருக்கிற சண்டை போதாது என்று புதுச் சண்டையொன்று இழுத்துக் கொள்ளச் சொல்லுகிறாயா? முன்னொரு சமயம், அளவு சின்னதாகத் தைத்து விட்டான் என்பதற்காக, நம் பெண்ணுக்காகத் தைத்த பட்டுச் சட்டையை அவள் பெண்ணுக்குக் கொடுக்கப் போக,' நீங்கள் கட்டிக் கிழித்த பழசையெல்லாம் வாங்கிக் கொள்ளும் அளவுக்கு நாங்கள் ஏழையாகப் போய் விடவில்லை' என்று அதை நம் முகத்தில் தூக்கி எறிந்தாளே, அதை நான் மறந்து விட்டேன் என்று நினைத்தாயா?

பாகீரதி: வெகு அழகாக இருக்கிறதே, நீங்கள் சொல்வது! பட்டுச் சட்டையைக் கொடுப்பதும், ஜாதகங்களைக் கொடுப்பதும் ஒன்றாகி விடுமா?

அருணாசலம்: ஒன்றாகுமோ, ஆகாதோ எனக்குத் தெரியாது. இந்த வம்பெல்லாம் நமக்கு எதற்கு? நான் சொல்லுவதை நீ கேளு. ஐ. ஏ. எஸ். என்று மூன்று எழுத்து இருந்தால் பாரு. இல்லாவிட்டால் ஜாதகத்தைத் தூக்கி அப்பால் எறிந்துவிடு.

பாகீரதி: நல்ல வேளை, எங்கப்பா இந்தக் கோணங்கியெல்லாம் பார்க்கவில்லை. பார்த்திருந்தால் —

அருணாசலம்: ஏன்? பார்த்திருந்தால் எனக்கும், உனக்கும் கலியாணம் ஆகியிருக்காது என்று இடித்துக் காட்ட விரும்புகிறாயா! ஏன், எனக்கு என்ன கெட்டுப் போச்சு! எனக்கு என்ன அழகு இல்லையா, பணம் இல்லையா?

பாகீரதி: யார் இல்லை என்று சொன்னீர்கள்? ஆனால் படிப்பு?

அருணாசலம்: நான் எஸ். எஸ். எல். சி.க்கு மேல் எட்டிப் பார்க்கவில்லை என்பது உண்மைதான். அதனால் என்ன கெட்டுப்போச்சு? இன்று நான் பிஸினஸில் சம்பாதிக்கிற அளவு நாளைக்கு உன் ஐ. ஏ. எஸ். மாப்பிள்ளைகூடச் சம்பாதிக்க மாட்டானாக்கும்! ஏன், இன்று நான் ஐ. ஏ. எஸ். மாப்பிள்ளைதான் வேண்டும் என்று கண்டித்துச் சொல்லுகிறேனே, நாளைக்கு உன் ஐ. ஏ. எஸ். மாப்பிள்ளையினாலேயே தன் பெண்ணுக்கு ஐ. ஏ. எஸ். மாப்பிள்ளைதான் வேண்டும் என்று சொல்லும் அளவுக்குப் பணம் சேர்க்க முடியுமா?

பாகீரதி: அப்படியிருக்க, எதற்காக ஐ. ஏ. எஸ். ஐ. ஏ. எஸ். என்று அடிச்சிண்டு, வந்த ஜாதகத்தையெல்லாம் ஒதுக்கித் தள்ளறேளாம்?

அருணாசலம்: என்ன இப்படிப் பேசறே? என்ன இருந்தாலும், ஐ. ஏ. எஸ்., ஐ. ஏ. எஸ்.தான். என்ன பணம் இருந்தாலும், நாளைக்குச் சர்க்காரிலே ஏதாவது காரியம் ஆகணுமானால் இந்த ஐ. ஏ. எஸ்.ஸுக்கு முன்னாலேதானே கையைக் கட்டிக் கொண்டு நிற்கணும்?

மனைவி: சரி, எப்படியாவது போங்கோ. ஐ. ஏ. எஸ். மாப்பிள்ளையைத்தான் பாருங்கோ, அல்லது அதற்கும் மேலே உசத்தியான மாப்பிள்ளையைத்தான் பாருங்கோ. நான் வேண்டாம் என்று சொல்லவில்லை.

காட்சி 2

அருணாசலத்தின் நண்பர்: என்ன ஐயா! குழந்தைக்கு வயசாகிக்கொண்டே போகிறது. நீர் வீட்டில் வந்த ஜாதகங்களையெல்லாம் ஐ. ஏ. எஸ். இல்லையென்று தூக்கி எறிந்து கொண்டே போகிறீராமே!

அருணாசலம்: தூக்கி ஒன்றும் எறியவில்லை. எல்லாவற்றையும் அகராதி வரிசையில் பைல் பண்ணித்தான் வைத்துக் கொண்டு போகிறேன்.

நண்பர்: ஏன், அதை வைத்துக் கொண்டு ஏதாவது பிஸினஸ் பண்ண



லாம் என்று? நீர்தான் எதையும் பிஸினஸ் பண்ணிப் பணம் பண்ணுகிறவராச்சே! கேட்கிறவர்களுக்கெல்லாம் உமக்கு வந்த ஜாதகங்களைக் கொடுத்தே பணம் பண்ணி விடுவீரே?

அருணாசலம்: ஏன் அதில் என்ன தப்பு? நியாயமாகப் பார்த்தால் இந்தக் காலத்தில் "எம்ப்ளாய்மெண்ட் எக்ஸ்சேஞ்ஜ்' மாதிரி யாராவது 'ஜாதக எக்ஸ்சேஞ்ஜ்' கம்பெனி ஆரம்பித்தால் தேவலை என்று தோன்றுகிறது. வேறு யாரும் ஆரம்பிக்கா விட்டால் நான் ஆரம்பிக்கலாம் என்று நினைக்கிறேன்.

நண்பர்: கலியாணத்தைப் பற்றிக் கேட்டால் பிஸினஸுக்குப் போய் விட்டீரே! பிஸினஸில் பணம் பண்ணிக் கொண்டிருக்கும் நீர் பிஸினஸ் மாப்பிள்ளையாகத்தான் பார்த்தால் என்ன? எதற்காக ஐ. ஏ. எஸ். மாப்பிள்ளைதான் வேண்டும் என்று கேட்கிறீர்?

அருணாசலம்: ஏன் ஐயா! இத்தனை பணத்தை வைத்துக் கொண்டு நானே ஐ. ஏ. எஸ். மாப்பிள்ளை பார்க்கவில்லையென்றால், நாளைக்கு நீங்கள் என்னைக் கஞ்சன் என்று பழிக்க மாட்டீர்களா?

நண்பர்: ஆமாம். எல்லாருமே ஐ. ஏ. எஸ். மாப்பிள்ளைதான் வேண்டும் என்று கேட்டால், ஐ. ஏ. எஸ். ஸுக்கு எங்கே போகிறது? ஒன்று வேண்டுமானால் இந்தச் சர்க்கார் பண்ணலாம். கலியாண மார்க்கெட்டில் ஐ. ஏ. எஸ்.ஸுகளுக்கு இருக்கும் கிராக்கியை உத்தேசித்துத் தங்கள் பரீட்சைகளைச் சற்றுத் தளர்த்தி நிறைய ஐ. ஏ. எஸ். களைத் தயாரிக்கலாம். ஒவ்வொரு ஐ. ஏ. எஸ்.ஸிடமிருந்தும் வரதட்சிணை வரி என்று ஏதாவது கறக்கலாம்.

அருணாசலம்: ஏன் ஐயா! இருக்கிற வரியெல்லாம் போதாது என்று புது வரி ஒன்று போடச் சர்க்காருக்குச் சொல்லிக் கொடுக்கிறீரா! மெள்ளப் பேசும். மொரார்ஜி தேசாய் காதில் விழுந்து விடப் போகிறது!

நண்பர்: சரி, அது இருக்கட்டும். இப்படி எல்லா நல்ல ஜாதகங்களையும் வேண்டாம் என்று தள்ளி வருகிறீரே, பெண்ணுக்கு எப்பொழுதுதான் கலியாணம் ஆகிறது என்று நினைத்தீர்?

அருணாசலம்: எல்லாம் தன்னைப்போல் ஆகும். ஆனால் ஒன்று மாத்திரம் நிச்சயம். பையன் பெயருக்குப் பின்னால் ஐ. ஏ. எஸ். என்று மூன்று எழுத்துக்கள் இருந்தால்தான் கலியாணம்!

## காட்சி 3

அருணாசலம்: ஏண்டியம்மா, என் பெண்ணுக்கு ஐ. ஏ. எஸ். மாப்பிள்ளை கிடைப்பானோ என்று சந்தேகப்பட்டாயே. இதோ, இன்று தரகர் கொண்டு வந்து கொடுத்த ஐ. ஏ. எஸ். ஜாதகம் மிகவும் பொருந்தியிருப்பதாக ஜோசியர் சொல்லுகிறாரே!

பாகீரதி: ரொம்ப நல்லதாகப்போச்சு. ஐ. ஏ. எஸ். மாப்பிள்ளை கிடைத்தால் எனக்கும் பெருமைதானே? அப்படியானால் உடனேயே அவர்களுக்கு எழுதி, மேற்கொண்டு நடக்க வேண்டிய காரியங்களைப் பாருங்கோ.

அருணாசலம்: பின் நான் பார்க்காமலா இருப்பேன்? எல்லாம் ஜோசியர் வீட்டிலிருந்து நேரே ஆபீசுக்குப் போய், அங்கிருந்து டில்லிக்கு டிரங்கால் பேசியாச்சு! இத்தனை நாழி என் டில்லி ஏஜண்ட் அவர்கள் வீட்டில் போய்த் தகவல் விசாரித்துக் கொண்டிருப்பான். பையன் ஐ. ஏ. எஸ்.தானா என்று விசாரித்து எனக்கு உடனே டிரங்க்கால் பண்ணும்படி சொல்லியிருக்கிறேன்.

[டெலிபோன் மணி அடிக்கிறது]

முக்கால்வாசி அது டிரங்க்காலாகத்தான் இருக்கும். ஹல்லோ.... எஸ், எஸ், இது 72446தான். டிரங்க்காலா... சரி, கனெக்ட் பண்ணுங்கோ..... யாரு, நாகராஜனா! என்ன, போய் விசாரித்தாயா! வாசலிலேயே போர்டு போட்டிருக்கிறதா?" "மணி ஐ. ஏ. எஸ்." என்றா?.... ரொம்ப சரி. அதனால் நீ உள்ளே போய் விசாரிக்கவில்லையாக்கும்! அதுவும் சரிதான்.... நாம் ரொம்ப ஆவலைக் காண்பித்தால் அவர்கள் வரதட்சிணை ஏகத்தாளுகக் கேட்க ஆரம்பித்து விடுவார்கள்.... ஆகவே நீ ஒன்றும் அவர்களைப் போய்ப் பார்க்க வேண்டாம். அவர்கள் ஜாதகத்திலேயே அவர்களுடைய விலாசம் இருக்கிறது. நான் அவர்களுக்கு எழுதிக் கொள்கிறேன்.... சரி, பிஸினஸ் எல்லாம் எப்படி இருக்கிறது? .... ஏன், வர, வர, உன்னிடமிருந்து வரும் ஆர்டர்கள் குறைந்து கொண்டிருக்கின்றனவே? ....என்ன, வீட்டில் மனைவிக்கு உடம்பு சரியில்லையா! அதற்கும் பிஸினஸுக்கும் என்னப்பா சம்பந்தம்! மனைவியை ஏதாவது ஆஸ்பத்திரியில் சேர்த்துவிட்டு, உன் வேலையைக் கவனிப்பாயா...?

பாகீரதி: என்னென்னு! அந்தப் பிள்ளையாண்டானை இப்ப போய் இப்படிக் கோபிச்சுக்கிறேள்? அந்தப் பெண் பிள்ளையாண்டிருக்கிறாள் என்று போன மாதம் தான் அந்தப் பிள்ளையாண்டான் எனக்கு எழுதி யிருந்தான். அதுதான் பாவம், அவன் பிஸினஸைச் சரியாகக் கவனிக்கவில்லை என்று நினைக்கிறேன்.

அருணாசலம்: சரி, சரி, நீ என் பிஸினஸில் குறுக்கிட வேண்டாம். அது இருக்கட்டும். இந்த டில்லி ஐ. ஏ. எஸ். பிள்ளையாண்டானைப் பற்றி என்ன சொல்லுகிறாய்!

பாகீரதி: நான் சொல்லுவதற்கு என்ன இருக்கிறது! ஐ. ஏ. எஸ். பிள்ளையாண்டான் தான் வேண்டும் என்று பிடிவாதம் பிடித்தேள். இதோ ஐ. ஏ. எஸ். பிள்ளையாண்டானே கிடைத்து விட்டான். அவனைக் கூப்பிட்டுப் பெண்ணைப் பார்க்கச் சொல்லுங்கோ. அவனுக்கும் பெண்ணைப் பிடித்திருந்து, நம் பெண்ணுக்கும் அவனைப் பிடித்திருந்தால், அவர்கள் என்ன கேட்டாலும் மாட்டேன் என்று சொல்லாமல் கலியாணத்துக்கு ஏற்பாடுபண்ணுங்கோ!

அருணாசலம்: ஏன், நம் லலிதாவைக் கல்யாணம் பண்ணிக் கொள்வதற்கு அவனுக்குக் கசக்குமா என்ன?

பாகீரதி: உங்கள் கண்ணுக்கு உங்கள் பெண் ரதியாகத் தோன்றலாம். ஆனால் அவன் கண்ணுக்கு அப்படித் தோன்ற வேண்டாமா!

அருணாசலம்: ஆமாம், பெண்ணைப் பார்த்துத்தான் சம்மதம் தெரிவிக்கப் போகிறானாக்கும்! எல்லாம் நான் என்ன கொடுக்கப் போகிறேன் என்பதைக் கொண்டும், அதற்குப் பிறகு தொடர்ந்து என்னிடமிருந்து என்ன கறக்க முடியும் என்பதைக் கொண்டும் தான் அவன் சம்மதம் தெரிவிக்கப் போகிறான்.




ஆஹா...
என்னே ஆரோக்கியமளிக்கும்
புத்துணர்ச்சி, கோலினாஸின்
பாதுகாக்கும் நுரையிலே
சுறுசுறுப்பாக வாழ்பவர்கள் கோலினாஸைத் தேர்ந்தெடுக்கிறார்கள்..ஏனெனில், நுரைக்கும் தன்மையுள்ள கோலினாஸ் மட்டுமே பற்சிதைவு மற்றும் வாய்நாற்றத்திலிருந்து இரவும் பகலும் பாதுகாப்பளிக்கிறது. ஆகையால் கோலினாஸ் சூப்பர் ஒயிட்டை உங்களுடைய பற்பசையென்று நிச்சயப்படுத்திக்கொள்ளுங்கள்.
தலைநிமிர்ந்த புன்சிரிப்பு–அது கோலினாஸின் புன்சிரிப்பு
அல்லது, வீரியமுள்ள குளோரோபில்லின் களிப்பூட்டும் புத்துணர்ச்சியை நீங்கள் விரும்பினால், கோலினாஸ் குளோரோபில் வேண்டுமென்று கேளுங்கள்.
Kolynos
Kolynos
SUPER WHITE DENTAL CREAM
பற்சிதைவைத் தடுக்கிறது. உங்கள் மூச்சிலே மணம்கமழச் செய்கிறது. உங்கள் பற்களை வெண்மையாக்குகிறது.
Registered User: GEOFFREY MANNERS & CO. LIMITED


டினோபால்தான் ஆடைகளுக்கு
அதிவெண்மையை
அளிக்கிறதென்பதை
புத்திசாலிகளான
தாய்மார்கள்
நன்கு அறிவார்கள்

பாகீரதி: எதற்காக அந்தப் பிள்ளையாண்டான் தலையைப் போட்டு உருட்டறேள்? எல்லாம் அந்தக் காலத்தில் நீங்களும் அப்படித்தான் இருந்தீர்கள். நீங்கள் மாத்திரம் எங்கப்பா எவ்வளவு பணம் வைத்திருக்கிறார் என்று பார்க்காமல் என்னைப் பார்த்துக் கலியாணம் பண்ணிக் கொண்டேளாக்கும்! நீங்கள் தான் பதினாறு வயதிலேயே பிஸினஸ் ஆரம்பித்து விட்டதால், என்னை உங்கள் தாயார் பார்த்தாலே போதும் என்று உங்கள் தாயாரை அனுப்பி விட்டுப் போகாமல் இருந்து விட்டேளே!

அருணாசலம்: சரி, சரி. அந்தப் பழங் கதையெல்லாம் அப்புறம் பேசிக் கொள்ளலாம். நான் ஆபீஸ் போகிறேன். அங்கிருந்தே டில்லிக்கும் கடிதம் எழுதிப் போட்டு விடுகிறேன்.

## காட்சி 4

அருணாசலம்: என்ன, பிள்ளையாண்டானைப் பார்த்தாயா, எப்படி இருக்கிறான்? நமக்குச் சம்மதம் என்றால் அவர்களுக்கும் சம்மதம்தான்.

பாகீரதி: ஏன், பிள்ளை மூக்கும் முழியுமாக ராஜா மாதிரி இருக்கிறான்.

[நண்பர் வருகிறார்.]

நண்பர்: ஆனால் —

அருணாசலம்: ஆனால் என்ன? தைரியமாகச் சொல்லுமேன்!

நண்பர்: பையன் பெரிய ராங்கிக்காரப் பேர்வழியாக இருப்பான் போல் இருக்கிறது. அவன் பெட்டி படுக்கை, தோல் பை, எதில் கண்டாலும் மணி ஐ. ஏ. எஸ். என்றுதான் எழுதி வைத்திருக்கிறான்.

அருணாசலம்: என்ன ஐயா! கஷ்டப்பட்டுப் படித்து பாஸ் பண்ணியிருப்பவன் நாலு பேருக்குத் தெரியும்படியாக எழுதிக் கொள்ள மாட்டானா? அது போகட்டும், மற்றப்படி பையன் எப்படி?

நண்பர்: ஆமாம், பையனுக்கு டில்லியில் என்ன உத்தியோகம் என்று கேட்கவில்லையா!

அருணாசலம்: அதை எதற்காகக் கேட்க வேண்டும்? ஐ. ஏ. எஸ். என்றால் டில்லி சர்க்காரில் தான் ஏதாவது அதிகாரியாக இருப்பான். ஆகவே பிள்ளையாண்டானை நிச்சயம் பண்ணி விடலாம் என்று நினைக்கிறேன். நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்!

பாகீரதி: ஊம், பண்ணுங்கோ.

நண்பர்: ஊம், ஆமாங்கோ. சுபஸ்ய சீக்கிரம் என்று சாஸ்திரம் கூறுகிறது.

## காட்சி 5

அருணாசலம்: என்ன, கலியாணமாகி ஒரு மாதம் ஆகப் போகிறது. இன்னும் மாப்பிள்ளை டில்லிக்குப் போகாமல் வீட்டோடேயே இருந்து கொண்டிருக்கிறாரே.

பாகீரதி: என்னன்னு! கலியாணத்துக்கென்று நிறைய லீவு வாங்கிக் கொண்டு வந்திருப்பான். மாப்பிள்ளைக்குத் தன் வேலைப் பற்றியில்லாத கவலை உங்களுக்கு எங்கே வந்தது?

அருணாசலம்: எப்படிக் கவலையில்லாமல் இருக்கும்? ஒவ்வொருத்தன் என்னடான்னா முதல் விமானத்தில் வந்து தாலியைக் கட்டிவிட்டு, அடுத்த விமானத்தில் பெண்ணை அழைத்துக் கொண்டு ஊர் போய்ச் சேர்ந்து விடுகிறான். இவன் என்னடாவென்றால் ஒரு மாத காலமாக இங்கேயே உட்கார்ந்திருக்கிறானே!

[மாப்பிள்ளை வருகிறார்.]

மாப்பிள்ளை: என்ன மாமா! என்னைப் பற்றித்தான் பேசிக் கொண்டிருக்காப் போல இருக்கே!

அருணாசலம்: இல்லையே! உங்களைப் பற்றி எதற்காகப் பேசுகிறோம்!

மாப்பிள்ளை: இல்லே, லீவு, லீவு, என்று ஏதோ சொல்லிக் கொண்டிருந்தாப் போல் என் காதில் பட்டது.

பாகீரதி: ஏன்னு பயப்படறேள்! என்னன்னுதான் சொல்லுங்களேன்!

அருணாசலம்: ஒன்றுமில்லே, ஒன்றுமில்லே, லீவு வந்து, லீவு வந்து....

பாகீரதி: பயப்படாதீங்கோ. நான் சொல்றேன். ஆமாம், கலியாணமாகி ஒரு மாதத்துக்கு மேலாகப் போகிறதே! எத்தனை நாளைக்கு உங்கள் ஆபீஸில் லீவு இருக்கும் என்று உங்க மாமனார் கேட்க விரும்புகிறார்.

மாப்பிள்ளை: லீவா! எனக்கு ஏது லீவு!

அருணாசலம்: ஏன், மத்திய சர்க்கார் அதிகாரிகள், ஆபீசுக்குப் போகாமல் இருப்பதற்கு லீவு வாங்கிக் கொள்ளாமல் இருக்க முடியுமா!

மாப்பிள்ளை: யார் முடியும் என்று சொன்னார்கள்!

அருணாசலம்: அதுதான் நாங்கள் கேட்டுக் கொண்டிருக்கிறோம். இன்னும் எத்தனை நாளைக்கு உங்களுக்கு லீவு .....

மாப்பிள்ளை: எனக்கு ஏது லீவு! நான் என்ன சர்க்கார் உத்தியோகஸ்தனா. யாரிடமாவது லீவு வாங்கிக் கொள்ள?

அருணாசலம்: சர்க்கார் உத்தியோகஸ்தர் இல்லையா! ஐ. ஏ. எஸ். பாஸ் பண்ணிவிட்டு, உத்தியோகத்துக்குப் போகாமலா வீட்டில் உட்கார்ந்திருக்கிறீர்கள்!

மாப்பிள்ளை: ஐ. ஏ. எஸ்.ஸா! நான் ஐ.ஏ.எஸ். பாஸ் பண்ணியிருக்கிறேன் என்று உங்களிடம் சொன்னேனா! மூன்றாவது படிவத்தையே மூன்று தடவை முற்றுகை விட்டும் பாஸ் பண்ண முடியாத நான் ஐ. ஏ.எஸ். எங்கே பாஸ் பண்ணுகிறது?



அருணாசலம், பாகீரதி: அப்ப, நீங்க ஐ.ஏ.எஸ். இல்லையா!

மாப்பிள்ளை: நான் ஐ. ஏ. எஸ் என்றோ, மத்திய சர்க்காரில் அதிகாரியாக இருப்பதாகவோ, உங்களிடம் ஒரு நாளும் சொல்ல விரும்பவில்லையே!

அருணாசலம்: அப்படீன்னு பெயருக்குப் பின்னால் ஐ. ஏ. எஸ். என்று போட்டுக் கொண்டிருப்பது?

மாப்பிள்ளை: சுகவரா! அதைப் பார்த்து நீங்கள் ஏமாந்தீர்களா! அது என் இனிஷியல் அல்லவா? ஐ.ஏ.எஸ். மணி என்பதைத்தான் நான் மணி ஐ. ஏ. எஸ். என்று போட்டுக் கொண்டிருக்கிறேன். ஐயனார் கோவில் அப்பாத்துரை சுப்பிரமணியன் என்பதைத்தான் நான் ஆங்கிலத்தில் மணி ஐ.ஏ.எஸ். என்று போட்டுக் கொண்டிருக்கிறேன்.

அருணாசலம்: அப்ப நீங்க ஐ. ஏ. எஸ். மாப்பிள்ளை இல்லையா! பகவானே! இப்படியா நான் ஏமாந்து போகவேண்டும்!

[நண்பர் வருகிறார்.]

நண்பர்: என்ன ஏமாந்து போய்விட்டீரா! இந்தப் பிள்ளையாண்டான் மாப்பிள்ளையாகக் கிடைக்க நீர் கொடுத்து வைத்தவராக்கும்! இவர் டில்லியில் உமக்கு மேல் பிஸினஸ் பண்ணுகிறாராக்கும்! இவர் தயவில்லாமல் ஒரு மந்திரியோ, சர்க்கார் உத்தியோகஸ்தரோ உயிர் வாழ முடியாதாக்கும்! இவர் வைத்திருக்கும் மருந்துக் கடையிலிருந்து இவருக்கு மாதம் ஐயாயிரம் கிடைக்கிறதென்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!



# தலைவலிக்கொரு மாத்திரை.!

ரா. வீழிநாதன்

"ஹலோ!"

"........."

"தூங்கிட்டியா, என்ன?"

"இல்லையே! என்ன நல்ல சாப்பாடு! இலேசில் தூக்கம் வருமா?"

"ஆனந்தன் ஆள் படுகெட்டிக் காரன். பிளான் போட்டான்னு போட்டதுதான்!"

"என்ன பிளான் போட்டார், என்ன கெட்டிக்காரத்தனம் பண்ணினார்?"

"அவனுக்குக் கல்யாணம் ஆகி எத்தனை வருஷம் ஆச்சு, தெரியுமா?"

"உங்களுக்கும் எனக்கும் கல்யாணம் ஆன அதே வருஷம்தான்!"



"அதுதான், எத்தனைவருஷம்னு கேக்கறேன்."

"ஆறு வருஷமாச்சு!"

"ஆறு வருஷம். ஆறு வருஷத்துக்கு மூணு குழந்தைகள்! நீயும் தான் இருக்கிறியே!"

"பாவம், இந்த சின்ன வயசிலேயே வலிதா பெரிய சம்சாரியாகப் போய் விட்டான்!"

"நீ தனி மரமா நிக்கறே!"

"அது என் தப்பா?"

"அப்போ என் தப்புன்னு சொல்றியா?"

"இப்படி வறுச் சண்டைக்கு இழுக்காம பேசாமல் தேமேன்னு படுத்திருந்தவனைக் கூப்பிட்டேன்!"

"இல்லேடி. பேச்சு எப்படி எப்படியோ போய் எப்படி எப்படியோ திரும்பி விட்டது. நான் சொல்லவந்தது என்னன்னு இரண்டு வருஷத்துக்கு ஓர் ஆண்டு நிறைவு."

"பாவம், செலவுக்கு மேலே செலவு!"

"செலவா? வரவுக்கு மேலே வரவுன்னு சொல்லு!"

"என்ன வரவுங்கறேன்? இன்னிக்கு இருநூறு பேருக்குச் சாப்பாடு இருக்குமா...?"

"இருநூற்றைம்பது பேருக்கு மேலே கூட இருக்கும்!"

"ஓர் இலைக்கு என்ன செலவாகியிருக்கும்னு நினைக்கிறேள்?"

"மிஞ்சி மிஞ்சிப் போனால் நாலு இலையுள்ள கட்டு பதினைந்து ரூபாய்."

"ஐயோ, உங்க மூளையே மூளை! இலைன்னு இலையை மட்டுமா கேட்டேன்? இன்னிக்கு இலை போட்ட சாப்பாடு இல்லையோ?"

"இலையைப் போடாமல் இத்தனை பேருக்கும் தட்டையா போடுவார்கள்?"

"உங்கள் குதர்க்கத்தை உங்களோடு வச்சுக்குங்கோ. இலை போட்ட சாப்பாடு என்றால் ஒரு 'ஃபுல் மீல்'. பரசுப்பட்ட 'மெனு' உள்ள சாப்பாடுன்னு பொருள். ஓர் இலைக்கு எத்தனை செலவாகியிருக்கும் என்று கேட்கிறேன்!"

"இலையொன்றுக்கு இரண்டு ரூபாய் வச்சுக்கோயேன்!"

"இருநூற்றைம்பது பேருக்கு எத்தனை ரூபாய் செலவு ஆகியிருக்கும்?"

"ஐந்நூறு!"

"ஐந்நூறும் அறுநூறும் செலவழிச்சு ஆண்டு நிறைவு பண்ணினால் குடும்பம் என்னத்துக்கு ஆகும்?"

"என் மூளையைச் சொல்ல வந்துட்டியே! உன் மூளை என்னவாம்? சோழியன் குடுமி சும்மா ஆடாது என்று கேள்விப்பட்டதில்லையா நீ?"

"சோழியன் குடுமிக்கும் நாம் இப்பொழுது பேசும் பேச்சுக்கும் என்ன சம்பந்தம்?"

"சம்பந்தம் இருக்கக் கொண்டுதானே சொல்கிறேன். ஆனந்தன் படுகெட்டிக் காரன். ஆண்டு நிறைவு நடத்துகிறேன் பேர்வழி என்று இரண்டு வருஷங்களுக்கு வேண்டிய சோப்பு, பவுடர், குழந்தைச் சொக்காய் முதலியவற்றைப் பரிசாகப் பெற்று விட்டான். அதுமட்டுமா? எத்தனை பாலாடைகள், எத்தனை கிண்டிகள்! எத்தனை டம்ளர்கள்! கணக்குப் பண்ணிப் பார்த்தாயா? எல்லாம் வெள்ளி! என்ன பெறுமானம் இருக்கும்? குழந்தைக்கு மோதிரமும் சங்கிலியுமாகவே கூட ஆறு ஏழு பவுன்கள் கிடைத்திருக்குமே!"

"ஆமாம், ஆண்டு நிறைவு என்று கூப்பிட்டால், வெறுங் கையோடு போகலாமா? அவரவர் கையாலானதை வாங்கித்தானே போயாக வேண்டும்?"

"அதைத்தான் சொல்ல வந்தேன். வருகிறவர்கள் வெறுங்கையோடு வர மாட்டார்கள் என்ற நம்பிக்கைதான், அவனை இப்படி ஆண்டு நிறைவு கொண்டாட வைத்தது. இதில் லாபமா, நஷ்டமா? நீயே சொல்லு"

"என்ன லாபமோ? இஞ்சி லாபம் மஞ்சளிலே! இந்தக் குழந்தைகளை வளர்த்துப் பெரியவர்களாக்குவதற்குள்ளே, எத்தனை சிரமம்! நமக்கு மேலே எத்தனை செலவு? இதையெல்லாம் யோசிக்காமல் என்னவோ தோணினதைப் பேசிக் கொண்டே போகிறேளே!"

"நீ என்னதான் சொல்லு. ஆனந்தன் ஐந்நூறைச் செலவழித்து ஆயிரத்தைத் நூறுக்கு வழி பண்ணிண்டுட்டான். சின்ன மீனைப் போட்டுப் பெரிய மீனைப் பிடிக்கும் கதையாக. நீயும் இருக்கே, நானும் இருக்கேன். எதுக்குப் பிரயோசனம்?"

"எதுக்காக என் மண்டையைப் போட்டு உருட்டறேள்? உங்கள் கையாலாகாத்தனத்துக்கு நானு பிணை?"

"நானு கையாலாகாதவன்? இரு. சொல்றேன் உன்னை!"

"போதும், போதும்! பேசாமல் படுத்துத் தூங்குங்கள்!"

* * *

"ஹலோ!"

"........."

"கலோ! கலோ!"

"........."

"தூங்கிட்டியா?"

"தூக்கம் எப்படி வரும்? நீங்க தூங்க விட்டால்தானே? மனசிலே இல்லாத கவலையையெல்லாம் உண்டு பண்ணி விட்டுத் தூங்கு என்றால் எனக்குத் தூக்கம் வருமா?"

"நான் என்ன கவலையை உண்டு பண்ணினேன்?"

"செய்வதையும் செய்து விட்டுக் கேள்வி வேறு ஒரு கேடா? தூங்கும் குழந்தையைக் கிள்ளி விட்டுத் தொட்டிலும் ஆட்டுவது போல."

"அப்படி நான் என்ன செய்தேன்?"

"ஆறு வருஷம் ஆகிறதே, நமக்குக் கல்யாணம் ஆகி! ஒரு குழந்தை உண்டா கொஞ்சிக் குலாவ என்று கேட்காமல் கேட்டு விட்டீர்கள்!"

"சேச்சே! நான் அப்படியொன்றும் எண்ணவும் இல்லை: கேட்கவும் இல்லை. இப்பொழுதே பிடித்து அந்தத் தொந்தரவுகள் எல்லாம் நமக்கு எதற்கு? இன்னும் கொஞ்ச காலம் இப்படியே 'ஹாப்பியாக' இருப்போம்."

"எதற்காக இப்படி வெளி வேஷம் போடறேள்? உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசறேள்?"

"விட்டேன், விட்டேன்! சத்தியமாகச் சொல்றேன். நான் அப்படியெல்லாம் ஒண்ணும் நினைக்கவில்லை!"

"அப்படியானால் சரி, இப்போ எதுக்காகக் கூப்பிட்டேளாம்?"

"அதுவா? எனக்கு ஒரு யோசனை தோணறது."

"காசிக்குப் போகலாமா, ராமேசுவரம் போகலாமான்னு?"

"இல்லேடி! வரும்படிக்கு ஒரு வழி சொல்ல!"

"என்ன?"

"உனக்கு இப்போ என்ன வயசு?"

"......."

"என்ன, வாய் திறக்கவில்லை? ஓகோ! பெண்களின் வயசைக் கேட்கக் கூடாதோ?"

"..........."

"நீ பிறந்த மாசம் எது?"

"இதுதான்!"

"இதுதான்னு, அக்டோபர்தானே?"

"ஆமாம்."

"தேதி....?"

"எதுக்கு?"

"இப்படியெல்லாம் குறுக்குக் கேள்வி கேட்காதே. கேட்ட கேள்விக்கு 'டக், டக்' என்று பதில் சொல்லு!"

"பதினாறு!"

"வருஷம்....? அடாடா! மீண்டும் தவறு செய்கிறேனே! வேண்டாம், நீ வருஷத்தைச் சொல்ல வேண்டாம்."

"ஆமாம், எதற்காக இந்தப் பித்துக்குளி கேள்வியெல்லாம் கேட்கிறேள்?"

"உனக்குப் பிறந்த நாள் விழா கொண்டாடலாம்னு நினைக்கிறேன்!"

"எனக்கா? யாராவது கேட்டால் சிரிக்கப் போகிறார்கள்?"

"எதற்குச் சிரிக்கிறது?"

"இத்தனை வயசு கழிச்சுப் பிறந்தநாள் விழா கொண்டாடுவதற்குத்தான்!"

"வருஷா வருஷம் பிறந்த நாள் வருகிறதோ, இல்லையோ? கொண்டாடினால் என்னவாம்?"

"உங்களுக்கு யார் பதில் சொல்றது?"

"ஒருத்தரும் சொல்ல வேண்டாம். இந்த வருஷம் உன் பிறந்த நாள் விழாவைத் தடபுடலாகக் கொண்டாடறதாகத் தீர்மானித்து விட்டேன்."

"வருகிற ஆகஸ்டு மாதத்தில் கொண்டாடிச் சாப்பாடு போட்டால் போகிறது!"

"இன்னும் ஒரு வருஷத்தை யார் கண்டார்கள்?"

"சே! வாயைக் கொப்புளித்துவிட்டுப் பேசுங்கள்! என்ன பேச்சுப் பேசுகிறீர்கள் நீங்கள்?"

"நெருப்பு என்றால் வாய் வெந்து விடாது. உன் தோழிகள், என் தோழர்கள் எல்லோரையும் அழைத்து விருந்து வைக்க வேண்டும். ஒருவர் கூட விட்டுப் போகக் கூடாது! ஆமாம், இப்பவே சொல்லி விட்டேன்!"

"அதெல்லாம் வேண்டாம்னு! வீணுக்குப் பரிகாசத்துக்கு ஆளாவோம்!"

"ஒரு வயதுக் குழந்தையின் ஆண்டு நிறைவு விழா, ஆனந்தனுக்கு ஆயிரத்தைந்நூறு ரூபாய் வருமானத்தைக் கொண்டு வந்து தந்தது. இருபத்தாறு வயது நிறையப் போகிற உன் பிறந்த நாள் விழாவுக்கு ஐயாயிரத்துக்குக் குறைந்தா வருமானம் தரும்? உனக்கு விதம் விதமான புடவைகள், ரவிக்கைகள், பவுடர்கள், சோப்புகள் என்று எடுக்க எடுக்க வற்றாமல் கிடைக்க வழி செய்யும். எப்படி என் யோசனை?"

"ஐயே! உங்கள் ஆசையே!"

"என் ஆசைக்கு ஒரு குறைவும் வராது. அக்டோபர் பதினாறுந் தேதி நீயேதான் பார்க்கப் போகிறாய்; பார்த்து வியக்கப் போகிறாய்!"





"அடி சக்கைன்னானும்! என் பிறந்த நாள் விழாவைத் தடபுடலாகக் கொண்டாடப் போறேளா? என்னே என்ன, சினிமாவிலே கினிமாவிலே சேர்க்கிற உத்தேசமோ?"

"என்ன பேத்தறே? ஏதோ கொண்டாடணும்னு எனக்கு ஆசை. நம் நண்பர்கள் எல்லோரும் ஏதாவது ஒரு காரணத்தை முன்னிட்டு நமக்கு விருந்து அளிக்கிறார்கள். அவர்களுக்கு விருந்து அளிக்க நமக்கு ஒரு காரணமும் கிடைக்கவில்லை. அதனால்தான்...."

"உங்கள் பிறந்த நாள் விழாவைக் கொண்டாடிக் கொள்ளுங்களேன்!"

"கொண்டாடலாம்தான். ஆனால் அது ஆகஸ்டில் அல்லவா வருகிறது!"

"சட்! பேசப்படாது. நான் சொன்னால் சொன்னதுதான்!"

"பேய்க்கு வாழ்க்கைப்பட்டால் புளிய மரத்தில் ஏற வேண்டியதுங்கிற கதையாக்கி விடுவீர்கள் போலிருக்கிறதே! உங்கள் பிடிவாதத்துக்கு நான் என்ன மருந்து கண்டு பிடிக்க முடியும்?"

"ஆயிரம் ரூபாய் செலவானாலும் பாதகமில்லை. அமர்க்களமாக விருந்துக்கு ஏற்பாடு பண்ணி விட வேண்டும்!"

"ஆனந்தன் வீட்டுச் சாப்பாடு உங்களுக்கு அபாரக் கற்பனையை வருவித்து விட்டதோ? பேசாமல் தூங்குங்கள்!"

"வீண் கனவு எதற்கு? பேசாமல் தூங்குங்கள்; நானும் தூங்கப் போகிறேன்."

"சரோ!"

"ஏன்?"

"எல்லா வேலைகளும் முடிந்து விட்டதல்லவா?"

"முடிந்துவிட்டது. சமையற்காரர்களை முதற்கொண்டு அனுப்பி விட்டேன்."

"விருந்து பிரமாதம், போ! ஆனந்தன் வீட்டு விருந்தை நம் வீட்டு விருந்தின் காலில் கட்டித்தான் அடிக்க வேண்டும்!"

''ஆமாம், ஆமாம்! எல்லோரும் கைவாங்கி நாக்கைச் சப்பிட்டுக் கொண்டு சாப்பிட்டதி விருந்தே தெரியவில்லையா?''

''கடைசிப் பந்தியில் உட்கார்ந்ததால் எனக்குத்தான் உருளைக்கிழங்கு வறுவல், மாதிரி பார்க்கக் கூடக் கிடைக்காமற் போய் விட்டது!''

''அதற்கென்ன? இன்னொரு நாள் பண்ணித் தின்றால் போகிறது. ஜாங்கிரி எண்ணி நான்கே நான்கு பாக்கி இருந்தது. அதைக் கட்டி வனிதாவிடம் கொடுத்து விட்டேன். அவள் குழந்தைகளை அழைத்து வரவில்லை; குழந்தைகளுக்குக் கொண்டு போய்க் கொடுக்கட்டுமே என்று!''

''அப்படிக் கொடுத்தாலாவது உனக்குக் குழந்தை பிறக்காதா [என்ற எண்ணம்!''

''அப்படித்தான் வைத்துக் கொள்ளுங்களேன். குழந்தை இல்லாத வீடு என்ன வீடு? அடுத்த வருஷத்துக்குள் நம் வீட்டிலும் ஒரு குழந்தை விளையாடினால் புண்யாஹவசனமே பிரமாதமாகக் கொண்டாடி விடுவோம்!''

''பேஷாக. யார் வேண்டாம் என்றீர்கள் இப்போது? வளைகாப்பு, சீமந்தமே கூட வெளுத்து வாங்கி விடுவோம். — இன்றைக்கு வந்தவர்கள் யாருமே வெறுங் கையோடு வரவில்லை போலிருக்கிறதே!''

''வருவார்களா? நாம் யார் வீட்டுக்கு வெறுங் 'கையோடு போயிருக்கிறோம்?''

''அது மெய்தான். ஒவ்வொருவரும் கொண்டு வந்த பாக்கெட்டுகள் கூடப் பெரிதாகத்தான் இருந்தன. ஆமாம். இப்பொழுதே பாக்கெட்டுகளை யெல்லாம் பிரித்துப் பார்ப்போமா....?''

''உடம்பை அடித்துப் போட்டாற் போலிருக்கிறது. விடியற்காலையில் சீக்கிரமாக எழுந்து பார்த்துக் கொள்ளுவோமே!''

''சுத்த மசமசப்பு நீ! எதிலுமே ஆர்வம் கிடையாது உனக்கு!''

''அப்படிச் சொல்லி விடாதீர்கள். உங்களைச் சோதித்துப் பார்த்தேன். எல்லாவற்றையும் பிரித்துப் பார்த்து விட வேண்டும் என்று எனக்கும் ஆவல்தான். எடுத்துப் பிரியுங்கள், பார்ப்போம். எல்லாவற்றையும் பார்த்துத் தீர்த்தால் தான் எனக்கும் நிம்மதியாகத் தூக்கம் வரும்!''

''அதுதானே பார்த்தேன்—எத்தனை புடவை, எத்தனை ரவிக்கைத் துண்டு என்று கணக்குப் பண்ணாமல் உனக்குத் தூக்கம் வராதே என்று!''

''உங்களுக்கு மட்டும் வருமாக்கும்!''

''இந்தா சோப்பு!''

''இந்தாருங்கள் சீப்பு!''

''இதோ நகச்சாந்து!''




அவர் : ஏண்டாப்பா! இதுக்கு முன்னாலே நீ மிலிட்டெரியில் இருந்தவனோ?

''இதோ கண் மை!''

''இதோ பவுடர்!''

''இதோ ஸ்னோ!''

''இதோ வாஸ்லேன்!''

''இதோ ஜோர் ஆயில்.''

''இதோ சவுரி!''

''இதோ வலை!''

''இதோ நூல்!''

''இதோ வளையல்!''

''அப்பாடா! எத்தனை வந்திருக்கின்றன?''

''ஒருவிதமாக எல்லாவற்றையும் பிரிச்சாச்சு!''

''ஒரு ரவிக்கைத் துண்டைக் கூடக் காணுமே!''

''ஒரு புடவை? ஹுஹூம்!''

''எல்லாவற்றையும் வகை வகையாய்ப் பிரிச்சு வச்சு என்னு!''

''முப்பது சோப்பு!''

''நாற்பது சீப்பு!''

''சவுரி ஐம்பதுக்குமேல் போகிறதே!''

''ஆயுசுக்கும் இனிமேல் சவுரி வாங்க வேண்டாம்!''

''எனக்குத் தலையில் மயிர் குறைச்சல்னு இத்தனை பேருக்கும் எப்படியோ தெரிந்திருக்கிறதே! என்ன ஆச்சரியம்!''

''ஆமாம், அதனால்தான் ஜோர் ஆயில் அந்த பாட்டிலோடு நின்னு போச்சு!''

''ஆமாம், எல்லாம் சேர்த்தால் எத்தனை ரூபாய் மதிப்பு இருக்கும்? ஒரு முந்நூற்றிருபது இருக்குமா?''

''........''

''ஏன் தலையில் கையை வைத்துக்கொள்ளுகிறீர்கள்?''

''இல்லை, சாப்பாட்டுச் செலவு என்ன ஆயிற்று என்று பார்த்தேன்!''

''பரிசாரகனுக்குக் கணக்குத் தீர்ப்பதுள்பட எழுநூற்றைம்பது ஆகலாம்!''

''அப்போ நிகர லாபம்..?''

''லாபமா? நஷ்டம் என்று சொல்லுங்கள்!''

''ஆம்....''

''ஆமாம்! பரிசுப் பொருளாக வந்திருக்கும் பொருள்களின் மொத்த பெறுமானம் முந்நூறு இருக்கலாம். என்னைக் கேட்டால் இன்னும் சற்றுக் குறைவாகவே தான் மதிப்பிட வேண்டும்! அதனால் நிகர நஷ்டம் நானூறு ரூபாய்க்குக் குறையாமல் போய் நிற்கிறது என் கணக்குப்படி!''

''ஐயோ, அப்பா! என்ன செய்வேன்? தலைவலி மண்டையைப் பிளக்கிறதே!''

''இதென்ன கூத்து? திடீரென்று தலைவலி! பங்குக் கடைக்குப் போய்த் தலைவலி மாத்திரை வேண்டுமானால் ஒன்று வாங்கி வரட்டுமா?''

''அது வேறு நஷ்டமா? வேண்டாம், போ!''

''இதோ ஒரு சிறு பெட்டி பிரிக்காமல் கிடக்கிறதே!''

''என் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்ளாதே. நானென்று நினைக்கத் தெய்வம் ஒன்று நினைத்து விட்டது. அதைப் பிரித்துப் பார்த்து மேலும் எனக்கு மன அதிர்ச்சியைத் தராதே!''

''நன்றாயிருக்கிறது! அதில் யாராவது விலையுயர்ந்த மோதிரம், தோடு என்று வைத்திருந்தால்....''

''உன் அதிர்ஷ்டத்துக்குத் தோடும் மோதிரமும் தான் வைப்பார்கள்!''

''என் அதிர்ஷ்டத்தைப் பற்றிப் பேசாதீர்கள். பேராசை பெரு நஷ்டம் என்று தெரியாமலா சொல்லி யிருக்கிறார்கள்? நீங்கள் ரூலை கெட்டு ஒரு காரியம் செய்தால், அதற்கு நானு பொறுப்பாளி?''

''ஐயோ! பேசாமல் போயேன்! என் தலைவலியை அதிகப் படுத்தாதேயேன்!''

''இந்தாருங்கள். இதையும் பிரித்து விட்டேன்! — அட! என்ன ஆச்சரியம்! தலைவலி மாத்திரை காசு கொடுத்து வாங்க வேண்டியதில்லை. இதற்குள் தலைவலி மாத்திரையே இருக்கிறது!''

''தலைவலி மாத்திரையா? எங்கே? கொண்டு வா, கொண்டு வா! சீக்கிரமாக ஓடிப் போய் ஒரு டம்ளர் வெந்நீரும் கொண்டு வா!''



மோட்டார் உருப்பு ஒன்று பழுதுபட்டால் பஸ், லாரி, கார் ஓடாது. அதனுல் போக்குவரத்தில் தடை ஏற்படும். பழுது பார்ப்பதில் காலம் வீணுகும். ஓடாத பஸ், லாரியால் வருமானம் குறையும். அதை விட அதிக நஷ்டம், பொதுமக்கள் அபிமானத்தை இழக்க நேரிடும்.

ஆகையால் மோட்டார் உருப்புகளை விநியோகிப்பது ஒரு பொறுப்புமிக்க பணி. மதருஸ் ஆட்டோ சர்விஸ், நம்பிக்கையானது, சிறந்தது என்று நிரூபிக்கப்பட்ட மோட்டார் உருப்புகளையே விநியோகித்து வருகிறது.

ஆண்டு முழுவதும் நம்பிக்கைக்குப் பாத்திரமான மோட்டார் உருப்புகள் நியாயமான விலையில் வியாபாரிகளுக்குத் தொடர்ந்தும் சீராகவும் கிடைக்கும்.

## பழுதான மோட்டார் உருப்பு போக்குவரத்தையே நிறுத்தி விடும்

விநியோகஸ்தர்கள் :

ஜி.எம். பாகங்களும் அக்ஸெஸரிகளும் • பெண்டிக்ஸ் மற்றும் கிளேடன் தேவண்ட்ரே ஹைட்ரோவாக் பாகங்கள் • கார்டர் கார்புரேடரும், பாகங்களும் • ஸ்டிவர்ட் வார்னர் ஸ்பீடோமீட்டர்களும், பாகங்களும்.

ஸ்டாண்டர்ட் பாட்டரிகள் • மைகோ உருப்புகள் • வெலவொர்த்தி உருப்புகள் • கனரா ஸ்பிரிங்குகளும் லீவுகளும் • ட்ரான்கோ வால்வுகள் • பிலிப்ஸ் பேட்டரி சார்ஜர்கள் • பெரோடோ உருப்புகள் • ஹெல்லா ஹாரன்கள் • காப் உருப்புகள்.

விற்பனையாளர்கள் :

ஹர்ப்ஸ் & டிராம்ஸ் பிரைவேட் லிமிடெட், பம்பாய் தயாரித்த ஹப்புகளும், டிராம்களும் • டபிள்லேப் சேஸிஸ் பாகங்கள்.

TVS

# மதருஸ் ஆட்டோ சர்விஸ் பிரைவேட் லிமிடெட்

(டி. வி. எஸ். ஸ்தாபனம்) மதருஸ் - பெங்களூர்.



## ஒரு சர்க்கஸ் காட்சி

முன்னும்....

வாண்டுமாமா ஒரு நாள் ஒரு சர்க்கஸுக்குப் போனார். ஆட்டக்காரர்களிடம் சுறுசுறுப்பே இல்லை. எல்லாரும் தூங்கி வழிந்தார்கள். சர்க்கஸ் பார்க்க வந்திருந்த குழந்தைகள் சிரிக்கவே யில்லை. வாண்டுமாமா இந்த நிலையை மாற்ற நினைத்தார். எப்படி என்பதை 182ம் பக்கத்தில் பாருங்கள்.



# காக்கை
## குருவி
## எங்கள் ஜாதி

ஆமாம், நீங்களும் இந்த அழகான வண்ணப் பறவைகளின் இனந்தானே? வானவீதியிலே பாடித் திரியும் பறவைகளைப் பார்க்கும்போது உங்கள் உள்ளம் எப்படிக் குதூகலத்தால் துள்ளிக் குதிக்கிறது? பறவைகளையும் அதன் இயல்புகளையும் பட்டுடலின் அழகையும் நாளெல்லாம் பார்த்துக் கொண்டிருக்கலாமே. வானத்துக் குழந்தைகளான அவைகளிடம்தான் ஆண்டவன் எத்தனை வர்ண விசித்திரங்களை வாரி இறைத்திருக்கிறான், பார்த்தீர்களா? உலகிலுள்ள அத்தனை பறவைகளையும் அவைகளின் அழகையும் இந்தப் பக்கங்களில் உங்களுக்குக் கொடுக்க முடியாவிட்டாலும் அழகிய பறவைகளில் ஒரு சிலவற்றை இங்கு நீங்கள் கண்டு மகிழும்படி செய்திருக்கிறோம்.


பின்னும்!
வாண்டுமாமா என்ன மந்திரம் போட்டாரோ மாயம் செய்தாரோ தெரியாது. சர்க்கஸில் ஏற்பட்ட கலகலப்பை—இல்லை கலாட்டாவை நீங்களே பாருங்கள்!

# டிவிஎஸ் பஸ்பாடி பளு குறைவு
# ஆனால் உழைப்பு அதிகம்

பஸ் பாடிகளைக் கட்டுவதில் சிறந்த
சாமான்களை டிவிஎஸ் உபயோகிக்கின்றனர்.



அடிப்படையில், உறுதிக்கும் நீண்டகால
உழைப்புக்கும் ஏற்ற உயர்ந்தரக எஃகு



முப்பது ஆண்டுகளின் அனுபவத்தால் உறுதியான ஆனால் பளுவில்லாத பஸ் பாடிகளை டிவிஎஸ் தயாரிக்கிறார்கள். டிவிஎஸ் பஸ் பாடிகள் நீண்ட வருடம் உழைக்கின்றன. பராமரிப்புச் செலவும் குறைவு.

பார்கோ, அசோக் லேலண்ட், காமெட், பெட்போர்டு, டாடா மெர்ஸிடிஸ் பென்ஸ் முதலிய எந்த சேஸிஸ் மீதும் உங்கள் தேவைகளுக்கு உகந்த பாடிகளை டிவிஎஸ் கட்டித் தரும்.



உறுதியாகவும், லேசாகவும் இருக்க பக்கங்களில்
அலுமினியத் தகடுகள் — பிரேம்களுக்கு சிறந்த
மரப் பலகைகள்.



இந்தியாவில் பஸ் பாடிகள் கட்டும்
மிகப் பெரிய ஸ்தாபனம் டிவிஎஸ்

## சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ்

பிரைவேட் லிமிடெட் (டிவிஎஸ் ஸ்தாபனம்)
புதுக்கோட்டை - மதுரை

TVS

JWT/SI-BB/1446a



# ரியர் ஆக்ஸில் உடைந்துவிட்டதா?

டிவிஎஸ் அதனை புதுப்பிக்கட்டும். புதுப்பிக்கும் செலவு புதிய உருப்பின் விலையில் மூன்றில் ஒரு பாகத்திலும் குறைவு.

ரியர் ஆக்ஸில் ஹவுஸிங் உடைந்தால் வண்டி ஓடாது. போக்குவரத்தில் தடை ஏற்படும். புதிதாகவாங்கவேண்டுமானால்விலையோ அபாரம். ரியர் ஆக்ஸில் ஹவுஸிங்கை டிவிஎஸ் புதுப்பித்து அதற்குப் புத்துயிர் அளிக்கட்டும். அது புதிய உருப்புகளைப்போலவே நீடித்து உழைக்கும்.



IWT/TVS/RC 1453



டிவிஎஸ் புதுப்பித்து புத்துயிர் அளிக்கும் உருப்புகளில் சில:

மெயின் ஆக்ஸில் • ஸ்டப் ஆக்ஸில் • கிளட்ச் பிரஷர் பிளேட் ஹப் • ஷாக்கிள்ஸ் • புரொபெல்லர் ஷாப்ட்—யோக் • ஹாங்கர்ஸ்

டிவிஎஸ்ஸில் புதுப்பித்தால், புதிதாக உருப்புகளுக்காகும் செலவைக் குறைக்கிறது; வண்டிகளும் நிற்காமல் ஓடிக்கொண்டு இருக்கும்.



டி. வி. சுந்தரம் அய்யங்கார் & ஸன்ஸ் பிரைவேட் லிமிடெட்

மதுரை — திருச்சி — திருநெல்வேலி — புதுக்கோட்டை — சேலம் — கோயமுத்தூர்

சுந்தரம் மோட்டார்ஸ் பிரைவேட் லிமிடெட்

மதராஸ் — பெங்களூர் — செகந்திராபாத்



# கரடி வீட்டில் தீபாவளி





ஒரு பெரிய காட்டில் ஒரு பணக்காரக் கரடி இருந்தது. அது தன் மனைவியுடனும் தனது ஒரே பெண்ணுடனும் பிள்ளைகளுடனும் வசித்து வந்தது. கரடி தன் மனைவி மக்களுடன் சந்தோஷமாக இருந்தாலும் எதிர் வீட்டில் வசித்து வந்த யானை ஒன்று எப்பொழுதும் கரடிக்கு ஏதாவது தொந்தரவு கொடுத்துக் கொண்டே இருந்தது.

தீபாவளி நெருங்கியது. கரடி தன் பெண்ணுக்கு அந்த வருஷம் தான் கலியாணம் நடத்தியதால் பெண்ணின் தலைதீபாவளியை நன்றாகக் கொண்டாட வேண்டும் என்று தீர்மானித்தது. தன் பெண்ணுக்கு நிறைய வெடிகளையும் வாணங்களையும் வாங்கிக் கொடுத்திருந்தது. பெண் கரடி வெடிகளையும் வாணங்களையும் கொளுத்துவதற்காக வாசல் திண்ணையில் வைத்து விட்டு உள்ளே போன சமயம் எதிர் வீட்டு யானை ஓடோடியும் வந்து தனது துதிக்கையினால் வெடிகளிலும் வாணங்களிலும் பெரும் பகுதியை எடுத்து வீட்டுக்குள் வைத்துவிட்டு ஒன்றும் தெரியாததுபோல் வாசலில் துதிக்கையை அப்படியும், இப்படியுமாக ஆட்டிக் கொண்டு சாதுபோல் நின்றது. வாணங்களையும் வெடிகளையும் காணாத பெண் கரடி ''ஓ'' என்று அழ ஆரம்பித்தது.

கரடி, எதிர் வீட்டில் நின்று கொண்டிருந்த யானையைப் பார்த்து விட்டு, ''நீ அழாதே. வெடிகளையும் வாணங்களையும் திருடியது யார் என்று எனக்குத் தெரியும். அதை நான் சீக்கிரத்தில் நிரூபிக்கிறேன். இன்று மாலை உனக்கு நிறைய வாணங்களையும், வெடிகளையும் வாங்கித் தருகிறேன்'' என்று சொல்லிக் கொண்டே பெண் கரடியை உள்ளே அழைத்துச் சென்றது. அன்று இரவு கரடி மூட்டை மூட்டையாக எல்லா விதமான வெடிகளையும், வாணங்களையும் வாங்கி வாசல் பக்கத்து அறையிலே எதிர் வீட்டு யானைக்குத் தெரியும்படியாக வைத்தது. பிறகு வாசல் கதவைத் தாளிட்டுப் பூட்டாமலே வீட்டினுள்ளே சென்றுவிட்டது.

இரவு மணி பன்னிரண்டு இருக்கும். மெதுவாக யானை துதிக்கையை வாசல் அறையின் ஜன்னல் வழியாக விட்டு வெடிகளையும் வாணங்களையும் எடுக்க யத்தனித்தது. அவை சற்றுத் தூரத்தில் இருந்ததால் எவ்வளவு முயன்றும் அதனால் எடுக்க முடிய வில்லை. பிறகு மெதுவாகத் துதிக்கையின் உதவியால் வாசல் கதவின் தாழ்ப்பாளைத் திறந்து உள்ளே அடிமேல் அடி வைத்துச் சத்தம் செய்யாமல் நடந்தது. அந்தச் சமயத்தில் 'தடால்' என்று பெரிய சத்தம் கேட்டது. உடனே யானை பயந்து திரும்பித் தன் வீட்டுக்கு ஓட முயன்ற பொழுது அது கால் வைத்த இடங்களெல்லாம் 'படார் படார்' என்று ஓசை கேட்டது. கையில் விளக்குடன், ''என்ன சத்தம்? என்ன சத்தம்?'' என்று கேட்டுக் கொண்டு கரடி ஓடி வந்தது. அப்பொழுது பயந்து நின்று கொண்டிருந்த யானையைப் பார்த்தது. ''உன் திருட்டைக் கண்டுபிடிக்கவே நான் செய்த சூழ்ச்சி இது. நீ வரும் இடத்தில் வெங்காய வெடிகளை வைத்திருந்தேன். இனிமேல் இந்தத் திருட்டுப் புத்தியை விட்டுவிடு'' என்று எச்சரித்தது. யானை அவமானத்தினால் தலை குனிந்தபடியே வெளியேறியது.





ராஜி







மறு நாள் காலையில் கரடியின் வீட்டுக்கு ஒரு கடிதத்தை எடுத்துக் கொண்டு பெரிய குரங்கு ஒன்று வந்தது. அந்தக் காட்டில் வசிப்பவர்களுக்கு வரும் கடிதங்களைக் கொடுப்பதற்காக அந்தக் குரங்கு தபால்காரனாக நியமிக்கப்பட்டிருந்தது. தபால் குரங்கிடம் கரடி முதல் நாள் இரவு நடந்த சமாசாரத்தை யானைக்குத் தெரியும்படியாகவே கூறியது. நடந்த விஷயத்தை அறிந்த குரங்கு, ''கீச் கீச்'' என்று சத்தம் செய்து கொண்டே பலமாகச் சிரித்தது. வெங்காய வெடிகள் வெடித்ததனால் ஏற்பட்ட நெருப்புக் காயங்களுக்கு உடம்பில் பல இடங்களில் பல கட்டுக்களைப் போட்டுக் கொண்டு வாசலில் நின்ற யானையைப் பார்த்து, ''உடம்பெல்லாம் என்ன கட்டு?'' என்று ஏளனமாகக் கேட்டது தபால்காரக் குரங்கு.

யானைக்குத் துதிக்கைக்கு மேலே கோபம் வந்தது. ''ஏ, குரங்கே! உன் வாலை என்னிடம் ஆட்டாதே! உனக்கு ஒரு வேலையும் இல்லாமல் சும்மா தபால் இலாகாவில் தண்டச் சம்பளம் கொடுக்கிறார்கள். தபாலாபீசுக்கு ஏதாவது கடிதம் வந்தால்தானே உனக்கு வேலை இருக்கும்? இருக்கட்டும், இருக்கட்டும். சீக்கிரம் உன்னை இந்தக் காடு முழுதும் அலைய வைக்கிறேன். எதிர் வீட்டு அந்தப் பணக்காரக் கரடியையும் இந்தக் காட்டில் உள்ள எல்லாவற்றின் முன்னிலையிலும் அவமானப்படுத்துகிறேன் பார்!'' என்று கோபத்துடன் கூறிவிட்டு உள்ளே சென்றது. சென்றதும் வெகு நேரம் தனிமையில் யோசித்தது. பிறகு ஓர் அழைப்பு இதழைத் தயாரித்தது.

''என் பெண்ணின் தலைதீபாவளியை முன்னிட்டுத் தாங்களும் தங்கள் குடும்பத்தாரும் தங்கள் உறவினரும் தங்கள் சிநேகிதர்களும் தீபாவளியன்று காலையில் தாமரைக் குளத்துக்கு எதிரில் இருக்கும் என் வீட்டில் நான் பலமாக அளிக்கப் போகும் விருந்தில் கலந்து கொள்ளக் கேட்டுக் கொள்கிறேன். தவறாமல் வரவும்''

இப்படிக்கு,

**கரடியின் மனைவியும் கரடியும்**

கடிதத்தை உடனே அச்சடித்தது. காட்டிலுள்ள எல்லாப் பிராணிகளின் விலாசத்தையும் சேகரித்தது. ஆயிரத்துக்கு மேல் விலாசங்கள் சேர்ந்தன. அழைப்பிதழ் எழுதியது. மரத்தில் கூடு கட்டி வசிக்கும் குருவி, காக்கை, ஆந்தை, மயில், கிளி, தலைகீழாகத் தொங்கும் வௌவால், தண்ணீரில் வாழும் தவளை, ஆமை, நத்தை முதலிய எல்லாவற்றுக்கும் விலாசம் எழுதித் தபாலாபீசுக்குச் சென்று தபாலில் சேர்த்து விட்டு வந்தது. தீபாவளியன்று எதிர்பாராமல் கரடி வீட்டுக்கு விருந்துண்ண எல்லாப் பிராணிகளும் வந்து ஏமாறவேண்டும் என்றும் கரடி வீட்டில் மாப்பிள்ளை உள்பட எல்லாம் அவமானப்பட வேண்டும் என்றும் யானை எண்ணி அவ்வாறு செய்தது.



தீபாவளியன்று காலை கரடிக் குடும்பம் அவமானப் படப் போவதை நினைத்துச் சந்தோஷப்பட்டுக் கொண்டே யானை வீட்டு வாசலிலே நின்றது. கரடியும் அதன் மனைவியும் பெண் மாப்பிள்ளையுடன் வேடிக்கையாகப் பேசிக் கொண்டிருந்தன.

அந்தச் சமயத்தில் அந்தக் காட்டுத் தபால் அதிகாரி நரி வெகுவேகமாக வந்து வாசலில் நின்று கொண்டிருந்த கரடிக்கு ஒரு ரோஜாப் பூ மாலையைப் போட்டுக் கையில் பூச்செண்டையும் கொடுத்தது. பிறகு, ''கரடியாரே! உமக்கு மிகவும் வந்தனம். காட்டிலுள்ள அஞ்சல் நிலையத்தைக் கடிதப் போக்கு வரத்து அதிகமாக இல்லாததால் மூடிவிடலாம் என்று மேலதிகாரிகள் யோசனை செய்து கொண்டிருக்கும் சமயத்தில் நீங்கள் தபாலில் சேர்த்த ஆயிரத்துக்கு மேலுள்ள கடிதங்கள் மிகவும் உதவியாக இருந்தன. இனிமேல் தபால் நிலையத்தை மூட மாட்டார்கள்'' என்று கடகடவென்று கூறி முடித்துவிட்ட நரி, கரடி ஏதோ சொல்ல வந்ததையும் கேட்காமல் ஓடிவிட்டது.

''ஆயிரத்துக்கு மேல் கடிதமா? யார் போட்டது? இதில் ஏதோ தவறு நடந்திருக்கிறது'' என்று எண்ணிக் கொண்டிருக்கும் சமயத்தில் கரடியின் வீட்டுக்கு வேகமாகச் சைக்கிள் மீது ஏறிக் கொண்டு தபால் சேவகன் குரங்கு வந்தது. வந்ததும் வராததுமாகக் கீழே இறங்கி, ''கரடியாரே! என்னை மன்னிக்க வேண்டும். நீங்கள் தபாலில் அனுப்பிய அழைப்பிதழ்கள் அனைத்தையும் எனது சைக்கிளுக்குப் பின்னுடி கட்டி வைத்திருந்தேன். ஆனால் துரதிர்ஷ்டவசமாக நான் ஏமாந்திருக்கும் சமயத்தில் ஒரு கழுதை அவ்வளவு கடிதங்களையும் தின்று விட்டது'' என்று குரங்கு சொன்னவுடன் ''அழைப்பிதழா? நானா அனுப்பி வைத்தேன்?'' என்று கரடி ஆச்சரியத்துடன் கேட்டது. ''ஆமாம், நீங்கள்தான் எனக்குக்கூட ஒரு அழைப்பு இதழ் அனுப்பியிருக்கிறீர்களே?'' என்று தன்னிடமிருந்த அழைப்பிதழைக் கொடுத்தது தபால்காரக் குரங்கு.

அழைப்பிதழைப் பார்த்தது கரடி. மேல் விலாசம் எழுதியிருந்த கையெழுத்தைப் பார்த்ததும் அது யானையின் கையெழுத்து என்று தெரிந்தது. உடனே குரங்கைக் கட்டிக் கொண்டு, ''என் மானத்தை நீதான் காப்பாற்றினாய். அந்த அழைப்பிதழ்களைக் கழுதை தின்றிராவிட்டால் என் கதி இன்று என்ன ஆகியிருக்கும்? எனக்குப் போட்ட ரோஜாப் பூ மாலை உன்னைத்தான் சேரவேண்டும்'' என்று குரங்குக்கு மாலையைப் போட்டது. குரங்குக்குத் தன் வீட்டில் தீபாவளி விருந்தும், தீபாவளி சன்மானமும் கொடுத்தது. யானைக்கு எப்படி இருந்திருக்கும் என்று நீங்களே ஊகித்துக்கொள்ளுங்கள்.

# பிராசீன இந்தியாவில் கல்வி முறை



நமது நாடு சுதந்திரமடைந்து சுமார் பதினைந்து ஆண்டுகளாகியும், இன்னமும் ஒழுங்கானதொரு கல்வித் திட்டம் உருவாகவில்லை. இதுபற்றிப் பலதரக் கருத்துக்கள் வெளிவந்த வண்ண மிருக்கின்றன. இந்தச் சந்தர்ப்பத்தில் நமது நாட்டுப் பண்டைக் காலத்துக் கல்வி முறையின் மீது சிறிது சிந்தனையைச் செலுத்துவது பொருத்தமாயிருக்கும் அல்லவா?

கல்வியின் நோக்கம், விஷயத் துணுக்குகளை மூளையில் திணிப்பதன்று. பொருளுக்கோ, புகழுக்கோ அறிவை விற்கிறவன் அறிஞனாக மாட்டான். கற்கும் கல்வி வேறு, வாழும் வகை வேறு என்று கருதுகிறவன், இரண்டையும் புரிந்து கொள்ளாதவன். கல்விச் செல்வத்தையும் கேள்விச் செல்வத்தையும் ஒருவன், எவ்வளவு பெற்றிருந்தாலும், அவனிடத்தில் தெய்வ நம்பிக்கை என்பது இல்லா விட்டால், அவன் அறிவிலே வறியவன் தான். இன்னோரன்ன சில எதிர்மறையான கருத்துக்கள், நமது முன்னோர்கள் வகுத்துக் காட்டி நடைமுறையில் கொண்டு வந்திருந்த கல்வித் திட்டத்தின் அடிப்படையில் அமைந்திருந்தன என்பதை நாம் முதலிலேயே தெரிந்துகொண்டு விடுதல் நல்லது.

அப்படியானால் நமது முன்னோர்கள் கருத்துப்படி கல்வியின் நோக்கம் என்ன?

கல்வியானது, மனிதனுக்குப் பரம்பொருளுண்மையை உணர்த்த வேண்டும். அந்தப் பரம்பொருள் என்றும் உள்ளது; எங்கும் உள்ளது; வெறும் அறிவைக் கொண்டு அதனை அடைய முடியாது. அஃது ஒளி மயமாயிருப்பது. அதனின்று தெறித்த ஒரு சிறு பொறியே மனிதன். இதனால் அந்தப் பரம்பொருளின் தன்மைகள் பலவும் அவனிடம் இயற்கையாகவே இருக்கின்றன. அதாவது தெய்வத் தன்மைகள் என்று எவை எவைகளையெல்லாம் நாம் சொல்கிறோமோ, அவைகளுடனேயே அவன் பிறக்கிறான். ஆனால் நிலவுலகில் அவன் உலவ முற்படுகிறபோது, அந்தத் தெய்வத் தன்மைகளுக்கு மாறுபட்ட தன்மைகளைச் சந்திக்கிறான். அவற்றின்மீது போர் தொடுத்து வெற்றி காண வேண்டியது அவனுக்கு அவசியமாகிறது. ஏனென்றால் அப்பொழுதுதான் அவனுக்கு மனிதப் பிறவி எடுத்ததன் பயன் கிட்டுகிறது. அதாவது அவன் எதிலிருந்து தெறித்து வந்தானோ அதில், அந்தப் பரம்பொருளிடம் சென்று ஐக்கியமாவதற்குத் தகுதி படைத்தவனாகிறான். இதை இன்னும் தெளிவாகச் சொல்ல வேண்டுமானால், மனிதன் எங்கிருந்து வந்தானோ, அங்கு போய்ச் சேரவேண்டியவன். இந்த நியதியை அவனுக்கு அறிவுறுத்துவது தான் கல்வியின் நோக்கம்.

## அறிவின் பண்பாடு

அறிவைப் பண்படுத்திக் கொடுப்பது மட்டும் கல்வியின் நோக்கமாகாது. அறிவோடு மனத்தையும் பண்படுத்திக் கொடுக்க வேண்டும். அதாவது – சர்வ ஜீவ ராசிகளின் க்ஷேமத்தையும் நாடுகின்ற விதமாக அந்த மனத்தை விசாலாக்கிக் கொடுக்க வேண்டும். எல்லோருடைய நன்மையையும் நாடுவதன் மூலந்தான் எல்லோருடைய அன்பையும் பெற முடியும் என்ற நியதியை அறிந்து நடந்துகொள்ளும் தகுதியை அவனுக்கு அளிக்க வேண்டும். சுருக்கமாக, ஒருவனை விசுவமித்திரனாக்குவதுதான் கல்வியின் நோக்கம்.

வெ. சாமிநாத சர்மா

சமுதாயத்தில் ஒருவனாகப் பிறந்த மனிதன், அந்தச் சமுதாயத்திலிருந்து பலவித அனுகூலங்களைப் பெறுகிறான்; பெறுவதன் மூலம் வளர்ச்சியடைகிறான்; அன்றாட வாழ்க்கையை நடத்துகிறான். இவைகளுக்குப் பிரதியாக, அவன், அந்தச் சமுதாயத்துக்கு நன்றி செலுத்துகிற முறையில், அது நல்லவிதமாக இயங்கிக் கொண்டு செல்வதற்கு, தன்னுடைய சேவையை அந்தச் சமுதாயத்துக்கு அளிக்கக் கூடிய பக்குவத்தைப் பிரதியொரு மனிதனிடத்திலும் உண்டு பண்ணுவதுதான் கல்வியின் நோக்கம். கல்வியானது, ஒருவனை, நாட்டின் நல்ல பிரஜையாக்கிக் கொடுக்க வேண்டும். பிரஜையாயிருப்பது ஒரு மகத்தான பொறுப்பு. உரிமைகளைக் காட்டிலும் கடமைகளுக்கு முக்கியத்துவம் கொடுக்கிறவன்தான் உண்மைப் பிரஜை. அந்த வகை உண்மைப் பிரஜையாக நடக்க, ஒவ்வொரு மனிதனையும் தகுதிப்படுத்திவிடுவதுதான் கல்வியின் நோக்கம்.




கல்வியானது, பிரதியொரு மனிதனையும் சீல புருஷனாக்கி விட வேண்டும்; எல்லோரிடத்திலும் இங்கிதமாக நடந்து கொள்ளச் செய்ய வேண்டும். கல்வியினாலாய பயன் சீலமும் நன்னடத்தையுமே என்று மகாபாரதம் கூறுகிறது. மற்றும் கல்வியானது, மனிதனை ஸ்திதப்பிரக்ஞனாக்கி விட வேண்டும். அதாவது, இன்ப துன்பங்களைச் சமமாகக் கருதக் கூடியவனாயும், ஆசை, அச்சம், கோபம் ஆகியவைகளை விலக்கியவனாயும் செய்ய வேண்டும்.

எல்லோரும் கல்வியறிவு பெற வேண்டியது அவசியமென்றாலும், எல்லோருக்கும் ஒரே மாதிரியான கல்வி புகட்டுவதை நமது முன்னோர்கள் அங்கீகரிக்கவில்லை. ஏனென்றால், அறிவு வளர்ச்சியிலாகட்டும், மனப் பக்குவத்திலாகட்டும் எல்லோரும் ஒரே தரத்தினராய் இருப்பதில்லை. தவிர, ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு விதமான அறிவுத் துறையில் இயல்பான ஊக்கம் இருக்கும். அப்படியிருக்க, பல தரத்தினரையும் ஒருங்கே கூட்டி வைத்துக் கொண்டு ஒரே மாதிரியான கல்வியைப் புகட்டினால், அதிலிருந்து தீமை விளையுமே தவிர நன்மை விளையாது. எனவே, அவரவருடைய அறிவு வளர்ச்சி, மனப்பக்குவம், இயல்பான ஊக்கம் ஆகியவைகளையெல்லாம் அனுசரித்தே கல்வி புகட்டப்பட வேண்டுமென்று கூறிப் போந்தனர் நமது முன்னோர்கள்.

இங்ஙனம் அவரவருடைய பக்குவத்துக்குத் தகுந்தபடி கல்வி புகட்டும் திட்டம் வெற்றிகரமாக நடைபெறுவதற்கு, ஆசிரியன்மார், தங்களிடம் பயில வரும் மாணாக்கர் ஒவ்வொருவருடைய முன்னேற்றத்திலும் தனித் தனியாகக் கவனஞ் செலுத்த வேண்டியது அவசியமென்று கருதப்பட்டது. சாதாரணமாக ஓர் ஆசிரியனிடம் ஏழு அல்லது எட்டு மாணாக்கர்களே பயின்று வந்தனர். ஆயிரக்கணக்கான மாணாக்கர்கள் பயின்று வந்த பெரிய பெரிய கல்வி நிலையங்களில் நூற்றுக்கணக்கான ஆசிரியர்கள் இருந்து வந்தார்கள். உதாரணமாகக் கி. பி. ஏழாவது நூற்றாண்டிலும் அதற்கு முன்பும் வெகு பிரசித்தியடைந்திருந்த நாளந்தை சர்வகலாசாலையில் சுமார் 8500 மாணாக்கர்களுக்கு 1510 ஆசிரியர்கள் இருந்தார்களென்று தெரிகிறது. (தற்போதைய பீகார் மாகாணத்தில் ராஜ்கிர் என்னும் ஊருக்கு வடக்கே ஏழு மைல் தொலைவில் உள்ள பாராகோன் என்ற கிராமமே முந்தி நாளந்தையாயிருந்தது என்று சரித்திராசிரியர் கருதுகின்றனர்.) நாளந்தையைப் போல் இன்னும் அநேக சர்வகலாசாலைகள் நம் நாட்டில் இருந்து வந்தன என்பதை இங்கு குறிப்பிட வேண்டும்.

தற்காலத்தில் மாணாக்கர்களை ஆண்டுதோறும் வேதனைக்குள்ளாக்கும் பரீட்சை முறை நமது முன்னோர்களின் கல்வித் திட்டத்தில் இடம் பெறவில்லை. மாணாக்கர்கள் அவ்வப்பொழுது பரீட்சிக்கப் பட்டார்களென்பது வாஸ்தவம். ஆனால் அந்தப் பரீட்சையில் அவர்கள் அடைந்த வெற்றி தோல்விகளைக் கொண்டு அவர்களுடைய தகுதி நிர்ணயிக்கப்படவில்லை. படித்தவற்றைப் பரிசீலனை செய்து பார்க்கிற முறையிலேயே பரீட்சை சம்பந்தமான ஏற்பாடுகள் இருந்தன.

பாட திட்டத்தில் சில பகுதிகளை மாணாக்கர்கள் ஏடு பிடித்துப் படித்து வந்தார்கள்; சில பகுதிகளை மனப்பாடஞ் செய்து வந்தார்கள். இந்த மனப்பாட முறைக்கு ஓரளவு முக்கியத்துவமும் கொடுக்கப்பட்டது. இந்த முறையினால் மாணாக்கர்களுக்கு மன ஒருமைப்பாடு உண்டாவதற்கும் ஞாபக சக்தி அதிகரிப்பதற்கும் ஏதுவுண்டாயிற்று. மற்றும் ஏட்டிலே பொறித்து வைக்கப் பட்டவை ஒரு காலத்தில் அழிந்து பட்டாலும் படலாம். மனத்திலே பதியும்படி செய்து தலைமுறை தலைமுறையாகப் பயின்று வருவது சாத்தியமாகும். தவிர இந்த மனப்பாட முறைக்கு உபகரணங்கள் எதுவும் தேவையில்லை. எனவே இந்த முறையில் தேர்ச்சி பெற்றவர்கள் நடமாடும் நூல் நிலையங்களாயிருந்து நாடெங்கணும் அறிவைப் பரப்புவது சுலபமாயிருந்தது.

முற்காலத்தில் பெரும்பாலான கல்வி நிலையங்கள், முன்கூட்டித் திட்டமிட்டுத் தோன்றியவையல்ல; யாருடைய நன்கொடையையோ, ஆதரவையோ நம்பி ஏற்பட்டவையுமில்லை; கட்டணம் வாங்கிக் கொண்டு அறிவை வழங்குகிற ஸ்தாபனங்களாகவும் இருக்கவில்லை. இயற்கையாகத் தோன்றிய அறிவு ஊற்றுக்களாக இருந்தன. தெளிவாகச் சொல்ல வேண்டுமானால், கற்றுத் தெளிந்தபடி வாழ்க்கையை நடத்தி வந்த ஒவ்வோர் அறிஞருடைய வீடும் ஒவ்வொரு கல்வி நிலையமாக இருந்தது. இத்தகைய கல்வி நிலையங்களில் பயின்ற மாணாக்கர்களின் எண்ணிக்கை இரண்டு அல்லது மூன்றாக இருந்த போதிலும், இவை சமுதாயத்தினரின் நன்மதிப்புக்கும் ஆதரவுக்கும் உரியனவாயிருந்தன.



## பழங்காலக் கல்வி நிலையங்கள்

நாற்றுக்கணக்கான மாணுக்கர்கள் பயின்று வந்த பெரும்பாலான கல்வி நிலையங்கள், நகர சந்தடிகளுக்கப்பால் இயற்கையான சூழ்நிலையில் அமைந்திருந்தன. இவற்றில் பயின்ற மாணுக்கர்கள், இங்கேயே உண்டியும் உறையுளும் பெற்று ஆசிரியன்மாரோடு நெருங்கிய உறவு பூண்டு வாழ்ந்தார்கள். இதனுல் இவர்களிடம் ஆசிரியன்மாருடைய நல்ல தன்மைகள் தாமாகவே வந்து படிவதற்கு வாய்ப்பு ஏற்பட்டது.

இந்தக் கல்வி நிலையங்கள், குருகுலங்களென்றும் ஆசிரமங்களென்றும் புனிதமான பெயரைப் பெற்று விளங்கின. ஒவ்வொன்றையும் தற்காலத்துப் பல்கலைக் கழகத்தோடு குறிப்பிட்டுச் சொல்லலாம்.

ஒவ்வொரு குருகுலத்துக்கும் தலைமை வகித்து நடத்தியவர் குலபதி என்று அழைக்கப்பட்டார். தற்காலப் பல்கலைக் கழகத் துணை வேந்தர் (வைஸ்சான்ஸலர்) என்று இவரைச் சொல்லலாம்.

இந்த ஆசிரமப் பல்கலைக் கழகங்களில் பல துறைகளிலும் பயிற்சி பெறுவதற்கான வாய்ப்பும் வசதியும் இருந்தன. ஒவ்வொரு துறை பற்றின பயிற்சி அளிப்பதற்கும் தனித்தனிப் பிரிவுகள் இருந்தன. இவற்றைத் தற்காலப் பல்கலைக் கழகங்களிலுள்ள இலாகாக்களுக்கு, அல்லது ஒரு பல்கலைக் கழகத்தோடு இணைந்த தனித்தனிக் கல்லூரிகளுக்கு ஒப்பிட்டுக் கொள்ளலாம். அநேக ஆசிரமங்களில் எட்டுப் பிரிவுகள் அல்லது இலாக்காக்கள் இருந்தனவென்றும் இவை தனித்தனிப் பெயரால் அழைக்கப்பட்டனவென்றும் தெரிகின்றன. இவை முறையே - (1) அக்கினி ஸ்தானம் —அன்றாடம் மாணுக்கர்கள் அனைவரும் ஒன்று கூடி ஓமத் தீ வளர்த்து வழிபாடு நடத்துகிற இடம்; இங்கு ஓமச் சடங்குகள் பற்றியும் வழிபாடு நடத்தும் முறையைப் பற்றியும் சொல்லிக் கொடுக்கப்பட்டன என்று நாம் ஊகிக்கலாம். (2) பிரம்ம ஸ்தானம் — வேதங்களில் பயிற்சி அளிக்கும் பிரிவு (3) விஷ்ணு ஸ்தானம் — அரசியல், பொருளாதாரம் முதலியவைகளைப் போதிக்கும் பிரிவு. (4) மகேந்திர ஸ்தானம் — யுத்த தருமங்களையும் யுத்த நியதிகளையும் கற்பிக்கும் பிரிவு. (5) வைவகவத ஸ்தானம் — வான சாஸ்திரத்தைப் போதிக்கும் பிரிவு. (6) சோமஸ்தானம்—தாவர சாஸ்திரத்தைப் போதிக்கும் பிரிவு. (7) கருட ஸ்தானம்— போக்குவரத்து சாதனங்களைப் பற்றி அறிவு புகட்டும் பிரிவு. (8) கார்த்திகேய ஸ்தானம் —யுத்த தந்திரங்கள் அதாவது அணிவகுத்தல், காவற் படைகள் அமைத்தல் முதலியவை பற்றிச் சொல்லிக் கொடுக்கும் பிரிவு.

தவிர, மாணுக்கர்களுடைய பெற்றோர்களோ அவர்களுடைய பெற்றோர்களோ பரம்பரையாக எந்தத் தொழிலில் ஈடுபட்டிருந்தார்களோ அதில் அந்த மாணுக்கர்களுக்கு இளமைப் பருவத்திலிருந்தே இயற்கையான ஒருவித அறிவும் ஈடுபாடும் இருக்கும். மறுக்க முடியாத இந்த உண்மையை நமது முன்னேர்கள் அங்கீகரித்துக் கொண்டு, அதற்குத் தகுந்தாற்போல் மாணுக்கர்களுக்கு அந்தத் தொழிலில் திறமை ஏற்படக் கூடிய மாதிரி பாடக் கிரமங்கள் நியதி செய்து வைத்தனர்.

இங்ஙனம் பல வித்தைகளைக் கற்றுக் கொடுத்த ஆசிரமப் பல்கலைக் கழகங்கள் சில மகாபாரதம் போன்ற நூல்களில் வருணிக்கப்படுகின்றன. உதாரணமாக, நைமிசாரணியம் என்பது ஒன்று. இங்கு வேப்ப மரங்கள் நிறைந்திருந்ததனலேயே இந்தப் பெயர் கொடுக்கப்பட்டது. இதன் தலைவராக — குலபதியாக — இருந்தவர் செளனகர் என்பவர். இங்கு பதிஞயிரம் மாணுக்கர்கள் பயின்று வந்தனரென்று சொல்லப்படுகிறது. சகுந்தலையின் வளர்ப்புத் தந்தையான கண்வரும், ஓர் ஆசிரமப் பல்கலைக் கழகத்தின் தலைவர்.

துறவு மனம் பூண்ட பெண்களாலும் ஆசிரமக் கல்லூரிகள் பல நடத்தப்பட்டு வந்திருக்கின்றன. இவற்றுள் குறிப்பிடத்தக்கது சபரியின் ஆசிரமம். ராமபிரானை உபசரித்த இந்த அம்மையார் பல துறை அறிவினையும் பெற்ற மகா பண்டிதை என்று அறிகிறேம்.

நாற்றுக்கணக்காக நடைபெற்று வந்த இந்த ஆசிரமப் பல்கலைக் கழகங்களுக்கு அரசாங்கம் பலவகை மானியங்கள் அளித்து ஆதரித்தது. அரசர்கள் அவ்வப்பொழுது இந்த ஆசிரமங்களுக்கு வந்து அறிவும் அமைதியும் பெற்றுச் சென்றுர்கள். ஆனுல் அரசர்களோ, அரசாங்கமோ இவற்றில் தலையிடவில்லை;பாடத்திட்டங்களையோ,போதனைக்கிரமங்களையோ வகுத்துக் கொடுக்கவில்லை; அளித்த மானியத்துக்கு ஈடாக எந்தவகையிலும் அதிகாரத்தைச் செலுத்தவில்லை என்றே சொல்லலாம்.

## ஆசிரியர் - மாணவர் உறவு நிலை

ஆசிரியரும்,மாணுக்கர்களும் நெருங்கிய உறவு கொண்டிருந்தனர். இந்த உறவு எப்படி யிருக்க வேண்டும் என்பதைப் பற்றி நமது பெரியோர்கள் வெகுவாகப் பேசியிருக்கிறார்கள். ஆசிரியர் — மாணுக்கர் உறவு, ரத்தபாசமுள்ளவனுக் கிடையே நிலவும் உறவு போல, அதாவது தகப்பனுக்கும் பிள்ளைகளுக்கும் உள்ள உறவு போல் இருக்க வேண்டும். ஒருவர் நலத்துக்கும் மேன்மைக்கும் மற்றொருவர் பாது காப்பாளர் போல் இருக்க வேண்டும்.





ஆசிரியர் மாணாக்கருக்குக் குடை போல் நிழல் தந்து, சிறுமைகள் ஏதும் அவர்களை அணுகா வண்ணம் அவர்களைக் காப்பாற்ற வேண்டும். அது போலவே, மாணாக்கர், ஆசிரியருக்குக் குடைபோல் இருந்து அவரது நற்பெயருக்குக் களங்கம் ஏற்படாமல் பாதுகாக்க வேண்டும்.

தினந்தோறும் ஆசிரியரும் மாணாக்கரும் முறையே படிப்பிக்கவும் படிக்கவும் தொடங்குகிறபோது, இருவரும் சேர்ந்து, "குரு சிஷ்யர்களாகிய எங்கள் இருவரையும் சேர்த்துப் பரம்பொருள் காப்பாற்றட்டும்; சேர்த்துப் போஷிக்கட்டும். (நாம்) இருவரும் சேர்ந்து வீரியத்துடன் உழைப்போமாக. எங்கள் படிப்பு ஒளி பொருந்தியதாக வேண்டும். (நாங்கள் இருவரும்) பரஸ்பரம் பகைத்துக் கொள்ளாமல் இருக்க வேண்டும்" என்று கருத்து அடங்கிய பிரார்த்தனையைச் செய்து கொள்ளவேண்டும். இதிலிருந்து, ஆசிரியர் – மாணாக்கர் உறவுக்கு எவ்வளவு புனிதத் தன்மை கொடுக்கப்பட்டது என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

இந்த உறவுமுறைக்கேற்றாற் போல் ஆசிரியனுடைய லட்சணங்களும், மாணாக்கனுடைய லட்சணங்களும் முறையே விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றன. ஓர் ஆசிரியனுடைய லட்சணங்களாவன:

முதலாவது அவன், தன்னுடைய தாய்நாட்டின் பரம்பரையான நாகரிகத்தையும் கலாசாரத்தையும் பாதுகாத்து, வருங்காலச் சந்ததியினருக்குப் பயன்படுத்தும் மகத்தான பொறுப்பு தன்னிடம் ஒப்படைக்கப்பட்டிருப்பதாக உணர்ந்து அதன்படியே செயலாற்ற வேண்டும்.

அடுத்தாற்போல், அவன் படிப்பிக்கிற விஷயங்களில் நிறைந்த அறிவு உடையவனாக இருக்க வேண்டும். பிறருடைய குற்றங்களைக் கண்டு இரக்கப்படுகிறவனாகவும், தாராள மனப்பான்மை உடையவனாகவும் இருக்க வேண்டும். அவனுடைய முகத்தில் எப்பொழுதும் புன்சிரிப்புத் தவழ வேண்டும். தன்னை நாடி வருகின்றவர்களை, தன் இனிய சுபாவத்தினால் வசீகரிக்கக் கூடியவனாக இருக்க வேண்டும். களங்கமில்லாத வாழ்க்கையை நடத்துகிறவனாக இருக்க வேண்டும். அன்றாட வாழ்க்கையில் ஒழுங்கைக் கடைப்பிடிக்கிறவனாக இருக்க வேண்டும். அப்படியே மாணாக்களிடம் ஒழுங்கைப் புகுத்தும் சக்தியுடையவனாயிருக்க வேண்டும். வாழ்க்கையில் சர்வானுகூல நம்பிக்கை உடையவனாகவும், சமுதாயத்துக்குத் தன்னால் இயன்ற சேவையைச் செய்து கொண்டிருக்க வேண்டுமென்ற மனப்பான்மை உடையவனாகவும் இருக்க வேண்டும். அவனுடைய பேச்சில் இனிமையும் தூய்மையும் தவழ வேண்டும். தன்னிடம் பயில வரும் மாணாக்கர்களின் முன்னேற்றத்தில் அதிக அக்கறை உடையவனாகவும் அந்த மாணாக்கர்கள், தன்னைத் தங்கள் தந்தை போல் கருதக் கூடிய விதமாக நடந்து கொள்கிறவனாகவும் இருக்க வேண்டும். சுருக்கமாக, போதிக்கிறபடி நடக்கிறவனாக இருக்க வேண்டும். அப்படி நடக்கிறவன்தான் உண்மையான ஆசிரியன் என்று மகாபாரதத்தில் கூறப்பட்டிருக்கிறது.

மாணாக்கன் லட்சணங்களாவன :

அவன் தன் அறிவை அதிகரித்துக் கொள்ள வேண்டும் என்பதில் மிகவும் சிரத்தையுடையவனாக இருக்க வேண்டும். படிக்கிறபோது, தன் முழுக் கவனத்தையும் செலுத்துகிற மன ஒருமைப்பாடு உடையவனாக இருக்க வேண்டும். அறிவிலே தெளிவு காண வேண்டும் என்பதில் ஆர்வம் உடையவனாக இருக்க வேண்டும். யாரிடத்தும், எதனிடத்தும் குற்றம் காண்கிற சுபாவம் அற்றவனாக இருக்க வேண்டும். ஆசிரியருக்குப் பணிவிடை செய்வதில் உற்சாகம் உடையவனாக இருக்க வேண்டும்.

ஒரு மாணாக்கன் பின்வரும் சில கட்டுத்திட்டங்களுக்குட்பட்டு நடந்து கொள்ள வேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது:

'வைகறைத் துயிலெழு' என்பதைக் கட்டாய விதியாக அனுசரிக்கவேண்டும். பிறகு குளிர்ந்த நீரில் ஸ்நானம் செய்ய வேண்டும். ஸ்நானப் பொடிகள் எதையும் உபயோகிக்கக் கூடாது. சாதாரணமாக ஒரு நாளைக்கு மூன்று தடவை நீராடுதல் நல்லது. நீராடி முடிந்ததும் மௌனமாகப் பிரார்த்தனை செய்ய வேண்டும். சைவ உணவையே உட்கொள்ள வேண்டும். வாசனைத் திரவியங்கள், புஷ்ப வகைகள், செருப்பு, குடை, வாகனம் ஆகியவைகளை உபயோகிக்கக் கூடாது. பெண்களுடன் நெருங்கிப் பழகுதல் கூடாது. பகலில் நித்திரையை ஒழித்தல் வேண்டும். வம்புப் பேச்சுக்களில் ஈடுபடக் கூடாது. கோபம், பொறாமை, பேராசை இவைகளுக்குட்படக் கூடாது. எதிலும் நிதானம் தவறாதவனாகவும், யாரிடத்தும் பணிவுடையவனாகவும் இருக்க வேண்டும்.

படிக்கிற போது ஆசிரியருக்குச் சற்றுத் தாழ்வான ஸ்தானத்தில் அமர்ந்திருத்தல் வேண்டும். ஆசிரியர் நின்றுகொண்டே பாடம் சொன்னால் நின்று கொண்டும் நடந்து கொண்டே சொன்னால் நடந்து கொண்டும் பாடம் கேட்க வேண்டும். ஆசிரியர் சொன்னபிறகுதான் படிக்கத் தொடங்க வேண்டும். பாடம் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருக்கிற போது, குறுக்குக் கேள்விகள் கேட்கக் கூடாது. ஆசிரியருக்கு வெகு தூரத்திலோ, சமீபத்திலோ அமர்ந்து பாடம் கேட்கக்கூடாது. மிதியடியுடனோ, தலையைத் துணியால் மூடிக்கொண்டோ, கையில் ஏதேனும் ஓர் ஆயுதத்தை வைத்துக் கொண்டோ ஆசிரியரை அணுகுதல் கூடாது; பக்தியுடனே அவரை அணுகுதல் வேண்டும்.

ஆசிரியர் முன்னிலையில் மாணாக்கன், சுவரில் சாய்ந்து கொண்டு நிற்றல், இரு கால்களையும் நீட்டிக் கொண்டு உட்காருதல், காரித் துப்புதல், கொட்டாவி விடுதல், விரல்களைச் சொடுக்குதல், உரக்கச் சிரித்தல், முணுமுணுத்தல் ஆகிய காரியங்களைச் செய்யக் கூடாது.

இப்படிச் சில விதமான கட்டுப்பாடுகளுக்குட்பட்டுக் கல்வி பயிலுவது அவர்களுடைய நன்மைக்காகவேதான்.

பொதுவாக, சமுதாயமானது, கட்டுக்கோப்பு தளர்ந்து போகாமல், வளர்ந்து கொண்டு போக வேண்டும். அந்தச் சமுதாயத்துக்கேற்றபடி பிரதியொரு மனிதனும் தனது தாய்நாட்டின் உண்மையான பிரஜையாக மட்டுமின்றி, உலகப் பிரஜையாகவும் வாழ்க்கையை நடத்த வேண்டும்; என்றும் நிலைத்திருப்பவை எவையோ அவை மீது மனிதன் நாட்டம் செலுத்த வல்லவனாக வேண்டும்; இவையே நமது பண்டைக் கல்வி முறையின் குறிக்கோள்களாகும்.



நீரும் நிழலும்

போட்டோ : —என். ராமகிருஷ்ணா



*. . . And all you do is turn the key!*

TURN-KEY JOBS are a speciality of LARSEN & TOUBRO. From the design and construction of buildings to the supply, erection and commissioning of plant and equipment, L & T can do the job for you.

LARSEN & TOUBRO represents some of the world's foremost manufacturers of plant and equipment in every branch of engineering. L&T's own manufacturing programme at its Powai Works embraces a wide variety of equipment. The Company's qualified engineers and first-rate service stations ensure effective after-sales service.

With its ten Divisions and several subsidiary Companies, LARSEN & TOUBRO is in an excellent position to undertake turn-key jobs, including all design work, civil engineering, and the supply and erection of equipment.

IN SERVICE LIES SUCCESS

**LARSEN & TOUBRO**

**LIMITED**

P. O. Box 278, Bombay 1

*Also at* Madras • Calcutta • New Delhi • Bangalore • Cochin • Ahmedabad • Lucknow

*Divisions:* DAIRY & REFRIGERATION · EARTHMOVING & AGRICULTURAL EQUIPMENT · DRILLING & MINING · HEAVY PLANT · INDUSTRIAL APPLIANCES · ELECTRICAL EQUIPMENT & SWITCHGEAR · CIVIL ENGINEERING · ERECTION · MANUFACTURE · SERVICING


தீபாவளி
நல் வாழ்த்துக்கள்!
'ராதா ஸில்க்ஸ்'
ராதா ஸில்க்ஸ், 'தன் பில்டிங்', சென்னை – 2
ராதா ஸில்க் எம்போரியம், மயிலாப்பூர், சென்னை – 4
ராதா ஸில்க் எம்போரியம், லஸ், சென்னை – 4

# செங்காய்

ஜெகசிற்பியன்

செந்தில்நாயகத்துக்கு வாழ்க்கை வெறுத்து விட்டது. வாழ வேண்டுமென்ற விருப்பமும் அற்றுப் போயிற்று. கசந்து கருகிய மனத்துடன் கால்போன போக்கில் நடந்து கொண்டிருந்தார் அவர்.

வானம் மந்தாரமிட்டிருந்தது. காற்று மண்டலமே வறண்டு போன மாதிரி எங்கும் ஒருவிதப் புழுக்கச் செறிவு. மரஞ் செடி கொடிகளெல்லாம் ஏதோ பயங்கரக் காட்சியைக் கண்டு பயந்து திகைத்து விட்டாற் போல் ஆட்டமும் அசைவும் இன்றி ஸ்தம்பித்து நின்றன. அவற்றுக்கும் இன்று அவரைப் போல் ஏதேனும் விரக்தி தோன்றி விட்டதோ என்னவோ !

இடது கையைப் பின்னால் மடித்துப் போட்டு வலது கையைத் துவளத் துவள வீசி நடந்து கொண்டிருந்த அவர் எதிரே பத்துப் பன்னிரண்டு மாடுகள் மந்தையாக வருவதைக் கண்டு தயங்கி நின்றார். குறுகலான வண்டிப் பாட்டையை அடைத்துக் கொண்டு வரும் அந்த மாடுகளுக்கு வழிவிட்டு விலகிப் போக அவருடைய கால்கள் தன்னிச்சையாகத் திரும்பின. ஆனால், சலிப்புற்றுக் கிடந்த மனமோ அவற்றை இழுத்து நிறுத்தியது. 'ஏன் ஒதுங்க வேண்டும்? மாடுதானே முட்டப் போகிறது? முட்டித் தள்ளட்டுமே! அப்படியாவது ஒரு வழியாக ஒழிந்து போனால் சரிதான்!' — அவர் அலட்சியமாக நடுப் பாதையிலேயே நடந்தார்.



மாடுகள் அவரை முட்டவும் இல்லை, மோதித் தள்ளவும் இல்லை. இரண்டு பகுதியாகப் பிரிந்து அவருக்கு வழி விட்டு ஒதுங்கிச் சென்றன. இன்று அவற்றுக்கும் இந்த உலக வாழ்க்கை வெறுத்து விட்டதோ என்னவோ ! ஆனால் மந்தையின் பின்னால் வந்த ஒரு கன்றுக்குட்டி மட்டும் தன் சாட்டை போன்ற வாலைச் சுழற்றி அவர் முதுகில் சுளீரென்று ஒரு சொடுக்குச் சொடுக்கி விட்டு மேலே சென்றது. அதன் கண்ணுக்கு அவர் ஓர் ஈயாகவோ, எறும்பாகவோ தோன்றியிருக்கலாம்!

செந்தில்நாயகம் அதை லட்சியப் படுத்தவில்லை. உணர்ச்சியற்ற ஜடம் போல் நடந்துகொண்டே யிருந்தார்.

மாலை மணி ஆறுக்கு மேல் இருக்கும்.

வண்டிப் பாட்டையைக் கடந்து ஒரு தென்னந் தோப்பினுள் புகுந்து வெளிப்பட்ட அவர், உயரமான ஆற்றங்கரையின் மேல் ஏறி நின்றார்.

ஆற்றின் இருபுறமும் வெண்ணிற மணல் விசாலித்துக் கிடக்க, நடுவில் சின்னஞ்சிறு ஓடை போல் முழங்கால் அளவுத் தண்ணீரே சலசலத்து ஓடிக் கொண்டிருந்தது. கழனிக் காடுகளில் வேலை செய்து விட்டு வந்த குடியானவப் பெண்கள் சிலர் அந்த முழங்கால் அளவு நீரில் முங்கி முங்கிக் 'காக்கைக் குளியல்' குளித்துக் கொண்டிருந்தனர். அவர்களுக்கு மேலண்டைப் பக்கம் ஒரு மூங்கில் பாலம் இருப்பது தெரிந்தது. எந்தக் காலத்திலோ கட்டிய அந்தப் பாலம் மோசமான நிலையில் கட்டுத் தளர்ந்து கலகலத்துத் தொங்கலாடிக் கொண்டிருந்தது. இப்போதெல்லாம் அதன் மேல் யாரும் நடந்து போவதில்லை; போனால் ஆபத்துத்தான். ஆற்றில் இறங்கியே சுலபமாக மறு கரையை அடைந்து விடலாம். அதற்காக ஒரு பாதையும் அங்கே தேய்மானமாகிவிட்டிருந்தது.

ஆனால் செந்தில்நாயகத்துக்கு ஆற்றில் இறங்கி நடக்க விருப்பமில்லை. அப்படிச் சென்றால் அங்கு குளித்துக் கொண்டிருக்கும் பெண்களுக்குச் சங்கடமாக இருக்குமே என்பதல்ல காரணம்; வாழ்க்கையில் பற்றற்று மரத்துப் போன மனத்தின் ஒரு வக்கிரப் போக்கினாலேயே அந்தக் கலகலத்துத் தொங்கும் மூங்கில் பாலத்தை நோக்கி நடந்தார் அவர்.

'பாலம்தானே நொறுங்கப் போகிறது? நொறுங்கட்டுமே! அப்படியாவது ஒரு வழியாகக் கீழே விழுந்து, உப்புச் சப்பற்ற இந்த உலக வாழ்க்கையிலிருந்து விடுதலையானால் சரிதான்!' — கண்ணைக் கட்டிக் கொண்டு கயிறு மேல் நடக்கும் சர்க்கஸ்காரனைப் போல், சர்வ அலட்சியமாகப் பாலத்தில் இறங்கி நடந்தார். குளித்துக் கொண்டிருக்கும் பெண்கள் அவருடைய அந்தப் பைத்தியக்காரச் செயலைத் தடுக்கக் கத்திக் கூச்சல் போடுவார்களோ என்று எதிர்பார்த்தார். ஆனால் அவர்கள் அவரைச் சிறிதும் கவனித்ததாகவே தெரியவில்லை. ஒருகால் அவர்களும் இவ்வுலக வாழ்க்கையின் மேல் வெறுப்படைந்து விட்டார்களோ என்னவோ !

பாலம் கிடுகிடுத்து ஆடியது. அதன் ஒரு பக்கம் நொடித்து வளைந்தது. உளுத்து மாவான மூங்கில் கழிகள் சில உடைந்து விழுந்தன. நைந்து தளர்ந்த கயிறுகள் அறுந்து தொங்கின. பாலத்தின் நடுப் பகுதியைத் தாங்கிக் கொண்டு நின்ற இரண்டு பனைப் போத்துக்களில் ஒன்று மடாரென்று மடிந்து கொண்டது.

இதோ, இன்னும் கொஞ்ச நேரத்தில் அந்த நீண்ட மூங்கில் பாலம் சடசடாரென்று கீழே சாயப் போவது போல் தோன்றுகிறது.

என்ன துரதிர்ஷ்டம்! செந்தில்நாயகத்தின் எண்ணப்படி எதுவும் நடைபெறாமலே, அவர் சௌக்கியமாக மறு கரைக்குப் போய்ச் சேர்ந்து விட்டார். அந்தப் பொல்லாத மூங்கில் பாலம் இன்னமும் எங்கோ ஓரிடத்தில் ஒட்டிக் கொண்டு ஊசலாடியது.

''அப்பனே, சுகவரா! என்னை ஏன் இந்த உபயோகமற்ற உலக வாழ்க்கையில் உழன்று கொண்டிருக்க விட்டு வைத்திருக்கிறாய்? சீக்கிரமே உன்னிடம் அழைத்துக் கொள்ளலாகாதா? இதே நிமிஷம்கூட உன் திருவடிகளில் வந்து சேர நான் தயாராக இருக்கிறேனே!'' என்று கம்மிய குரலில் முணுமுணுத்தவாறு துண்டை உதறி மணலில் விரித்துப் போட்டு உட்கார்ந்த செந்தில்நாயகம், தம்மை நோக்கி யாரோ வருவதை அறிந்து திரும்பினார்.

''யாரு, செந்தில்நாயகமா? என்ன இது, மப்பும் மந்தாரமுமாக இருக்கிற இந்த நேரத்திலே இவ்வளவு தூரம் வந்து விட்டிருக்கீங்க?'' என்று கேட்டுக் கொண்டே அவர் எதிரில் வந்து உட்கார்ந்தார் ஒரு பருத்த மனிதர்.

புருவங்களை உயர்த்திப் பார்த்த செந்தில்நாயகம் உயிரற்ற புன்னகையுடன், ''வாங்க, கப்பையா!'' என்றார். அதற்கு மேல் எதும் பேச விரும்பாதவர் போல் தம் பார்வையை வேறு பக்கம் திருப்பிக் கொண்டார்.

செந்தில்நாயகமும் கப்பையாவும் ஒரே தெருவில் குடியிருப்பவர்கள்; பால்ய நண்பர்கள். நாற்பத்தைந்து வயதைக் கடந்து விட்ட அவர்கள் இன்னமும் நண்பர்களாகவே இருந்தார்கள். கப்பையாவுக்கு வீடு வாசல் நிலபுலம் எல்லாம் உண்டு; சொந்தத்தில் இரண்டு எண்ணெய்ச் செக்குகள் ஆடிக் கொண்டிருக்கின்றன. செந்தில்நாயகமும், வருமான வரி ஆபீஸில் குமாஸ்தாவாக வேலை பார்த்தவர்; கணிசமான அளவு கையிருப்பு உள்ளவர். இளகிய மனம் கொண்ட அவர் அந்தக் கையிருப்பில் கொஞ்சத்தை ஏமாந்து விட்டுவிட்டார் என்றாலும், அதனால் ஒன்றும் சரிவு ஏற்பட்டுவிட வில்லை.

''நம்ம செக்கு மேட்டுக்குக் கிழக்காடையிலே ஒரு முக்கால் வேலித் துண்டு நஞ்செய் இருக்குதில்லையா? அதிலே இன்னைக்கு நடவு. அதைப் போய்ப் பார்த்து விட்டு வர்றேன்'' என்று பேச்சை ஆரம்பித்த கப்பையா, வானத்தை அண்ணாந்து பார்த்தவாறு, ''ஏரேயடியா இருண்டுக்கிட்டு வருகிறதே! இப்ப மழை பிடிச்சா சீக்கிரத்திலே ஓயாது. இங்கே ஒதுங்கி நிற்கிறதுக்கும் இடமில்லே. எழுந்திருங்க, போகலாம்'' என்று கூறினார்.

இதைக் கேட்டு அலட்சியமாகத் தலையசைத்துக் கொண்ட செந்தில்நாயகம், ''மழைதானே? பெய்துட்டுப் போகட்டுமே! நாம் என்ன, உப்பு மூட்டையா கரைஞ்சு போகிறதுக்கு?'' என்று கூறினார் விரக்தி படிந்த குரலில்.

கப்பையாவுக்கு இந்தப் பதில் வியப்பை அளிக்கவில்லை. ஏனென்றால், செந்தில்நாயகத்தின் சமீப காலப் போக்கைப் பற்றி அவர் ஓரளவு அறிந்தேயிருந்தார்.

ஆறு மாதங்களுக்கு முன்னால் செந்தில்நாயகத்தின் மனைவி இறந்துபோனதிலிருந்தே அவருடைய போக்கு இப்படித்தான் மாறி விட்டிருக்கிறது. மனைவியை இழந்த மறு மாதமே தம் உத்தியோகத்தைத் திடீரென்று உதறித் தள்ளிவிட்டு வீட்டோடு உட்கார்ந்து விட்டார். அப்புறம் பத்தாயிரம் ரூபாய் முதலீடு வைத்து ஒரு சிறிய ஜவுளிக்கடை வைத்தார். அது லாபகரமாகவே நடந்து கொண்டிருந்தது. ஆனால் மூன்றாவது மாசம் அந்தக் கடையைக் காலணா நஷ்டத்தில் இன்னொருவருக்கு விற்று விட்டார். கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த தம் மகனைத் திடுதிப்பென்று படிப்பை நிறுத்தச் சொல்லி வீட்டுக்கு அழைத்து, அவசரக் கோலத்தில் ஒரு கலியாணத்தைப் பண்ணி வைத்து, அவன் கையில் கொஞ்சம் ரொக்கப் பணத்தையும் கொடுத்து, 'பெண்டாட்டியுடன் பட்டணத்துக்குப் போய் எப்படியாவது பிழைத்துக் கொள்' என்று அனுப்பி விட்டார்.

தொலைதூரத்துக்கு அப்பால் வாழ்க்கைப் பட்டிருந்த அவருடைய பெண், 'தலைப் பிரசவத்துக்காக வீட்டுக்கு வரப் போகிறேன்' என்று கடிதம் எழுதியதற்கு, 'அதெல்லாம் இங்கே வரவேண்டாம்; பணம் வேண்டுமானால் அனுப்புகிறேன், அங்கேயே பார்த்துக் கொள்' என்று பதில் எழுதி விட்டார். இப்படி அவர் தம் இயற்கைக் குணத்துக்கு மாறாக ஏதேதோ செய்து வருவதைக் கண்டு அந்தத் தெருவே ஆச்சரியத்தில் மூழ்கியது; அநுதாபமும் கொண்டது. 'அருமை மனைவியை இழந்த துக்கத்தில் அவருடைய மனம் பேதலித்து விட்டிருக்கிறது; கொஞ்ச நாட்கள் போனால் எல்லாம் சரியாகி விடும்' என்று எண்ணி அவர் போக்கிலேயே விட்டு விட்டனர். ஆனால் அவரது அந்த விரக்திப் போக்கோ இன்று வரை மாறவே இல்லை!....

''மழையில் கரைஞ்சு போக நாம் உப்பு மூட்டை இல்லேதான். ஆனால், இந்தப் புது மழையிலே நனைஞ்சு, ரெண்டு நாள் படுத்துவிட்டால் என்னைப் பார்க்க என் பெண்டுபிள்ளைகள் இருக்கிறாங்கள்; தனிக் கட்டையான நீங்க என்ன செய்வீங்களாம்?'' என்றார் கப்பையா மெல்லச் சிரித்துக் கொண்டே.

''இது வெறும் அஞ்ஞானம்! யாருக்கு யார் துணை? எடுக்கப் பிடிக்க ஆள் இருந்து விட்டால் மட்டும் போதுமா? அப்படித்தான் இங்கு ஆணி அடித்துக் கொண்டு வாழ்ந்து என்னத்தை வாரிக் கட்டிக் கொள்ளப் போகிறோம்? இரண்டு கையையும் தட்டி உதறி விட்டுச் சீக்கிரமாகக் கணக்கை முடித்துக் கொண்டு போகவாவது இந்த மழை உதவட்டுமே!'' என்று கசந்த குரலில் சரசரத்தார் செந்தில்நாயகம்.

கப்பையாவுக்கு ஒன்றும் பேசத் தோன்றவில்லை. அசட்டுச் சிரிப்புச் சிரித்துக் கொண்டார் அவர்.

ஆற்றங்கரைக்கு மறுபக்கச் சரிவில் செழித்தோங்கி வளர்ந்து நின்ற மாமரமொன்றிலே கொத்துக் கொத்தாகக் காய்கள் காய்த்துத் தொங்குவதை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்த செந்தில்நாயகம் ஏதோ ஒரு பெரிய உண்மையைப் புரிந்து கொண்டவர் போல் தலையைப் பலமாக ஆட்டிக் கொண்டு திரும்பி, ''அதோ, பார்த்தீங்களா, கப்பையா! அந்த மாங்காய்களில் சில, அடி வெந்து பழுத்துப் போயிருக்கின்றன; இப்போதோ இன்னும் கொஞ்ச நேரத்திலோ அவை கீழே விழுந்து விடும், இல்லையா?'' என்று புன்முறுவலுடன் கேட்டார்.

''அடி வெந்து இருக்கிறதினாலே அப்படிச் சொல்றீங்களா? அதெல்லாம் பழவெட்டுக் காய்களே இல்லே! அரைப் பிஞ்சு, கால் பிஞ்சாயிருக்கிற போதே சில சாதிக் காய்கள் சிவப்புத் தட்டிப் போய் விடும்! ஆனால் அவை பழுக்கிறதுக்கு ரொம்ப நாட்கள் பிடிக்கும்! விவரம் தெரிஞ்சவங்க அதைப் பார்த்து ஏமாந்துடமாட்டாங்க!'' என்று சொன்னார். சொல்லி முடித்த பிறகுதான், 'அவர் கேட்ட கேள்வி என்ன? நாம் சொன்ன பதில் என்ன?' என்ற சிந்தனை ஓடியது அவருக்கு.

செந்தில்நாயகம் ஓர் அலட்சியப் புன்னகை பூத்துவிட்டு மௌனமானார். இருண்டு கிடந்த வானத்தில் எங்கோ ஒரு மூலையில் குமுறல் ஒலி கேட்டது. இறுகிப் போயிருந்த வாயு மண்டலம் வெடித்து விட்டாற் போல் பலத்த காற்று வீசியது. பாறை பாறையாக உறைந்திருந்த கரு மேகங்கள் அங்குமிங்குமாக அலைப்புற்றுத் திரிந்தன.

''நல்ல மழை வரப் போகுது. புறப்படுங்க செந்தில்நாயகம், போகலாம்'' என்றவாறு அவசரமாக எழுந்தார் கப்பையா.




''ம்! நானும் புறப்பட வேண்டியதுதான்!'' என்று முனகிய செந்தில்நாயகம் கம்பீரமாக நிமிர்ந்து, ''கப்பையா! எனக்கு நீங்க ஓர் உதவி செய்வீங்களா?'' என்று கேட்டுக் கொண்டே தம் இடுப்பில் செருகி வைத்திருந்த சாவிக் கொத்தை எடுத்தார். கப்பையா அவரைக் கலவரத்துடன் ஏறிட்டு நோக்கினார்.

''என்மகளோமகனோ எப்பவாச்சும் என்னைப் பார்க்க வீட்டுக்கு வந்தால், அவங்களிடம் இந்தச் சாவிக் கொத்தை கொடுத்திடணும். அவ்வளவுதான்.''

திடுக்குற்றுப் பின்னால் நகர்ந்த கப்பையா, ''என்ன! நீங்க என்ன சொல்றீங்க?'' என்று குழறிக் கேட்டார்.

செந்தில்நாயகத்தின் கண்கள் கலங்கின.

ஆனால், அவர் சிரித்துக் கொண்டே சொன்னார்: ''எனக்கு இந்த உலகம் வெறுத்துப் போச்சு. வாழ்க்கையிலே இருந்த பற்றும் பாசமும் அறுந்து போச்சு. எந்த நிமிஷமும் இறைவனடி [சேர்ந்துவிட நான் தயாராகி விட்டேன். அதுக்கான மனப் பக்குவத்தையும் அடைஞ்சு கட்டேன். இப்படியே என்னுடைய யாத்திரையைத் தொடங்கி விடுகிறதுன்னு தீர்மானம்.''

கப்பையாவின் சட்டை ஜேபியில் சாவிக் கொத்தைப் போட்டு விட்டு நடக்கலானார் செந்தில்நாயகம்.

இரவு மணி எட்டரைக்கு மேல் ஆகிவிட்டது. சுழன்று வீசிய பலத்த காற்றினால் மழை மேகங்கள் கலைந்து வானம் துலாம்பரமாகி நிலவும் முளைத்து விட்டது.

எவ்விதக் குறிக்கோளுமின்றி ஆற்றோரமாக நடந்து வந்த செந்தில் நாயகம், ஏனோ தயங்கி நின்றார். அவர் கண்ணெதிரே கோயில் ஒன்று தென்பட்டது. முழுக்குத் துறையை அடுத்து அமைந்திருந்த அந்தக் கோயிலுக்கு அவர் அடிக்கடி வருவது வழக்கம்தான். அங்கு எழுந்தருளியுள்ள மும்முடிநாதர்மேல் அவருக்கு ஒரு தனிப் பற்று.

'மும்முடி நாதரைத் தரிசிக்காமல் இந்த ஊரை விட்டுப் போகலாமா? அதனால்தான் என்னையறியாமலே இந்தப் பக்கம் வந்திருக்கிறேன் போலும்' என்று [illegible] புரிந்து கொண்ட செந்தில்நாயகம் [illegible]க் குளித்து விட்டு நேரே கோயிலுக்குச் சென்றார்.

கோயிலில் கூட்டம் அதிகமில்லை. ஐந்தாறு பெண்மணிகளும், கடை கண்ணிகளை ஏறக்கட்டி விட்டு வந்த வியாபாரிகளும் மட்டுமே சுவாமி தரிசனம் பண்ணிக் கொண்டிருந்தனர். அவர்களில் சிலர் செந்தில் நாயகத்துக்கு அறிமுகமானவர்களாகவும் இருந்தனர். அவர்கள் கண்ணில் படவேண்டாமே என்று சற்றுத் தள்ளியே ஒரு தூணின் ஓரம் ஒதுங்கி நின்றார்.

மும்முடிநாதருக்கு அர்த்த ஜாம பூஜை நடந்தது.



மந்திர கோஷத்திலும் மணியோசையிலும் மனத்தைப் பறி கொடுத்துக் கண் குளிரச் சுவாமி தரிசனம் பண்ணிக் கொண்டு நின்ற செந்தில்நாயகத்தின் கண்களில் அருவியென நீர் வழிந்தது. ''அப்பனே! உன் திருவடி வந்து சேர எப்போது சித்தம் கொள்வாய்? எல்லாவற்றையும் துறந்து வந்துவிட்ட என்னை இன்னமும் உன்னிடம் அழைத்துக் கொள்ள ஏன் தயங்குகிறாய்?'' என்று நாத் தழுதழுக்க முனகிக் கொண்டே தூணோடு தூணாக அப்படியே சாய்ந்தார். மனம் கனிந்த குழைவாலோ அல்லது நெடுந்தூரம் நடந்து வந்த களைப்பாலோ அவருடைய கண்கள் மெல்ல மூடிக் கொண்டன. எவ்வளவு நேரம் அப்படிக் கண் மூடிக் கிடந்தாரோ, அது அவருக்கே தெரியாது.

திடுக்குற்றுக் கண் விழித்தார் செந்தில்நாயகம். அவர் மனம் பரபரத்தது. சுற்றுமுற்றும் திரும்பிப் பார்த்தார். எங்கும் ஒரே இருள்! காரிருள்!

'இது என்ன மாயம்? ஏன் இப்படியெல்லாம் இருட்டாகத் தோன்றுகிறது? விளக்குகள் அணைந்து விட்டனவா? அல்லது என் கண்ணின் பார்வைதான் பறிபோய் விட்டதா?'

அவர் அங்குமிங்குமாக ஓடினார். பெரிய தூண் ஒன்றில் படீரென்று மோதிக் கொண்டார். 'ஹா'வென நெற்றியைத் தடவி விட்டுக் கொண்டே திரும்பினார். சாத்திய கர்ப்பக்கிருகத்தின் கதவிடுக்கு வழியே 'மினுக், மினுக்' கென்ற ஒளிக் கீறல் தெரிந்தது.

அப்படியானால் கோயில் சாத்தப்பட்டு விட்டதா? அவர் உள்ளே இருப்பதை அறியாமலே கதவைப் பூட்டிக் கொண்டு போய் விட்டாரா அர்ச்சகர்? ஆமாம்; அதுதான் உண்மை!

செந்தில்நாயகம் திகைத்து நின்றார். அவரையறியாமலே அவர் மனம் பீதியால் நடுங்கித் துடித்தது. உடலெங்கும் வியர்வை வழிந்து கொட்டியது. ஒரே இருள்! ஒரே புழுக்கம்!

தட்டுத் தடுமாறிக் கைகளால் துழாவிக் கொண்டே ஏதோ ஒரு குருட்டுத் திசை நோக்கி நடந்தவர், கோயிலின் பிரதான வாயிற் கதவில் வந்து முட்டிக் கொண்டார். கதவைப் பலமாகப்பிடித்து அசைத்துப் பார்த்தார். வெளியே பூட்டப்பட்டிருந்த பெரிய பூட்டு, கொண்டியில் இடிபடும் ஒலிதான் கேட்டது.

'இது என்ன சோதனை! இப்போது எப்படி வெளியே போவது?'

அளவுக்கு மீறிய பயத்தால் அவருடைய நெஞ்சு விலாக் கூட்டில் வேகமாக மோதிக் கொண்டது. அங்கிருந்து வெளியேற வேறு ஏதாவது வழி இருக்கிறதா என்று பரபரப்புடன் திரும்பிப் பார்த்தார். மேலே அண்ணாந்து நோக்கினார். அவர் கண்ணுக்கு ஒன்றுமே புலப்படவில்லை; அத்தனை இருளான இருள் அங்கு சூழ்ந்திருந்தது.

வந்த வழியை நிதானப்படுத்திக் கொண்டு மீண்டும் கர்ப்பக்கிருகத்தை நோக்கி நடந்தார். இரண்டொரு முறை சுவரிலும் தூணிலுமாக இடித்துக் கொண்டார். சில கோயில்களின் கருவறைக் கதவு இரும்புக் கம்பிகளால் ஆகியிருக்குமே, அது போல் இங்கு இல்லை; நல்ல உறுதியான மரக் கதவே போடப்பட்டிருந்தது. அதனால் உள்ளிருக்கும் தெய்வத் திருமேனி வெளியே தெரியவில்லை. திரை வேறு போடப்பட்டிருந்தது. கதவிடுக்கில் மினுக்கிய ஒளிக் கீறல்கூட இப்போது சற்று மங்கலாகிவிட்டிருந்தது. அர்ச்சகரின் அஜாக்கிரதையினால் திருவிளக்கில் எண்ணெய் குறைந்திருக்கலாம்.

அவர் கருவறை அருகில் வந்து நின்றார். அங்குள்ள சன்னமான ஒளியைக் கொண்டு எங்கேனும் வழி புலப்படுகிறதா என்பதை அறியவே அவ்விடம் வந்தார். நூலிழை போன்ற அந்த மெல்லிய ஒளி அவருக்கு எந்த விதத்திலும் உபயோகப்படவில்லை. தலையைத் தாங்கிப் பிடித்துக் கொண்டு வெலவெலத்து நின்றார்.

இந்தச் சமயம், அவர் கன்னத்தில் யாரோ பளீரென்று அறைந்தாற்போல் இருக்கவே, 'ஐயோ!' என்று அலறியே விட்டார். அப்புறம்தான் புரிந்தது, அவருடைய முகத்தில் வந்து மோதியது ஒரு வௌவால் என்று!

'என்ன செய்வது? இன்றிரவெல்லாம் இங்கேதான் அடைந்து கிடக்க வேண்டுமா? தன்னந்தனியே இந்த இருளான இருளில் கிடந்து எப்படி நேரத்தைப் போக்குவது?'

அவர் உள்ளமும் உடலும் ஒரேயடியாக அதிர்ந்து நடுங்கின. இவ்வளவு நேரமாய் இல்லாத பசி, தாகம், களைப்பு, சோர்வு எல்லாம் ஒருசேர வந்து வாட்டின. விழுது பாய்ச்சித் தொங்கிய இருளையே பேந்தப் பேந்தப் பார்த்து விழித்தார் அவர்.

இதிலே ஓர் ஆச்சரியம் என்னவென்றால், இப்போது தாம் அடைபட்டிருப்பது ஒரு கோயில் என்றோ, தாம் நின்று கொண்டிருக்கும் இடம் தெய்வ சந்நிதானம் என்றோ, தாம் பல காலம் வணங்கிப் பூசித்த மும்முடிநாதரின் அருகிலேயே இருக்கிறோம் என்றோ அவர் நினைக்கவே இல்லை. அப்படித் தோன்றினாலும் அது உண்மைதான் என்று அவரது மிரட்சியுற்ற மனம் நம்பியிருக்காது. ஏதோ ஒரு காடாந்தகாரமான இருட்குகையில் அடைபட்டிருப்பது போன்ற பயங்கர உணர்ச்சியே அவருடைய மனத்தில் மேலோங்கியது. எனவேதான் அங்கிருந்து வெளியேறிவிட வேண்டுமென்று அத்தனை துடியாய்த் துடித்தார் அவர்.

சற்று முன் வரையில், 'நான் பக்குவப்பட்டு விட்டேன்; உன் பாதாரவிந்தங்களை அடைய எனக்கு அழைப்புக் கொடு' என்றெல்லாம் பிரலாபித்துக் கொண்டிருந்தாரே, அது என்ன ஆயிற்று? அங்கு சூழ்ந்திருக்கும் இருட்டு, அவருடைய அந்தப் 'பக்குவ மனத்தை' எடுத்து விழுங்கி விட்டதா?

நேரம் நகர்ந்து கொண்டிருந்தது. ஆனால் எவ்வளவு நேரம் ஆகியிருக்குமென்று அவரால் அநுமானிக்க முடியவில்லை. ஆயிரம் ஆண்டுக் காலம் ஓடியிருக்குமா? அப்படித்தான் அவர் மனத்துக்குப் பட்டது.....!

படீரென்று ஓர் ஒலி. கோயிலின் பிரதான கதவு திறக்கப்பட்டது. வேர்த்து விறுவிறுத்து நின்று கொண்டிருந்த செந்தில்நாயகம், விடுபட்ட அம்பு போல் பாய்ந்தோடினார்.

''யாரு, செந்தில்நாயகமா?''-கோயில் கதவைத் திறந்து கொண்டு உள்ளே வரப் படியேறிய அர்ச்சகர் திகைத்துப் போய் நின்றார்.

மூச்சு முட்ட வெளியே ஓடி வந்த செந்தில்நாயகம், ''என்ன, இப்படிச் செய்து விட்டீங்க? கோயிலுக்குள்ளே ஆள் இருக்கிறதுகூடத் தெரியாமல் கதவை இழுத்துச் சாத்திவிட்டுப் போய் விட்டீங்களே?'' என்று குமுறினார்.

அர்ச்சகரின் திகைப்பு நீங்கியது. ''அடடே! அப்படியா செய்து விட்டேன்? நீங்க உள்ளே யிருந்ததை நான் பார்க்கவே இல்லையே!'' என்று கூறி அந்தப் பெரிய மனிதரிடம் மன்னிப்புக் கோருவது போல் உடம்பை நெளித்த அவர், ''நல்ல வேளை! மழை வருமோன்னு கையோடு கொண்டு வந்த குடையைக் கோயிலிலே மறந்து வைச்சுட்டுப் போய், நடு வழியிலே நினைச்சுண்டு அதை எடுத்துப் போறதுக்காகத் திரும்பி வந்தேன்! இல்லேன்னா? ம்.... எல்லாம் பகவான் செயல்!'' என்றார் குழைவான குரலில். மீண்டும் அவர் தொடர்ந்து, ''ஆனாலும் நீர் கொடுத்து வைச்சவர்தான்! அரை மணி நேரம் ஆண்டவன் சந்நிதானத்திலே தனி வாழ்வு வாழ்ந்திருக்கிறீரே! இது எல்லாருக்கும் கிடைக்கக்கூடிய பாக்கியமா?'' என்றவாறு உள்ளே சென்றார்.

செந்தில்நாயகம் இதைக் காதில் வாங்கிக் கொள்ளாமல் ஆற்றங்கரையை நோக்கி நடந்து கொண்டிருந்தார்.

உச்சி வானத்தில் ஏறி நின்ற நிலா, பால் போன்ற ஒளியைப் பொழிந்து அந்த ஆற்றுப் பிரதேசத்தைப் பளிங்காக்கி வைத்திருந்தது.

தம்மைத் தாமே புரிந்து கொண்ட ஒரு தளர்வு உணர்ச்சியால் தலையைத் தொங்கப் போட்டு நடந்து வந்தவர், ஆற்றங்கரை ஓரமிருந்த மாமரத்துக்கு அருகில் போய் நின்றார். மரத்தில் காய்த்துத் தொங்கிய மாங்காய்க் கொத்துக்கள் இப்போது அத்தனை தெளிவாகக் கண்ணுக்குப் புலப்படவில்லை. ஆனால், இன்று மாலை, வீசிய காற்றில் அவற்றிலே ஒன்றுகூடக் கீழே விழவில்லை என்பது மட்டும் தெரிந்தது.

'அடி வெந்து இருக்கிறதினாலே அப்படி நினைக்கிறீங்களா? அதெல்லாம் பழுவெட்டுக் காய்களே இல்லே! அரைப் பிஞ்சு, கால் பிஞ்சாயிருக்கிற போதே சில சாதிக் காய்கள் வெடிப்புத் தட்டிப் போயிடும்! ஆனால் அவை பழுக்கிறதுக்கு ரொம்ப நாட்கள் பிடிக்கும்! விவரம் தெரிஞ்சவங்க அதைப் பார்த்து ஏமாந்துவிட மாட்டாங்க!'

கப்பையா சொன்ன இந்தச் சொற்கள் செந்தில்நாயகத்தின் செவிகளில் இப்போது திரும்பத் திரும்ப வந்து மோதின. ''ஆமாம்; அளவுக்கு மீறி ஆசை வைத்திருந்த ஒன்றை இழந்து விடுவதால் ஏற்படும் விரக்தி வேறு; கர்மாக்களைச் செய்து சிறுகச் சிறுகப் பெறும் ஞானத்தால் ஏற்படும் விரக்தி வேறு! முன்னது பிஞ்சில் படியும் பொய்யான பழுத்தோற்றம்; பின்னது முற்றிய காயில் மினுக்கும் மெய்யான பழுத்தன்மை!'' என்று வாய் விட்டுக் கூறிப் பெருமூச்சு விட்ட அவர், 'இப்போது கப்பையாவிடம் போய், கொடுத்த சாவிக் கொத்தைத் திரும்பக் கேட்டு வாங்க வேண்டுமே' என்ற கவலையுடன் தம் வீட்டை நோக்கி நடந்தார்.



# THIS IS A CEREAL STORY

# BUT IT HAS NO END!

It's the story of corn—a cereal so incredibly versatile, it's adding to its history every day!



Corn enters your life in countless useful ways—and you may not even know it's there! Do you know that your toothpaste...the paper you write on...the sweets you eat...the starch in your clothes...even medicines (dextrose, synthetic Vitamin C, antibiotics)—*all* contain corn in one form or another?



And that's not all. Research chemists everywhere are working to find more and more ways of utilising corn. A truly varied and wonderful cereal!

*Nothing* we can say about it goes against the grain!



**Maize PRODUCTS**

Prop: Sayaji Mills Ltd., Kathwada, Ahmedabad

*Sole Selling Agents:*

**C. DOCTOR & CO. PRIVATE LTD.**

Bombay • Ahmedabad • Calcutta





# கவியரசி

மஹ்ரி

வானக் குடை பிடித்து
  வைரத் துமி தெறித்து
சோலை மழைதெளித்து
  சொக்குநில ஒளியளித்து

கூனற் பிறை நுதலில்
  கோணங்கி மின்வெட்டால்
ஏனோ எனைவதைப்பாய்
  எழிலாளே, வானரசி!

கோலக் குயில்கூவக்
  கூடவரும் எதிரொலியில்
நீல மயில் நடனம்,
  நிலமீது பசும்போர்வை;

சோலை யிருள் நிழலில்
  சொக்கும் மலர்ப் பதிகைக்
கோலத்தைக் காட்டியென்னைக்
  கொல்லாதே கானரசி!

எட்ட இருந் தழைத்து
  எழிலாலே குளிர்வித்துக்
கொட்டிக் குதித் தார்த்துக்
  கொப்பளித்துப் பஞ்சாகி

விட்டுப் புதுமையுடன்
  விழுந்தோடி வருகின்ற
சிட்டுக் குருவி; எனைச்
  சீண்டாதே தேனருவி!

வெள்ளைப் பறவைகளாய்
  விளையாடும் மேகத்தைக்
கிள்ளைக் குரல்அளித்த
  தெந்தால் சோகத்தை

அள்ளிக் குவித் தருவி
  அழகுடலின் பாகத்தைக்
கொள்ளை கொளும்உணர்வாய்க்
  கொணரு வாள் கவியரசி!





# காதலர்க்குப் பொதுமொழி!

தமிழ்முடி

காதல் பேசும் கண்விழி
காதலர்க்குப் புதுமொழி—அது

கால தேசம் யாவும் கடந்த பொதுமொழி—உயிர்
காமக் கள்ளில் தோன்றும் மதுமொழி (காதல்)

சாதிகள் மதங்கள் மொழிகளிலே
பேதங்கள் கோடி இருந்தாலும்,
ஆதியில் வாழ்ந்த மனிதர் இனக்
காதலர் முதலாய்க் கற்றமொழி (காதல்)

ஆயிரம் பேருக்கு மத்தியிலும்
வாயால் ஒன்றும் பேசாமல்,
ஆசை நிறக் காதலர்கள்
பேசி மகிழக் கற்றமொழி (காதல்)

இலக்கண இலக்கியப் பிழையெதுவும்
கலக்கப் படுந்துமோ என்றஞ்சிக்
கூசி நடுக்கம் கொள்ளாமல்
பேசிப் பழகக் கற்ற மொழி (காதல்)

உள்ளத் துணர்ச்சி அத்தனையும்
அள்ளி 'முகத்தின் மேடையிலே'
துள்ளி ஆடி நாடகத்தை
மெள்ளக் காட்டும் கண்ணிரண்டும் (காதல்)

# புதுயுகக் காதலன்

சு. நடேச பிள்ளை



பொன்னாட்டின் ஆறுகளிற்
  புனிதநீ ராட்டியுனை

என்பாட்டால் உடுத்துனக்கென்
  எதுகைகளால் அணிசெய்வேன்

மின்னொளியிற் றழுவியுனை
  முகிலூர்தி தொடர்ந்திடுவேன்

மன்னுபெரும் வெளிவானில்
  மாளிகைகள் உனக்கமைப்பேன்

விண்ணுலகத் துனைக்கொடுபோய்
  விறுபெறு மணித்தவிசில்

கண்ணிமையாக் காதலர்வாழ்
  கற்பகக்கா மிசைவைப்பேன்

அறுபருவ முன்சுற்றி
  அஞ்சலிசெய் தாடிவர

இறுகவுனை இருகரத்தால்
  அணைத்தழகைச் சிறைசெய்வேன்

எண்ணில்பல ஆண்டுகளாம்
  இருவோரும் ஒருவோமாய்

மண்ணில் அச்ச மிலாக்காதல்
  மரணமிலா வாழ்வுறவே.





# காட்டில் வாழும் நீதி முறைகள்

பிலோ இருதயநாத்

நீதி, நேர்மை, கட்டுப்பாடு, கண்ணியம் ஆகிய உயர்ந்த குணங்களைத் தம் வருங்காலச் சந்ததிகளுக்குப் போதிப்பதே நம் மூதாதையர்களின் குறிக்கோளாக இருந்திருக்கிறது. அக்காலத்துப் பெரியோர்களும், புலவர்களும் நமக்கு விட்டு வைத்துச் சென்றுள்ள குறைவாத செல்வங்களாக நம்மிடையே இருப்பவை நீதி நூல்களாகும். அகர முதல எழுத்தை அரிச்சுவடி வகுப்பில் ஆரம்பிக்கும் குழந்தைக்கு ஒளவைப் பிராட்டியாரின் மூதுரைகளைத்தான் நாம் முதலில் போதிக்கிறோம். நாகரிகம் மிகுந்த நாட்டு மக்கள் பண்போடு வாழ்வதற்கு எத்தனையோ பழமொழிகளும் நீதி நூல்களும் இருக்கின்றன. ஆனால் காடுகளிலும் மலைகளிலும் வாழும் நாகரிகமற்ற ஆதிவாசிகளோ பட்டணத்தாரைவிடப் பண்போடு வாழ்கிறார்கள். நேர்மையோடு நடக்கிறார்கள். ஆதிபரம்பொருளையும் நீதியையும் நம்புகிறார்கள். ஒளவையாரையோ வள்ளுவரையோ பற்றி அறியாத காட்டுவாசிகள் அப்பெரியார்கள் வகுத்துச் சென்ற வழியில் வாழும் விந்தையை என்னவென்று சொல்லுவது! ஆத்திசூடியும், கொன்றைவேந்தனும், மூதுரையும், நல்வழியும் எவற்றையெல்லாம் போதிக்கின்றனவோ அதன்படியெல்லாம் இக்காடர்கள் வாழ்ந்து வருகிறார்கள் என்றால் வியப்பாக இருக்கிறது அல்லவா ? ஆனால் இது உண்மை.

பல வருடங்களாகத் தமிழ் நாட்டு ஆதிவாசிகளின் வாழ்க்கை முறைகளை ஆராய்ந்து வரும் நான், ஒளவையார் அருளிய கொன்றைவேந்தனில் கூறியுள்ள நெறிமுறைகளை அவர்கள் கடைப்பிடித்து வருவதைக் கண்டு ஆச்சரியமடைந்தேன். அந்த வியப்பு மேலும் என்னை ஆராய்ச்சி செய்யத் தூண்டியது. அப்படிச் சேகரித்த சில குறிப்புகளைத்தான் இங்கு தொகுத்து அளித்திருக்கிறேன்.

காட்டுவாசிகள் தங்களிடையே ஏற்படும் விவகாரங்களைத் தீர்த்துக் கொள்வதற்கு நாகரிக மக்களைப் போல், 'கோர்ட்'டுக்குப் போவதில்லை. வக்கீல்களை வைத்து வாதாடுவதுமில்லை. தங்களிடையே உள்ள பெரியவர்களைத் தேர்ந்தெடுத்து, பஞ்சாயத்து வட்டம் கூடி உட்கார்ந்து விவகாரங்களை அவர்களின் மூலம் தீர்த்துக் கொள்ளுகிறார்கள். இம்மாதிரியான பஞ்சாயத்து வட்டங்களில் நானும் சில சமயம் கலந்துகொள்வதுண்டு. இப்படி ஒரு சமயம் பஞ்சாயத்து வட்டத்தில் நான் அமர்ந்திருந்தேன். அன்றைய வழக்கு ஒரு மங்கை தன் கணவனை விவாகரத்து செய்வது பற்றியதாயிருந்தது.

காட்டில் வாழும் மங்கையர்கள் கணவனை விவாகரத்து செய்வது சாதாரணமானதுதான். என் முன் நின்றிருந்த அந்தப் பெண், 'எனக்கு அவரைப் பிடிக்கவில்லை, விவாகரத்து வேண்டும்' என்று கூறினாளே தவிரக் காரணத்தைச் சொல்ல மறுத்து விட்டாள். அவள் கணவன் வாலிபன். நல்ல அழகுடன் விளங்கினான். இவளும் பருவத்தின் சோபையோடு விளங்கினாள். இப்படிப்பட்ட இவர்கள் ஏன் விவாகரத்து செய்து கொள்ளுகிறார்கள் என்பது எனக்குப் புரியவில்லை. ஆகவே மறுநாள் தீர்ப்புக் கூறுவதாகச் சொல்லி அன்றையப் பஞ்சாயத்தை முடித்து விட்டேன். பஞ்சாயத்து கூடின நேரம் மாலை சுமார் ஆறு மணி யிருக்கும். பஞ்சாயத்தை முடித்த போது இரவு எட்டு மணி. மறு நாள் ஞாயிற்றுக்கிழமை. சந்தை தினம். சந்தைக்குப் போய் வந்தபின் மாலை சுமார் ஆறு மணிக்குத்தான் மறுபடியும் பஞ்சாயத்து கூட வேண்டும். அன்றிரவு எனக்குத் தூக்கம் வரவில்லை. மறு நாள் என்னையே, "மூப்பனாக" இருக்க வேண்டும் என்று அவர்கள் கேட்டுக் கொண்டதால் என்ன தீர்ப்புச் சொல்வது என்று தெரியாமல் விழித்தேன். பொழுதும் புலர்ந்தது. எல்லோரும் சந்தைக்குப் போய் விட்டார்கள். கிராமத்தில் ஆண்கள் யாரும் இல்லை. சில கிழவிகளும் சிறுமிகளுமே இருந்தார்கள்.

"இன்று பஞ்சாயத்தில் நீங்கள்தான் மூப்பனுமே?" என்று கேட்டபடி ஒரு கிழவி என் அருகில் வந்தாள்.

"பாட்டி, என்ன செய்வது? அவர்கள் சந்தோஷமாக வாழ்வதைக் காண வேண்டும் என்றிருக்கிறது எனக்கு. என்ன செய்யலாம்?" என்றேன் அது தான் சமயமென்று.

"என்னவோ அவளுக்குப் பிடிக்கவில்லையாம்" என்று கூறினாள் பாட்டி.

"பிடிக்காத காரணத்தைக் கூறினால் நானாவது ஒரு வழி சொல்லுவேன் அல்லவா? அவளுக்கு யார் மேலாவது...." என்று இழுத்தேன்.

"அப்படியிருந்தால் அதைச் சொல்லி அவனே தன்னைப் புதிதாக மணம் செய்து கொள்ளப் போகும் ஆளிடம் முதல் திருமணத்தின் செலவை வாங்கிக் கொடுத்து விடுவானே. அது அவ்வளவு கஷ்டமில்லை. அப்படியெல்லாம் அவள் மனத்தில் யாரும் இல்லை."

"அப்படியானால் விவாகரத்தின் காரணத்தைப் பஞ்சாயத்தின் முன் கூறலாம் அல்லவா?" என்று கேட்டேன்.

"எங்கள் மலைநாட்டில் கணவனை மனைவிக்குப் பிடிக்கவில்லையென்றால் எந்தப் பெண்ணும் தன் கணவனைக் கேவலமாகப் பேசமாட்டாள். 'பெண்ணை வைத்துப் படைக்கத் தெரியாதவனே' என்று கூற மாட்டாள். அவனைப் பிடிக்காததற்குப் பல குறைகள் இருந்தாலும் அவற்றைப் பஞ்சாயத்தின் முன்



"போட்டோவுக்கு என்ன இப்படி வெட்கப்படறேளே!"

கூறித் தன் கணவனுக்கு அவமானத்தைத் தேடித் தர மாட்டாள். அப்படி ஒரு பெண் பஞ்சாயத்தில் தன் கணவனைக் கேவலமாகப் பேசினால் அவளை மற்றப் பெண்கள் மதிக்க மாட்டார்கள். யாருமே அவளுடன் பழகமாட்டார்கள்" என்று கூறினாள் அந்தக் கிழவி.

கணவனை அவமானமாகப் பேசக்கூடாது என்பதை எல்லாக் காடுகளிலும் மலைகளிலும் கடைப்பிடிப்பதை நான் கண்டேன். விவாகரத்து கோரிப் பெற்ற கணவனிடம் பிறகு அந்த மாஜி மனைவி சகோதர வாஞ்சையோடு சகஜமாகப் பேசுகிறாள். இப்படி லட்சிய மனைவியாக வாழ வேண்டும் என்பதைத்தான் தமிழ் மூதாட்டி ஔவையார் கொன்றை வேந்தனில் "தூற்றும் பெண்டிர் கூற்றெனத் தகும்" என்கிறார். 'தன்னுடைய கணவனின் மேல் குற்றம் சுமத்தித் தூற்றுகின்ற பெண்கள் அவனுக்கு எமனாக வந்தவர்கள்' என்பது தான் அதன் கருத்து. ஔவையாரின் வாக்குப்படி இன்று நாம் கூட வாழவில்லை. ஆனால் இன்று காடர்கள் வாழ்ந்து காட்டுகிறார்கள்.

ஒருத்தி இரண்டு மூன்று விவாகரத்து செய்தால் அவளுக்குப் புத்தி கூறப் பெண்கள் பஞ்சாயத்து கூடிப் பேசுவார்கள். அந்தப் பஞ்சாயத்து ஆண்களுக்குத் தெரிந்தும் தெரியாமலும் நடைபெறும். நீண்ட நேரம் பெண்கள் பஞ்சாயத்து கூடிப் பேசியபின் அவளுடைய குறையறிந்து, அவள் ஆண்களைத் தேர்ந்தெடுக்கச் சக்தியற்றவள் என்பதைத் தெரிந்து நற்குணமுள்ளவனாகவும், எந்தக் குறையும் இல்லாதவனாகவும் ஒருவனைத் தேர்ந்தெடுத்து அவளுக்குத் திருமணம் செய்வித்து ஓரே வீட்டில் வாழச் செய்வார்கள். இங்ஙனம் பெண்கள் பஞ்சாயத்தில் கட்டுப்பட்ட அவள் அவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட கணவனைக் கடைசி வரையில் கைவிடுவதில்லை. அவனும் கைவிடுவதில்லை. பெண்களுடைய பஞ்சாயத்தின் முடிவுப்படி திருமணம் செய்தவனை மற்றப் பெண்கள் திருமணம் செய்து கொள்ள மாட்டார்கள். அந்தப் பெண்ணையும் மற்ற ஆண்கள் நாடமாட்டார்கள். இதைப் பார்க்கும் போது, "ஒருவனைப் பற்றி ஓரகத்திரு" என்ற ஔவையின் வார்த்தை நினைவுக்கு வருகிறதல்லவா?

தவறுகள் செய்வது மனித இயல்பு. ஆனால் அதை மன்னிப்பதுதான் மனிதத் தன்மை. இந்தக் குணத்தைக் காடர்களிடையே நான் வெகுவாகக் கண்டேன். 'சிறு விஷயத்துக்கெல்லாம் குறைகள் கண்டால் நம்மிடையே ஒற்றுமை குறைந்து விடும். பாடியின் பலம் குன்றிப் போகும்' என்று வாழும் இவர்களுக்கு ஔவையாரின் "குற்றம் பார்க்கின் சுற்றம் இல்லை" என்ற வாக்கைப் பற்றி ஏதும் தெரியாதுதான். ஆனால் தெரியாமலே அந்த வாக்கின் அறிவுரையைக் கடைப்பிடிக்கிறார்கள்.

காட்டுவாசிகளிடையே சண்டை மனஸ்தாபம் எல்லாம் ஏற்படுவது உண்டு. ஆனால் அந்தச் சமயத்திலும் பண்பு குறையாமல்தான் நடந்து கொள்வார்கள். நகரவாசிகளைப் போல நாக்கில் நரம்பின்றிப் பேசித் தூற்றமாட்டார்கள். உணர்ச்சி வசப்பட்டு உடனே ஆயுதங்களை உபயோகப்படுத்த மாட்டார்கள். அவர்களிடமும் கத்தி, ஈட்டி, அம்பு, துப்பாக்கி எல்லாம் உண்டு. ஆனால் காடர்கள் அவைகளைத் தகாத முறையில் பயன்படுத்துவதில்லை. ஏன்? "கூரம்பாயினும் வீரியம் பேசேல்" என்ற தமிழ்ப் பாட்டியின் முதுரைப்படி வாழ்கிறார்கள் காடர்கள்.

முறை தவறி நடந்து கொண்டவனைக் குலதெய்வம் தண்டிக்கும் என்ற நம்பிக்கை உடையவர்கள் காடர்கள். காட்டில் செல்லும்போது கொடிய மிருகங்களால் உடனே அபாயம் ஏற்படும். காலையில் சண்டையிட்டால் மாலைக்குள் அவனுக்குக் காட்டில் குலதெய்வம் தண்டனை கொடுத்துவிடும் என்று நம்புகின்ற காடர்களிடையே சண்டை சச்சரவுகளை அதிகமாகக் காண முடியாது. ஒரு சமயம் நான் காடர்களிடம் "முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்" என்று எங்களிடையே ஒரு மொழி வழங்குகிறது என்பதை விளக்கிய போது அவர்கள் வியந்து போனார்கள்.

"சீரைத் தேடின் ஏரைத் தேடு" என்ற பொன்மொழிக்கு ஒப்ப வாழுபவர்கள் காடர்கள்தான். இவர்கள் வசிப்பிதோ நாகரிக உலகத்தினின்று விலகி வெகு தூரத்தில். தங்களது வாழ்க்கைக்கு வேண்டிய அத்தனை பொருள்களையும் இவர்கள் தாங்களே பயிர் செய்து கொள்கிறார்கள். உப்பு, மண்ணெண்ணெய் இந்த இரண்டு பொருள்களைத் தான் வெளி உலகிலிருந்து இவர்கள் எதிர்பார்க்கிறார்கள். மண் எண்ணெய் இல்லாமலும் கூட ஓட்டிவிடுவார்கள். எருமையின் வெண்ணெய்தான் ஏராளமாக இருக்கிறதே. இப்படிப் பிறரை நம்பி வாழாமல் தங்கள் தேவைகளைத் தாங்களே சமாளித்துக் கொண்டு வாழும் காட்டுவாசிகளின் தைரியத்தை எண்ணி வியக்காதிருக்க முடியுமா?

உழைப்பாளிகளைத் தவிரச் சோம்பேறிகளைக் காணமுடியாது காட்டுவாசிகளிடையே. உணவோடு தங்கள் குழந்தைகளுக்கு உழைப்பின் பெருமையையும் ஊட்டி வளர்ப்பார்கள். சோம்பேறியை எந்தப் பெண்ணும் மணந்து கொள்ள மாட்டாள். ஆகவே அங்கு சோம்பேறித்தனம் வளர முடியாது. "சோம்பலென்பவர் தேம்பித் திரிவர்" என்று நாம் புத்த

கத்தில் படிக்கிறோம். ஆனால் காடர்கள் அதைப் படிக்காமலேயே நடைமுறையில் வாழ்ந்து காட்டுகிறார்கள்.

நாளெல்லாம் உழைத்தாலும் இரவில் நன்றாகத் தூங்க வேண்டும் காடர்களுக்கு. இரவில் தங்கள் வயல்காட்டில் காட்டுப் பன்றிகளுக்காகக் காவல் காப்பதுண்டு. அப்படிக் காவல் காத்தாலும் வேட்டைக்குச் சென்றாலும் இரண்டு பேராகத்தான் போவார்கள். ஒருவர் மாற்றி ஒருவர் தூங்குவார்கள். 'ஓர் இரவு தூக்கத்தை நாங்கள் இழந்துவிட்டால் எங்களுடைய குலதெய்வம் எங்களை ஒரு நாள் முன்னாலேயே பெருந்தூக்கம் தூங்க வைத்துவிடும்' என்று கூறுகிறார்கள். இரவில் தூங்காவிடில் மூளை சரியாக வேலை செய்யாது; பின்னால் அவன் பித்தனாக மாறிவிடுவான்; வாழ்நாள் குறைந்துவிடும் என்றெல்லாம் தூக்கத்தின் அவசியத்தை அறிந்து வாழும் காடர்களுக்கு ''சேமம் புகினும் சாமத் துறங்கு'' என்ற கொன்றை வேந்தனின் வாக்கியம் தெரியும் என்று நினைக்கிறீர்கள் ?

சாதாரணமாக எல்லாக் காடுகளிலும் வயதில் பெரியவர்களுக்கு அவர்கள் ஆணானாலும் பெண்ணானாலும் மரியாதை அதிகம். சிறியவர்கள் பாடியை விட்டு வெளியே போகும்போது பெரியவர்களிடம் போய்த் தலைகுனிந்து வணங்குவார்கள். உடனே பெரியவர்கள் தம் கைகளை அவர்கள் தலைக்கு மேல்வைத்து ஆசி கூறுவார்கள். சிலர் தங்களுடைய காலைத் தூக்கித் தலை மீது வைத்து ஆசீர்வதிப்பதும் உண்டு. காடர்கள் கிழவிகளைத் தாய் என்றே அழைப்பர். இந்தத் தாய்களே காடர்களின் கண்கண்ட தெய்வம்.

''தாயிற் சிறந்ததொரு கோவிலுமில்லை'' என்ற ஔவையின் வாக்கியம் நமக்கெல்லாம் தெரியும். ஆனால் நம்மில் எத்தனை பேர்கள் காலையில் தாயாரை வணங்கிவிட்டுக் காரியங்களைக் கவனிக்கிறோம்?

சில பாடிகளில் திருமணமே ஆகாது கன்னியாகவே மூத்த சில கிழவிகளைக் கண்டு ஆச்சரியமடைந்தேன். ஒவ்வொரு காட்டிலும் இப்படி இரண்டொரு கிழவிகள் இருப்பதைக் கண்டேன். குருவிக்காரர்களிடையேயும் இப்படிக் கன்னிகழியாத கிழவிகள் இருப்பதைக் கண்டிருக்கிறேன். ஏதோ திருமணம் செய்து கொள்ள விருப்பமில்லை போலும் என்றுதான் நினைத்துக் கொண்டிருந்தேன். ஆனால் சேர்வராயன் மலையிலுள்ள ஆதிவாசிகளிடையே ஆராய்ச்சியில் ஈடுபட்டிருக்கும்போதுதான் என் முடிவு தவறானது என்பது தெரிந்தது.

ஒவ்வொரு பாடியிலும் வளர்ந்து வரும் பெண் குழந்தைகளை ஆண்கள் உன்னிப்பாகக் கவனிக்கின்றனர். அவளது குண நலன்களை அறிந்து கொள்கின்றனர். பெண்ணாகப் பிறந்தவளிடம் சகிப்புத் தன்மையும் இரக்க குணமும் அவசியம் இருக்க வேண்டும் என்பது அவர்கள் கொள்கை. கட்டிய கணவனுக்குப் பலவிதத்திலும் உதவியாக இருக்க வேண்டியவளல்லவா பெண் ? இரக்க குணம் இல்லாத பெண்களுக்குப் பெண் தெய்வங்களின் அருள் கிடைக்காதாம். அவர்களை எந்த ஆணும் அணுகுவதில்லை. எல்லாராலும் வெறுத்து ஒதுக்கப்பட்ட அவள் கன்னியாகவே வாழவேண்டியதாகிறது. இதைக் கண்ட போது தமிழ் மூதாட்டியின் ''துடியாப் பெண்டிர் மடியில் நெருப்பு'' என்ற வாக்கு நினைவுக்கு வந்தது. இரக்க குணமில்லாத பெண்களை நெருப்பாக மதித்து விலக்கும் காடர்களின் பண்பைக் கண்டு வியந்து போனேன்.

மூதாதையர் தேடி வைத்த செல்வத்தை வளர்க்காமல் உட்கார்ந்து சாப்பிட்டு அழிப்பவனை நாம் எப்படிவெறுக்கிறோமோ அப்படியேதான் காடர்களும் வெறுக்கிறார்கள். ஆனால் அவர்களுக்குத் ''தேடாது அழிக்கின் பாடாய் முடியும்'' என்ற கொன்றைவேந்தன் வாக்கைப் பற்றித் தெரியாது. வேலை செய்யாது வெட்டியாக உட்கார்ந்திருப்பவனை எல்லோரும் நிந்தித்துப் புத்தி புகட்டுகிறார்கள். பெரியவர்களின் சாபத்துக்கு ஆளாக நேரிடும் என்று கூறி அவனை உழைக்கும்படி செய்து விடுவார்கள்.

சமீப காலத்தில் அரசாங்கத்தார் காட்டுவாசிகளின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த வேண்டும் என்று குடிசைவாசிகளான இவர்களுக்கு ஓட்டு வீடுகளைக் கட்டிக் கொடுத்து அதில் குடியேறும்படி செய்தார்கள். ஆனால் பூர்வீகக் குடிகளோ இத்தகைய புதிய ஓட்டு வீடுகளில் வாழ விரும்பவில்லை. இதன் உண்மைக் காரணத்தைப் புரிந்து கொள்ளாத அதிகாரிகள், 'குடிசையில் வாழ்ந்து பழகியதால் ஓட்டு வீடுகளில் வாழத் தெரியவில்லை' என்ற முடிவுக்கு வருகிறார்கள்.

ஆனால் குடிசையில் வாழுவதையே இவர்கள் ஏன் விரும்புகிறார்கள் என்பதை ஆராய்ந்தால் உண்மை புலனாகும். குளிர் மாதங்களான கார்த்திகை, மார்கழி, தை, மாசி ஆகிய மாதங்களில் வைக்கோல் வேய்ந்த குடிசையினுள் இருந்தால் குளிர் அதிகமாகத் தெரியாது. குடிசையினுள் கண கணவென்றிருக்கும். வைக்கோல் வேய்ந்த குடிசையில் உள்ள கணகணப்பு ஓட்டு வீடுகளில் இருக்காது. இத்தகைய குடிசைகளில் இரவில் தீ மூட்டிக் குடிசைக்குள் கதகதப்பு உண்டானதும் தீயை அணைத்து விடுவார்கள். இந்தக் கதகதப்பைக் குடிசை விடியும்வரை வைத்திருக்கும் குணம் உடையது. குடிசையின் சுகத்தை அறிந்தேதான் போலும் ஔவையார், ''தையும் மாசியும் வைய கத்து உறங்கு'' என்று எழுதி வைத்தார் போலும்! (வை அகம் — வைக்கோல் வேய்ந்த வீடு)

**கா**டுகளில் பிரயாணம் செய்ய ஆரம்பித்த நாட்களில் எனக்கு ஒரு பெரியவர் ஓர் எச்சரிக்கை செய்தார்.

'நீர்த் தேக்கங்களின் ஓரமாக அஜாக்கிரதையாக நடந்து செல்லாதே. வனவிலங்குகள் நீர் அருந்தவும், நீர் குடிக்க வரும் பிராணிகளைப் பிடித்துத் தின்னவும் நீர் நிலைகளின் அருகே வந்து பதுங்கிக் கொண்டிருப்பது வழக்கம். ஆகவே நீ எப்போதும் கானகத்தில் பிரயாணம் செய்யும்போது இதைக் கவனத்தில் வைத்திரு' என்று சொல்லியிருந்தார். ஆனால் நான் ஆதிவாசிகளைப் பற்றி ஆராய ஆரம்பித்த பிறகு அவர்கள் தங்கள் குடிசைகளை நீர் நிலைகளின் அருகிலேயே கட்டிக் கொண்டிருப்பதைக் கண்டபோது எனக்கு வியப்பாகத்தான் இருந்தது. அதற்கு அவர்கள் கூறிய காரணமோ இன்னும் அதிசயமாக இருந்தது. தண்ணீர் உள்ள இடத்தில்தான் தேவதை சாந்தமாகத் தணிந்து வாழ்வாளாம். இல்லாவிட்டால் உக்கிரமாயிருப்பாளாம்.

உண்மைக் காரணம் அதுவல்ல என்பது நமக்குத் தெரியும். பண்டைக் காலத்தில் தோன்றிப் புகழுடன் விளங்கிய சாம்ராஜ்யங்களெல்லாம் நதிக்





கரைகளிலேயேதான் உதயமாகியிருக்கின்றன. மனிதனின் வாழ்க்கைக்கு அத்தியாவசியமான பொருள் தண்ணீர். ஆறில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம் என்பது நமது மூதாதையரின் அறிவுரை. ஆனால் இந்தப் பழமொழியோ, ஔவையாரின் 'நீர் அகம் பொருந்திய ஊரகத்திரு' என்ற கொன்றை வேந்தனைப் பற்றியோ கொல்லி மலைக் காடர்களுக்குத் தெரியாது. ஆனால் நடைமுறையிலே அவர்கள் அதன்படிதான் வாழ்ந்து வருகிறார்கள்.

ஆந்திர தேசத்தில் வாழும் ஏனாதியர், செஞ்சுகள் ஆகிய ஆதிவாசிகளைப் பற்றி ஆராயச் சென்றிருந்தேன். அவர்கள் காடுகளை அழித்து நெல், கோதுமை, ராகி, சோளம் முதலியவைகளைப் பயிர் செய்கின்றனர். இடையிடையே சில பகுதிகளில் பயிர் செழிப்பில்லாமல் சாம்பிப் போயிருந்தது. அந்த வயலுக்குத் தண்ணீர் பாயவில்லையோ என்ற ஐயப்பாட்டுக்கும் இடம் இல்லை. அந்த வயலில் பாய்ந்த பிறகு தான் மற்ற வயல்களுக்கு வழிந்து ஓடும். அதன் காரணத்தைக் கேட்ட போது 'அவனவன் பண்ணின பாவ புண்ணியத்துக்கு ஏற்பத் தான் பயிர் பச்சையும்' என்று கூறினான் ஒரு கிழவன். அதைக் கேட்டதும் ''பண்ணிய பயிரில் புண்ணியம் தெரியும்'' என்று தமிழ்ப் பாட்டி பாடிச் சென்றுள்ள அறிவுரை நினைவுக்கு வந்தது. தமிழ் தெரியாத ஏனாதியருக்குத் தமிழ்ப் பாட்டியின் அறிவுரை எப்படித் தெரிந்திருக்க முடியும்? ஆனால் ஔவையின் கருத்தை ஒட்டியே இவர்கள் பழக்கம் இருக்கிறதே.



''என்ன இது. எல்லோரையும் சேர்த்து 'டெய்லர்' அளவு எடுக்கிறார் !''

''தீபாவளி வேலை ரொம்ப அதிகமா இருக்காம். ஒவ்வொருவரையும் தனித் தனியாக அளவு எடுக்க 'டைம்' இல்லையாம் !''

பொள்ளாச்சி ஆனை மலைப் பகுதிகளில் அடர்ந்த காடுகள் இருக்கின்றன. இங்கு வசிப்பவர்களுக்கும் காடர்கள் என்று பெயர். இவர்கள் தங்கள் பயிருக்குத் தண்ணீர் வேண்டி ஆடும் மழை நடனம் விசேஷமானது. பெண்கள் தங்களுடைய கைவளையல்களை ஒடித்து முறத்தில் போட்டும், வேறு சிலர் தங்களுடைய முந்தானையையே முறம் போல் பிடித்துக் கொண்டும் ஆகாயத்தை நோக்கி வருண பகவானை அழைப்பார்கள். இப்படி அவர்கள் ஆடிப் பாடிய சிறிது நேரத்துக்கெல்லாம் மழையும் பெய்யும். அவர்களுடைய பக்தியையும் அதன் சக்தியையும் [illegible] வியக்காமல் இருக்க முடியாது. மழையில்லாமல் பயிர் வாடும்போதுதான் இத்தகைய மழை நடனங்களை இவர்கள் ஆடுகிறார்கள். ''மாரியல்லாது காரியமில்லை'' என்ற கொன்றைவேந்தன் வாக்கை இதற்குப் படித்திருக்க வேண்டும் என்பதில்லையே. [illegible] இதை அவர்களுக்கு உணர்த்தியிருக்கிறது.

கொன்றைவேந்தன் மூதுரைகளில் சிலவற்றைக் கருத்து வேறுபாட்டுடன் ஆதிவாசிகள் கடைப்பிடிக்கிறார்கள். உதாரணமாக, 'மேகத்தில் முன்பு தோன்றும் மின்னலெல்லாம் பின்னால் கொட்டப் போகும் மழையின் அறிகுறி' என்பதனை நம் தமிழ்ப் பாட்டி ''மின்னுக்கெல்லாம் பின்னுக்கு மழை'' என்று சொல்லியிருக்கிறாள் அல்லவா? ஆனால் ஆதிவாசிகளில் எந்தப் பெண்ணாவது வேலைவெட்டி செய்யாமல் தளுக்கும் மினுக்குமாக இருந்தால் மற்றவர் அவளைப் பார்த்து 'ம், இந்த மினுக்கெல்லாம் பின்னால் கண்ணீராகச் சிந்த நேரிடும்டி, பெண்ணே!' என்கிறார்கள். ஒருவிதத்தில் இரண்டும் ஒன்றேதான். ஔவை சொன்னது வான் மழை; இவர்கள் சொல்லுவது கண்ணீர் மழை. காடர்கள் சாதாரணமாக அதிகம் பேச மாட்டார்கள். இதனால் அவர்களுக்கு ஒன்றும் தெரியாது என்பதல்ல. நம்மைவிட அவர்களுக்குப் பல விஷயங்கள் தெரியும். ஆனால் மௌனமாகவே தாம் பேசும் விஷயங்களைக் கேட்டுக் கொண்டு பின்னால் தங்களுக்குள் பேசி ஒரு முடிவுக்கு வருவார்கள். ''மோனம் என்பது ஞான வரம்பு'' என்ற ஔவையின் வாக்குப்படி வாழ்ந்து காட்டுபவர்களோ இக்காடர்கள் என்று எண்ணத் தோன்றுகிறதல்லவா?

ஆதிவாசிகள் தங்கள் பாடியில் தைரியசாலியும் வீரனும் பலசாலியுமாக ஒருவன் இருந்தால் அவனைப் பக்கத்துப் பாடியில் பெண் தேடிப் போகவிட மாட்டார்கள். அந்தகைய வீரன் தங்கள் பாடியிலிருந்து போய்விட்டால் தைரியலட்சுமியும் அவனுடன் அந்தப் பாடிக்குக் குடிபோய் விடுவாள் என்று நம்புகிறார்கள். ஆகவே அவனுக்குத் தங்கள் பாடியிலேயே பெண்ணைத் தேர்ந்தெடுத்துக் கொடுப்பார்கள். இதே போலத்தான் பெண் தைரியக்காரியாக இருந்தால் அவளைத் தங்கள் பாடியில் உள்ளவனுக்கே திருமணம் செய்து வைப்பார்கள். ''வீரன் கேண்மை கூரம்பாகும்'' வீரனுடைய நட்பு ஓர் ஊரில் இருந்தால் அது அவ்விடத்தைப் பகைவர்கள் நெருங்காமல் காத்தற் குரிய கூரிய அம்புக்கு ஒப்பாகும் என்ற கொன்றை வேந்தன் வாக்கு இவர்களுக்கு எப்படியோ தெரிந்திருக்க வேண்டும்.

இன்னும் பாருங்கள். அறுவடைக் காலங்களில் ஒருவருக்கொருவர் வயலில் உதவி செய்து கொள்ளுவார்கள். இப்படிப் பரஸ்பரம் உதவிக் கொள்ளும் போது கூலி ஏதும் வாங்கிக் கொள்ள மாட்டார்கள். எல்லோரும் ஒரே இனம் என்பதை உணர்ந்து வயல் காட்டிலேயே உணவு தயாரித்துச் சேர்ந்து சாப்பிடுவார்கள். அந்நியர் யாராவது வேலைக்கு வந்திருந்தால் மட்டும் அவர்களுக்குக் கூலி தருகிறார்கள். ''உரவோர் என்கை [இரவாதிருத்தல்'' என்றபடி பிறரிடம் சென்று யாசியாதிருப்பதே பெருந்தன்மை என்று வாழும் காடர்களிடம் கொன்றைவேந்தன் வாழுகிறது என்றுதானே சொல்ல வேண்டும்?

இப்படியே ஆதிவாசிகளான காடர்களின் பழக்க வழக்கங்களிலிருந்து அவர்கள் மூதுரைகளின் மொழிப்படி ஒழுகுகிறார்கள் என்பதைச் சொல்லிக் கொண்டே போகலாம். பல காடுகளில் வாழும் காடர்களிடமும் ஆதிவாசிகளிடையேயும் இருபத்தாறு ஆண்டுகளாகப் பழகியதில் நான் அறிந்து வியந்தவை எத்தனை எத்தனையோ !



மழை நடனம்

# யாதும் ஊரே..

தி. ஜானகிராமன்

ஒரு மாதமாக எல்லாமே என் இஷ்டப்படி தான் நடக்கின்றன! இஷ்டப்பட்ட போது குளிக்கிறேன்; இஷ்டப்பட்ட போது சாப்பிடுகிறேன். நினைத்த போது தூங்குகிறேன் - அதுவும் பகலில்! — கால் மணி அரை மணி இல்லே! — நேற்று உச்சி வேளைக்குச் சாப்பிட்டு விட்டுப் படுத்தவன் இந்தச் சூரியன் மறைந்தால் ஒழியக் கண்களைத் திறப்பதில்லை என்று சபதம் செய்து கொண்டாற் போல, அந்தி மயங்கிக் கருக்கிறவேளைவரை தூங்கியிருக்கிறேன். அப்புறம் இரவு மூன்று மணிக்குத்தான்படுத்தேன். அது வரையில் கோணல் கிச்சானோடு வாசலில் கட்டிலைப் போட்டுக் கொண்டு அரட்டை யடித்தேன்! என்னை யார் கேட்கிறது?



இன்னும் இரண்டு மாதங்கள்வரையில் எல்லாம் என் இஷ்டம்தான். நான்தான் ராஜா. இல்லே, இல்லே. சாதாரண சாமான்ய மனிதன், பாமரன்; இஷ்டப்படி அலைகிற சாதாரண மனிதன். மூன்றுமாதலீவில் ஒரு மாதம்தான் போயிருக்கிறது. இன்னும் இரண்டு மாதங்கள்இப்படியேதான். மார்க்கெட்டுக்குப் போக மாட்டேன். கடிகாரத்தைப் பார்த்துக் குளிக்க மாட்டேன். கடிகாரத்தைப் பார்த்துச் சாப்பிட மாட்டேன். பஸ் ஸ்டாப்புக்கு ஓட மாட்டேன். வாலு மாதிரியும், டபிள்யூ மாதிரியும், இஸட் மாதிரியும், வியூகம் வகுத்து பஸ்ஸைத் தாக்க நிற்கும் 'க்யூ' வரிசையில் நிற்க மாட்டேன்!

இங்கே பஸ்ஸும் கிடையாது. மார்க்கெட்டும் கிடையாது. இது பட்டணமில்லே. பாலகரம். பட்டணத்திலிருந்து ஒரு ராத்திரி ரயில் பயணம். ரயிலில் இறங்கி ஒன்றரை மணி பஸ்ஸில் பயணம். அப்புறம் மண் சாலையில் முக்கால் மணி நடந்தால், அதே சாலையிலிருந்து வாய்க்கால் மதகைக் கடந்து ஊருக்குள் வர வேண்டும். அந்த மதகைக்கூடப் போன வருட வெள்ளம் அடித்துக் கொண்டு போய் விட்டது. பத்து நாளாயிற்றாம் கட்டி முடிய. அது வரையில் வெளி உலக வாடையில்லாமல் கழிந்ததாம். இப்பேர்ப்பட்ட ஊரில் யார் நம்மை அதிகாரம் பண்ண? இஷ்டப்படி தூங்குகிறேன்; விழித்துக் கொள்கிறேன்.

இன்று காலையில்கூட விழித்துக்கொள்ளும்போது எட்டு மணி. பிறகு வயலுக்குப் போய் நாற்று பிடுங்கி விட்டார்களா என்று பார்த்து விட்டு வரும்பொழுது ஒன்பது மணி. அப்பொழுதுதான் குரல் கேட்டது.

''மாமோவ்!''

''யாரு?'' வேறு யார்? கோணல் கிச்சான்தான். 'வ்'வன்னுப் போட்டு வேறு யார் கூப்பிடுவார்கள்?

''இருக்கேளா — பொழைச்சேன்'' என்று ஆறரை அடி உயரமும் கூனி நிமிர்ந்து நெளிய, வந்து ஊஞ்சலில் உட்கார்ந்தான்.

''என்ன சேதி?''

''சேதிதான்....கை கொடுக்கணும்.''

''என்ன வந்துடுத்து இப்ப?''

''உங்களை நம்பிண்டு வந்துட்டேன்.''

''அதான் வந்து உட்கார்ந்துட்டியே. சேதியைச் சொல்லு.''

''சொல்றேன் மாமா. காலமே எழுந்தவுடனே ஆற்றங் கரைக்குப் போனேனா? பஜனை மடத்திலே ஒரு சன்யாசி தண்டமும் கமண்டலுமாக உட்கார்ந்து ஜபம் செய்து கொண்டிருந்தார். பல் தேய்த்து ஸ்நானம் பண்ணி அவருக்கு முன்னால் விழுந்து நமஸ்காரம் பண்ணினேன். உட்காருங்கோன்னார். உட்கார்ந்தேன். பேரு குடும்பமெல்லாம் விசாரிச்சார். அப்புறம் பெரியவர்களுக்கு எந்த ஊரோ என்று கேட்டேன். சன்யாசிக்கு ஊர் ஏது, உறவு ஏதய்யான்னார். அப்புறம் தான் அடா, அசடேன்னுட்டு உதட்டைக் கடிச்சண்டேன்.''



''சந்நியாசிகளிடம் பூர்வாசிரமத்தைப் பத்தி விசாரிக்கப்படாதுன்னு தெரியாதா உனக்கு? ஏண்டா, சமர்த்து!''

''அதான் சொல்றேனே — தவறிப் போயிடுத்துன்னு. சன்யாசிக்கு ஊர் ஏது? உறவேது? உலகம் முழுக்க ஊர் தான்னார் அவர். கொஞ்ச நாழி ஒண்ணும் பேசாமல் உட்கார்ந்திருந்தோம். அப்புறம் இன்னிக்குப் பிட்சை பண்ணி என்னை அனுக்ரகம் பண்ணணும்னு கேட்டுண்டேன். பேஷா, அதுக்கென்ன? செஞ்சுட்டாப் போறதுன்னார். அழைச்சுண்டு வந்தேன். உள்ளே போனால் அப்பா அம்மான்னு முனகல் கேட்டுது. என்னடான்னு பார்த்தால், மீனாட்சி அலங்கோலமாப் படுத்துண்டு கிடக்கா.

காப்பி சாப்பிட்டவனுக்கு என்னமோ தலையைக் கிறுகிறுன்னுதாம். கண்ணை இருட்டிண்டு வந்துதாம். நாலஞ்சு தடவை வாந்தி எடுத்துதாம். தொட்டுப் பார்த்தால், உடம்பு அனலா வீசறது. கண்ணைத் திறக்க முடியலே. படுத்துண்டு கிடக்கா. என்ன பண்றது? சன்யாசி வாசல் திண்ணையிலே உட்கார்ந்திண்டிருக்கார். இன்னும் உட்கார்ந்திண்டிருக்கார். கிடந்து முழிக்கிறேன். என்ன பண்றதுன்னு புரியல்லே. பட்டணத்துமாமா தான் கதின்னு வந்துட்டேன். நீங்கதான் வழிகாட்டணும்.''



நல்ல கறுப்பும் கச்சலுமாக இருந்த கோனல் கிச்சானின் கண் ஏற்கனவே சுண்ணும்பு வெள்ளே. இக்கட்டில் இன்னும் வெளுத்துக் கிடந்தது.

''வழி என்னடா வழி? பிக்ஷையை இங்கே பண்ணி விட்டால் போகிறது. பட்டணத்திலே சங்கோசப்படற மாதிரின்னு படறே! பார்வதி!'' என்று உள்ளே பார்த்துக் கூப்பிட்டேன். வந்தாள். சொன்னேன். ''நானே வந்து அழைச்சிண்டு வரேன்'' என்று கோனல் கிச்சான் முன்னே நெளிய, வெளியே வேகமாக நடந்தேன்.

கோனல் கிச்சான் வீட்டுத் திண்ணையில் அமர்ந்திருந்த சன்யாசியைக் கண்டேன். எட்டு அங்கமும் பட விழுந்து வணங்கினேன். 'நாராயண நாராயண' என்றார் ஸ்வாமி. புன்முறுவல் பூத்தார். ஐம்பது வயதிருக்கும். மாநிறம். முண்டனம் செய்த தலை. ஆனால் தலையிலும் முகத்திலும் ஒரு மாத ரோமம் வெளுத்துக் கிடந்தது.

''கிச்சானைப் பெரிய மனசு பண்ணி மன்னிக்கணும். வீட்டில் அசந்தர்ப்பம் அவனுக்கு. உள்ளே ரொம்ப உடம்பு சரியாயில்லே. பெரியவாளை பிக்ஷைக்குச் சொல்லிட்டோமேன்னு கிடந்து தவிக்கப் போய்ட்டான். நான் இன்னிக்கிக் கொடுத்து வைச்சிருக்கேன். நாலு வீடு தள்ளி அஞ்சாவது வீடு. பெரியவா வந்து பெரிய மனசு பண்ணி பிக்ஷை பண்ணி வைக்கிற பாக்கியத்தை எனக்குத் தர வேணும்.''

''அப்படியா? உடம்பு சரியாயில்லே என்று சொல்லவே யில்லையே இவர்.''

''பெரியவாகிட்டே காலமே சொல்றபோது அவனுக்குத் தெரியாது. வந்து பார்த்தா, ஒரே வாந்தியா எடுத்து. தலை தூக்க முடியாமல் கிடக்காளாம். பெரியவாகிட்டே சொல்ல எப்படி வாய் வரும் அவனுக்கு? ஆசையா அழைச்சிண்டு வந்தான். லபிக்கலே. அவனும் நானும் வேறே இல்லே. அங்கே வந்துடணும், அவ்விடத்திலே.''

''செஞ்சுட்டாப் போறது.''

''நான் கொடுத்து வைக்கலே இன்னிக்கு. பெரியவா இருந்து நாளைக்கு இங்கே பிக்ஷை பண்ணிட்டுத்தான் போகணும்'' என்றான் கிச்சான். அவன் குரல் நடுங்குவதைக் கேட்டு நிமிர்ந்து அவன் முகத்தைப் பார்த்தார் ஸ்வாமி.

''குழந்தை சுபாவம். கவலைப்படாதீர். நாளைக்கு இங்கேயே பிக்ஷையை வச்சுக்கறேன். ஒரு ஊர்லே ஒரு நாளைக்கு மேலே தங்கும்படியா இதுவரை நேரலே. நீர் சொல்றபோது என்ன பண்றது?... செஞ்சுப்பிடலாம்.''

''தயவு பண்ணணும். அப்ப, நான் உடையாளரைப் போய்ப் பார்த்து மருந்து வாங்கிண்டு வரேன்'' என்று மறுபடியும் பெரியவாளிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டான் கிச்சான். பெரியவர்

நண்ட கமண்டலங்களைக் கையில் எடுத்து, பாதக் குறட்டில் ஏறி நடந்து வந்தார். கைகால் கழுவி, தாழ்வாரத்தில் தாழ்வாரத்தில் தாணடியில் போட்டிருந்த மணையில் முற்றத்தில் ஒரு காலைத் தொங்க விட்டு உட்கார்ந்தார். இருவரும் விழுந்து வணங்கினோம்.

''சொந்த வீடுதானே?''

''ஆமாம்.''

''பூஸ்திதி....?''

''ஏதோ சொல்பம் இருக்கு.''

''சொல்பம்னு — நாலு வேலி ஐந்து வேலி....''

''அவ்வளவு இருந்தால் பட்டணத்திலே போய் ஏன் இருபத்தஞ்சு வருஷமாப் பிழைக்கணும்! அரை வேலிக்குக் கொஞ்சம்கூட. அவ்வளவுதான்.''

''அப்படியா? நாராயண. அப்படின்னு பட்டணத்திலே தான் இருபத்தஞ்சு வருஷ வாசம்?''

''ஆமாம்.''

''என்ன உத்தியோகமோ?''

உத்தியோகத்தைச் சொன்னேன்.

''அப்படியா? எங்கே ஜாகையோ?''

அதையும் சொன்னேன்.

''பேஷ். பெரிய மனுஷா, மேதாவிகள்ளாம் இருக்கிற இடம்னு சொல்வாளே — அந்தப் பட்டணத்திலே.''

''ஆமா, ஆமா.''

நாலைந்து பெரிய பெயர்களைச் சொல்லி அவர்கள் எல்லாம் அங்கேதான் இருக்கிறார்களா என்று கேட்டார்.

''ஆமாம்.''

''நல்ல சம்பத்து: நல்ல செல்வாக்கு இல்லையா?''

''தகப்பனார்கள் சம்பத்தைத் தேடி வைத்தார்கள். அதைச் செலவழித்தும் செலவழிக்கிறாற் போல் பாச்சை காட்டியும் செல்வாக்கு சம்பாதித்துக் கொண்டிருக்கிறார்கள்.''

ஸ்வாமி சிரித்தார். ஏன் சிரித்தார் என்று புரியவில்லை. சற்றுக் கழித்துப் பெருமூச்சு விட்டார். யோசனையில் ஆழ்ந்திருந்தார். ''என்னமோ, பகவான் கொடுக்கிறான். இஷ்டமில்லேன்னு கொடுக்காமல் இருக்கான். தகப்பனார் சம்பாதிச்சு வச்ச பணத்தையும், பகவான் இஷ்டப்பட்டாத்தானே இவா கையிலே கொடுப்பான்?''

''ம்! ம்!'' என்றேன். இந்தத் தத்துவ விஷயங்களில் எனக்கு எப்பொழுதுமே புத்தி கட்டை. நம்முடைய அதிர்ஷ்டத்துக்கு யார் காரணம் என்று எனக்கு என்றுமே புரிந்தது கிடையாது. எனக்குப் பத்து வருஷங்களாகக் கிடைத்த சம்பளஉயர்வு முப்பது ரூபாய்தான். சம்பளம் முந்நூறு. வேலையும் அதற்கு இரண்டு முந்நூற்றுக்குச் செய்கிறேன். ஆபீஸில் பல காக்காய்கள் 'லபக்லபக்' என்று கவளம் கவளமாக விழுங்கிக் கொண்டிருக்கின்றன. போதும் போதாததற்கு 'ஹோய்! ஓடி வாங்கோ - இதோ போன வருஷத்து மிச்சம் இதோ மூணும் வருஷத்து மிச்சம் — போட்டுங்கோ, வாயிலே' என்று வேறு விசுகிறார்கள். இதில் ஏன் ஒரு பருக்கைகூட நம் பக்கம் தெறிக்கவில்லை என்று ஆராய்ந்து ஆராய்ந்து களைத்துப் போய் விட்டேன். 'வேலை செஞ்சாப் போதுமா? சரியான இடத்தைப் பிடிச்சிருக்கணும். துரைகிட்ட நீயாகப் போய்ப் பேசணும். விசாரிக்கணும். ஏன் முகம் இப்படி வாடினாப்பல இருக்குன்னு கேக்கணும். அவரும் எதாச்சும் சொன்னு, கிச்ச கிச்ச மூட்டிக்கிட்டாவது சிரிக்கணும். 'உன் வேலையை என்னயா கேட்கிறேன்? கழுதை கூடடன் டன்னு கமக்குது — கமந்தப்பறம் எங்க போய் நிக்குது, பார்த்தியா?' என்கிறான் லோலோ (அவன் ஊரையும் பேரையும் குறிக்கிற முதல் எழுத்துக்கள் இவை). பொய்ப் புன்சிரிப்பு சிரித்துச் சிரித்து, பயலுக்கு வாய்க்கடையே வெந்து விட்டது. கூனல் நிரந்தரமாகவே விழுந்து விட்டது. இதையே நான் செய்தால் துரைக்குப் பிடிக்காது என்று இந்தப் பயலுக்கு யார் புரிய வைக்கிறது? சீச்சீச்சீ — என்னத்துக்கு இந்த நீலமெல்லாம் — இந்தச் சனியனெல்லாம்? வேண்டாம் என்று தானே மூன்று மாத லீவு போட்டு விட்டு இங்கே வந்து ஒதுங்கி யிருக்கிறேன். இந்தச் சன்யாஸி ஏன் இதையெல்லாம் கிளப்புகிறார்? —

''என்ன நான் சொல்றது?'' என்றார் அவர்.

''எது?''

அவர் தெளிவு படுத்துவதற்குள், உள்ளேயிருந்து என் மனைவி வந்து ஜாடை செய்யவே ஓடினேன். ஒன்றுமில்லை. சமையல் திட்டம் தான். வாழைக்காயை நானே சீவி நறுக்கிக் கொடுத்தேன். கொத்தவரைக்காயை ஆய்ந்து கொடுத்தேன். ஆபீஸில் செய்கிற வேலையை விட எத்தனையோ சிறந்த வேலை. கைமேல் பலன். இவள் கைக்கு அத்தனை மணமுண்டு.

அடுக்களையும் தனிமையும் என் ஆத்மாவுக்கே வேலி போட்டுக் காப்பது போல் இருந்தது. அவள் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தாள். சமைப்பதைப் பார்த்துக் கொண்டு யாரோ சட்டியை முதுகில் பாய்ச்சவந்த எதிரியிடமிருந்து தப்பி ஒளிந்து கொண்டது போல் நிம்மதியாக, அமைதியாக உட்கார்ந்திருந்தேன். கை மட்டும் கொத்தவரைக்காயை ஆய்ந்து கொண்டிருக்கிறது. அவள் சமைக்கும் பொழுது நான் இப்படி உட்கார்ந்து பார்த்தது கிடையாது என்று தான் சொல்ல வேண்டும். ஓர் ஆள் நீளம் முக்கால் ஆள் அகலமுள்ள பட்டணத்து இருட்டு அடுக்களையில் அவள் ஒருத்திக்குத்தான் பம்பரமாட இடமுண்டு. இந்தச் சமையலறை பட்டணத்து வீட்டில் பாதி இருக்கிறது.

பிஞ்சு கொத்தவரைக்காய். கிள்ளக் கூட மனம் வரவில்லை.

''இப்பதான் நாற்றங்காலில் நாற்றுப் பிடுங்கியிருக்கு. மழை வந்து கலசல் பண்ணிடப் போறது'' என்று சிரிக்காமல் சிரித்தான் அவன்.

இவ்வளவு கரிசனமாக நான் அவனுக்கு உதவுகிறது அவனுக்கே தாங்கவில்லை.

''ஸ்வாமிகளுக்குச் சுருக்கத் தயாராக வேண்டாமா?''





உம்மிடியார்
வைரங்களுக்கும்
நகைகளுக்கும்
உம்மிடி ராமய்ய செட்டி
குருஸ்வாமி செட்டி & கம்பெனி
தலைமை ஆபீஸ்: 23/25, N.S.C. போஸ் ரோடு
(ஏர்-கண்டிஷன்ட்)
போன்: 31902, 31758
கிளை ஆபீஸ்: L.I.C. பில்டிங்
(ஏர்-கண்டிஷன்ட்)
போன்: 84488, 82264




JOURNEY'S END
"The provision of sufficient quantities of the required products in the right place and at the right time often produces serious problems and to solve these necessitates a careful but flexible organization, an elaborate system of transportation, storage and distribution. There are more than 3,000 Burmah-Shell petrol dealerships and over 1,600 kerosine agencies, besides nearly half a lakh kerosine sub-dealers in India's 5½ lakh villages"
SARMA
...and
BURMAH-SHELL
deliver the goods

''நான் பாத்துக்கறேன். ஒண்டியாக் கூடத்திலே அவரை வச்சுட்டு வந்திருக்கேனே, என்ன நினைக்கப்பார்?''

''அவர் காரியமாத்தானே இருக்கேன்...?''

''அவரோட போய் ஏதாவது பேசிண்டிருங்களேன். இது ஒரு பிரமாதமா எனக்கு?''

எழுந்து கொண்டேன்.

உண்மையில் இருவருக்கும் உடம்பு, உள்ளெல்லாம் நிறைந்துதான் கிடந்தன. பத்து நாட்கள் வேலைக்குச் சம்பளம் கொடுத்து இருபத்தைந்து நாள் வேலையைக் கசக்கி வாங்கிக் கொண்டிருக்கிற பட்டணத்து ஆபீசை விட்டு இந்த ஒரு மாதம் ஒதுங்கியிருப்பதே, ரத்தக் கட்டி உடைந்து விட்டாற் போல் நோவு நீங்கிய நிம்மதியாக, விடுதலையாக எங்களைக் கவ்விக் கொண்டிருந்தது. மூங்கில் தோப்புகள், மாந்தோப்புகள், சுழியிட்டு ஓடுகிற ஆறு. வழிந்து ஓடுகிற வாய்க்கால்,— கொல்லை முருங்கை மரத்தில் நினைக் குருவியின் ஊசிக்கத்தல், வலியன் குருவி கனைத்துக் கனைத்துக் குழைக்கிற இனிமை, நீளமான ஒரு வாக்கியத்தைத் திருப்பித் திருப்பிப் பேசிக் கொண்டிருந்த புளிய மரத்துக் குருவி, ஆழங்காண முடியாத நிசப்தம், அதன் நடுவே கிச்சிடும் அடுத்த வீட்டு ஊஞ்சல், நிழல், காற்று, நாற்றங்கால்களில் அலையோடுகிற பசும் பொன், வரப்புக்களில் நாயுருவிகளை உராய்ந்து நடப்பது, களத்துக் கலியாண முருங்கையில் 'ட்ருல் ட்ருல்' என்று அழைக்கிற மணிப்புறா, மகாபிரபோ, எங்கள் மெய் சிலிர்க்கிறது. ஆனந்தம் தாங்கவில்லை. நெஞ்சு கூட வெடித்து விடும் போலிருக்கிறது. எல்லாவற்றுக்கும் சிகரம் வைத்தாற் போல இந்தச் சன்யாசி வந்திருக்கிறாரே — அவருக்கு ஒரு கவளம் சோறு போடும் இன்பம் கிடைத்ததே.......! நாங்கள் கூடச் சன்யாசிகளாகத் தான் இருப்பதாகத் தோன்றிற்று. சிறுமை, மன நோவு, பற்றுக்குறையின் சுமைச்சல் அனைத்தையும் விட்டு விடுதலையடைந்திருப்பது சன்யாசம்தான்.

''என்ன! நின்னுண்டே விருந்தா? என்ன யோசனை இப்ப, அவரைக் கூடத்திலே உக்காத்தி வச்சுட்டு?''

கூடத்துக்குப் போனேன். சன்யாசி தூணில் தலையைச் சாய்த்திருந்தார். பசி. அயர்ந்து விட்டார். என் அடியோசை கூட அவர் கண்ணைத் திறக்கவில்லை.

திரும்பி உள்ளே வந்தேன். நிலைமையைச் சொன்னேன்.

''இதோ — அஞ்சு நிமிஷம். கூட்டும் பாயசமும் தான் பாக்கி'' என்று அடுப்புத் தீயைக் கனைக்க விட்டாள் அவள்.

''நாமகூட சன்யாசம் வாங்கிண்டா நல்லதில்லையா?'' என்று கேட்டேன்.

''நாம கூடன்னு? ரெண்டு பேரும் சேர்ந்து சன்யாசம் வாங்கிண்டு ஆளுக்கொரு கமண்டலமும் தண்டமும் ஏந்திண்டு, சேர்ந்து நடக்கலாம்னு சொல்றேளா?''

''வாங்கிண்டால் என்ன?''

''அதுக்கு நாம் இங்கேயே இருந்துடலாமே?''

''என்னை மாத்திரம் வாங்கிண்டு போகச் சொல்றியா?''

''போருமே — வேறெ பேச்சே இல்லையா, பேச?''

''இல்லே. ஒரு கவலை கிடையாது. பந்தம் கிடையாது. தினம் ஒரு ஊர் — ஏதோ கிடைச்ச இடத்திலே சாப்பாடு — பகவானை நினைச்சிண்டே இருக்கிறது.''

''அதை அப்பறம் யோசிக்கலாம். இலை இல்லே. கொல்லையிலே போய் பெரிய நுனி இலையா ஒன்னு நறுக்கிண்டு வரலாமே...?''

இலையை நறுக்கிக் கொண்டு கூடத்துக்குத் திரும்பியபோது, ஸ்வாமி விழித்துக் கொண்டு கமண்டலுவைச் சாய்த்து, நீரால் கண்ணைத் துடைத்துக் கொண்டிருந்தார்.

பிட்சை ஆயிற்று. எங்களுக்கும் சாப்பாடு ஆயிற்று. ஸ்வாமி சற்று ஓய்வு எடுத்துக் கொண்டார். பிறகு ஊர் உலக விஷயங்களெல்லாம் கேட்டார். ஆத்மிக விஷயங்களைச் சொன்னார். கோணல் பிச்சான் வந்தான். அவன் மனைவியைப் பற்றி விசாரித்தார். உடையாரிடம் மருந்து வாங்கிக் கொடுத்ததில் வாந்தி நின்று விட்டதாம். ஜுரமும் இல்லையாம். மறுநாள் தன் வீட்டில் பிட்சை ஏற்கு மாறு மீண்டும் ஒரு முறை வேண்டிக் கொண்டான் அவன். கர்ணிகர் வந்தார். அவர், அவர் குடும்பம், சொத்து முதலியவற்றை விசாரித்தார் ஸ்வாமி. சீதாராமன் வந்தான். அவனையும் விசாரித்தார். சேது வன்னியர் வந்தார். அவரையும் விசாரித்தார். மேலத் தெருவிலிருந்து பாலுத் தென்கொண்டார் வந்தார். அவரையும் யோக க்ஷேமம் விசாரித்தார். எல்லோரும் விழுந்து வணங்கி விட்டுப் போனார்கள்.

எனக்குப் பொறுமையாகத் தான் இருந்தது. அவர் யாரையும் தாழ்வாக, தவறாகப் பேசவில்லை. உபதேசத்தைத் தொழிலாகக் கொண்டவர்களைப் போல் யாரையும் குறை கூறவில்லை; கண்டனம் செய்யவில்லை. பரம சாத்விகராக, எல்லாவற்றையும் துறந்து விட்டு என்னை ஏங்க ஏங்க அடித்துக் கொண்டிருந்தார்.

சன்யாசம் என்ற ஒரு நிலையை எப்படிக் கற்பனை செய்து ஒரு மரபாகக் கொண்டு வந்தார்கள்? எந்த மகா மேதையின் கற்பனை அது? அவர் முன்பு உட்கார்ந்து நினைவிழந்து கிடந்தேன் நான். தெருவில் வெய்யில் மஞ்சள் பூசிக் குளித்துக் கொண்டிருந்தது.

வாசலோடு போய்க் கொண்டிருந்த அக்கரை கோபாலன் ஸ்வாமிகளைக் கண்டதும், வந்தான்; வணங்கினான். அவனையும் விசாரித்தார் அவர்.

''சாப்பாடு ஆயிடுத்தா? இன்னிக்குக் கதைக்கு வராப் போல்தானே?'' என்றான் என்னைப் பார்த்து.

''வரணும்'' என்றேன்.

''கதையா?'' என்றார் ஸ்வாமி.

''ஆமாம். அக்கரையிலே இவர் ஊரிலே ராமாயணம் நடக்கிறது, ஒரு மாசமா. நானும் தினமும் போய் வருகிறேன். சீக்கிரமாகச் சாப்பிட்டு விட்டுத் தினமும் புறப்பட்டு விடுகிற வழக்கம். அதைத் தான் கேட்கிறார்'' என்றேன்.

''நானும் வருகிறேனே. சாப்பிட்டு விட்டு இதோ புறப்பட்டு விடுகிறது'' என்று துரிதப்படுத்தினார் ஸ்வாமி.

அவருக்கு இரவு பலகாரம். வெல்ல அவலும் தோசையையும் எடுத்துக் கொண்டார். நானும் சாப்பிட்டேன். இருட்டுகிற சமயத்துக்குக் கிளம்பினோம். கோணல் பிச்சான் கிரைத் தண்டு மாதிரி





மனைவி : தலை தீபாவளிக்குச் சம்பந்திகள் எல்லாரும் வரப் போகிறார்களாம்!
கணவர் : எப்ப போவார்களாம்!

ஆடிக் கொண்டே முன்னால் பாட்டரி விளக்கை அடித்துக் கொண்டே நடக்க இருவரும் பின்னால் நடந்தோம். மூங்கில் பாலத்தில் அடி வைத்து ஆற்றைக் கடந்தோம். தவளைகள் கொர கொரத்தன. சில் வண்டுகள் இரைந்தன. தென்னை மரங்கள் சலசலக்க, ஒரு சவுக்கைத் தோப்பு கிசுகிசுத்தது. மூங்கில் தோப்பு உருமிற்று. ஸ்வாமியோடு நடக்கும் பொழுது இந்த ஓசைகள்தான் மனிதன் கேட்க வேண்டிய ஓசை, எய்த வேண்டிய பேறு என்று தோன்றியது.

ஊருக்குள் திரும்பினோம். தெரு நடுவில் ஒரு பந்தலில் பெட்ரோமாக்ஸ் வெளிச்சம் தெரிந்தது. சுருதிப் பெட்டியின் ரீங்காரமும் குரலும் கேட்டன.

''கதை ஆரம்பித்து விட்டாற் போல் இருக்கு. என்னாலே தாமதம் உங்களுக்கு'' என்றார் ஸ்வாமி.

நெருங்கினோம். பந்தல் வந்துவிட்டது. திண்ணையில் கதை சொல்லிக் கொண்டிருந்தவர் சட்டென்று நிறுத்தினார். கண்ணை இடுக்கி நாங்கள் வருவதைக் கவனித்தார். ஸ்வாமிகளைப் பார்த்தார்.

''வரணும் — வரணும் — இப்படி வரணும்'' என்று ஸ்வாமியைத் திண்ணைக்குக் கூப்பிட்டார். ஸ்வாமி திண்ணையில் உட்கார்ந்து கொண்டார்.

''நீங்கள்தான் சொல்றேளா? நான் யாரோன்னு நினைச்சேன்'' என்றார் ஸ்வாமி.

''எப்ப வந்தது?''

''காலமேதான். பாலகரத்திலே இவர்களோடதான் தங்கியிருக்கிறேன்'' என்று கீழே உட்கார்ந்திருந்த என்னைக் காட்டினார் ஸ்வாமி.

எல்லோரும் என்னைப் பார்த்தார்கள். ஸ்வாமியைப் பார்த்தார்கள். கதை சொல்கிறவர் என்னைப் பார்த்துப் புன்முறுவல் பூத்தார். திண்ணை மீது உட்காரா விட்டாலும் நான் சகலத்தையும் துறந்த சன்யாசியாகத்தான் எனக்கு ஒரு கணம் தோன்றியது.

நின்றிருந்த சுருதிப் பெட்டி மீண்டும் ரீங்கரிக்கத் தொடங்கிற்று. கதை தொடர்ந்தது.

ஸ்வாமி ரசித்துக்கேட்டார். நடுநடுவே சுவர் மீது சாய்ந்து கொண்டார். களைப்பாகத்தான் இருக்க வேண்டும்.

கேகயத்திலிருந்து திரும்பி வந்த பரதன் தந்தை காலமான சந்தர்ப்பங்களைக் கேட்டு, துக்கமும் கோபமும், அடைந்து ராஜ்யத்தை வெறுக்கிறான். தாயைத் திட்டுகிறான். கூனியைத் திட்டுகிறான். ராமன் இருக்கும் காட்டுக்கு எல்லோருமாகப் போய்த் திரும்பி அழைத்து வருவதென்று சாலை போட உத்தரவிடுகிறான். மணி பத்தரை. கதையை நிறுத்தினார் அவர். சுருதிப் பெட்டியைக் கையமர்த்தி நிறுத்தச் சொன்னார். பிறகு நிசப்தத்துக்கிடையே பேசினார். ''தாயாதிகள் என்றும் காய்ச்சல், பொறாமை எல்லாம் கூடவே பிறந்து விடும். அப்படித் தப்பித் தவறி அவர்கள் சுமுகமாயிருந்தாலும் மற்றவர்களுக்குத் தாங்காது — கூனியைப் போல. ஏதாவது சொல்லிக் கிளப்பி விட்டு விடுவார்கள். ராமாயணத்துக்கோ பாரதத்துக்கோ போக வேண்டாம். இதோ நம் கண் முன்னாலே பார்க்கிறோம்'' என்று சன்யாசியைக் காட்டினார்.

''இவர்களுக்குப் பூர்வாசிரமத்தில் சந்தானம் சந்தானம் என்று பெயர். இங்கிருந்து ஐம்பது மைல் அவர்கள் கிராமம். கோரையாற்றுப் பாசனத்தில் ஏழு வேலி நிலம். ஏழு வேலியும் அப்படியே தங்கம். வரபூமி. விளைந்தாலும், ஒரு ஆளை அடிக்கலாம், அப்படியிருக்கும் ஒவ்வொரு கதிரும். இருபோகம் ஏழு வேலியும். நெல்லு கலம் இரண்டு ரூபாய் வித்த நாளிலேயே வருஷம் நாலாயிரம் ஐயாயிரம் கிடைக்கும். இப்ப கலம் பத்து ரூபாய் விற்கிறது. என்ன மோசமாக விளைந்தாலும் வருஷம் இருபதாயிரத்துக்குக் குறையாது. தானமும் தர்மமும் யதேஷ்டமாகச் செய்து கொண்டிருந்தார்கள். பிள்ளை குட்டி கிடையாது. சந்தானம் என்று பெயர் வைத்தார்கள் பெற்றவர்கள். ஆனால் புத்திர பாக்கியம் இல்லாமல் போய் விட்டது. தாயாதிக்காரர்கள், எத்தனை காலமாகக் கறுவிக் கொண்டிருந்தார்களோ, பகவான் தான் சொல்லணும். போன வருஷம் சித்திரை மாதம் இவர்களுக்கு ரொம்ப உடம்பு வந்து விட்டது. பிழைக்க மாட்டாமல் கிடந்தார்கள். தாயாதிக்காரர்கள் வந்து மொய்த்துக் கொண்டார்கள். அண்ணா என்றார்கள். முத்தண்ணா என்றார்கள். பெரியண்ணா என்றார்கள். 'எப்பவுமே உலகப் பற்றே கிடையாது. பிழைக்க மாட்டாமல் கிடக்கிறாய் இப்ப. ஆபத்து சன்யாசம் வாங்கிக்கொள்' என்று கரையாகக் கரைத்தார்கள். சன்யாசிகளுக்கு மறுபிறவி கிடையாது. உயிருக்கு ஆபத்து வந்திருக்கிற இந்த வேளையில் சன்யாசம் வாங்கிக் கொண்டால் நாளைக்கே உயிர் போனாலும் ஆத்மாவுக்கு மோட்சம் — நம்ம குலத்துக்கும் பெருமை என்று இவரைக் கரைத்து சன்யாசம் எடுத்துவைத்துவிட்டார்கள். படுத்த படுக்கையாக இருக்கிறவர் கையில் கமண்டலத்தையும் தண்டத்தையும் கொடுத்து விட்டார்கள். ஆனால் விபரீதத்தைப் பாருங்கள். இவர்கள் நாலைந்து நாட்களில் பிழைத்துக் கொண்டு விட்டார்கள். உடம்பு தேறி விட்டது. நடமாட்டம் வந்து விட்டது. ஆனால் காஷாயம் கமண்டலுவுடன் வீட்டில் இருக்கலாமோ! வீட்டை விட்டு வெளியேறுகிற நிர்ப்பந்தம் வந்து விட்டது. சம்சாரமோ பரம சாது. ஒரு நிமிஷம் அறியாதவள். அப்படியே கண்ணாலே ஜலம் விட்டுக் கதறி விட்டாள். பாருங்கள் — இந்த அபார வயதில் ஊர் ஊராகப் போய்க் கொண்டு! யார் பிக்ஷைக்குக் கூப்பிடுகிறார்கள் என்று காத்துக் கொண்டு! வெய்யில், பனி, மழை என்று பாராமல் ஊர் ஊராக அலைந்து கொண்டு! பரம அயோக்கியர்கள் அந்தத் தாயாதிகள்! சொத்துக்கு ஆசைப்பட்டு, இப்படிப் பண்ணி விட்டார்கள் இவர்களை'' என்று கதை சொல்கிறவர் அறிமுகப்படுத்தி நிறுத்தினார்.

ஸ்வாமிகள் குனிந்த தலை நிமிரவில்லை. குப்பென்று கண் கலங்கிற்று. உதடு நடுங்கிற்று. முகச் சதைகள் கோணின. விசித்து விசித்து அழத் தொடங்கினார்.

''மகாபாவம் — இப்பேர்ப்பட்ட பரம சாதுவை இப்படிச் செய்தவர்களுக்கு, என்ன கிடைக்கப் போகிறதோ?'' என்றார் கதை சொல்கிறவர்.

ஸ்வாமி மேலும் விசித்து அழுதார். அவரால் அடக்க முடியவில்லை. எழுந்து தண்டத்தை எடுத்து நின்றார்.

கற்பூர ஆரத்தி ஆயிற்று. எல்லோரும் எழுந்து நின்று ஸ்வாமியைப் பார்த்து விட்டு நகர்ந்தார்கள்.

''என்ன அநியாயம்! இப்படிச் செய்யலாமா?'' என்றார்கள்.

ஸ்வாமி பலர் வணக்கங்களை ஏற்று, விடைபெற்றுக் கொண்டு என்னுடன் நடந்தார். கோணல் கிச்சாவின் 'பாட்டரி' வெளிச்சம் வழி காண்பித்தது.

ஸ்வாமிக்கு வாசல்திண்ணையில் தட்டி மறைவில் கோரைப் பாயைக் கொடுத்துப் படுக்கச் சொல்லி உள்ளே வந்தேன்.

செய்தியைச் சொன்னேன்.

''அழுதாரா! ஸ்வாமிகளா!'' என்று வியந்தாள். ''மறுபடி சொல்லுங்கள் —கதை சொல்றவர் என்ன சொன்னார்?''

சொன்னேன்.

''கதை சொல்ல ஆரம்பிச்சாலே, குறும்பு; விஷமம் எல்லாம் வந்திடுமோ?'' என்றாள்.

பிறகு விழுந்து விழுந்து குலுங்கிக் குலுங்கி, முந்தானையால் வாயைப்பொத்திச் சிரிக்க ஆரம்பித்தாள்.

என்ன சிரிப்பு வேண்டிக் கிடக்கிறது!

சற்று நின்றவள். ''அழுதாரா?'' என்று கேட்டு விட்டு மீண்டும் ஓர் ஆவர்த்தம் சிரித்தாள். கண்ணைத் துடைத்துக் கொண்டாள். இருமினாள்.

''நீங்கள் போய் அந்தத் தாயாதிக்காரங்க கிட்ட சொல்லி ராஜி பண்ணுங்கள். ஊருக்குள் வராமல் களத்திலாவது உட்கார்ந்து சாகுபடியைக் கவனிக்கட்டும்'' என்றாள் அவள்.

அவர் தண்டமும் கமண்டலுவுமாகக் களத்தில் உட்கார்ந்து, ஆட்களை அதிகாரம் பண்ணுவது போலிருந்தது.

''எனக்கும் அப்படித்தான் தோன்றிற்று. சொப்பனமென்றுநினைக்கிறேன்.''

காலையில் எழுந்து வாசலுக்குப் போன பொழுது, அவர் ஸ்நானத்துக்காக ஆற்றங்கரைக்குப் போகத் தயார் செய்து கொண்டிருந்தார். கோணல் கிச்சான் பந்தல் தலையில் இடித்து விடாமல் கூனியவாறே அவரைப் பிக்ஷைக்குச் சொல்லிக் கொண்டிருந்தான்.


G.E.C.
வாழ்க்கையை
மேம்படச் செய்கிறது
வாழ்க்கையை
விநோதகரமாக்குகிறது
தி ஜெனரல் இலெக்ட்ரிக் கம்பெனி ஆப் இந்தியா பிரைவேட் லிமிடெட்

# பழிக்குப் பழி

## கோமதிஸ்வாமிநாதன்

### 1. ரகசியம்

சென்னை—44

அன்பார்ந்த ராஜி,

அநேக ஆசிர்வாதங்கள். உன் கடிதம் பார்த்தேன். அடி, அசடே! தலைதீபாவளிக்கு நான் அங்கு வராமல் இருப்பேனா? ஆயிரம் மத்தாப்புக்கள் கொளுத்தினாலும் உன் பூர்ண சந்திர முகம் மத்தாப்புக்கு முன் அவை ஒளிவீச முடியுமா என்ன? ஆனால் ஒரே ஒரு விஷயம். ரகசியமாக வைத்துக் கொள். வெளியே விட்டு விடாதே! எப்போடா என் தலை தீபாவளி வரப்போகிறது என்று நடாவு மாதிரி என் அப்பாவும் அம்மாவும் எனக்குப் போலீஸ் எஸ்கார்ட் மாதிரி கூட வந்து நிற்க, கிராமத்தில் மூட்டை முடிச்சுக்களைக் கட்டி வைத்துக் கொண்டு தயாராக இருப்பார்கள். நம் கலியாணத்தின்போது அவர்கள் செய்த அட்டகாசங்களை நம்முடைய கொள்ளுப் பேரன், கொள்ளுப் பேத்தி கலியாணக் காலம் வரை கூட மறக்க முடியாது. ஆகவே, அவர்கள் முன்னிலையில் நாம் இன்பமாகத் தீபாவளிப் பண்டிகை கொண்டாடுவது என்பது பிரேக் வேலை செய்யாமல் அறுபது மைல் வேகத்தில் வரும் லாரிக்கு முன்னால் ரன்தானைக் கடக்க முயற்சி செய்யும் குழந்தைத்தனமாகும். எனக்குத் தீபாவளிக்குப் போக இயலாது என்று அப்பாவுக்குக் கடிதம் எழுதி விட்டேன். அந்தச் செய்தியை அவர் உன் அப்பாவுக்குத் தெரிவிப்பார். அதை நிஜம் என்று நினைத்து நீ மயக்கம் போட்டு விழுந்துவிடாதே! நான் 'டாண்' என்று உங்கள் ஊருக்குச் சாயங்காலம் ஐந்து மணிக்கு வந்து சேரும் ரயிலில் தீபாவளிக்கு முதல் நாள் வந்து சேருகிறேன். அதுவரை இந்தக் கடித விஷயம் ரகசியமாக இருக்கட்டும்.

உன் அன்புள்ள
**சிவராமன்**



### 2. விமோசனம்

பனம்பட்டி

சிரஞ்சீவி சிவராமனுக்கு,

அநேக ஆசிர்வாதங்கள். உன் கடிதம் கிடைத்தது. உன் புத்திசாலித்தனத்தை மெச்சினேன். காரியாலய வேலைதான் பெரிதே ஒழியத் தலைதீபாவளி பெரிதல்ல. அந்தக் காலத்தில் என்னாலும் தலைதீபாவளிக்குப் போக முடியவில்லை. எங்கள் துரை மகாப் பொல்லாதவன். நீ வர முடியாது என்று உன் மாமனாருக்குத் தகவல் எழுதி விட்டேன்.

நிற்க. எனக்குக் காலில் கொஞ்ச நாட்களாக வாதப் பிடிப்பு இருக்கிறது. மலையாள வைத்தியர் ஒருவரிடம் காண்பிக்கக் கோயம்புத்தூர் போய் வரலாம் என்றிருக்கிறேன். உன் அம்மாவும் துணைக்கு வருகிறாள். உனக்கான தீபாவளி சீர் வரிசைகளை உனக்கு நேரே அனுப்பும்படி உன் மாமனாருக்கு எழுதி யிருக்கிறேன். என்னென்ன வந்து சேர்ந்தது என்பதற்கு விவரமாக விண்டு எழுதி அனுப்பு.

உன் அன்புள்ள அப்பா
**கணேசன்**

### 3. ஆனந்தம்

சென்னை—44

அன்பார்ந்த ராஜி,

அநேக ஆசிர்வாதங்கள். என் அப்பா கடிதம் உன் அப்பாவுக்கு வந்து தொலைந்து விட்டதா? 'தீபாவளிச் சீர் என் பெண்தான்' என்று சொல்லி உன் அப்பா ரயிலேற்றி உன்னை இங்கு அனுப்பி விடப் போகிறார். நான் வரும் ரகசியத்தை இப்போதே பக்குவமாக உன் அப்பாவிடம் சொல்லி விடு. நீ எழுதியிருக்கிற சாமான்களை யெல்லாம் வாங்கி விட்டேன். எதற்காக ஐம்பது கஜம் ரிப்பன் கேட்டிருக்கிறாய்? உங்கள் வீட்டுக் கதவுகளுக்குத் தாழ்ப்பாள் கிடையாதா? கதவுகளைக் கட்டவா ரிப்பன்? நூறு கஜமாகவே வாங்கிவிட்டேன் போ! மற்றவை நேரில்.

உன் அன்புள்ள
**சிவராமன்**



### 4. தந்தி

அன்பார்ந்த பிராணபதிக்கு,

நமஸ்காரம். உங்கள் கடிதம். இங்கு உங்களுக்குப் பெரிய ஆச்சரியம் காத்திருக்கிறது. மனத்தைத் திடப்படுத்திக்கொண்டு புறப்பட்டு வாருங்கள்.

உங்கள்
**ராஜி**

### 5. பதில் தந்தி

ராஜி!

உன் அப்பா நான் கேட்டிருந்த டேப் ரிக்கார்டர் வாங்கி விட்டாராக்கும்! அங்கு வந்தவுடன் முதல் வேலையாக உன்னைப் பாடச் சொல்லி ரிக்கார்டு பண்ணுகிறேன். நாளைக் காலை வண்டிக்கே வருகிறேன்.

**சிவராமன்**

*[தீபாவளிக்கு முதல் நாள் காலை. சிவராமனின் மாமனார் வீட்டுத் திண்ணை. சிவராமன் வண்டியில் வந்து இறங்குகிறான். சிவராமனின் அப்பா கணேசன் திண்ணையில் உட்கார்ந்திருந்தவர் தம் பிள்ளையைப் பார்த்துச் சிரிக்கிறார். சிவராமன் பிசாசைக் கண்டவன் போலத் திகைக்கிறான்.]*

சிவராமன் (அதிர்ச்சியுடன்): என்னப்பா! உங்களுக்கு வாதம் என்று எழுதியிருந்தீர்களே!

கணேசன்: ஆமாம்டா! நீகூடத்தான் ஆபீஸிலே லீவு கிடைக்காதுன்னு எழுதியிருந்தே.

சிவராமன்: அதற்கும் இதற்கும் என்ன அப்பா சம்பந்தம்?

கணேசன்: நிறைய இருக்குடா! அப்படிக் கடுதாசி எழுதற பிள்ளைதான் நிச்சயமாகத் தலைதீபாவளிக்குப் பெண்டாட்டியைப் பார்க்க ஓடி வருவான்னு தெரியும். சொந்த அனுபவம்டா! அந்தக் காலத்திலே நானும் அப்படிப் பண்ணினவன்தான்! எனக்குப் பிள்ளை வேறு எப்படிப் பிறப்பான்? எங்க அப்பாவும் இப்படித்தான் வேறு எங்கேயோ போவதாகச் சொல்லி விட்டுக் கர்ச்சம் மாதிரி என் மாமனார் வீட்டுத் திண்ணையிலே உட்கார்ந்திருந்தார்! எங்கப்பா மாதிரித்தான் நானும்! அவர் மேலே பழி தீர்த்துக்க முடியலே! அவர் பேரன் மேலே தீர்த்துக் கொண்டேன்! கடுதாசி எழுதறாளும் கடுதாசி! எனக்குக் காது குத்தி அறுபது வருஷங்களுக்கு மேலாகிறது! சரி, சரி! உள்ளே போ! செக்கே பிக்கேன்னு உன்னுடைய பெண்டாட்டியையே சுற்றிக் கொண்டு இருக்காமல் சாமர்த்தியமாக இரு!

*[ஜன்னல் வழியாக ராஜி தந்திக் கடுதாசியை ஆட்டுகிறாள். சிவராமன் தலை சுற்றலால் தூணைப் பிடித்துக் கொள்கிறான்!]*





# மணிமாலை

சோமு

திருவும் செல்வமும் அலை வீசிக் கொண்டிருந்த மாமல்லைக் கடற்கரையிலே, ''மத்திய ஆராமம்'' என்று அழைக்கப் பெற்ற புத்த பிக்குகளின் தவச்சாலையிலே, இரவு மூன்று ஜாமத்துக்கு மேல் ஆகிவிட்டது!

புத்த பெருமான் இந்த மண்ணுலகிலே அவதரித்ததும், பின்னர் வாழ்வைத் துறந்ததும், பிறகு ஞானம் பெற்றதும் ஆகிய மூன்று சிறப்புக்களும் ஒருங்கே அமைந்த வைகாசி மாதத்துப் பௌர்ணமி அது! கடலின் கரையில் போதி மாதவனின் கருணையைப் போல் எல்லையிலாது பரந்து விரிந்திருந்த வெள்ளி மணலிலே, பல நூறு துறவிகள் கூடியிருந்தார்கள்! பிக்குகளும் பிக்குணிகளுமாக அமர்ந்திருந்த அந்தப் புனிதத் தவச் சங்கத்திலே, தவச்சாலையின் தலைவரான தீபநந்தனரின் குரல் எழுந்து ஒலித்தது:—

''சீடர்களே! மெய் வழியான துறவு மார்க்கத்திலே செல்லத் துணிந்த ஒருவன் தனி மனிதனாக நின்றால், அவனுடைய வலிமை குறைந்து, மீண்டும் அவன் தனது பழைய அஞ்ஞான நிலைக்குத் திரும்பிவிடக் கூடும். ஆதலால் நீங்கள் எல்லாரும் ஒன்றுசேர்ந்து சங்கமாக இருங்கள்!

அன்பில் ஒன்றாகவும், துறவறத்தில் ஒன்றாகவும் சத்தியத்தை நாடுகிற ஆர்வத்தில் ஒன்றாகவும் இருங்கள்.

இதுவே புனிதமான சங்கம். இதுவே புத்தரின் சங்கம். புத்தபெருமானின் சரணங்களைச் சென்றடைந்தவர்கள் அனைவருக்கும், ஒருமைப்பாட்டை அமைத்துத் தரும் சங்கம் இதுவே!''

இவ்வாறு, மான் சோலை என்ற ஞான பூமியில் அமர்ந்து முன்னொரு காலத்தில் புத்த பெருமான் உபதேசித்து அருளிய அந்த மகா வாக்கியங்களை, பக்தி சிரத்தையோடு எடுத்தோதினார் தீபநந்தனர். உடனே அந்த நூற்றுக்கணக்கான துறவிகளும் மணற்பரப்பிலே எழுந்து நின்றார்கள். நூறு நூறு குரல்களும் கடல் அலைகளின் ஓசையையும் அடக்கிக்கொண்டு, ஆர்வமும் பணிவும் நிரம்பிய ஐக்கிய உணர்வோடு ஒலித்தன:

''புத்தம் சரணம் கச்சாமி!
தம்மம் சரணம் கச்சாமி!
சங்கம் சரணம் கச்சாமி!''



பிரார்த்தனைக் கூட்டம் முடிந்து, துறவிகள் எல்லாரும் ஆராமத்துக்குள்ளே

சென்று விட்டார்கள். அந்தக் கூட்டத்திலேயே மிகவும் வயது முதிர்ந்தவர்களாகக் காணப்பட்ட இரண்டு மூதாட்டிகள், முதுமை கனிந்த இரண்டு பிக்குணிகள், ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டே நீண்ட நேரம் அந்த மணற்பரப்பிலே நின்றனர்! அப்போது ஆதிரை என்ற முதலாவது துறவி பேச ஆரம்பித்தாள்;

"அம்மையே! சத்திய மார்க்கத்தில் செல்ல விரும்புவோர், தனித்து நிற்காமல் இப்படிப் பெருஞ் சங்கமாக ஒன்று கூடுவதிலேதான், உள்ளத்தின் உறுதி வலிமை அடைகிறது என்று, பகவான் அருளியதில் எத்தனை உண்மை பொதிந்திருக்கிறது! இந்தப் புண்ணிய பாரத தேசத்தின் பல பகுதிகளிலிருந்தும் இன்று நாம் இங்கே ஒன்று கூடியிருக்கிறோம். பிறப்பாலும் அநுபவங்களாலும் வேறுபட்ட பலர் ஒன்று சேரும்போது, நம் ஒவ்வொருவருடைய உள்ளமும் பல நூறு உள்ளங்களின் ஒருமித்த வலிமையைப் பெறுகிறது. இல்லையா?"

இரண்டாவது துறவி இதற்கு மறுமொழி கூறத் தொடங்கினார்:

"உண்மைதான்! ஒருவரையொருவர் கலந்து கூடி இதயத்தின் அநுபவங்களைப் பகிர்ந்து கொள்வதிலே ஒரு தெளிவும் உறுதியும் பிறக்கின்றன!"

இவ்வாறு பேசிக்கொண்டே இருவரும் நிலவு பொழிந்து கொண்டிருந்த கடற்கரைப் பரப்பிலே நடந்தார்கள்.

ஆதிரை சொன்னாள்:

"அம்மா! நமது புத்த சங்கத்தையும் நீல நெடுங்கடலையும் ஒப்பிட்டுப் புத்த பகவான் கூறிய ஞானமொழி நினைவிருக்கிறதல்லவா?

புத்த பெருமான் சொன்னார்: **ஓ துறவிகளே! மகா நதிகள் எல்லாம் பெருங்கடலுள் வீழ்ந்தபிறகு, தங்கள் தங்கள் பெயர்களையும் வரலாறுகளையும் இழந்து, ஒரே மகா சமுத்திரமாக ஆகிவிடுவது போல, இந்தப் புத்த தருமத்தைச் சேர்ந்த மக்கள் அனைவரும், தத்தம் பெயர்களையும் வருணங்களையும் இழந்து, ஒரே தன்மையான சாக்கியர்களின் சங்கமாக ஆகிவிடுகிறார்கள்!"**

மந்திரத்தை மொழிவது போல், அந்த மகா வாக்கியத்தை அடக்கமான குரலிலே ஓதினார் ஆதிரையம்மை. அப்போது அடுத்த துறவி கேட்டார்:

"உண்மைதான்! நாம் இந்த மகா சங்கத்திலே சேர்ந்து விட்ட பிறகு, நம்முடைய தனிப்பட்ட தன்மைகளும் உணர்ச்சிகளும் தருமக் கடலிலே கரைந்து போய்விட்டன என்பது மெய்தான்! ஆனாலும், கடலின் அலைகள் சில இரவுகளிலே பூதாகாரமாக எழுந்து, கரை கடவாத கட்டுக்குள்ளேயே பொங்கிக் குமைந்து, கரைக்குள்ளேயே சரிந்து விழுவதுபோல, நமது இதயத்துக்குள் வாழ்வின் நினைவுகள் சில சமயம் பொங்கி யெழுந்து சரிந்து தெறிகின்றன அல்லவா? அப்படி ஒரு நினைப்பு இப்போது! நீங்கள் சிரிக்கா



மல் விடை சொல்லுவதாக இருந்தால் அந்தக் கேள்வியை உங்களிடம் கேட்கிறேன்!"

இவ்வாறு கூறினார் அந்த இரண்டாவது துறவி. அதற்கு ஆதிரை பதில் சொல்லுவாள்:

"தாராளமாகக் கேளுங்கள். இதில் சிரிப்பதற்கு என்ன இருக்கிறது!"

"அம்மா! நாம் அனைவரும் இன்று இங்கே கூடியதன் நோக்கம் புத்த பெருமானை ஆராதிப்பதுதான்! ஆனாலும் நாட்டின் ஒவ்வொரு மூலையிலிருந்து நாம் வந்திருக்கிறோம். ஒருவரையொருவர் அறிந்து கொள்வதில் தவறில்லையல்லவா! அப்படி ஒரு ஆசை! உங்களைப் பார்த்ததிலிருந்து, உங்களுடைய முகத்தில் ஒளி வீசுகிற தவக் களையைக் கண்டதிலிருந்து, என் உள்ளத்தில் இந்த ஆசை எல்லை மீறிக் கொந்தளிக்கிறது. இத்தனை எழிலும் வனப்பும் மிகுந்த மேனியைக் காவி உடையிலே பொதிந்து மூடுவதற்கு எப்படி உங்களுக்கு மனம் வந்தது? வாழ்வின் இளமையையும் இன்பத்தையும் துறந்து விடக்கூடிய உறுதியும் அவசியமும், உங்களுக்கு எப்படி ஏற்பட்டன என்பதை அறிந்து கொள்ள வேண்டும் என்று ஆசைப்பட்டேன். தவறுனும் மன்னிக்க வேண்டும்!"

அழகு மயமான பூரண சந்திரன், வானுற வளர்ந்தோங்கிய ஒளி மகுடத்தை நிலாமடந்தையின் முடி மீது சூட்டி நின்றான்! அந்த ஒளிப் பட்டாபிஷேகத்துக்கு மங்கள வாத்தியங்களை முழக்கிக் கொண்டிருந்தது நீல நெடுங் கடல்! துறவிகள் இருவரும் 'பளபள' என்று இரத்தினக் குவியலாக மினுங்கிக் கொண்டிருந்த ஒரு மணல் மேட்டிலே வந்து அமர்ந்தார்கள். ஆதிரை பேச ஆரம்பித்தாள்:

"அம்மா! என்னுடைய எழிலையும் வனப்பையும் இப்படி யெல்லாம் புகழ்ந்து கூறுகிறீர்கள் நீங்கள்! ஆனால் ஒரு காலத்தில், இந்த முகம் அழகு என்ற ஒரு பொருளுக்காக ஏங்கியதுண்டு. இந்த மேனியைக் கண்டு, உவகை கொள்ள வேண்டிய ஒரு சுந்தர குமாரனின் அன்பை நாடி, இந்த மேனி பரிதவித்தது. அவனுடைய உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுவதற்குரிய எழிலை நாடி, இந்த உடம்பெல்லாம் உருகியது என்றால் அதை நீங்கள் நம்புகிறீர்களா?"

இவ்வாறு கேட்டாள் ஆதிரை. அவளுடைய மேனியின் நவ ஒளியையே இதுவரை கண்ணிமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்த இரண்டாவது துறவி சொன்னாள்:

"அம்மா! நீங்கள் சொல்வது உண்மையாகவே இருக்கலாம். புல்லையும் கல்லையும் இரத்தினமணிகளாக மாற்ற வல்ல புத்தபெருமானின் சரணங்களே, உங்களுடைய மேனியில் இத்தகைய மகத்தான சோபையைத் தந்திருக்கக் கூடும். தவம் என்ற நெருப்பிலே ஸ்புடமாகிய காரணத்தால் நீங்கள் இத்தகைய —"

துறவியின் இந்தப் புகழுரையிலே குறுக்கிட்டுப் பேசினாள் ஆதிரை:

"அம்மா! அழகு என்பது மேனியிலா இருக்கிறது? அது பார்ப்பவருடைய கண்களிலே அல்லவா இருக்கிறது! அந்த ஆராய்ச்சி இப்போது எதற்கு? ஒரு காலத்தில் நான் அழகற்ற ஒரு ஜடமாகக் கருதப்பட்டேன் என்பது உண்மை. யாருடைய கண்களுக்கு நான் அழகியாகத் தோன்ற வேண்டுமோ, அந்த ஒரு மனிதருடைய கண்களுக்கு நான் வேம்பாக இருந்தேன்!"

இப்படிச் சொல்லி விட்டுச் சற்று நேரம் மௌனமாக இருந்தாள் ஆதிரை. பிறகு அவள் தொடர்ந்து சொல்ல ஆரம்பித்தாள்:

"அம்மா! பூம்புகார் என்று கொண்டாடப்படும் காவிரிப்பூம் பட்டினத்திலே, பெருமை மிகுந்த தனவணிக குலத்திலே, அன்பு மிகுந்த தகப்பனுக்கு ஒரே மகளாகப் பிறந்தேன். இக வாழ்வுக்கு வேண்டிய சுகபோக சம்பத்துக்கள் அனைத்தையும் எனக்கு வழங்கிய ஊழானது, மேனியழகு என்ற ஒரு செல்வத்தை மட்டும் அருளாமல் என்னை வஞ்சித்தது. இதை என் பெற்றோர்கள் நன்கு உணர்ந்தார்கள். எங்களுக்கு ஒப்பான செல்வந்தர் குடும்பத்து இளைஞர்கள் யாரும், அழகற்ற ஒரு பெண்ணைத் திருமணம் செய்து கொள்ள இசைய மாட்டார்கள் என்று என் தந்தைக்குப் புரிந்தது. இதனால் அவர் ஒரு சாமர்த்தியமான உபாயம் செய்தார்.

என் தந்தையின் உறவினர்களிலே, தாய் தந்தையரை இழந்த ஓர் ஏழை





மகன் இருந்தான். அந்தப் பையனை எங்கள் மாளிகையிலே குடியேற்றி, என்னுடைய எதிர்கால நாயகனாகவே எண்ணி, அவனை ஓர் அரசகுமாரனைப் போல வளர்த்தார் என் தந்தை!

ஆனந்தன் என்ற அந்தக் குமரன், குங்கும வர்ணமும், நிலவின் பிரகாசமும், செந்தாமரை மலரின் மென்மையும் சேர்ந்த ஒப்பற்ற அழகன்! அந்த அழகுக் குமரனிடம் நான் என் உள்ளத்தைப் பறி கொடுத்தேன்!

ஆனந்தனிடம் என் தந்தை தமது அன்பை யெல்லாம் கொட்டினார். புதல்வன் இல்லாத காரணத்தால் தமது செல்வத்தை யெல்லாம் அவனுக்கு உரிமையாக்கினார். பூம்புகார் நகரத்துத் தனவணிக இளைஞர்களிலே வேறு யாருக்கும் இல்லாத செல்வாக்கு ஆனந்தனுக்கு ஏற்பட்டது! அரசகுமாரர்கள், அமைச்சர்கள், அரசவைக் கவிஞர்கள் ஆகியவர்களோடு பழகுவதும், அரசப் பெருமிதத்தோடு விழாக்களிலே கலந்து கொள்வதுமாக, ஆனந்தன் இளமைப் பருவத்தைக் கழித்தான்!

இந்நிலையிலே இந்திர விழாவின் போது பன்னிரண்டு ஆண்டுக்கு ஒரு முறை நடைபெறுகிற வியாழ வட்டத் திருநாள் வந்தது! அதையொட்டித் தொடர்ச்சியாகப் பல நாள் ஆனந்தன் எங்கள் மாளிகையிலே இல்லை! அரசகுமாரர்களோடும், அமைச்சர்களோடும், அரசவைக் கவிஞர்களோடும் விழாக் கொண்டாட்டங்களிலே கலந்துகொண்ட ஆனந்தன், இன்று வருவான், நாளை வருவான் என்று நாள்தோறும் எதிர் பார்த்தோம் நாங்கள்!

இப்படி இருக்கும்போது இதயம் துணுக்கம் அடைகிற ஒரு துயரச் செய்தியை ஒரு நாள் எங்களுக்கு அறிவித்தார் என் தந்தை! இந்திர விழாவிலே பங்கு கொள்வதற்காக மணிமாலை என்ற ஒரு மாதரசி வந்தாள் என்றும், அரச சபையிலே அவளுடைய நடனத்தைக் கண்டது முதல் ஆனந்தன் அவள் நினைவாகவே மாறி விட்டான் என்றும், அவனைப் பற்றிய செய்தியே தெரியவில்லை என்றும் சொல்லி, மனம் நொந்தார் என் தந்தை! அதோடு, அந்த மணிமாலை என்ற அழகியின் ஓவியம் ஒன்று ஆனந்தனுடைய பழைய அங்கி ஒன்றிலே இருந்தது என்றும் சொல்லி, அதை என்னிடம் கொடுத்தார்.

அப்போது என் உள்ளத்தில் ஏற்பட்ட அதிர்ச்சியைத் தந்தையிடம் நான் காட்டிக் கொள்ளவில்லை.

'அப்பா! வாழ்க்கையிலே அசைக்க முடியாத நம்பிக்கை உள்ளவர்கள் நீங்கள். இதற்காக ஏன் இவ்வளவு கவலைப்படுகிறீர்கள்? அழகும் இளமையும் நிரம்பிய ஒரு இளைஞர் அழகும் இளமையும் நிரம்பிய ஒரு பெண்ணை விரும்புவதில் தவறு இல்லையே?'

இவ்வாறு நான் ஆறுதல் சொல்ல முயன்றேன். ஆனால் என் இதயத்தின் ஆழத்தில் ஒரு பெரிய வடு, நெருப்பினால் சுட்டது போன்ற ஒரு பெரிய ரணம், காந்தியது.

விழாவுக்குச் சென்ற ஆனந்தனிடமிருந்து எவ்விதமான செய்தியும் இல்லை. அந்த கவலையில் என் தந்தை இந்த உலகிலிருந்து மறைந்தார்.

நாளாக நாளாக என் இதயத்தில் ஏற்பட்டிருந்த புண் ஆற ஆரம்பித்தது. துயரத்துக்கு மத்தியிலே, அறிவில் ஒரு புதிய தெளிவு உண்டாக ஆரம்பித்தது. மணிமாலை என்ற அந்த அழகரசியின் ஓவியத்தை அடிக்கடி எடுத்துப் பார்த்துக் கொள்ளுவேன். அப்படிப் பார்க்கப் பார்க்க, அழகும் அழகும் ஒன்று சேர்வதிலே உள்ள சீர்மையை ஒப்புக் கொள்ள ஆரம்பித்தேன். அழகு என்ற பேரும் பேற்றை வியக்க ஆரம்பித்தேன்! இந்த வியப்பு அதிகரிக்க அதிகரிக்க, என்னுடைய எழிலற்ற உடலை நான் வெறுக்கத் தொடங்கினேன். அழகு என்ற வரப்பிரசாதம் இல்லாத உடலை, ஊனின் பொதியாகச் சுமந்து திரிய நான் விரும்பவில்லை. எந்த ஒரு திருவடியைத் தொட்ட மாத்திரத்தில் காசிரும்பும் செம்பொன்னாக மாறுமோ அந்தத் திருவடியைச் சரணம் அடைந்து விட்டேன்! நான் இந்தப் புனித மகா சங்கத்திலே சேர்ந்த வரலாறு இதுதான்!''

இவ்வாறு சொல்லி நிறுத்தினாள் ஆதிரை என்ற மூதாட்டி. இதுவரை மௌனமாக இருந்து கேட்டுக் கொண்டிருந்த இரண்டாவது துறவியம்மை இப்போது சொல்லுவார்:

''அது சரி. ஆனந்தன் பிறகு என்ன ஆனார் என்பதை நீங்கள் விசாரிக்கவில்லையா? அவருக்கும் மணிமாலைக்கும் திருமணம் நடந்ததாமா ?''

''அப்படித்தான் எண்ணுகிறேன் !'' என்று கூறினாள் ஆதிரை.

''இல்லை. அந்த எண்ணம் தவறானது. இந்திர விழாவிலே மணிமாலையைச் சந்தித்தது ஆனந்தன் மட்டும்தானா ? இல்லை. ஆனந்தனோடு இன்னும் இரண்டு சுந்தர வாலிபர்கள் இருந்தார்கள் ! ஆனந்தன், அரச குமாரன் அந்திவண்ணன், அரசவைக் கவிஞன் புதுமித்திரன். இந்த மூவரும் மணிமாலையைக் கண்டு அவள் அழகை மோகித்தனர் !''

இரண்டாவது துறவி இப்படிச் சொன்னதும் அளவுகடந்த வியப்போடு ஆதிரை கேட்டாள் :

''அப்படியா? மணிமாலை இந்த மூவரில் யாரை மணந்தாள் ?''

''இந்த மூவரில் யாரை மணப்பது என்று தெரியாமல் மயங்கினாள் மணிமாலை! சமமான அழகும், சரிநிகரான மோகமும் சேர்ந்து மூன்று வாலிப உருவங்களாக அவள் முன் நின்று போரிட்டனர்! உயிர் நண்பர்களாக வாழ்ந்த மூன்று மித்திரர்களுக்கு நடுவிலே தனது

அழகானது, ஒரு நச்சு விதையை ஊன்றி நிற்பதை அவள் அப்போது உணர்ந்தாள். அதோடு மட்டுமில்லை. ஆனந்தனுடைய வாழ்விலே ஏற்பட்ட அந்த விபரீதமான மனமாற்றத்தை எண்ணிப் பார்த்தாள் ! அவனையே நம்பி, அவனுக்காகவே எல்லாச் செல்வங்களையும் வழங்கிய உத்தம வணிகப் பெருமானுக்கும், அவருடைய அன்புப் புதல்விக்கும், துரோகம் இழைக்கும்படி அந்த அளவுக்கு ஆனந்தனுடைய உள்ளத்திலே விஷப் பைத்தியத்தை உண்டாக்கியது எது? தன்னுடைய மேனியின் அழகுதானே?—இப்படி எண்ணியதும் மணிமாலைக்கு இதயம் எல்லாம் நெருப்பாகச் சுட்டது. நிலையில்லாத ஊனிலே விபரீதமான விளையாட்டைச் செய்கிற அந்த நிச்சயமற்ற அழகைச் சீறிவெறுத்தாள் மணிமாலை.''

''பிறகு?'' என்று பதற்றத்தோடு கேட்டாள் ஆதிரை.

''எந்த அழகுக்காக நீங்கள் ஏங்கினீர்களோ, அந்த அழகை வேண்டாம் என்று வெறுத்து உதறினாள் மணிமாலை. அழகற்ற ஊன்சுமை என்று உங்கள் உடலைக் காய்ந்தீர்கள் நீங்கள். பாவச் சுமை என்று கருதி அந்த அழகை வெளவி என்ற நெருப்பிலே வீசி எறிந்தாள் மணிமாலை !''

இதைக் கேட்டுக் கொண்டிருந்த ஆதிரையின் கண்களிலே துயரம் மிதந்தது. அதைக் கண்ணுற்ற துறவி மேலும் சொல்லுவார்:

''ஆதிரையம்மையே! இருவருடைய துறவுக்குமே அழகுதான் காரணம் ! அழகாக இல்லை என்ற காரணத்தால் உங்களை நீங்கள் வெறுத்தீர்கள். அழகாக இருந்த காரணத்தால் என்னை நான் வெறுத்தேன். எனவே இந்த இரண்டு நதிகளும் புத்த தருமம் என்ற மகா சமுத்திரத்திலே விழுந்து தம்மைத் தாம் இழந்தன. இப்பொழுது நாம் இருவரும் நதிகள் இல்லை, சமுத்திரமாகவே ஆகிவிட்டோம்! இந்தப் புத்த சமுத்திரம் எவ்விதமான பாவ எண்ணங்களும் இல்லாத மாசற்ற ஓர் அழகுக் கடல்...!''

மூதாட்டிகளான துறவிகள் இருவரும் எழுந்து, ஆராமத்தை நோக்கி நடக்க ஆரம்பித்தார்கள். அப்போது உதய காலம் ஆகிவிட்டது. ஆனந்தன் என்று ஒரு காலத்தில் அழைக்கப்பட்ட தீபநந்தனரின் குரல், பிரார்த்தனைக் கூட்டத்திலே எழுந்து ஒலித்தது:

**''ஓ துறவிகளே! புறத் தோற்றங்கள் யாவும் ஒழிந்த பிறகு ஒரே உயிர்த் தத்துவம் மட்டுமே எஞ்சி நிற்கிறது! விறகு தீர்ந்த பிறகும் திரி அவிந்த பிறகும், நிரந்தரமாக எரிந்து கொண்டிருக்கிற நெருப்பு அதுதான்! அந்த நெருப்பு திரியிலும் இல்லை, விறகிலும் இல்லை. அது எங்குமாய், எல்லாமாய், எப்போதும் நிரந்தரச் சுடர் வீசுகிறது!''**



# பருத்தியால் முடிதுறந்த மன்னன்!

பார்த்தியப்போரில் தோற்றுப்போனான் அர்மேனிய அரசன் டிரிடேட்ஸ். ரோமானியர்கள் வெற்றி முழக்கம் செய்தனர். தோற்றுப்போன டிரிடேடஸ் தன் கிரீடத்தைத் தங்கள் சக்கரவர்த்தியின் சலவைக் கல் சிலையின் காலடியில் கிடத்த வேண்டுமெனக் கட்டளையிட்டனர்!

என்ன கயிறு திரிக்கிறீர்கள்? பருத்திக்கும் இதற்கும் என்ன சம்பந்தம் என்கிறீர்களா? சொல்கிறோம்.

ரோமுக்கும் இந்தியாவுக்குமிடையே இருந்த முக்கியமான வியாபார மார்க்கங்களைப் பாதுகாப்பதற்காகவே பார்த்தியப போரை ரோமானியர் நடத்தினர் தரை மார்க்கமாகவும், கடல் மார்க்கமாகவும் அக்காலத்தில் மதிப்பிடமுடியாத இந்திய சுகபோகப் பொருள்கள் ரோமுக்குச் சென்று கொண்டிருந்தன.

அவற்றுள் ரோமானியர் வெகு உயர்வாக மதித்தது அதிநுட்பமான நெசவும், அமைப்புமுள்ள மிக்க இலேசான இந்திய மஸ்லினைத்தான்!

அன்று மட்டுமென்ன? இன்றும் இந்தியப் பருத்தித் துணிகள் உலகச் சந்தையில் செல்வாக்கோடு உலாவுகின்றன. பரம்பரைத் தொழில் திறனோடு, நவீன தயாரிப்பு முறைகளும் சேர்ந்து, இன்றைய பாரதப் பருத்தியாடைகளை உலகில் மிகச் சிறந்தவைகளுள் ஒன்றாகச் செய்துள்ளன.

ராஜேஷ் டெக்ஸ்டைல் மில்ஸ் லிட்.

பெர்குஸன் ரோட், பம்பாய்—13.

இது ஒரு ரோஹித் க்ரூப் ஸ்தாபனம்



# இந்த ஆண்களே இப்படித்தான்

ணோமாஸ்

அன்று அந்தப் புடவைக் கடைக்குப் போனதும் என் கண்ணில் பட்டு நெஞ்சில் படிந்தது அந்த ஆகாய வர்ணப் புடவை தான். அதன் குங்குமச் சிவப்பு பார்டர் என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டு விட்டது. என்ன அமைப்பு! என்ன நேர்த்தி!

கடைக்காரர் புடவையின் விலையைச் சொன்னார். நான் விலையைப் பற்றிக் கவலைப்படவே இல்லை. என் உள்ளங் கவர்ந்த அந்தப் புடவையின் விலை என்னவாயிருந்தாலென்ன? கடைக்காரரிடம் அதற்கு 'பில்' போடச் சொன்னேன். கடையில் ஏகக் கூட்டம். தீபாவளிக் கிராக்கியாயிற்றே! கடைக்காரர் 'பில்' போட முடியாமல் திணறினார். இதற்குள் அந்தப் புடவையை ஒரு பாட்டியம்மாள் வியப்போடு பார்த்துக் கொண்டிருந்தாள். அடுத்த நிமிஷம் விலையைப் பற்றி விசாரிக்க ஆரம்பித்தாள். எனக்கு வந்து விட்டது கோபம். நான் எத்தனை நேரம் சிரமப்பட்டு அதைத் தேர்ந்தெடுத்திருக்கிறேன்? கொஞ்சங்கூடச் சிரமப்படாமல் ஒரு பாட்டியம்மா அதைத் தட்டிக் கொண்டு போவதென்றால் எனக்கு எப்படி யிருக்கும்?

''அந்தப் புடவையை நான் வாங்கி விட்டேன்'' .... என்று ஆத்திரத்தோடு அழுத்தமாகக் கூறிக் கொண்டே நானிப் பாய்ந்து புடவையை எடுக்கப்போனேன். அந்தச் சமயம்தான் அந்த மதிமுகம் கண்ணில் பட்டது. அவளது தந்தக் கரங்கள் ஆகாய வர்ணச் சேலையை ஸ்பரிசித்து ரஸித்துக் கொண்டிருந்தன.

''பாட்டி, அந்தப் புடவையை அவர் வாங்கி விட்டாராம்....'' என்று அவள் தேன் குரலில் கூறினாள். அதில் இனிமை எவ்வளவு இருந்ததோ, அவ்வளவு தாபமும் இருந்தது; ஏக்கமும் இருந்தது.

ஒரு பெண் மனத்தின் ஏக்கத்தைப் புரிந்து கொள்ள முடியாத மூடனல்லவே நான்! மேலும் அந்த ஆகாய வர்ணச் சேலை அவளுக்குப் பொருந்துகிற மாதிரி வேறு யாருக்கும் பொருந்த முடியாது என்பதை அறியாதவனா நான்? பாட்டியம்மாளைப் பார்ப்பதற்கு முன்பு மட்டும் இந்தக் கனவுக் கன்னியைக் கண்டிருந்தால் அவ்வளவு கண்டிப்பான குரலில் புடவையை வாங்கி விட்டதாகக் கூறியிருக்கவே மாட்டேன். என்ன செய்யலாம்! ஐயோ பாட்டி!

ஒரு கண நேரத்தில் சமாளித்துக் கொண்டு விட்டேன்.

''....உங்களுக்கு அந்தப் புடவை வேண்டுமென்றால் பேஷாய் எடுத்துக் கொள்ளுங்கள்...'' என் குரலில் அன்பை அபரிமிதமாக வரவழைத்துக் கொண்டு கூறினேன். எனக்கு எப்பொழுது இவ்வளவு நயமாகப் பேசவந்தது என்று எனக்கே வியப்பா யிருந்தது. ஒரு பெண்ணுக்கு அத்தனை சக்தியா?

''....பாவம்! நான் இதை வாங்கிச் சென்றால் என் மாதிரி தானே இன்னொரு பெண் மனமும் வேதனைப்படும்!'' என்று எனக்கு மட்டும் கேட்கும் குரலில் கூறி விட்டுத் தன் பார்வையைத் தாழ்த்திக் கொண்டாள் அந்தப் பெண்.

கடைக்காரப் பையன் புடவைக்கு 'பில்'போடத் தயங்கினான்.

''அவர்களுக்கே கொடுத்துவிடுங்கள்'' என்று வீர தீரக் குரலில் முழங்கி விட்டு நிமிர்ந்த மார்போடு கடையை விட்டு வெளியேற முயன்றவன், ''மிஸ்டர்...'' என்ற தேன் குரலில் உடம்பெல்லாம் புளகமுற்று நின்று அவளைப் பார்த்தேன்.

''....நீங்களே அந்தப் புடவையை எடுத்துக் கொள்ளுங்கள். முதலில் தேர்ந்தெடுத்தது நீங்கள் தானே!'' என்று குழைவோடு கூறிவிட்டு மின்னலைப் போல் மறைந்தாள். கடையில் வாழைத்தண்டு விளக்குகள் ஒளி வெள்ளத்தைப் பரப்பிக் கொண்டிருந்தும் எனக்கு எல்லாமே இருண்டு விட்ட மாதிரி தோன்றியது. கடைக்காரப் பையன் 'பில்' போட்டுத் தந்ததோ, நான் பணம் கொடுத்து விட்டுப் புடவையை வாங்கிக் கொண்டு வீட்டுக்குச் சென்றதோ எதுவுமே எனக்கு நினைவில்லை.

நாம் சற்றும் எதிர்பாராத நிகழ்ச்சிகள் கதைகளில் மட்டுமல்ல, வாழ்க்கையிலும் கூட நிகழ்ந்து விடுகின்றன என்பதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்.

ஒரு நாளும் இல்லாத திருநாளாக அன்று மாலை நேரு பார்க்குக்குச் சென்றேன். அவ்வேளையில் அங்கு அதிகமாகக் கூட்டம் இல்லை. அங்கொருவரும் இங்கொருவருமாகச் சிலர் புல் தரையில் அமர்ந்திருந்தனர். நானும் ஒரு பக்கம் ஓரமாகச் சென்று அமர்ந்தேன்.

''நீங்களும் இங்கே வருவதுண்டா?'' என்ற இன்பக் குரல் கேட்டு நிமிர்ந்தேன். அன்று புடவைக் கடையில் பார்த்த அதே இன்பவல்லிதான் என்னெதிரில் நின்று கொண்டிருந்தாள். இந்த எதிர்பாராத இன்ப நிகழ்ச்சியினால் நான் அதிர்ந்து தான் போனேன்.

''என்ன நினைவில்லையா? அன்று கங்காராம் சில்க் ஹவுஸில் சந்தித்தோமே!'' என்று கூறியவண்ணம் என் எதிரில் அடக்கமாக அமர்ந்தாள்.

''நன்றாய் நினைவிருக்கிறது. பாவம், உங்கள் ஆசையைப் பொருட்படுத்தாமல்

அந்தப் புடவையை எனக்கு விட்டுக் கொடுத்தீர்களே'' என்றேன்.

''அது இருக்கட்டும். உங்கள் ஆசை நிறைவேறியதே? உங்கள் மனைவி என்ன சொன்னாள்? சந்தோஷப் பட்டிருப் பாளே!'' என்றாள்.

''இல்லை'' என்றேன்.

''ஏன்? அந்தப் புடவை அவளுக்குப் பிடிக்கவில்லையா?''

''எனக்கு இன்னும் விவாகம் ஆக வில்லை. அந்தப் புடவை என் தங்கைக்கு வாங்கினேன்....'' என்றேன்.

''ஓகோ! அப்படியா? உங்கள் தங் கைக்கு அது பிடித்திருந்ததா?''

''ஆகா! ரொம்பப் பிடித்திருந்தது. 'ஏது! அண்ணாவுக்குப் புடவை செலக்ஷ னெல்லாம் ரொம்ப நன்றாய்த் தெரிந் திருக்கிறதே! வரப் போகும் மன்னி அதிர்ஷ்டக்காரிதான்!' என்று பரிகாசம் பண்ண ஆரம்பித்து விட்டாள்! அது இருக்கட்டும். அன்று புடவைக்கடைக்கு உங்களுடன் வந்திருந்தது உங்கள் பாட்டியென்று தெரியாது... கடுந்தாற் போல் பதில் சொல்லி விட்டேன்....''

''....அது எங்கள் பாட்டியில்லை... நீங்கள் தவறாக நினைத்துக் கொண்டு விட்டீர்கள்....!'' என்று கூறிவிட்டுக் கிண்கிணி நாதம் எழச் சிரித்தாள்.

நானும் சிரித்தேன். ''நீங்கள் எங்கே யாவது வேலையில் இருக்கிறீர்களா?'' என்று பேச்சை மேலே தொடர்ந்தேன்.

''ஆமாம், நான் வரு மான வரிக் காரியால யத்தில் வேலை பார்க் கிறேன். நீங்கள்...?''

''நான் இங்குள்ள ஒரு பாங்கியில் ஊழிய னாகப் பணி புரிகிறேன். புரசவாக்கத்தில் குடி யிருக்கிறேன். எனக்கு ஒரே தங்கை. கல்லூரி யில்படிக்கிறாள். அண்ணா இருக்கிறார். மன்னியும் அம்மாவும்தான் குடும் பத்தைப் பார்த்துக் கொள்கிறார்கள். நீங்கள் எங்கே ஜாகை?''

''நான் தம்புச் செட் டித் தெருவில் தாயார், தகப்பனாரோடு இருக் கிறேன்.''

''உங்கள் ....உங்கள் ....!'' என்று சிறிது தயங்கினேன்.

''பெயர்தானே? செங்கமலம்....!'' என்று முத்துப் பற்கள் தெரிய முறுவல் பூத்த வண்ணம் சொன்னாள்.

நானும் சிரித்துக் கொண்டே, ''பொருத் தமான பெயர்'' என்று மெல்லக் கூறி விட்டு, ''என் பெயர் சுந்தர ராமன்'' என்றேன்.

மயக்கும் சிரிப் பொன்றை வீசி விட்டு எழுந்தாள் செங்கமலம். இருள் கவிந்து விளக் குகள் எரிய ஆரம்பித்து விட்டிருந்தன.

அப்புறம் நானும் செங்கமலமும் பல முறை சந்தித்தோம்.

அன்று இருவரும் கடற்கரையில் சந்தித்தபோது பேச்சு விவாகத்தைப் பற்றித் திரும்பியது.

''உங்கள் விவாகத்தைப் பற்றி நீங்கள் இன்னும் சிந்திக்கவில்லையென்று நினைக்கிறேன்....'' என்று மிகவும் நாசூக் காக, இழுத்தாற் போலக் கூறினேன்.

''என் திருமண விஷயத்தில் என் தந்தை பூரண உரிமை கொடுத்திருக் கிறார். ஆகையினால் அவர் காட்டும் வாலிபருக்குக் கழுத்தை நீட்ட வேண் டிய அவசியம் எனக்கு இல்லை. கல்யா ணத்தைப் பற்றிய சிந்தனை எனக்கு இன் னும் எழவில்லை....''

''அப்படி யென்றால் உங்கள்...கல் யாணம் காதல் கல்யாணமாக இருக்கு மென்று சொல்லுங்கள்....!''

செங்கமலத்தின் முகம் உண்மையி லேயே செங்கமலமாகி விட்டது.

''.....உங்கள் விஷயம் என்ன?''

''பெரியவர்களால் நிச்சயிக்கப்பட வேண்டிய திருமணம் என்னுடையது. எதிலும் என் அண்ணாதான் தீர்ப்புக் கூற வேண்டியவர். பிரபல மருந்து வியாபாரி களான பீம்லால் அண்டு கம்பெனியின் பங்குதாரரும், மானேஜிங் டைரக்டரு மாக இருக்கிறார் என் அண்ணா.''

நேரம் சென்றது தெரியாமல் பேசிக் கொண்டிருந்து விட்டது பிறகுதான் எங்கள் இருவருக்குமே தெரிய வந்தது. இருவரும் பிரிந்தோம்.

இரண்டு மாதங்கள் சென்றன. கல் லூரி விடுமுறை நாட்கள் வந்து விடவே செங்கமலம் ஊருக்குப் போய் விட்டாள். எங்கள் சந்திப்பும் நின்றிருந்தது.

அன்று ஞாயிற்றுக்கிழமை. என்னை என் தாயார் அழைத்து ''சுந்தரம், இன்று எங்கேயும் வெளியே போகக் கூடாது. மத்தியானம் பெண் பார்க்க மாம்பலம் போக வேண்டும்!'' என்றாள்.

''யாருக்கு?'' என்றேன் திகிலுடன்.

''யாருக்கா? உனக்குத்தான்!'' என் றாள் அம்மா.

எனக்குத் தலை சுற்றியது. பார்க்கும் இடமெங்கும் நீக்கமற நிறைந்து நின்றாள் செங்கமலம். என் எண்ணத்தை யாரிட மும் சொல்லாமல் மறைத்து வைத்தது விபரீதமாகி விட்டது! அம்மாவிடம் விவரம் எதுவும் கேட்க முடியவில்லை. அதற்குள் அண்ணா அங்கு வந்துவிட்டார். அவர் என்னைவிடப் பத்து வயது பெரி யவர். எனக்கு அவரிடம் மதிப்பும் மரியாதையும் அதிகம்; நிமிர்ந்து நின்று பேசவே தைரியம் கிடையாது!

''சுந்தரம், அம்மா சொன்னாளா? மத்தி யானம் தயாராயிரு'' என்றார் அண்ணா.

எனக்கு என்ன சொல்வதென்றே தெரியவில்லை. அவரிடம் எந்த விஷயத் தையும் பேசி அறியாத நான் என் இதய தாபத்தை எப்படி வெளியிடுவேன்!




என் தயக்கத்தையும் குழப்பத்தையும் புரிந்து கொண்டவர் போல ''சுந்தரம், கவலைப் படாதே. பெண்ணைப் பார்த்து உனக்குப் பிடித் தால் சொல்லு. மேலே தொடரலாம். இதில் உனக்குப் பூரண உரிமை உண்டு. நான் அவர்க ளுக்கு எதுவும் வாக்குக் கொடுத்து விடவில்லை'' என்று சொல்லி விட்டுப் போய் விட்டார் அண்ணா.

மனத்தில் விவரிக்க முடியாத வருத்தம் தோன்றி என்னை அலைக் கழித்தது. செங்கம லத்தை நான் மறந்து விட வேண்டியதுதானா? நான் வாய் விட்டு என் காதலை அவளிடம் தெரி விக்கவில்லையென்றாலும் என் மன அரங்கில் அவள் தானே சதா நடனமாடிக் கொண் டிருக்கிறாள்!

பகல் ஒரு மணிக் கெல்லாம் அம்மா, மன்னி, என் தங்கை பத்மா, அண்ணா எல் லோருடனும் நான் பெண் பார்க்கப் புறப் பட்டேன்.

எங்கள் கார் ஒரு பெரிய பங்களாவுக்கு

முன்பு நின்றது. ஒரு பெரிய மனிதரும் இன்னும் சிலரும் எங்களை வரவேற்றார்கள். உள்ளே ஹாலில் ரத்தினக் கம்பளம் விரிக்கப்பட்டிருந்தது. எல்லோரும் போய் உட்கார்ந்தோம். அம்மா, மன்னி முதலானவர்கள் ஒரு புறமாக அமர்ந்தார்கள். என் மனம் பட்ட பாட்டை வெளியில் எடுத்துச் சொல்ல முடியவில்லை. சிற்றுண்டி காப்பி வந்தன. நானும் வேண்டா வெறுப்போடு சாப்பிட்டேன். பிறகு சர்வாலங்கார பூஷிதையாய்ப் பெண் வந்து எங்களுக்கெல்லாம் நமஸ்காரம் பண்ணினாள். நான் அவளை ஏறிட்டுப் பார்க்கவில்லை.



"பெண் நன்றாய் வீணை வாசிப்பாள். கொஞ்ச நேரம் கேட்கலாமா?" என்றார் பெண் வீட்டைச் சேர்ந்த பெரிய மனிதர்.

அடுத்த நிமிஷம் வீணையின் நாதம் எழுந்தது. அந்த நாதத்தோடு கம்பீரமாய் ஒரு பெண் குரல் எழுந்து அற்புதமாக இழைந்தது.

அந்த இனிமையான குரல் எனக்குப் பழக்கப்பட்ட மாதிரி ஒலித்தது. நிமிர்ந்து பார்த்தேன். ஹா! நான் கனவு காண்கிறேனா என்ன? என் எதிரே அமர்ந்து பாடுவது என் செங்கமலமல்லவா? தம்புச் செட்டித் தெருவில் குடியிருப்பதாக அல்லவா செங்கமலம் சொன்னாள்! இங்கே எப்படி அவள் வந்தாள்!

"சுந்தரம், போகலாமா? பெண் உனக்குப் பிடித்திருக்கிறதா? அவர்களுக்கு நம் அபிப்பிராயம் தெரிவிக்க வேண்டும்" என்றார் அண்ணா, தனியாக அழைத்துச் சென்று. என் முகத்தில் அசடு வழிந்திருக்க வேண்டும். உள்ளேயிருந்து எல்லோரும் என்னையே உற்றுப் பார்த்தார்கள். "....என்ன அண்ணா! உங்களுக்கெல்லாம் பிடித்திருந்தால் எனக்கும் பிடித்தமாதிரிதான்!" என்றேன்.

எல்லோரும் காரில் அமர்ந்தோம்.

"பயல் முகத்தில் முதலில் களையே காணோம். பெண்ணைப் பார்த்ததும் ஆள் அசந்து போய் விட்டான்! சுந்தரம், நீ பெரிய ஆள். இந்தப் பெண்ணைப் பார்த்துப் பேசிப் பழகியது எதையும் என்னிடம் ஒரு வார்த்தை கூடச் சொல்லவில்லையே. நல்ல வேளை. பெண்ணின் தகப்பனார் எங்கள் கம்பெனியில் அக்கௌண்டண்டாயிருக்கிறார். அவராக இந்தச் சமாசாரத்தை மேலதிகாரியாகிய என்னிடம் எப்படித் தெரிவிப்பார்? பெண்ணின் மாமா அட்வகேட் ரங்கசாமிதான் விஷயத்தை என்னிடம் சொல்லித் தம் வீட்டில் பெண் பார்க்க ஏற்பாடு செய்தார்!" என்றார் என் அண்ணா. இப்பொழுதுதான் எனக்கு எல்லாமே ஒருவாறு விளங்கலாயிற்று. இப்படியாகத்தானே என் காதல் கல்யாணம் ஒருவிதத் தடங்கலுமின்றி மங்களகரமாக நடந்து முடிந்தது.

எங்கள் காதல் வெற்றி பெறுவதற்குச் செங்கமலம்தான் முக்கிய காரணமாயிருந்திருக்கிறாள் என்பது எனக்கு நன்றாகத் தெரிந்திருந்தாலும் அவளால் அது எப்படிச் சாத்தியமாயிற்று என்பது விளங்காப் புதிராகவே யிருந்தது. ஒரு நாள் அவளே அதைக் கூறினாள்.

கல்யாணத்துக்குப் பிறகு செங்கமலம் பேசிய முதல் பேச்சை இப்பொழுது நினைத்தாலும் இன்பமாயிருக்கிறது.

"ஆண் மகனாகிய உங்களுக்கு நீங்கள் கொண்ட காதலைப் பேணி வளர்க்க வேண்டும் என்பது தெரியவில்லையே! இப்படி ஒரு சுத்த அசடாயிருப்பீர்கள் என்று நான் கொஞ்சம் கூட எதிர்பார்க்கவில்லை. உங்கள் மனம் என்னிடம் லயித்து விட்டது என்பதை என்னைக் கண்டால் அசடு வழியும் உங்கள் முகம் நன்றாய்க் காட்டிக் கொடுத்துவிட்டது. நான் என் எண்ணத்தை வெளிப்படையாகத் தெரிவிக்கக் கூச்சப்பட்டுக் கொண்டு என் விவாகத்தை நிர்ணயிக்கும் பூரண உரிமையை என் தந்தை எனக்கு வழங்கியிருப்பதாகச் சொன்னேன். உங்களுக்கு என்னவோ, என் உள்ளத்தையோ புரிந்துகொள்ளத் தெரியவில்லை. காதலித்துவிட்டு மௌனமாக இடித்த புளி மாதிரி உட்கார்ந்திருந்தால் காதல் தானாக நிறைவேறி விடுமா?" என்று கேட்டுச் செங்கமலம் பார்த்த பார்வை இன்னும் என் நினைவில் இருக்கிறது.

"செங்கமலம், நான் அண்ணாவை நிமிர்ந்து பார்த்துப் பேசக்கூடத் தைரியம் இல்லாதவன். உன்னிடம் என் மனத்தைத் திறந்து காட்டிவிட்டுப் பிறகு தோல்வியடைய நேர்ந்தால் உன் மென்மையான மனம் நோகுமே என்ற ஒரே காரணத்தினால் தான் நான் மௌனமாக இருந்துவிட்டேன். அது சரி. இவ்வளவு தூரம் முயற்சி செய்து நீ எப்படி நம் விவாகம் நடக்கும்படி ஏற்பாடு செய்தாய்?" என்று கேட்டேன். செங்கமலம் சொன்னபிறகு தான் எங்கள் கலியாண விஷயமாக அவள் எவ்வளவு சிரமம் எடுத்துக்கொண்டாள் என்பது தெரியவந்தது. அத்துடன் என் அண்ணாவின் முயற்சி எவ்வளவு இருந்திருக்கிறது என்பதும் தெரிய வந்தது.

செங்கமலம் என்னைச் சந்தித்ததைப் பற்றித் தன் தகப்பனாரிடம் நாசுக்காகத் தெரிவித்திருக்கிறாள். தாம் வேலை பார்க்கும் கம்பெனியின் மானேஜிங் டைரக்டரான என் அண்ணாவிடம் இது பற்றிப் பேசத் தயங்கி, அவள் தகப்பனார் செங்கமலத்தின் மாமா அட்வகேட் ரங்கசாமியின் உதவியை நாடினாராம். அவர் அண்ணாவிடம் நெருங்கிப் பழகியவராதலால் விஷயத்தைத் தெளிவாக எடுத்துச் சொன்னாராம். இந்தச் சந்தர்ப்பத்தில் தான் அந்த அதிசயம் நிகழ்ந்திருக்கிறது. நானும் செங்கமலமும் சந்தித்துப் பேசுவதை என் அண்ணா எங்களுக்குத் தெரியாமல் கவனித்து வந்திருக்கிறார். என் அண்ணாவே செங்கமலத்தின் வீட்டுக்குப் போய் விட்டாராம். தம்புச் செட்டித் தெருவில் அவர்கள் குடியிருந்த இடம் சின்னப் போர்ஷனாதலால் மாம்பலத்தில் இருக்கும் செங்கமலத்தினுடைய மாமாவின் பங்களாவில் பெண் பார்க்கும் படலத்தை ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.

"அண்ணாவுக்குப் பயந்து கொண்டு பெண் யாரென்றுகூடத் தெரியாமல் 'பெண் பார்க்க' ஜம்மென்று டிரஸ் செய்து கொண்டு புறப்பட்டுவிட்டீர்களே! என் மீது துளியாவது அன்பு இருந்தால் அப்படிப் போகும் எண்ணம் உங்களுக்கு ஏற்பட்டிருக்குமா? உங்களைப் போன்ற ஆண்மகனை ஒரு பேதைப் பெண் நம்பினால் மோசம் போக வேண்டியதுதான்!" என்று செங்கமலம் என்னிடம் சண்டை போட்டாள்.

"செங்கமலம்! உன்னைப் போன்ற தைரியமுள்ள பெண்களுக்கு எதுவும் ஏற்பட்டு விடாது" என்று கூறி அவளை மடக்கி விட்ட பெருமையில் பூரித்தேன்.

"ஆகா! இந்த ஆண்களே இப்படித்தான்!" என்று முகத்தை நொடித்தாள். நான் அந்த நொடிப்பின் அழகில் மெய்ம் மறந்து நின்றேன்.

"செங்கமலம், சுந்தரம் பாவம்! அவனை விட்டுவிடு. அவனுக்குப் பதிலாக நான்தான் உன் வீட்டுக்கு வந்து உன் தகப்பனாரிடம் நானே பேச்சை ஆரம்பித்து உங்கள் இருவரையும் ஒன்று சேர்த்து வைக்க ஏற்பாடு செய்து விட்டேனே" என்று சொல்லிக் கொண்டே அண்ணா எங்கள் எதிரில் நின்றார். நாங்கள் இருவரும் திகைத்துப் போனோம்.

செங்கமலம் என் கையைக் கிள்ளி அவருக்கு நமஸ்காரம் செய்யும்படி தூண்டினாள். உடனே இருவரும் அவர் கால்களில் விழுந்து எழுந்தோம்.

அண்ணா ஆனந்த பரவசமடைந்து, "செங்கமலம், இப்பொழுது செய்தது போலவே சுந்தரத்தின் காரியம் யாவினும் கைகொடுத்து நீ அவனை நடத்திச் செல்ல வேண்டும். அவனுக்கு ஒன்றும் தெரியாது!" என்று கூறிவிட்டு நகர்ந்தார்.

"ஐயையோ! நம் பேச்சையெல்லாம் அண்ணா கேட்டுக் கொண்டே இருந்திருக்கிறார் போல் இருக்கிறதே!" என்று கூறிக் கைகளைப் பிசைந்தேன்.

செங்கமலம் தன் வெண் முத்துப் பற்கள் தெரிய முறுவலித்து, "இந்த ஆண்களே இப்படித்தான்!" என்று முகத்தை நொடித்தாள். நான் என்னையே மறந்து நின்றேன்.


அன்பர்களுக்கும் ஆதரவாளர்களுக்கும்
எமது மனமார்ந்த
தீபாவளி நல் வாழ்த்துக்கள்!
படிப் படியாக....
லக்ஷ்மி மில்ஸ்
பாப்பநாயக்கன்பாளையம்
கோயமுத்தூர்.
மானேஜிங் ஏஜண்டுகள்: G. குப்புஸ்வாமி நாயுடு அண்ட் கம்பெனி.

# அம்மா சமையல்!

— துமிலன் —

உமாவின் அழகான கண்களிலிருந்து கண்ணீர் சொட்டுச் சொட்டாகக் கீழே விழத் தொடங்கியது. பிறகு அது நீர்ஒழுகப் பெருக்கெடுத்தோடியது. கடைசியில் அது மழையருவி போல் விழுந்தது. அதற்குப் பிறகு அது......

உமா தன் கையில் வைத்திருந்த புத்தகத்தின் பக்கங்களை உற்று நோக்கிய வண்ணமிருந்தாள். கண்ணீர்த் திரை முன் 'குலாப்ஜாமுன்'கள் நடனமாடின; சீடைகள் துள்ளிக் குதித்தன. பூரிகள் தரை மீது ஊர்ந்து சென்றன; முறுக்குகள் பறக்கும் தட்டுப் போல் உயரே சுற்றத் தொடங்கின. அவள் தன் கையிலிருந்த புத்தகத்தை அப்பால் விசி எறிந்தாள்.

'நீயே சமைத்து நீ கூடச் சாப்பிட்டுப் பார்!' என்ற அந்த நளபாக சாஸ்திர புத்தகத்தின் ஆசிரியை குமாரி குந்தாமணி அப்பொழுது அங்கே இருந்திருந்தாளானால் அவள் உமா மீது மானநஷ்ட வழக்குத் தொடுத்திருப்பாள்; அல்லது கசங்கிப்போன புத்தகத்துக்குப் பதிலாக இன்னொரு புத்தகத்தை நூற்றுக்கு இருபத்தைந்து சதவிகிதம் தள்ளிக் கொடுத்து ரொக்கத்துக்கு விற்க முயன்றிருப்பாள்.

உமாவுக்குத் திருமணமாகித் தன் புருஷன் முத்துராமன் வீட்டுக்கு வந்து ஒரு வாரத்துக்கு மேலே ஆகி விட்டது. ஆனாலும் மாமியார் அமிர்தத்தின் ஆதிக்கத்துக்கு மட்டுமே உட்பட்டிருந்த கோட்டைக்குள் புகுவதற்கு அன்றுதான் அனுமதி கிடைத்தது. உமா முதன் முதலாக அந்த அடுப்பங்கரையில் சமைத்தாள். அன்று நூற்றுக்கு நூறு பங்கு அவளேதான் எல்லாம் செய்தாள். மாமியார்த் தெய்வம் தலையிடவே இல்லை. ஏன், சமையலறைப் பக்கம் காலடி கூட எடுத்து வைக்கவில்லை. அவளுக்குத் திடீரென்று கால்கள் சுளுக்கிக் கொண்டு விட்டிருந்தன.

உமா தனது படிப்பு, அறிவு, அனுபவம், கைத்திறமை எல்லாவற்றையும் முழுக்க முழுக்க உபயோகித்துச் சமையல் செய்தாள். முத்துராமன் சாப்பிட வந்து இலையில் உட்கார்ந்து கொண்டபோது அவன் தாயாரும் சிரமப்பட்டு நடந்து வந்து அவனுக்குச் சற்றுத் தூரத்தில் உட்கார்ந்து கொண்டாள். தன் பிள்ளை, நேற்று வந்த ஒரு பெண்ணின் சமையலை எப்படி அனுபவித்துச் சாப்பிடுகிறான் என்று உளவு அறிய விரும்பிய ஒரு ஸி. ஐ. டி. யைப் போல் அவள் உமாவுக்குக் காட்சியளித்தாள்.

பரிமாற வரும்போதும், பரிமாறும் போதும் உமா தன் கண்களை அனேகமாக மூடிக்கொண்டே இருந்தாள். முத்துராமன் தன் சமையலைச் சாப்பிடும்போது தப்பித் தவறி முகத்தைச் சுளித்துக் கொண்டால் அது தன் கண்ணில் படுவதை அவள் விரும்பவில்லை. ஆனால் அவளுடைய காதுகள் நிட்சண்யமாய் வேலை செய்து கொண்டிருந்தன, அவன் நாக்கைச் சப்பிட்டுக் கொண்டு சாப்பிடும் சத்தத்தைக் கேட்டு அனுபவிப்பதற்காகத்தான்.

முத்துராமன் சாப்பிட்டு முடித்தான். அவன் இலையில் என்னமோ ஒன்றையும் மீதி வைக்கவில்லை. ஆனால் அவனைக் கடைக் கண்ணால் கவனித்த உமாவுக்கு அவன் திருப்தியுடன் சாப்பிட்டதாகத் தோன்றவில்லை.

''சமையல் எப்படி?'' என்று அமிர்தம் தன் பிள்ளையை விசாரித்தாள்.

''சமையலா?'' என்று அவன் ஏகத்தாளக் குரலில் கேட்டபோது, அடுப்பங்கரையிலிருந்த உமாவின் கண்களில் நீர் துளித்து விட்டது.





''ஆமாண்டா!''

''அவள் முதன் முறையாக இங்கே சமைக்கிறாள் என்பதைக் கவனிக்கும் போது நன்றாக இருக்கிறது என்றே சொல்ல வேண்டும்'' என்று மிகவும் மட்டமான ஒரு நடனத்தைப் பற்றி நடனமாடிய பெண்ணுக்கு வேண்டிய விமர்சகர் எழுதும் பாணியில் முத்து ராமன் பதிலளித்து வைத்தான்.

உமா தனக்கு வந்த அழுகையைச் சிரமப்பட்டு அடக்கிக் கொண்டாள்.

அமிர்தம்மாள் என்னவோ தன் நாட்டுப் பெண்ணின் சமையலை மிகவும் ரசித்து அனுபவித்துச் சாப்பிட்டாள். ''இன்னும் போடுகிறாயா? இன்னும் கொஞ்சம் போடுகிறாயா?'' என்று கேட்டுக் கேட்டுப் போட்டுக் கொண்டு சாப்பிட்டாள்.

''இத்தனை வருஷமாக இன்றைக்குத் தான் சாப்பிட்டது போலிருக்கிறது'' என்று கூறி ஏப்பம் விட்டாள்.

''நீங்கள், நான் திருப்திப்படுவதற்காகச் சொல்கிறீர்கள், அம்மா! என்னமோ சமைத்தேன்; எனக்கென்ன தெரியும்!'' என்றாள் உமா.

''இல்லே, குழந்தை! நிஜமாகவே சொல்கிறேன். எல்லாம் தேவாமிர்தமாயிருக்கிறது'' என்றாள் அமிர்தம்.

ஆனால், உமா இதை நம்பவே யில்லை. தன் பிள்ளை மனத்தில் சமையலைப் பற்றி நல்ல அபிப்பிராயம் ஏற்படவில்லை என்ற மட்டற்ற மகிழ்ச்சியால், போனால் போகிறது என்று மாமியார் தன்னைப் புகழ்ந்து வைக்கிறாள் என்று உமா எண்ணினாள்.

அன்று அவள் தனியாயிருந்தபோது இதைப் பற்றி யெல்லாம் எண்ணித்தான் கண்ணீர் வடித்துத் தன் கோபத்தைக் குமாரி ருக்மாமணியின் புத்தகத்தின் மீது செலுத்தியது.

உமா ஒரு பட்டதாரி. கல்லூரியில் 'ஹோம் ஸையன்ஸ்' விசேஷப் பாடமாக எடுத்துக்கொண்டு முதல் வகுப்பில் தேறியிருந்தாள். அவளது பேராசிரியை அவள் வகுப்பில் பரீட்சார்த்தமாகச் செய்யும் பட்சணங்களைத் தைரியமாகவே தின்று அனுபவிப்பாள். பிறகு உமா தன் வீட்டிலும் அடிக்கடி சமைத்து வந்திருக்கிறாள். சமையல் செய்வதையும் ஒரு கலையாகப் பயின்று வந்தாள். அவளுடைய பெற்றோர்களை யன்றி வீட்டுக்கு வரும் விருந்தினர்களும் அக்கம்பக்கத்து வீட்டுக்காரர்களும்கூட அவள் சமையலைப் பற்றிப் பிரமாதமாகக் கூறி வந்தார்கள்.

ஓரோரு சமயம் கல்யாண விளம்பரங்களைப் பார்க்கும் போது அவளுக்குச் சிரிப்பாக வரும், மனமும் வேதனைப்படும். ''வேலைக்காரியாயும், சமையற்காரியாயும் இருக்கக்கூடிய ஒரு பட்டதாரிப் பெண் தேவை'' என்று பச்சையாகவே விளம்பரம் செய்தால் என்ன என்று நினைப்பாள்.

முத்துராமனும் அவன் தாயாரும் தன்னைப் பெண் பார்க்க வந்தபோது, அவள் பாட்டுக்கள் பாடினாள். சிறிது நடனம்கூட ஆடிக் காட்டினாள். அவர்கள் சமைத்துப் போடச் சொல்லிப் பரீட்சை பார்ப்பதாயிருந்தால், அதற்கும் அவள் தயாரா யிருந்தாள். ஆனால், அமிர்தம் அவ்வளவு தூரத்துக்குப் போகவில்லை.

இப்படிப்பட்ட தான் செய்யும் சமையலைத் தன் கணவன் அனுபவித்துச் சாப்பிடவில்லை என்பதை நினைத்துப் பார்க்கவே அவளுக்குச் சகிக்க முடியாமலிருந்தது. ஆனால், அதே சமயத்தில் அவன் திருப்திப்படும்படியான முறையில் சமைத்துப் போட்டு விட்டுத்தான் மறு காரியம் பார்ப்பது எனத் தீர்மானித்தாள்.

அவள் மிகவும் கவனத்துடனும், சிரத்தையுடனும், விதம் விதமாகச் சமைத்துப் போட்டாள். ஆனால், முத்துராமன் ஓர் இயந்திரம் போல் உணவை விழுங்கி வந்தானேயன்றி ரசித்துச் சாப்பிடவில்லை என்பது அவளுக்குத் தெரியாமலில்லை. மாமியார் மட்டும் நாக்கைச் சப்பிட்டுக் கொண்டு சாப்பிட்டு வந்தாள்.

முத்துராமன் உமாமீது தன் உயிரையே வைத்திருந்தான். அவளது சர்வ சாதாரணக் காரியங்களை யெல்லாங்கூட அளவுக்கு மீறிப் புகழ்வான். ஆனால் அவளது சமையல் மட்டும் இதற்கு விதிவிலக்கு.

ஒருநாள் அவன் உமாவுடன் கொஞ்சிப் பேசிக் கொண்டிருந்த போது அவள், ''என் சமையல் எப்படியிருக்கிறது?'' என்று கேட்டாள்.

''நன்றாயிருக்கிறது!'' என்று முத்துராமன் அந்தச் சமயத்தில் கூட அரைத் திருப்தி தோன்றத்தான் கூறிவைத்தான்.

''நிஜமாகவா?''

''நன்றாகத்தானிருக்கிறது..ஆனால்..?''

''உம்!''

மனிதன் தோன்றிய காலத்திலிருந்து கணவன் என்பவன் சொல்லி வரும் அந்தப் புகழ் பெற்ற வாக்கியம் அவன் வாயினின்றும் கிளம்பியது.

''அம்மா சமையல் மாதிரி இல்லே.''

இதைக் கேட்டபோது உமாவின் மனம் திடுக்குற்றது. ஆனால் அவள் சட்டென்று சமாளித்துக் கொண்டு சிரித்தாள். ''நன்றாய்ச் சொன்னீர்கள். அதெப்படி நான் அம்மா மாதிரி சமைக்க முடியும்? அவர் அனுபவம் என்ன, காரியம் என்ன? இன்னும்....'' என்று இழுத்தாள்.

''போகப் போக வந்து விடும். ஆனால், நீ எப்படிச் சமைத்தாலும், அது எனக்குத் தேவாமிர்தந்தான்'' என்று முத்துராமன் தன்னையும் மீறிக் கூறினான்.

தன் கணவன் இப்படிக் கூறியதற்காக உமா மனம் வருந்தவில்லை. ஒரு ஸ்திரீயாயிருந்தாலும் அவள் ஒழுங்கான முறையில் தர்க்க ரீதியில் விஷயங்களைப் பற்றி எண்ணக்கூடிய மனப்பான்மை யுள்ளவள்.



அவள் நிதானமாக ஒழிந்த வேளைகளில் சிந்தித்துப் பார்க்கலானாள். சமையல் என்பது பெரிய பிரம்ம வித்தை அல்ல. குறிப்பிட்ட கறிகாய்களையும், சாமான்களையும் குறிப்பிட்ட அளவு உபயோகித்து, குறிப்பிட்ட அளவு வேக வைத்துப் பக்குவமாக்குவது தான் அதன் அடிப்படை இரகசியம். ஒரோரு சமயம் உப்போ, காரமோ அதிகமாகவோ குறைந்தோ போய் விட்டால் சமையலை 'ஒக்கப் பண்ணி விடுவது பெரிய காரியமல்லவே' என்று எண்ணினாள்.

சமையலுக்கு வேண்டியசாமான்களைத் திட்டமாக எடுத்துக் கொள்ள உமாவுக்குத் தெரியும். எடை போட்டு எடுத்துக் கொள்வது போல் அவ்வளவு அளவாக எடுப்பாள். கொதிக்கும் பக்குவம், வேகும் பக்குவம் எல்லாம் அவளுக்கு அற்றுபடி. இன்ன கறிகாய், இன்ன பட்சணம் இத்தனை டிகிரி உஷ்ணத்தில் வேகவைத்து எடுக்க வேண்டும் என்று தண்ணீர் அல்லது, எண்ணெய் கொதிப்பதைப் பார்த்தே தெரிந்து கொண்டு விடுவாள்.

உமா, அடுப்பங்கரையைக் கண்ணாடி என்றால் கண்ணாடி மாதிரி வைத்துக் கொண்டிருந்தாள். அவள் மாமியார் உபயோகித்ததை விட அதிகமான கரண்டிகள், ஸ்பூன்கள், தட்டுக்களை அவள் உபயோகித்தாள். அடுப்பிலிருந்து பாத்திரங்களை இறக்கக் கூட அவள் சுத்தமான துணியை உபயோகித்தாள். அவள் இடுப்பில் எப்போதும் ஒரு கைக்குட்டை தொங்கிக் கொண்டிருக்கும். ஒவ்வொரு சமயம் அவள் மாமியார் சமையலறைப் பக்கம் வந்து அவள் சமைப்பதைப் பார்த்து விட்டுப் போவது வழக்கம். அந்தப் பெரியம்மாளுக்கு உமா செய்வதெல்லாம் மிகவும் வேடிக்கையாக இருந்தது.

நாட்கள் ஓடிக்கொண்டே யிருந்தன. உமா என்னதான் சிரமப்பட்டு நன்றாகச் சமைத்தாலும் அது அவளது கணவனது லட்சியச் சாப்பாடான, 'அம்மா சமையல்' போன்று அமையவில்லை. முன்பு உமாவுக்குத் தன் புக்ககத்தில் எந்தவிதமான குறைகளும் கிடையாது கணவனேயன்றி மாமியார் கூடத்தான் அவளைத் 'தலைமீது தூக்கி வைத்து'க் கொண்டிருந்தாள் இப்போது.

அவளுக்குத் தன் சமையலைப் பற்றி இளப்பமான அபிப்பிராயம் ஏற்பட்டு அது முற்றிக் கொண்டே வந்தது. தனக்குச் சமைக்கவே தெரியாதோ என்றுகூட ஒவ்வொரு சமயம் அவளுக்கே சந்தேகம் வந்துவிடும். அவளுக்கு இதே மனோவியாதியாய்ப் போய் ஒரு சமயம் சுரமாகப் படுத்து விட்டாள்.

அப்போது அவள் எண்ணலானாள்: 'முன் காலத்தில் பிள்ளைகளுக்குப் பதினைந்து பதினாறு வயதாகும் போதே கல்யாணமாகி விடும். மனைவியும் சீக்கிரமே வீட்டுக்கு வந்து சமைக்கத் தொடங்கி விடுவாள். ஆகவே, தன் கணவன் அவனது தாயாரின் சமையலை விவரமறிந்து சுமார் பத்துப் பன்னிரண்டு வருட காலமே சாப்பிட்டு வந்திருப்பான். அந்தக் குறுகிய காலத்தில் ஏற்பட்ட ருசியை வைத்துக் கொண்டே அவன் 'அம்மா சமையல்!' என்று சொல்லத் தொடங்கி விட்டான். இப்போது 'பையன்'களுக்கு முப்பது முப்பத்தைந்து வயதில் தான் கல்யாணமாகிறது. சுமார் காலே வீசம் நூற்றாண்டு காலம் தாயாரின் சமையலை மட்டுமே சாப்பிட்டு வந்தவனுக்கு அவள் வளர்த்து விட்ட நாக்கைக் கொண்டு தானே இப்போது மற்றவர்களின் சமையலை மதிப்பிட முடியும்?'

அப்படியானால் அந்த 'அம்மா சமையலை' எப்படிச் சமைப்பது என்பதைப் பற்றிச் சிந்தித்துப் பார்த்தாள். சமையலுக்காக ஏதாவது அதிதேவதை இருக்கிறதா என்று நினைவுபடுத்திக் கொண்டு பார்த்தாள். நளனைத் தவிர வேறு யாரைப் பற்றியும் அவளுக்கு ஞாபகம் வரவில்லை. பிறகு மேலும் சிந்தித்துப் பார்த்து ஒரு முடிவுக்கு வந்தாள்.

அப்போது இரவு மணி எட்டு இருக்கும். அமிர்தம் சமையலில் மும்முரமாக ஈடுபட்டிருந்தாள். உமா சுரமாகப் படுத்ததில் மிகவும் கவலைப்பட்டுக் கொண்டிருந்தாள். அவள் நடுவில் அகஸ்மாத்தாக அறை வாசற் பக்கம் திரும்பிப் பார்த்த போது உடல் நடுங்கினாள்.

இரண்டு கண்கள் தன்னையே கவனித்துக் கொண்டிருப்பதைக் கண்டாள் அமிர்தம். அந்தக் கண்கள் திடீரென்று மறைந்தன. அமிர்தத்துக்கு வாயை விட்டுக் கத்த வேண்டும் போலிருந்தது. ஆனால், அப்படிச் செய்யாமல் சமாளித்துக் கொண்டு அறையினின்றும் வெளியே வந்தாள்.

ஹாலின் கோடியில் யாரோ வேகமாகச் சென்று கொண்டிருப்பது அவள் கண்ணில் பட்டது. அவளுக்கு ஒரு சந்தேகம் தோன்றவே உமா படுத்திருந்த அறைக்குச் சென்றாள்.

உமா தன் மீதிருந்த போர்வையை நன்றாக இழுத்துப் போர்த்திக் கொண்டிருந்தாள்.

''உமா! உடம்பு எப்படி யிருக்கிறது?'' என்று அவளை விசாரித்துக் கொண்டே அவள் மார்பில் கையை வைத்துப் பார்த்தாள். அது படபடவென்று வேகமாக அடித்துக் கொண்டிருந்தது.

''எனக்கு ஒன்றுமே இல்லை. நான் சமையல் உள்ளுப் பக்கம் வரவே யில்லை'' என்று உமா உளறினாள்.

அமிர்தத்துக்கு ஏற்பட்டிருந்த சந்தேகம் இப்போது தீர்ந்து போயிற்று. உமாவுக்கு ஜன்னி கண்டு விட்டிருக்கிறது. அதனால் தான் எழுந்திருந்து வந்து விட்டு ஓடி யிருக்கிறாள்; உளறுகிறாள். பயந்து போய் விட்டாள். உடனே அடுத்த வீட்டுக்கு ஓடிச் சென்று வைத்தியரைத் தருவிக்க ஏற்பாடு செய்து விட்டு வந்தாள்.

அதற்குள் முத்துராமனும் வந்து விட்டான். வைத்தியர் அவளைப் பரிசோதித்துப் பார்த்தார். அப்போது சுரம் கூடத் திடீரென்று விட்டிருந்தது. அவளுக்கு ஒன்றுமே இல்லை என்று கூறி ஏதோ பேருக்குத் தூக்க மருந்து ஒன்றை எழுதிக் கொடுத்து விட்டுப் போய் விட்டார்.

மறுநாள் உமா முற்றிலும் குணம் அடைந்து விட்டாள்.



ஆனால் அவள் மாமியார் அவளைச் சில தினங்கள் வரை சமைக்க விடவில்லை. உமா பிடிவாதமாக அவள் கூடவே இருந்து சில்லறைக் காரியங்களை யெல்லாம் செய்து வந்தாள்.

பிறகு ஒரு நாள் அமிர்தம் நாட்டுப் பெண்ணுக்குச் சமைக்க அனுமதி அளித்தாள். அன்று முத்துராமன் நன்றாகச் சாப்பிட்டான். அவன் தாயார் அவனைச் சந்தேகக் கண்களுடன் பார்த்தாள். உமாவைத் திருப்தி செய்வதற்காக அப்படி வேஷம் போடுகிறானோ என்ற எண்ணம் அவளுக்கு. எப்படியாவது உமா திருப்தியடைந்தால் போதும் என்று அவள் இருந்தாள்.

முத்துராமன் அவள் மனத்திலிருந்ததை ஊகித்தவன் போல், "என்ன அம்மா நான் சொல்கிறதை நீ நம்பவில்லை போல் இருக்கிறது. நிஜமாகவே உன் சமையலை விட உமா சமையல் நன்றாயிருக்கிறது" என்று பெருமையுடன் கூறினான்.

"நீ அப்படிச் சொல்ல வேண்டும் என்றுதான் நான் பகவானை வேண்டிக் கொண்டு வருகிறேன்" என்று அமிர்தம் கூறி ஆனந்தக் கண்ணீர் வடித்தாள்.

உமா முகத்திலும் ஆனந்தம் தாண்டவமாடியது. ஆனால் சிறிது சோகமும் கலந்திருந்தது. தினமும் இப்படிச் சமைக்க வேண்டுமே என்று அவள் கவலைப்படுகிறாள் போலிருக்கிறது என்று அவள் கணவன் எண்ணினான்.

அன்று எதிர்பாராத ஒன்று நடந்தது.

அமிர்தம்மாள் சரியாகவே சாப்பிடவில்லை!

ஏன்? தன் புதுமாதிரிச் சமையலைத் தன் கணவன் அபாரமாகப் புகழ்ந்து கூறியதாலிருக்குமோ என்று உமா சந்தேகப்பட்டாள். ஆனால், தன் மாமியாரைப் பற்றி அப்படி எண்ணக் கூடாது என்று உமா தன்னை நிந்தித்துக் கொண்டாள்.

அடுத்த நாள் உமாவின் சமையல் தான். அன்று முத்துராமன் விலாப் புடைக்க உண்டான். அமிர்தம்மாள் அரை வயிற்றுக்குத்தான் சாப்பிட்டாள்.

அதற்கடுத்த நாளும் உமாதான்சமைத்தாள். சாப்பிட்ட பிறகு முத்துராமன் எழுந்திருக்க முடியாமல் திண்டாடினான். அவன் தாயார் அன்று முக்கால் பட்டினி.

அம்மா சரியாகச் சாப்பிடாததைப் பற்றி உமா தன் கணவனிடம் கூறி வருத்தப்பட்டாள். அதைக் கேட்டு அவன், தான் தன் மனைவியின் சமையல் அவளுடையதை விட நன்றாயிருக்கிறது என்று அவ்வளவு பச்சையாகப் புகழ்ந்திருக்கக் கூடாதோ என்று நினைத்தான். ஒருவேளை உடம்பு சரியில்லா திருக்கலாமென்றும், இப்படியே சாப்பிட்டுவந்தால் வைத்தியரைக் கூப்பிட்டுக் காண்பித்தாக வேண்டும் என்றும் அவர்கள் முடிவு செய்தார்கள்.

அன்று உமா சமைத்துக் கொண்டிருந்த போது முத்துராமன் பொழுது போகாமல் அவள் புத்தகங்களை எடுத்துப் பார்த்துக் கொண்டிருந்தான். சமையல் சம்பந்தமான புத்தகம் ஒன்றைப் புரட்டிப் பார்த்த போது கடைசியில் பிழைத் திருத்த ஜாபிதாவுக்குப் பக்கத்தில் 'அம்மா சமையல்!' என்று தலைப்பிட்டுக் கீழே பென்சிலால் உமா எழுதி இருந்தாள்.

1. கரி அடுப்பையோ, விறகு வைத்து எரிக்கும் அடுப்பையோ விசிறும் போது



" இந்தாங்க, இந்த ஒரு பொரிவிளங்காய் உருண்டையையாவது சாப்பிட்டுத் தான் ஆகணும் !"

(இதைச் சாப்பிட்ட மாப்பிள்ளை. அது ஜீரணமாவதற்குச் செய்த முயற்சிகளைத் தான் 230வது பக்கத்தில் பார்த்தீர்கள் )

அடுப்பின் மீதுள்ள பாத்திரத்தில் கூடிய வரை ஒரு தட்டையோ வேறு எதையோ போட்டு மூடாதிருப்பது நல்லது.

2. எதுவும் நன்றாகக் கொதித்துத் தான் ஆகவேண்டுமென்பதில்லை. கொதி வந்ததும் இறக்கி விடலாம்.

3. கரண்டிகள், ஸ்பூன்கள் அதிகம் தேவை இல்லை. ஒரு கரண்டியை வைத்துக் கொண்டே குழம்பு, ரசம், மோர்க் குழம்பு, கூட்டு எல்லாவற்றையும் பரிமாறலாம்.

4. கடவுள் கொடுத்த கை இருக்கும் போது அதை உபயோகப்படுத்தாதிருப்பது மகா பாபமாகும். ஆகவே முடிந்த வரை கையாலேயே எதையும் எடுத்தும், வழித்தும் போட வேண்டும். எதையும் கலக்குவதற்குக் கையைப் போன்ற மத்து வேறு எதுவுமில்லை. கை விரல்கள் அதற்கென்றேதான் சிருஷ்டிக்கப் பட்டன.

முத்துராமன் மேலும் படிக்க விரும்பவில்லை. அவன் நேரே உமாவைத் தேடி வந்தான்.

அப்போது உமாவும், அவள் மாமியாரும் பேசிக் கொண்டிருந்தார்கள்.

" அடி, பைத்தியமே! அதற்காகவா உன்னை இப்படிக் கஷ்டப் படுத்திக் கொண்டாய்? என்னைக் கேட்டால் நான் அந்த ரகசியத்தைச் சொல்லிக் கொடுத்திருக்க மாட்டேனா? அன்று நான் எப்படிச் சமைக்கிறேனென்று ஒளிந்து கொண்டு நீ பார்த்தபோது நான் பயந்தே போய் விட்டேன். உன் மாமனாரும் இவனைப் போல்தான் 'அம்மா சமையல் மாதிரி இல்லை' என்று சொல்லிக் கொண்டு வந்தார். நான் இந்த இரகசியத்தைத் தெரிந்து கொள்ள ஒரு வருஷமாயிற்று. என் மாமியாரை அதைப் பற்றிக் கேட்ட போது அவர், 'நான் என்ன அம்மா செய்கிறது? உன் மாமனார் நான் சமைக்கிறது தன் அம்மா சமையல் மாதிரி இல்லை' என்றார்....." என்று சொல்லிக்கொண்டே போனாள்.

"அப்படியானால் இந்தச் சமையல் முறை பரம்பரை பரம்பரையாக வந்திருக்கிறதென்று சொல்லுங்கள்" என்று கேட்டாள் உமா.

"ஆமாம், அந்தக் காலத்தில் ஓலை, மூங்கில், கண்ட காட்டு விறகு எல்லாவற்றையும்வைத்துச்சமைப்பார்கள். அதுவாகவே நன்றாகப் புகையும். அது போதாதென்று அடுப்பை ஊதிக் குழம்பிலும், ரசத்திலும் புகை கமழப் பண்ணி விடுவார்கள். அப்போதெல்லாம் இரும்புக் கரண்டிதான். அதுவும் மொட்டையாக இருக்கும். வெண்கலக் கரண்டி எல்லாமே நன்றாய் இராது. சிலவற்றை உபயோகித்தால் சாமான் கசிப் போகும். அதற்காக அனேகமாகக் கையாலேயே எல்லாவற்றையும் செய்வார்கள்...."

இதைக் கேட்டபோது உமா நடுங்கிப் போய் விட்டாள்.

"இப்படிக் காமா சோமா என்று சமைப்பதில் எல்லாவற்றிற்கும் ஒரு தனி வாசனை ஏற்பட்டு விடுகிறது. நாளடைவில், ஆக அந்த வாசனை முற்றுகிறது. ..."

"வாசனையா?"

"ஊ....ச....ல்....தான்..."

"அதை முழுக்கச் சொல்லாதேயுங்கள். எனக்கு என்னமோ பண்ணுகிறது" என்றாள் உமா.

"அப்படியெல்லாம் சாப்பிட்டு விட்டு 'அம்மா சமையல்' என்று இதுகள் பெருமையாகச் சொல்கிறது. அந்தக் கௌரவமாவது இருக்கட்டும் என்று நாங்களும் கம்மென்று இருந்து வருகிறோம். இந்தக் கதை எல்லாம் எதற்கு? நான் காசிப் பக்கம் போயிட்டு வரலாமென்றிருக்கிறேன்!" என்றாள் அமிர்தம்.

"ஏன், அம்மா! என் மீது கோபமா?" என்று உமா தொண்டை யடைக்கக் கேட்டாள்.

"இல்லை. ஆனால், இனிமேல் என்னை விட நன்றாகச் சமைத்துப்போட்டுப் புருஷனிடம் நல்ல பேர் வாங்குவாய். நான் அதற்குத் தடையா யிருப்பானேன்? எனக்கு இந்தச் சாப்பாடு பிடிக்கவில்லை. நீயோ, முதலில் சமைத்தது போல் உன்னிஷ்டப்படி சுத்தமாக நன்றாகச் சமைக்கப் போவதில்லை. என்னுடன் போட்டியிட்டுக் கொண்டு என் மாதிரியே சமைக்க ஆரம்பித்து விட்டாய். ஆகையால்தான் காசிக்கு...."

"உங்களை யார் போக விடப் போகிறார்கள்?" என்று உமா தன் மாமியாரின் கையை வேடிக்கையாகப் பிடித்துக் கொண்டாள்.

அப்போது ஒரு கனைப்புச் சத்தம் கேட்டது. மாமியாரும் மருமகளும் திரும்பிப் பார்த்தனர். முத்துராமன் பற்களைக் கடித்துக் கொண்டு உள்ளே நுழைந்தான். தாங்கள் இருவரும் பேசிக் கொண்டிருந்ததை யெல்லாம் அவன் கேட்டுக் கொண்டிருந்திருக்கிறான் என்று அவர்கள் இருவருக்கும் தெரிந்தது.

அவன் நேரே உமாவினிடம் வந்து அவள் காதுகள் இரண்டையும் பிடித்துக் கொண்டான்.

"நீ வந்த புதிதில் சமைத்தது போல் சமைத்து அம்மா காசிக்குப் போக விடாமல் செய்யப் போகிறாயா இல்லையா?" என்று கேட்டு வேடிக்கையாகத் திருகினான் முத்துராமன்.

"அப்படிச் சொல்லு! இன்னும் நன்றாகத் திருகு" என்று அமிர்தம்மாள் சிரித்துக் கொண்டே கூறிவிட்டு அப்பால் போய்விட்டாள்.


ஆனந்தமான
தீபாவளிக்கும்
செழிப்பான
புது
வருஷத்திற்கும்
வாழ்த்துக்
கூறுகிறோம்
நீங்கள் பணம்
மிச்சம் பிடித்து சம்பா
திக்க எங்களுடைய
ஸேவிங்ஸ் ஸ்கீம்
உங்களுக்கு உதவி
செய்யும்
ஸேவிங்க்ஸ் அக்கவுண்ட்-
வட்டி 3 சத விகிதம்
பிக்ஸ்ட் டிப்பாஸிட்-வட்டி
4 முதல் 5 சத விகிதம்
சிறுவர்களின் ஸேவிங்ஸ்
திட்டத்திற்கு-வட்டி
3 சத விகிதம்
மேலும் எங்கள் சன்மான
செக்குகளும், வெள்ளிக்கட்டி
களுக்கும் உங்கள் சன்மான
பிரசினங்களை சரிசெய்யும்.
தேனா பாங்க்
தேவ்கரன் நான்ஜி பேங்கிங் கம். லிமிடெட்
தேவ்கரன் நான்ஜி பில்டிங், 17 ஹார்னிமன்
சர்கிள், பம்பாய்-1
ப்ராவின் சந்ர வி. காந்தி, மானேஜிங் டைரக்டர்.
DB/ST/48



# சொல்லாமலே செய்வர்...

பற்றித் தொடரும் இருவினை புண்ணிய பாவமுமே என்ற முதுமொழிக்கு ஓர் எடுத்துக்காட்டு யுதிஷ்டிரனின் விருத்தாந்தம். தமது புண்ணியங்களுக்குற்ற பலனாக ஸ்வர்க்கலாபம் பெறச்செல்லும் வழியில் நரகத்தைக் காணும் கஷ்டமும் தான் செய்த பாவத்தைத் துடைப்பதற்காக யுதிஷ்டிரனுக்கு ஏற்பட்டதாம்.

மனத்தாலும் பிறருக்கு இன்னலை நினைக்காதவர் யுதிஷ்டிரர். பிறர் கஷ்டத்தைக் கேட்டும் கண்டும் அவர் மனம் எப்படித் துடித்திருக்கு மென்பதை என்னவென்று வர்ணிப்பது?

எறத்தாழ அதையும் மிஞ்சிய மனவேதனை அடியேனுக்குத் தினசரி ஏற்படுகிறது. பிறத்தியாரின் கஷ்டங்களைப் பற்றியே கேட்டுக் கொண்டிருப்பதும், கண்ணயர்ந்த பிறகும் கனவிலும் இவ்விதக் காட்சிகளையே காண்பதுமாய்க் காலம் முழுதும் அனுபவிப்பது எத்தனை அனுதாபத்துக்குரிய வாழ்வு!

நோய்வாய்ப்பட்டவர் மருந்து சேவித்துக் குணம் பெறுவதில்லையா? உண்டு. அதில் ஓரளவு மனத்துக்குச் சாந்தி ஏற்படுவதும் உண்டு; ஆனால், அதைப் பலருக்கும் தெரிவித்து, மற்றும் பலரும் அவ்வித நோயிலிருந்து விடுதலை பெற வகை சமைக்கும் வாய்ப்பு இல்லாமல் போய்விடும் துக்கந்தான் அந்தக் குறுகிய சந்தோஷத்தின் முடிவு.

மாம்பலம் அல்லது சைதாப்பேட்டை வாசி. காலில் வீக்கம். "ஒரு மாசமாயிற்று இப்படி...." என்று சொல்லிக் கொண்டு வருகிறார் ஒருவர். "பெண்ணாய்ப் பிறந்ததாச்சே. இப்படி இருந்தால் நாளைக்கு...." என்று சொல்லிக்கொண்டே புடவைத் தலைப்பால் கண்ணைத் துடைத்துக் கொள்ளும் தாயார். பெண்ணுக்குக் கால் வீக்கம் மறைந்து விட்டது. ஜுரம் முதலானவை வருவதில்லை. 'அண்டை' கட்டுவதில்லை. உற்ற காலத்தில் கல்யாணமுமாகிப் புக்ககம் சென்றாயிற்று. ஒன்று மற்றொன்று என்று குழந்தைகளுமாயிற்று. இன்றளவு வரையில் எல்லாம் சுகம். பிறர் நலனுக்காக இப் பெண்ணின் நோய், அதற்குச் செய்த சிகிச்சை இவைகளை வெளியிட முடியுமா?





இது யுதிஷ்டிரன் பட்ட மனக் கஷ்டத்தையும் விடக் கஷ்டமானதல்லவா?

நம் அளவிலுள்ளவரிடையே இவ்விதமாயின் அரச குடும்பத்தைச் சேர்ந்த ஒருவருக்கு ஏற்பட்ட நோய், அதைக் குணப்படுத்திய விதம் இவற்றைப் பற்றி யாரிடமாவது சொல்லக் கூடுமா? அதிலும் "குணமாகாது" என்ற இனத்தைச் சேர்ந்த நோயானாலோ.... நோயாளியும் ஒரு மூதாட்டியா யிருப்பின்.....?

ஆம். கேரளத்தைச் சேர்ந்த அரச குடும்பங்கள் ஒன்றில் உதித்த ஒரு மாபெரும் மூதாட்டியார். வடமொழியில் பொதுவாகவும், வியாகர்ண (இலக்கணம்) நூலில் சிறப்பாகவும் மிகத் தேர்ச்சி பெற்றவரென்று எல்லோராலும் ஒருமனத்துடன் ஏற்றுப் போற்றப் பெற்றவர். வயது நாற்பத்தைந்து அல்லது அதற்குமேல் ஒன்றிரண்டிருக்கலாம். வாழ்நாளெல்லாம் போக போக்கியத்தில் கடத்தியவர். எள்ளு மூக்கத்தனையும் குறை வென்பதையே அறியாத வாழ்க்கை. போதாதா? உடல் பருமன். முதலில் இதைப் பொருட்படுத்தவில்லைதான். ஆனால் காலக்கிரமத்தில் இதைக் கவனித்தே தீரவேண்டிய நிலை ஏற்பட்டு விட்டது. சிகிச்சைகள் பல. பற்பல செய்தும்; பலனில்லை.

பட்டினி போட்டு உடற் பருமனைக் குறைக்க முயன்றால் பலஹீனம் அதிகரிக்கும்; பசியும் அதிகரிக்கும். சாப்பிடாமல் இருக்க முடியாது. கூர்க் தனலக்ஷ்மியா என்ன? சாப்பிட்டால் இன்னும் இன்னும் சாப்பிட வேண்டுமென்ற பசி. விளைவு பருமன் அதிபருமனாகி, பிறகு அது மிகப் பருமனாகி, மிகவதிப் பருமனாகிக் கடைசியில் குன்றெனப் பருத்தாயிற்று.

அந்தக் காலத்தில் ஊசி மருந்துகளே கிடையாது. அவற்றின் மூலம் சில சமயம் ஏற்படும் ஆபத்துக்களும் இருக்கவில்லை. யோசித்து யோசித்து டாக்டர் ஒரு முழ நீளம் மருந்துப் பட்டியலை எழுதுவார். கடைசியில் இவ்வளவு தண்ணீரைக் கூட்டி இவ்வளவு கலவையாகச் செய்து வேளைக்கு இவ்வளவாகத் தினம் இத்தனை தரம் ஆகாரத்துக்கு முன் அல்லது பிறகு கொடுக்க வேண்டும் என்று எழுதுவார். இப்போதெல்லாம் அப்படி வேண்டியதில்லையே!

அன்றைய டாக்டர்கள் செய்யக் கூடியவைகளைச் செய்து கடைசியில் "இதற்கு மேல் எங்களால் செய்யக் கூடியது ஒன்றுமில்லை" என்று ஒளிவு மறைவு இல்லாமல் சொல்லி விட்டனர்.

நாளுக்குநாள் மூதாட்டியாரின் உடற் பருமனும், அதைச் சேர்ந்த முன் சொன்ன உபாதைகளும் வளர்ந்து கொண்டு வந்தன.



ஸ்ரீஹரி

அப்போது யாரோ ஒருவர் வெளியூரிலுள்ள ஓர் ஆயுர்வேத வைத்தியரைப் பற்றி மூதாட்டியாரிடம் தெரிவித்தார். 'ரொம்பவும் படித்தவர். ஆசார சீலர். வைத்திய சாஸ்திரம் மட்டுமின்றி ஜோதிஷத்திலும் மகா நிபுணர். நல்ல கைராசிக்காரர்' என்று இப்படியெல்லாம் உண்மையிலேயே பெயர் பெற்றவர். இவரைப் பற்றி அரண்மனை அதிகாரியொருவர் மூதாட்டியாரிடம் தெரிவித்தார். உடனே அவரை வரவழைக்கும்படி ஏற்பாடாயிற்று.

இந்த வைத்தியரும் வந்தார். மூதாட்டியாரின் நாடியைப் பரிசோதித்தார். நாக்கு, மூக்கு, கண் என்று ஏதேதோ பரிசோதித்த பிறகு '.... உம் ...' என்று யோசித்தவண்ணம் உட்கார்ந்தார்.

மூதாட்டியார் திணறித் திணறிப் பேசலானார். "வைத்தியரே! இப்படி சும்மாவிருக்கும் போதே மூச்சு வாங்குகிறதே! நான் எழுந்து நடமாடவும் முடியுமா? ஒரு வாய் ஜலம் குடித்தாலும் நெஞ்சிலேயே நிற்கிறது. வயிறு வெடித்து விடும் போலாகி விடுகிறது. மூச்சுத் திணறல் இன்னும் அதிகமாகி விடுகிறது. ஒன்றுமே சாப்பிடா விட்டால் காதை யடைக்கிறது. கண்கள் இருட்டுகின்றன. தலை சுற்றுகிறது. நினைவு தடுமாறி விடுமோ என்றுகிறது. டாக்டர்களும் வைத்தியர்களும் கைவிட்டு விட்டனர். ஒரு இமை மூச்சாவது ஓடிக் கொண்டிருக்கும் வரையில் நம்மாலானதைச் செய்வோமென்று ஏதாவது மருந்து கொடுக்க மாட்டார்களோ? 'இயலாது' என்று சொல்லி விலகி விட்டனர். கடைசியில் உங்களால் தான் ஏதாவது செய்ய முடியுமென்று நம்பி உங்களை வரவழைத்துள்ளோம். நீங்கள் என்ன மருந்து கொடுத்தாலும் சாப்பிடுகிறேன். என்ன பத்தியம் சொன்னாலும் இருக்கிறேன். எப்படியாவது குணப்படுத்திக் கொடுங்கள்....."

வைத்தியர் இடைமறித்துச் சிரித்தார். "மன்னிக்க வேணுமம்மா. எப்படி இருந்தாலும் உங்களுக்கு இந்த ஜீவிதம் இன்னும் நாற்பது நாட்களுக்குத் தான். இதில் மருந்தென்ன? விருந்தென்ன? பத்தியமென்ன? பரிகாரந்தானென்ன?" என்று சொல்லி விட்டுப் பதிலுக்குக் காத்திராமல் எழுந்து நடந்து விட்டார்.

அரண்மனையில் காமுசவென்று மூலைக்கு மூலை ஏதோ பேசிக் கொண்டனர். நாட்களும் ஒன்று இரண்டு என்று கழிந்து கொண்டிருந்தன. எப்படியோ வைத்தியர் சொன்ன நாற்பது நாட்களும் கழிந்து விட்டன. மூதாட்டியார் உயிரோடுதானிருந்தார். மேலும் ஒன்றிரண்டு தினங்கள் சென்றன. மூதாட்டி முன் சொன்ன அரண்மனை அதிகாரியை வரவழைத்தார். அவரும் நடுங்கிக் கொண்டே மூதாட்டியார் முன்னால் வந்து நின்றார்.

"என்ன அதிகாரிகளே! உங்கள் பிரபல கைராசிக்கார வைத்தியர் வைத்த கெடு தாண்டி விட்டதே! நான் உயிருடன் தானே இருக்கிறேன்? அவர் நாடிப் பரீக்ஷை வைத்தியத்துடன் ஜோதிடமும் சேர்த்து சொன்ன கெடு பொய்த்துப் போய் விட்டதே! இப்போது நீர் என்ன சொல்கிறீர்? உமது வைத்தியர் என்ன சொல்லப் போகிறார்? " என்று கேட்டார் மூதாட்டியார்.



"என்ன ஸார்! தீபாவளி கழிச்சுத் தானே திருப்பதிக்குப் போறேன்னேள்!"

"என்ன பண்றது? எண்ணெய் விக்கிற விலையைப் பார்த்துப் பயந்துதான் தீபாவளிக்கு முன்னேயே திருப்பதிக்குப் போயிட்டு வந்துட்டேன்!"

அதிகாரி பிரமித்துப் போய் விட்டார். 'மூதாட்டியாரின் மூச்சுத் திணறல் என்ன வாயிற்று? உடற்பருமனும் கணிசமாகக் குறைந் திருப்பதாகக் காண்கிறதே! குரலில் ஒரு காம்பீர்யமும், விழியில் ஒரு கண்டிப்பும் தென்படுகின்றனவே! இது தெய்வத்தின் அருள் போலும்!' என்று இப்படிச் சிந்தித்த வண்ணம் வாய் திறவாமல் சும்மாவிருந்தார்.

"ஏனய்யா பேசாமலிருக்கிறீர்? அந்த வைத்தியரை வரவழைக்க ஏற்பாடு செய்யும். அவரையே நேரில் கேட்டு விடுகிறேன் " என்று கூறி முடித்தார் மூதாட்டியார்.

அதிகாரி யோசித்தார். 'ஏது இம் மூதாட்டியாரின் மனத்தில் சூடு ஏறிக் கொண்டே போகிறதே! அதிகாரிகளே! உங்கள் .... என்று ஆரம்பித்தவர் ... நீர், என்றும் ஏனய்யா என்றும் பேசத் தொடங்கி விட்டார்களே! இன்னும் சிறிது நேரம் கழிந்தால் நீ, வாடா போடா என்றும் பேசத் தொடங்கி விடுவாரோ? படபடவென்று மூச்சு விடாமல் பொரிந்து தள்ளும் உடல் வலிமையும் மனத்திடமும் இவருக்கு எங்கிருந்து வந்தன?' என்று இவ்வாறு சிந்தித்துக் கொண்டே வாய் திறவாமல் நின்றார் அதிகாரி.

மூதாட்டியார் இம் மௌனத்தைக் கண்டு மேலும் கோபமுற்றுக் கைகளைப் பலமுறை பலமாகக் கொட்டினார். சேவகர்கள் இருவர் ஓடி வந்து எதிரே நின்றனர். அவர்களைப் பார்த்த மூதாட்டியார், "உம், இந்த மனுஷ்யனை வெளியே இட்டுச் செல்லுங்கள். இன்னும் எட்டு தினங்களுக்குள் அந்த வைத்தியனையும் அழைத்துக் கொண்டு நேரில் வரவேண்டும். இல்லையென்றால் இந்த அரண்மனையில் கால் எடுத்து வைக்கக் கூடாது. உம், செல்லுங்கள்" என்றார்.

எங்கெங்கோ தேடியலைந்து அந்த வைத்தியரையும் அழைத்துக் கொண்டு எட்டாம் நாள் பிற்பகலில் மூதாட்டியார் முன் வந்து நின்றார் அதிகாரி. வைத்தியரோ நேரே சென்று மூதாட்டியார் அமர்ந்திருந்த ஆசனத்திலேயே ஒரு மூலையில் உட்காரச்சென்றார். உடனே "எட்ட நில்!" என்று சொல்லிக் கொண்டே சீறி எழுந்தார் மூதாட்டியார்.

"என்ன உனக்குப்புத்தி தடுமாற்றமா? உம் ....." என்று சொல்லிக் கொண்டே வைத்தியரை நோக்கி ஓர் அடி முன் நடந்தார் மூதாட்டியார்.

மெதுவாகச் சிறிது பின் நகர்ந்தபடி, "அம்மணி!" என்று வைத்தியர் பேசத் தொடங்கிய போதே —

"அட சட்! அம்மணியாவது, அப்புணியாவது! அரசகுடும்பத்தைச் சேர்ந்த மாபெரும் மூதாட்டியாரை என்னவென்றழைப்பது என்பதையும் மறந்து விட்டாயா? உன் பொய்யும் — புனைசுருட்டும்...." என்று கையை நீட்டிச் சுட்டிக் காட்டியபடி சொல்லிக்கொண்டே வைத்தியரை நோக்கி மற்றுமோர் அடி எடுத்து வைத்தார் மூதாட்டியார்.

இன்னும் ஓர் அடி பின்புறம் நகர்ந்தபடி வைத்தியர் கடகடவென்று நகைக்கலானார்.

"சிரிப்பென்ன வேண்டிக் கிடக்கிறது? நான் செத்து விடுவேன் என்று நீ வைத்த கெடு தவறி இன்று இருபது தினங்களாகி விட்டன. உன் வைத்தியத்தையும், ஜோதிஷத்தையும் பார்த்து உலகம் சிரிக்கிறது" என்றார் மூதாட்டி.

அதிகாரிக்கு ஒருபுறம் வியப்பு, ஒருபுறம் திகைப்பு.

"வைத்தியமா? ஜோஸ்யமா? செத்து விடுவதாகக் கெடுவா? எனக்கொன்றுமே விளங்கவில்லையே!" என்றார் வைத்தியர்.

மூதாட்டியாருக்கும் வியப்பு மேலிட்டது. இடுப்பில் இரண்டு கைகளையும் ஊன்றிக் கொண்டு ஏளனத் தொனியில், "ஐயா! மகா வைத்தியரே! நான் சுகவீனமாய் — எழுந்திருக்கவும் முடியாமல் மூச்சு விடவும் திணறிக் கொண்டு பார்ப்பவரெல்லாம் 'மாமிசக் குன்று' என்று என் காதுபடும்படியே ஏசிக் கொண்டிருந்த போது அதற்கு வைத்தியம் செய்ய உம்மை அழைத்து வரச் சொன்னதும் உமக்கு இப்போது நினைவில்லையோ?" என்று கேட்டார் மூதாட்டியார்.

"மன்னிக்க வேண்டும். 'நான் எழுந்து நடமாடவும் முடியுமா?' என்று கேட்டீர்கள். அதற்கு....." என்று சொல்லும் போதே மூதாட்டியார் இடை மறித்து, "அதற்கு நீ என்ன பதில் சொன்னாய்? நினைவிருக்கிறதா?" என்று கேட்டார்.

"என்ன சொன்னேனோ, என்ன செய்தேனோ, அதைப் பற்றி இப்போது எதற்காக விசாரம்? உங்கள் உடம்பு பருமன் குறைந்து விட்டது. மூச்சுத் திணறல் இல்லை. எழுந்து வந்து என் கன்னத்தையே பதம் பார்த்து விடுவீர்களோ என்று நான் பயப்படும்படி சற்று முன் நடந்து கொண்டீர்கள். என் வேலையை நான் செம்மையாகவும் வெற்றிகரமாகவும் செய்துவிட்டேன். அதற்காக நீங்கள் என்ன தண்டனை கொடுத்தாலும் ஏற்கத் தயார்" என்றார் வைத்தியர்.

திறந்த வாயை மூட மறந்தவராய் வியப்பில் மூழ்கி நின்றார் மூதாட்டியார். சில நிமிஷங்களுக்குப் பிறகு "சொல்லாமலே செய்வர் பெரியோர்" என்று தமக்குத் தாமே சொல்லியபடி சென்று தமது ஆசனத்தில் அமர்ந்து கொண்டார் மூதாட்டியார்.



# விடுதலை காணு?



**ஆர்வி**

ஒரு வாரமாகவே எங்கே போனாலும் தேவரின் பேச்சுத்தான் அடிபட்டு வந்தது. அவர் படுத்திருந்த ஆஸ்பத்திரிக்கு வெளியில் எப்பொழுது பார்த்தாலும் ஒரு சிறு கூட்டம். மனிதன் பிழைப்பாரா, மாட்டாரா, பிழைத்துவிட்டால் என்ன ஆகும், பிழைக்காவிட்டால் என்ன நடக்கும் என்பதைப் பற்றி வெல்லாம் ஊரில் பலரும் பல விதமாகப் பேசிக்கொண்டார்கள். அத்தனை பரபரப்பை ஏற்படுத்தி விட்ட சம்பவம் அந்த ஊரில் சமீப காலத்தில் நிகழ்ந்ததேயில்லை.

தேவர் சர்க்கார் ஆஸ்பத்திரியிலே சேர்க்கப்பட்டு, நினைவுப் பிரக்ஞையின்றிப்படுத்துக் கிடந்தார். ஆஸ்பத்திரிக்கு வரும் வரையில் அவருக்கு நினைவும் தெம்பும் இருந்தன. கழுத்துப் பிடரியிலே அரிவாள் வெட்டு விழுந்து, தலை தொங்கவிட்டுப் போன நிலையில் ஒரு கையால் தலையை அழுத்திப் பிடித்துக்கொண்டு அவராகவே ஆஸ்பத்திரிக்கு நடந்து வந்து விட்டார். போலீஸ் அதிகாரிகள் வந்து வாக்குமூலம் வாங்கும்போது தான் அவருக்கு நினைவு மங்கிக்கொண்டு வந்தது. தென்னம்பாளை சீவுவது போல் பிடரியில் விழுந்த அந்த வெட்டுக்குப் பிறகு அவர் இனி பிழைப்பது ஏது? அநேகமாக எல்லாரும் அந்தச் செய்தியையே எதிர்பார்த்திருந்தார்கள்.

ஏழு நாட்கள் ஆகிவிட்டன. எட்டாம் நாள் காலையில் குள்ளச் சிங்காரம் பேட்டைத் தெருவுக்குள்ளே ஓடி வந்தான்.

"தேவலே, பிழைச்சிக்கிட்டாரு!" என்று திருப்பித் திருப்பிச் சொல்லிக்கொண்டே அவன் துள்ளிக் குதித்தான்.

அங்காளம்மன் கோவில் வாசலில் நின்றுகொண்டிருந்த நாலைந்துபேர்களும் அவன் சொல்வதைச் சிறிதும் நம்ப முடியாமல் "அ....அ...பிழைச்சிக்கிட்டாரா?" என்று தலைக்குத் தலை கேட்டார்கள்.

"ஆமாண்ணே, ஆமா! பிழைச்சிக்கிட்டாருன்னு பிழைச்சிக்கிட்டாரு. கண்ணைக்கூடத் தொறந்துப் புட்டாரு!" என்று சொல்லி விட்டு மறுபடியும் குதித்தான் சிங்காரம்.

"எலே, நெசந்தானு?" என்று கேட்டான் பொன்னுச்சாமி.

"நெசமாண்ணே – சத்தியமா – வுட்டேன், வுட்டேன்!" என்று ஓங்கிப் பேசினான் சிங்காரம்.

"இருக்குமுடாய்யா.... குள்ளச் சிங்காரம் உள்ளதைத்தான் பேசுவான்!" என்று சாணி தட்டுகிற 'சாவாச்சி' ஆச்சி உத்தரவாதம் கொடுத்தாள்.

இந்தச் செய்தி அந்தத் தெருவில் மட்டுமல்ல; ஊரெல்லாம் ஒரு நொடியில் பரவிப் போய்விட்டது.

''மனுசன் பிளைக்காமப் போயிட்டா எப்படி? நெனப்பு வந்து பேசாமல் போயிட்டா எப்படி? வெட்டின பயலே வுட்டுப்புடுங்க. வெட்டாத பயலுக சேதியெல்லாம் வெளியே வரவேணும்? இன்னும் சொச்ச நச்ச மொட்டைப் பெட்டிசங்களை ஆரு எளுதறது?...ப்பஹ்... ஹ்...ஹ்...?'' என்று சோடாப் புட்டி உடைப்பது போலச் சிரித்தார் உத்திராபதி.

அவருக்கும் வெட்டுப்பட்டுப் பிழைத்த சாமித் தேவருக்கும் அவ்வளவாக ஆகாது. கட்சி என்று வந்தால் எதிர்க்கட்சிதான் அவர். தேவரினால் அவருக்கு ஒரு வழக்கே தோற்றுப் போயிருக்கிறது. இருந்தாலும் தேவரை யாரோ வெட்டி விட்டார்கள் என்று கேட்டதும், 'ஐயோ பாவம்' என்று அவருக்குப் பரிதாபமாகத்தான் இருந்தது. ஆனால் இப்போது அவர் பிழைத்து விட்டார் என்பதைக் கேட்டதும் அவருக்கு அவ்வளவாகப் பிடிக்கத்தான் இல்லே. தேவருக்காக எவ்வளவு வேண்டுமானாலும் பரிதாபப்படலாம்; ஆனால் சந்தோஷப்பட முடியுமா ? இப்படித்தான் ஊரில் இன்னும் பலரும் இருந்தார்கள். பரபரப்பான செய்திகளையே மேலும் மேலும் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிற காதுகளுக்கு உப்புச் சப்பற்றுப் போகும்படி செய்யும் ஒரு செய்தி எங்கேயாவது ரசிக்குமா ?

ஆனால் சந்தைக்கெல்லாம் வந்த செய்தி அவர்களையெல்லாம் அதிர்ச்சியடையும்படி செய்து விட்டது.

''தேவரை வெட்டினது யாரு தெரியுமில்லே? பிச்சைப் பயல் இல்லியாம்; சோழுப் பயலாம்!'' என்று சொல்லி விட்டு, வாயைப் பிளந்து கொண்டு நின்றான் துரைசாமி.

''இது என்னடா இது. புதுச புதுசா கிளம்புது சேதி! ஆருடா சொன்னது இப்படி ?'' என்று அதிசயத்துடன் கேட்டான் ஓட்டல் மணி.

''அட, நானுச் சொல்லல்லே ஐயா இதை. தேவரேதான் சொல்றாரு!''

''தேவர் சொல்றாரா?''

''ஆமான்னேன். பெரிய ஆபீசரு காரை எடுத்துக்கிட்டு ஓட்டமா ஓடியாந்தாரு. தேவரு கண்ணை முளிச்சிட்டாருன்னதும் மரண வாக்குமூலம் வாங்கணுமில்லே? அப்ப தேவரே சொன்ன சேதில்லே இது'' என்றான் துரைசாமி.

''தேவரோட வாக்குமூலமா இது?''

''அட, நான் சன்னல் ஓரமாத்தான் நிக்கிறேன். மனிசன் போற போக்கிலே கூசாமெ சொல்றாருய்யா இப்படி. என் காதாலே கேட்டுப்புட்டுத்தான் நேரே இங்கே வர்றேன்.''

''அடப் பாவி கெடுத்தானே! பிச்சைப் பயதான் வெட்டினான்னு அத்தினி பேருக்கும் தெரியுமே — சொன்னு ஆரு நம்புவாங்க?''

''நீங்களும் நானும் நம்பாட்டிப்போனு மோசமா? சட்டமில்லே நம்புது!''

''என்னுடா சட்டம்? எதுக்குச் சட்டம்....?''

''அட, போங்கய்யா, நீங்க ஒரு விவரம் தெரியாத ஆளு. வெட்டு வாங்கின மனுசன் வாக்குமூலம் கொடுக்கறான். பக்கத்திலே பஞ்சாயத்தாரு நிக்கிறாங்க. மேஜிஸ்ட்ரேட்டு எளுதிக்கிறாரு. அது பேசுமா, நீங்களும் நானும் சொல்லுறது பேசுமா? சாகறவங்க கிட்டே வாக்குமூலம்னு வாங்கறாங்களே எதுக்கு? எத்தினி கச்சேரிக்குப் போனாலும் அதுதான் நிக்கும்; நிலைக்கும். நீங்களும் நானும் தெருவோட போறவனும் ஆயிரம் சொன்னாலும் எடுபடாது; நிக்காது.''

''அப்ப நம்ப சீனுச் செட்டியார் கண்ணாலே பாத்துப்புட்டுச் சொல்றது பொய்யா?''

''பொய்யின்னு ஆரு சொன்னாங்க ? உண்மைதான். உங்களுக்கும் எனக்கும் ஊருக்கும் தெரியும். ஆனால் அது பத்தாதே. அந்த மனிசன் சொல்றது தானே நிக்கப் போவுது!''

''இருந்தாலும் பாருங்க, வெட்டினவன் சொந்த மருமவன்; விட்டுக் கொடுத்திடப் படாதுங்கற நெனப்பு அப்பவும் போகலியே....''

''அதுக்காக ஊரான் வீட்டுப் பயலே இழுத்து விட்டுப்புடறதா ?''

''இவன் எங்க போனான் அவருகிட்டே ?''

''அதுக்காக ?''

''அம்புட்டுக்க வேண்டியதுதான் ! தேவர் வம்புக்கு எந்தப் பயலாவது



போவலாமா? தெரிஞ்சும் போறானில்லே? மாட்டிக்க வேண்டியதுதான்!''

''சரி; இப்ப அந்தப் பய சோமு எங்கே இருக்கான்?''

''அவனையும்தான் அன்னைக்கே புடிச்சு இழுத்துக்கிட்டுப் போயி அந்தப் பிச்சையோட 'லாக்கப்'பிலே வெச்சிருக்காங்களே தெரியாதா?''

''அப்ப இனி விடமாட்டாங்க?''

''அட அது எப்படி வுடுவாங்க? கேஸ், கொலைக் கேசாச்சே!''

''பிச்சையை வுட்டுடுவாங்களா?''

''அது போகப் போகத்தான் தெரியணும். சாமீனுலே வுடுவாங்கன்னு பேசிக்கிறாங்க.....''

''தேவரோட மக வந்து பார்த்துட்டுப் போவுதில்லே?''

''ஏன் வராமெ? இன்னைக்கு வாக்குமூலம் வாங்கக் கொள்ளக் கூட அதுவும் இன்னொரு சன்னல் பக்கமாகத் தான் மூக்கைச் சிந்திக்கிட்டு நின்னுச்சி. அவருக்கு எதுக்காலே போகப் பயம். புருசன்காரன் அப்பாரை வெட்டிப்புட்டானேன்னு உதைப்பு இருக்காதா? ஆனாலும் தேவரோட உறைப்பைப் பாருங்களேன்! மருமவன் மாட்டிக்கப்படாதாம்; மத்தவன் மாட்டிக்கலாமாம்! அட என்னய்யா சாகக்குள்ளேயும் கிறுத்திரியப் புத்தி போகலியே!''

''அவருதான் பிழைச்சிக்கிட்டாராமே?''

''பிழைச்சாரு, மண்ணும் போறாரு! பாவம், அந்தச் சோமுப் பயலோட ஆத்தா வந்து வாயிலேயும் வயித்திலேயும் அடிச்சிக்கிறதைப் பார்த்தா, வயித்தைச் சங்கடம் செய்யுது. மண்ணே வாரி இறைக்கிரு! ஆனா தேவரு வரைக்கும் அந்தத் தூரி எங்கே போகப் போவுது?''

தேவர் வெட்டுப்பட்ட செய்தியை விட, அவர் வாக்குமூலம் கொடுத்த செய்தி ஊரெங்கும் பெரிய பரபரப்பை ஏற்படுத்தி விட்டது. அதற்கு மேல் என்ன நடக்கப் போகிறது என்று ஒவ்வொருவரும் ஆவலோடு காத்திருந்தனர். வைத்திய அதிகாரிகளும் பெரிய போலீஸ் அதிகாரிகளும் தேவர் படுத்திருந்த ஆஸ்பத்திரிக்கு வந்து விட்டுப் போனார்கள். வேறு யாரையும் உள்ளே விட மறுத்துக் காவல் போட்டு விட்டார்கள். தேவருடைய மகளை அவரே உள்ளே வரக்கூடாது என்று சொல்லியனுப்பி விட்டாராம்.

ஊர் கலகலத்துப் போய் நின்றது. எந்த நிமிஷத்தில் யாரை வந்து போலீஸார் விசாரணைக்கு அழைப்பார்களோ, வாக்குமூலம் வாங்குவார்களோ என்று ஒரே பீதியாக இருந்தது. நடந்த சம்பவத்தைக் கண்ணால் நேரில் கண்ட சீனுச் செட்டியார், கட்டை உடைக்கும் வேலையன், இன்னும் கடையில் வேலை செய்யும் இரண்டு பையன்கள் அத்தனை பேரும் போலீஸ் விசாரணைக்குப் போவதும் வருவதுமாக இருந்தார்கள். நடந்ததை நடந்தபடி சொல்ல வேண்டியதுதானே? அதுதான் இப்பொழுது அவர்களால் முடியவில்லை.

''குறுக்குக் கேள்வி போடறப்பலே குடலைப் புரட்டுதுங்க...கண்ணாலே கண்டதும் பொய்யிம்பாங்களே, அந்த மாதிரி ஆயிட்டுதேன்னு தோணுதுங்க!'' என்று விசாரணைக்குப் போய் விட்டு வந்த சீனுச் செட்டியார், உத்திராபதியிடம் பிரலாபம் செய்தார்.

''ப்ப .... .... !'' என்று நெற்றி நரம்பு புடைக்கச் சிரித்தார் உத்திராபதி.

''சரி; நடந்த சங்கதி என்னா? அதை நம்பகிட்டே ஒரு வாட்டி தெளிவாச் சொல்லிப் பாத்துக்குங்க. அதுக்கு மேலே நான் சொல்றேன் உங்களுக்கு யோசனை'' என்று மேலும் தைரியமூட்டினார் அவர்.

''என்னுங்க இது. எத்தினே வாட்டி சொன்னாலும் நான் பார்த்ததைத் தானுங்களே சொல்லலாம்? இல்லாததைச் சொல்ல நம்மாலே முடியுங்களா? ஏளு-ஏளரை மணி இருக்குமுங்க. தேவரு கமுக்கட்டிலே ஒரு காயிதக் கட்டை எடுத்துக்கிட்டு நம்ம கடையைத் தாண்டிப் போறாருங்க. நம்பளேப் பாத்துச் சிரிச்சாரு. நானும் சிரிச்சேன். வேறே பேச்சுப் பேசிக்கல்லே. ஆச்சுங்களா? அடுத்த கடைக்கும் பக்கத்துச் சந்திலே இருந்து சோமு எதுக்காலே வந்தான். சிரிச்சுக்கிட்டே தேவருகிட்டே போயி பேச்சுக் கொடுத்தான். பேச்சுக்கொடுத்த வாக்கிலே கமுக்கட்டுக் காயிதக் கட்டைப் புடிச்சு இழுத்தான். தேவரு வுடல்லே. கெட்டிமாப் புடிச்சிக்கிட்டாரு. இப்படி இளு பறி நடக்கக்குள்ளே, பின்னாலே இருந்து ஓடியாந்தான் பிச்சை. கையிலே வாங்கரிவாள். தேவரு திரும்பிப் பார்த்தாரா? அதுக்குள்ளே ஒரே சீவு! சீவிப்புட்டு என்ன ஆச்சன்னு கூடப் பாக்காமெ சோமுப் பய வீட்டுக்குள்ளே ஓடிப்போய் விட்டான். இதான் எனக்குத் தெரியும். எங்க கடைப் பயலுகளுக்கும் இதான் தெரியும். அதுக்கு மேலே 'கிராஸ்' எல்லாம் செய்தா நம்பளுக்கு என்ன தெரியும்? தெரிஞ்சதுக்குத் தலையாட்டறேம், தெரியாததுக்குத் தெரியாதுங்கறேம். வுட்டாத்தானே'' என்று அழமாட்டாத குறையாக முறையிட்டார் சீனுச் செட்டியார்.

''சரி இருக்கட்டும்; பிச்சை ஓடினதும் சோமுப் பயல் என்ன செய்தான்?''

''ஏய் — ஏய்னு கத்தினான். தேவரைப் புடிச்சிக்கிட்டான். தலை தொங்கவிட்டுப் போச்சு. அதை அவரே கெட்டியா அமுக்கிப் புடிச்சிக்கிட்டாரு! அடேயப்பா, நம்மனாலே முடியுங்களா? மனிசன் கொஞ்சங்கூடச் சளைக்கலியே. பேசாமெ வந்த வாக்கிலேயே திரும்பி நடந்தாரு'' என்று சொல்லும்போதே செட்டியாருக்குக் கை வெடவெடத்தது.

''சரி; கையிலிருந்த காயிதக் கட்டு என்ன ஆச்சு?''

''அதை ஆருங்க கவனிச்சது? அதுக்குள்ளாறத்தான் கூட்டம் கூடிப்போச்சே?''

''சரி; சீவினுன்னீங்களே, அந்தக் கத்தி?''

''கத்தியா? வாங்கரிவாளுங்க! அதை வந்து ..... வந்து பிச்சைதான் பிடிச்சிருந்தான். இளனி சீவுவயில்லே, கையிலேயே வைச்சிக்கிட்டு, அதைப் போல ஒரு போடு போட்டுப் புட்டு, அதைக் கையோட கொண்டுக்கிட்டுப் போயிட்டான் போலிருக்கு......ஆனா பாருங்க, தேவரு வாக்குமூலத்திலே.....''

''அவரு ஆயிரம் சொல்றாரு. உங்களுக்கென்ன அதைப் பத்தியெல்லாம்? பார்த்ததைச் சொல்லிப்பிட்டுப் போறியளா? தேவரு சொல்லிப்பிட்டா ஆச்சா? ப்பஹ்......ஹ்....''

''சரி, அப்படியே நான் சொல்லிப்பிடறேன்.''

''அவ்வளவுதான். அப்ப, நான் வரட்டுங்களா?'' என்று உத்திராபதி கிளம்பி விட்டார்.

சீனுச் செட்டியாருக்கு இப்போது கொஞ்சம் தைரியமாக இருந்தது. தேவர் வாக்குமூலத்தைக் கேட்டதும் அவர் கொஞ்சம் குழம்பிப் போயிருந்தார். 'சோமு வெட்டவில்லை என்று தெரிந்தும் அவர் எப்படி வாக்குமூலம் கொடுத்தார்? ஒருவேளை புத்திக்குழப்பமாக இருக்குமோ?' என்று எண்ணிக் கொண்டிருந்தார். ஆனால் உத்திராபதி வந்து விட்டுப் போன பிறகுதான் அவருக்குத் தெம்பு உண்டாயிற்று. சோமு வெட்டவில்லை; அது வரையில் அவருக்கு நிச்சயந்தான்!

சாமித் தேவர் இதில் வருத்தப்பட்டுக் கொள்ள என்ன இருக்கிறது? அவர் வந்து கேட்கிறபோது பார்த்துக் கொள்ளலாம் என்று தம்மைத் தேற்றிக்கொண்டார் செட்டியார்.

செட்டியாருக்குத் தெரியும், தேவர் விவகாரம். தேவர் என்றால் அவருக்கு உள்ளூற உதைப்புத்தான். எப்பொழுது வந்தாலும் தேவர் அங்கேதான் வந்து உட்காருவார். யாரைப் பற்றி எந்தப் புகார் எழுதினாலும் அங்கே உட்கார்ந்துதான் எழுதுவார். கையிலே ஒரு காகிதக் கட்டு; மடி நிறைய துண்டுச் சீட்டைகள். அவருடைய 'ரிக்கார்டு' ஆபீஸ் அதுதான். இடுப்பில் இருப்பது நாலு முழக் கதர் வேட்டிதான். மேலுக்கு மூன்றரை முழத்துண்டு. சட்டை போடாமல், ஆறடி உயரத்துக்கு வாட்ட சாட்டமாக இருப்பார். தலை கிராப்புத்தான். வளர்ந்தால் வாரிச் சீவ முடியாது என்று அவர் வழித்து எடுக்காமல் வெட்டி விட்டிருப்பார். வேண்டுமென்றே அவர் மீசை வைத்துக் கொண்டதில்லை. ஆற்றங்கரைப் பக்கம் போகும்போது சுருட்டுப் பற்ற வைப்பதைத் தவிர அவரிடம் வேறு எந்தக் கெட்டப் பழக்கமும் கிடையாது. காப்பிப் பழக்கத்தை விட்டு எத்தனையோ வருஷங்கள் ஆகி விட்டன. கண்டவேளையில் கண்டதைச் சாப்பிட மாட்டார். எப்போது பார்த்தாலும் வயிறு ஒட்டிப் போய்த்தான் இருக்கும். ஆனால் முகத்தில் எப்போதும் சிரிப்புத்தான். நெற்றிப் பொட்டிலே ஒரு வெட்டுத் தழும்பு. நெருக்கமாக, உறுதியாக இருக்கும் வெள்ளைப் பற்கள். மனிதன் சிரித்தால் சிம்மச் சிரிப்புத்தான். கர்ப்பம் கலங்கி விடும்; அப்படிச் சிரிப்பார். அவரது சிரிப்புக்குத் தக்கபடி அதில் குறிப்பும் பொருளும் தொனிக்கும். வாயைத் திறந்து அதிகம் பேச மாட்டார். பேசினால் உதடுகள்தான் அசையும். இரைந்து கடுமையாகப் பேசிக் கேட்டவர்களே யாருமில்லை. எதிரிகளுக்கு அவர் குரலே தெரியாது. அந்தக் குரலில், கனமும் ஆழமும் எவ்வளவு என்று இன்னமும் கண்டவர்கள் இல்லை. அத்தனை அழுத்தம். தலை தொங்கிப் போகும்படி வெட்டின போதுகூட அனைவரும் அவருடைய நெஞ்சழுத்தத்தைக் கண்டுதான் பிரமித்தார்கள்.

தேவருக்கு உண்மையான எதிரிகள் அவருடைய கையிலும் மடியிலும்தான் இருந்தார்கள். எவன் எவன் சொத்தச் சொத்தை அனுபவிக்கிறான், எவன்

எவன் ஊர்ச் சொத்தைக் கொள்ளையடிக்கிறான்; எவன் எவன் நியாயமான வழியில் சம்பாதிக்கிறான், எவன் எவன் அநியாயமான வழியில் அட்டகாசம் செய்கிறான்; இன்ன அதிகாரிக்கு என்ன சம்பளம், என்ன செலவழிக்கிறான்? — எல்லாவற்றுக்கும் புள்ளி விவரத்தோடு ஆதாரமும் தடயங்களும் அவர் கையிலும் மடியிலும்தான் இருந்தன. அவன் எவ்வளவு பெரிய மனிதனாக இருக்கட்டுமே — தேவர் நிருஷ்டிபட்டு விட்டால் அவனுக்குத் தலைவலிதான் அன்று முதல். கடைசி வரையில், கருவை அறுக்கும் வரையில் அவர் ஓய மாட்டார்; சாய மாட்டார்.

கத்தியைக் காட்டி அவரைப் பயமுறுத்த முடியாது. வேறு எந்த வலைக்கும் மசிந்து விடுகிறவர் அல்ல அவர்; மயங்குகிறவரும் அல்ல.

சாமித் தேவர் சாய்த்துச் சாய்த்துத்தான் பெரிது பெரிதாக எழுதுவார். ஆனால் ஒவ்வொரு எழுத்தும் கூரிய ஈட்டி போலத்தான் பாயும். அவர் பள்ளிக்குப் போய் அதிகம் படித்ததில்லை. ஆனால் அவருக்கு வக்கீல் உதவியே வேண்டியதில்லை. வக்கீலுக்குத் தெரியாததெல்லாம் அவருக்குத் தெரியும். அவரைக் கூண்டில் ஏத்தினால் ஏற்றியவரின் மானத்தையும் கண்ணியத்தையும் கப்பலில் ஏற்றிவிடுவார். ஊரின் மிகப் பழைய வழக்குகளும் ரிக்கார்டுகளும் அவருக்கு மனப்பாடம். இனாம் நிலங்களும் புறம்போக்கும் அவருக்குப் பொட்டைப் பாடம்.

தேவருக்கு எத்தனையோ பகைவர்கள் உண்டு; ஆனால் ஒரே துணை அவருடைய தைரியம்தான். மொட்டைப் 'பெடிஷன்' எல்லாரும் எழுதிவிட முடியுமா? அந்தக் கலையில் அவர்தான் கைவந்தவர். எழுதிப் போட்ட மனுவைக் காசவாங்கிக்கொண்டு ஒழித்துப் போடும் அதிகாரிகளை, ஊழியர்களை எப்படி மாட்டிவிட வேண்டும், யாரைக் கொண்டு எந்த வகையில் சிக்க வைக்க வேண்டும் என்பதெல்லாம் அவருக்குத்தான் தெரியும்.

ஊமையைப் போல, சிரித்த முகமாகவே வேட்டு வைக்கவும், குழியைப் பறிக்கவும், பறித்த குழியில் புதைக்கவும் செய்து விட்டு, ஒன்றுமே நடக்காதது போலவும், ஒன்றுமே அறியாதவர் போலவும் வர அவருக்குத்தான் தெரியும். அகப்பட்டுக் கொண்டவர்கள் எல்லாரும் அவதிப்படும்போது அமைதியாக, எதிலும் ஒட்டாதவராக, சிரித்த முகமாக அரிக்காத மூக்கை அநாவசியமாகச் சொறிந்து கொண்டு போவார் அவர்.

ஏழு மணியடித்ததும் இடது கையிலே குடையைத் தொங்க விட்டுக் கொண்டு, ஏதோ மணி தவறாத உத்தியோகத்துக்குப் புறப்படுவது போலத்தான் புறப்படுவார். வீட்டிலே அவருக்குக் கொஞ்சிக் குலாவப் பெரிய மகள் ஒருத்தியைத் தவிர, வேறு யாரும் இல்லை. அந்த மகளுக்கு ஐந்து வயதான போதே அவர் மனைவி கண்ணை மூடிக் கொண்டு கடிதப் போக்குவரத்துக்கே இடமில்லாத உலகுக்குச் சென்றுவிட்டாள். அன்றிலிருந்து தேவர் மேலுக்குச் சட்டை போட்டுக் கொள்வதில்லை. அதைப் பற்றி அவர் யாரிடமும் பெருமையாகச் சொல்லிக் கொண்டதுமில்லை. ஊரில் ஒருவர் பாக்கியில்லாமல் சட்டை போட்டுக் கொள்கிற போது ஒருவர் போடாமலே இருப்பது கூட பெரிய 'பாஷன்' இல்லையா? எப்படி வேண்டுமானாலும் இருக்கட்டுமே. தேவருக்கு அதைப் பற்றிக் கவலையில்லை. கேட்டால், "எனக்கென்ன? நான் வெள்ளை வேட்டித் துறவி தானே!" என்பார்.

"மகளுக்குக் கல்யாணம் கட்டலியா?" என்று யாரோ கேட்டார்கள்.



"பொண்ணுக்கு அவ்வளவு பய ஊரிலே இல்லாம அத்துப் போயிட்டானுவளா? தன்னாலே வரான். உங்களுக்கு ஏன் அந்தக் கவலை?" என்று கூறிப் போய் விட்டார் அவர்.

அதே போலத்தான் நடந்தது. மாப்பிள்ளையாகத்தான் அவரைத் தேடி வந்தான். தேவர் கண்டித்துச் சொல்லி விட்டார்.

"எல்லாச் செலவும் போட்டுச் செய்வதாக இருந்தால் பெண் கேட்டுக் கொண்டு வாருங்கள். இல்லாவிட்டால் போங்கள். என்னிடம் இந்தக் குடிருப்பு மனையைத் தவிர குழியோ, சல்லிக் காசோ கிடையாது!"

தேவர் மகள் கழுத்தில் பிச்சை தாலியைக் கட்டினான். அதற்குப் பிறகு—? கட்டின மனைவியைத் தகப்பன் வீட்டிலேயே விட்டு வைக்க முடியுமா?

"அண்ணி நான் பாத்துச் சொல்லி யனுப்பிச்சிருக்குது. அழைச்சிக்கிட்டுப் போகணுமே?" என்றான் பிச்சை.

"ஆரை அழைச்சிக்கிட்டுப் போறது?" என்றார் தேவர்.

"உங்க மகளைத்தான்!"

"அழைச்சிக்கிட்டுப் போயி—?"

"குடித்தனம் போட வேண்டியது தான்!" என்றான் பிச்சை.

"ஏன், அந்தக் குடித்தனத்தை இருக்கிற இடத்துலேயே போட்டுறப் படாதோ? அழைச்சிக்கிட்டுப் போய்த் தான் போடணுமோ?"

"அது அவங்க அவங்க சௌகரியமில்லே? இங்கே விட்டு வெக்கிறதும் அழைச்சிக்கிட்டுப் போறதும்!"

"அதைத்தான் நானும் சொல்றேன். நமக்கு அது சௌகரியமில்லேன்னு!"

"அப்படி யிருக்கிறவங்க கட்டிக் கொடுத்திருக்கப் படாது. மாப்பிள்ளையைத் தேடி!"

"நான் எந்தப் பயலையும் தேடிக்கிட்டுப் போகலியே. என் வூடு தேடிப் பொண்ணைக் கொடுக்கிறியான்னு வந்தப்புறமில்லே சரின்னேன்...."

"கொடுத்தப்புறம் அது உடைமைக்காரனோட சொத்துத்தானே? அவன் இஷ்டப்பட்டா அழைச்சிக்கிட்டுப் போக வேண்டியதுதானே?"

"இஷ்டப்பட்டா அழைச்சிக்கிட்டுப் போறது. இஷ்டப்படாட்டிப் பொணுக் கொணுந்து வுட்டுப் புடறதா?"

"எல்லாத்துக்கும் தயாராகத்தான் இருக்கணும்."

"அதான் என்னேன்? அப்படியென்ன எழுதியா கொடுத்திருக்கேன்? இஷ்டப்பட்டா அழைச்சிக்கிட்டுப் போ; இஷ்டப்படாட்டி கொணுந்து வுட்டுப்பிடுன்னு. பொண்ணு வேணுமின்னு வந்தே. சரின்னு கட்டிக் கொடுத்தேன். அழைச்சிக்கிட்டுப் போயி குடித்தனம் போடப் போறேன்னே. வாணும் தனியாகப் போவானேன்? இங்கேயேதான் குடித்தனம் இருந்திடுங்கறேன். இது ஒரு தப்பா? மாட்டேன்னே, அது இஷ்டப்பட்டு வந்தால் கூட்டிக்கிட்டுப் போ! நான் குறுக்கே நிக்கலே. அப்புறம் இஷ்டப்படாட்டி கொணுந்து வுடத்தான் வுடு வேங்கிறே பாரு. அதான் நடக்காது. இந்த வூட்டுக் குறட்டை மிதிக்கப்படாது. நீயும் சரி; அதுவும் சரி. ஆரா இருந்தால் என்ன? சம்மதமானால் கூட்டிக்கிட்டுப் போ!" என்றார் தேவர்.

தேவர் வாயைத் திறந்து பேசினதே இந்த ஒரு சந்தர்ப்பத்தில்தான். அதற்குப் பிறகு அவர் பேசவேயில்லை. அன்றைக்குச் சாயங்காலம் அவர் வீடு திரும்பிய போது வழக்கம்போல் அவர் மகள்

தான் செம்பில் தண்ணீர் கொண்டு வந்து கொடுத்தாள். தேவர் அவளிடம் ஒன்றும் கேட்டுக் கொள்ளவில்லை. அழுது அழுது அவள் கண்களெல்லாம் சிவந்து போயிருப்பதைக் கவனிக்காதவர் போலவே இருந்து விட்டார். பிச்சை வீட்டில் இல்லே.

காலையில் மாவுக்கஞ்சியைக் கொண்டு வந்து வைத்த போது அவர் மகள், "எம்பா போவட்டுமா?" என்று துக்கம் நெஞ்சை அடைக்கக் கேட்டாள்.

"எங்கே?" என்றார் தேவர்.

"அவுக கூட்டிக்கிட்டுப் போகணும் இருகளே!"

"எவுக? உம் புருசனு?"

"க்குங் —"

"நீ என்னு சொன்னே?"

"இரண்டுலே ஒன்னு இன்னைக்கே சொல்லிப்புடணுமாம். அப்பாரைக் கேட்டுக்கிட்டு வந்திடறேன்னிருக்கேன்!"

தேவர் வாயில் ஊத்திய கஞ்சியை விழுங்க முடியாமல் ஒரு கணம் திணறினார். பிறகு, "வந்திடறேன்னிருக்கில்லா?" என்று கேட்டார்.

"கேட்டுக்கிட்டு ஒரு வார்த்தை...."

"அதுசரி; வந்திடறேன்னிருக்கில்லே?"

அவருடைய மகள் சொர்ணம் பேசாமல் நின்றாள்.

"வந்திடறேன்னு சொல்லி 'விருந்தாள் போயிற வேண்டியது தான். கேட்டுச் சொல்றேன்னிருந்தா அது வேறே சங்கதி. ஆகச்சே போயிற வேண்டியது தான். போ!"

தேவர் குடையை மாட்டிக் கொண்டு கிளம்பினவர் ஒரு கணம் தயங்கிநின்றார்.

"சொர்ணம்!"

"இதாலே வந்திட்டேம்பா!"

"ஆமாம்; நீ போயிட்டா, சாவி? அதை என்னு செய்யப் போறே? அது ஒன்னுல்லே இருக்கு?" என்றார் தேவர்.

"அப்ப நான் போறதுக்குள்ளாற வந்திட மாட்டியளா?"

"அப்ப புறப்பட்டுப் போறது நிச்சயமாயிடிச்சிப் போயிருக்கு? இதென்ன இஷ்டப்பட்டுப் போறுப்பலே தானே?"

"வேற என்னப்பா செய்யிறது. அப்பாவுக்குக் கஞ்சி காச்ச, ஆக்கிப் போட ஒருத்தருமில்லே; போவாணும்னு' எல்வளவோ சொல்லிப் பாத்தாச்சப்பா. அவுக அண்ணி வந்து ஒரே புடியா..."

"சரி, அப்ப பூட்டைப் பூட்டிப் பிட்டு, சாவித் திறவோலே அந்தக் கோடிக் கடையிலே கொடுத்திடு. அவ்வளவுதான்!"

தேவர் குடையைப் பிரித்துக்கொண்டு கிளம்பி விட்டார். அப்புறம் திரும்பியே பார்க்கவில்லே.

கிட்டத்தட்ட வருஷம் ஐந்தாகி விட்டது. மகளையும் சரி, மருமகனையும் சரி, அவர் அடியோடு மறந்து விட்டார். எதிர்பாராமல் கண்ணில் பட்டுவிட்டால் கூட அவர் முகத்தைத் திருப்பிக்கொண்டு போய் விடுவார். நடுவிலே ஒரு தடவை சொர்ணம் அவருக்குச் சொல்லியனுப்பிக் கூடப் பார்த்தாள்.

"உங்க மகதான் சொல்லியனுப்பிச்சது" என்று சொல்லிக் கொண்டு அவர் வீட்டைத் தேடிக் கொண்டு வந்தாள் ஒரு கிழவி.

"எம் மகளா?"

"ஆமாங்க ........ ஷா ப் பு க் க டை பிச்சைப்பா இல்லே...."

"ஆமா இருக்கலாம்; ஆனு எனக்கு யாரும் இல்லியே! நான் ஒண்டிக்கட்டை தான். பெண்சாதி, பொண்ணுன்னு யாருமே கிடையாது. போயிட்டு வாங்க ஆத்தா! எனக்கு அப்படி யாருமே கிடையாது..." என்று திருப்பி யனுப்பி விட்டார் சாமித் தேவர்.

பிச்சை முன்பு ஒரு கடையில் குமாஸ்தாவாக இருந்தான். ஆனுல் இப்பொழுது ஒரு சின்னக் கடைக்கு முதலாளியாகி விட்டான் என்பது அவருக்குத் தெரியும். இருந்தாலும் யார் எப்படி இருந்தால் அவருக்கு என்ன? அவர் அந்தப் பக்கமே தலைகாட்டுவது இல்லே.

பிச்சையின் கையில் பணம் ஏற ஏற, அவனைப் பற்றி என்னவெல்லாமோ தேவர் காதில் விழுந்து கொண்டிருந்தது. அவருடைய மகளுக்கு ஐந்து வருஷங்கள் ஆகியும் குழந்தைப் பேறு இல்லேயாம். இனியும் இருக்காதாம். ஆகவே அவனுக்கு வேறே கல்யாணம் செய்துவைக்க அவனுடைய அண்ணி தீவிரமாக முயன்று வருகிருளாம்!

என்ன, சாமித் தேவர் உயிரோடிருக்கும் போதா?

"எலே குள்ளச் சிங்காரம்! போய்ச் சொல்லுடா உன் முதலாளிகிட்டே, அவனுக்கு எம் மகளைத் தானம் செய்து கொடுத்துப் பிட்டது உண்மைதானடா. ஆனு அந்தப் பய எம் மக கையைப் புடிச்சிக்கிட்டானில்லே. அதை இன்னிக்கு விட்டுப்புட்டு இன்னெருத்தி கையைப் புடிச்சிடுவானு? அதுவும் எம் மூச்சு என் உடல்லே இருக்கக் கொள்ள? பாத்துப்புடறேன்னு போய்ச் சொல்லு!" என்று சொல்லிக்கூட அனுப்பினர்.

அவன்போய்ச் சொன்னுனே, சொல்லவில்லேயோ! அப்புறம் ஒவ்வொருவராக அவரிடம் வந்தார்கள். பந்தல்காரப் பக்கிரி வந்தான். "தேதி வச்சிட்டுச் சொல்லியனுப்பறதா அவங்க அண்ணியே சொல்லிச்சுங்க" என்றுன்.

"ஏன், பக்கிரி ஒரு பொஞ்சாதி இருக்கக் கொள்ள எந்தச் சீமானுயிருந்தாலும் இன்னெருத்தியைக் கட்ட முடியுமா? சொல்லேன். அதெல்லாம் முந்திக்காலம். இப்ப சட்டம் வந்திடுச்சு. நடக்காது. நடந்தால் குடும்பத்தோட அவன், அவன் அண்ணி எல்லாரையும் சேர்த்துக் கம்பி எண்ண வெச்சிடுவேன்! கஞ்சி குடிக்க வெச்சிடுவேன்" என்றார் தேவர்.

சொல்வதைக் கொஞ்சங்கூட ஆத்திரமோ பதற்றமோ படாமல், புன்சிரிப்பாகத்தான் சொன்னர். அதுவும் சீனுச் செட்டியார் கடையில் உட்கார்ந்திருந்த போதுதான் இந்தப் பேச்சு நடந்தது.



தேவர் சொல்லிக் கொண்டிருந்த தெல்லாம் பிச்சைக்கும் எட்டியது. அங்கேயும் சிலர் போனுர்கள்.

"சட்டம் வந்திருக்கிறது சரிதான், பிச்சை. ஆனு அதும் படியா ஒலகத்திலே எல்லாம் நடக்குது? முன்காலத்திலே யெல்லாம் ஒண்ணுக்குக் கொளந்தையில் லேன்னு இன்னெண்ணைப் புடிச்சிக் கட்டற தில்லேயா? சட்டம்னு பயந்தா நடக்குமா? அதுபாட்டுக்கு ஒரு பக்கம் இருந்துக்கிட்டுத்தான் இருக்கும். நாம எதிலேயும் அகப்பட்டுக்காமெ ஒரு தோது செய்துக்க வேண்டியது தான்!" என்று கை மாற்றுக் கேட்கப் போன வக்கீல் குமாஸ்தா அப்பாண்டை முடுக்கி விட்டான்.

"ஸ்லா..எனையாதிங்காணும். அப்படி ஒரு தோது செய்துக்க வழி ஏதாச்சும் இருக்கா? வெளயாட்டுக்கில்லே; வெளயாத்தான் கேக்கறேன்!" என்று ரகசியமாகக் கேட்டான் பிச்சைப்பா.

"ஏன் இல்லாமெ? இதோ பாரு, சுலபமான வழி ஒண்ணு இருக்கு. தேவர்தான் திரும்பிப் பாக்கறதில்லியா? உன் பெண்சாதிகிட்டே பேசாமே ஒரு விடுதலே எழுதி வாங்கிப்பிடு. அப்புறம் பாத்துக்கலாம். நினைச்சா வழியா இல்லே?"

அந்தக் கையோடு பத்திரம் ஒன்று வாங்கி வந்து அதில் முறைப்படி எழுதியும் கொடுத்தான் அப்பாண்டை.

சொர்ணம் முதலில் விஷயம் புரியாமல் கையெழுத்துப் போட்டுக் கொடுத்து விட்டாள். அப்புறம் தான் அவளுக்கு அந்தக் கையெழுத்து எதற்கு என்று தெரிந்தது. வயிறு குமைந்து குமைந்து பொங்கியது.

அன்ன ஆகாரமின்றி யோசித்துயோசித்து அவளுக்குப் பைத்தியமே பிடித்துவிடும் போலிருந்தது. அதை அதிகப்படுத்தி விடுவது போல் பிச்சையும் அவன் அண்ணியும் பெண் பேசுவதில் முனைந்திருந்தார்கள். சொர்ணம் தேவர் முகத்தில் விழிக்கப் பயந்து கொண்டு மறுகிக் கொண்டிருந்தாள். கடைசியாக ஒரு நாள் எப்படியோ நெஞ்சைத் திடப்படுத்திக் கொண்டு இருட்டின பிறகு ஆற்றங் கரையோடு நடந்து தன் பிறந்த வீட்டுக் குறட்டுக்கு வெளியே மொட்டுப் போலப் போய் உட்கார்ந்திருந்தாள்.

''யாரது?'' என்று கேட்டுக்கொண்டே வந்தார் தேவர்.

அப்பாவைக் கண்டதும் சொர்ணத்துக்கு அழுகைதான் குமுறிக் கொண்டு வந்தது. 'ஓ'வென்று கதறினாள்.

''எங்கே வந்தே?''

''அவுக வேறெ பொண்ணு பேசுறாக அப்பா!''

''கையெழுத்துப் போட்டுக் கொடுத்தாச்சில்லே?''

''தெரிஞ்சிருந்தால் போட்டிருக்கவே மாட்டேனே!''

''ம்...இப்ப தெரிஞ்சு போச்சில்ல?''

''நான் நொந்து கெடக்கறேம்பா.. எரக்கம் வைச்சிப் பேசுங்கப்பா!''

''இஷ்டப்பட்டுத்தானே போனே?''

''கொண்டவன் பேச்சைத் தட்டுடறதாப்பா?''

''இப்ப மட்டும் தட்டலாமோ?''

''அப்பா!''

''அதெல்லாம் முந்தி! வந்த வழியாப் போயிடு, சொல்றேன். ம் ம்.... நிக்காதே — போ!''

தேவர் மனம் இரங்கவேயில்லை. அவள் வீட்டுக்குத் திரும்பினாள்.

''எங்கனே போயிட்டு வாரப்புலே?'' என்று வழியை மறித்தான் பிச்சை.

''வெளியே போயிருந்தேன்...''

''உங்கப்பனைப் பார்க்கத்தானே?''

சொர்ணம் பொய் சொல்ல விரும்பவில்லை. ''ஆமா...'' என்றாள்.

''அந்தக் காயிதம் எங்கே?''

''எந்தக் காயிதம்?''

''தெரியாதில்லேஒனக்கு? கையெழுத்துப் போட்டுக் கொடுத்தியே — தெரியாதில்லே ஒனக்கு?''

சொர்ணத்துக்குத் 'திக்' கென்றது. ''சாமி சத்தியமா, உங்க மேலே ஆணையா....'' என்று ஏதோ சொல்ல வரும் போதே மண்டையிலே ஏதோ விழுந்தாற் போலிருந்தது. அப்புறம் என்ன நடந்ததோ, அவளுக்குத் தெரியாது.

ஆனால் குள்ளச் சிங்காரம்தான் ஓடிப் போய், தேவரிடம் நடந்ததை யெல்லாம் சொன்னான்.

''இதா பாருங்க .... என்னே இழுத்துக் காட்டிப் பிடாதிங்க....அக்காளுக்கு வந்தது எனக்குப் பொறுக்காமே ஓடியாந்தேன். ஐயா, ஒங்க கால்லே வுளுவறேன். நான் வந்தது போனது ஒங்களோட இருக்கட்டும்'' என்றான்.

''சரிதாண்டா போடா! காலையிலே அந்தப் பக்கம் வரேன். அதுக்கு மேலே பாத்துக்கிடலாம்டா, போடா!''

''போயிட்டு வரட்டுங்களா?''

''டேய்! ஆமா, அந்தப் பத்திரம் பின்னே எங்கே போச்சு?''

''கேக்கலியேன்னு பாத்தேன். அவுங்க அண்ணியிட்டே தான் இருக்காப்பலே இருக்கு. அதுதான் எடுத்து வெச்சிருக்க வேணும்னு எனக்கு ஒரு சமுசயம்.''

''ஏன்?''

''அவுங்க அண்ணி பேரின பொண்ணை அவருக்குப் புடிக்கலே போலிருக்கு. தவட்டூர் பொண்ணைத்தான் கட்டிக்கவேங்கிறார் போலிருக்கு. ஏதோ கரைசல் முரசலா இருக்கு.''

''தவட்டூர் பொண்ணு? யாரு, மருதமுத்து மகளா?''

''ஆமாமா .... அதேதான் — குறிப்புச் சரியாச் சொல்லிட்டியளே!''

குள்ளச் சிங்காரம் வீட்டுக்குத் திரும்பிய போது பிச்சையும் சோமுவும் அவர்கள் கடைக்கருகே பேசிக் கொண்டு நிற்பதைக் கண்டான். அவர்கள் கண்ணில் படாமல் போவதற்கு அவன் பட்ட பாடு! இருளோடு ஒதுங்கி நின்றான்.

''எல்லாக் காயிதமும் கழுக்கட்டிலே இருக்கிற கட்டுலேதாண்டா வெச்சிருப்பான் மனிதன். மரியாதையாக் கேட்டுப் பாரு; கொடுக்காட்டிப் போடு ரெண்டு!'' என்றான் பிச்சை சோமுவிடம்.

''தேவரையா?''

''அட ஒண்ணேத் தவிர அவன் வேறெ ஒண்ணுக்கும் அசைய மாட்டாண்டா. நான் பின்னாலே நிக்கிறேனில்லே? உனக்கேன் பயம்? பேசினா கையை வாங்கிப் புடமாட்டேன்?''



குள்ளச் சிங்காரத்துக்கு அதற்கு மேல் காதில் விழவில்லை. அப்புறம் அவன் காதில் விழுந்ததெல்லாம் தேவர் வெட்டுப்பட்ட செய்தி ஒன்றுதான்.

தேவர் பிழைக்க மாட்டாரா என்று ஒரே உறுதியாக இருந்தவன் அவன் ஒருவன்தான். அவன் எண்ணம் ஈடேறிப் போய் விட்டது.

மேலும் இரண்டு வாரங்கள் கழித்துக் குள்ளச் சிங்காரமும் சீனுச் செட்டியாரும் தேவரைப் பார்க்க வந்தார்கள்.

''ஆஸ்பத்திரியிலேயிருந்து குணமாயி வூட்டுக்கு வந்திட்டதாச் சொன்னாங்க. பார்த்துட்டுப் போகலாமுன்னு வந்தேன்!'' என்று சீனுச் செட்டியார் இரண்டு ஆப்பிள் பழத்தை எடுத்துத் தேவர் முன் வைத்தார்.

''இது எதுக்குங்க?'' என்றார் தேவர்.

''சும்மா இருக்கட்டும். இவன்தான் போயி வாங்கிக்கிட்டு வந்தான்....''

தேவர், சிங்காரத்தைப் பார்த்துச் சிரித்தார்.

''எப்படியிருக்கியே?''

''ஏன், நல்லாயிட்டேனே! கழுத்திலே ஒரு தையல். அப்படியே ஒட்டிக்கிடுச்சு.''

''வந்து எல்லாம் சரிதான். ஆனா ஒண்ணுதான் புரியலே எனக்கு?'' என்றார் செட்டியார்.

''என்ன புரியலே?''

''வாக்குமூலத்திலே தட்டுக்கெடலா மாத்திச் சொல்லிப்பிட்டிய போல் இருக்கே!''

''மாத்திச் சொல்லிப்புட்டேனா? இல்லிங்களே. சரியாகத்தானே சொல்லியிருக்கேன்?''

''வெட்டினது பிச்சையாக்கங்களே?''

''ஆமா. என் மருமவப் பயதான் வெட்டினான். அதுக்கென்ன?''

''ஆனா வாக்குமூலத்திலே சோமுன்னு சொல்லியிருக்கீங்களே!''

''ஆமா, அப்படித்தான் சொல்லியிருக்கேன். ஏன், அதிலே என்ன தப்பு? நான் செத்திருந்தேன்னு வையிங்க, அப்ப என்ன ஆகும்? வெட்டினவனுக்குத் தூக்குல்ல வந்திடும்? எம்மவ கட்டுக்கழுத்தியா இருக்கிறதைப் பாக்கறதா, அதோட நெத்திப்பொட்டை தானே அழிச்சிடறதா?''

''அப்ப ஊரான் வூட்டுப் பிள்ளையை மட்டும் நீங்கள் மாட்டிக்க விட்டுடறது நியாயமா?''

''நாயமில்லேதான். வழக்குன்னு—நடந்தா விசாரணை நடக்குமில்லே? நீங்கள்ளாம் நடந்ததைத்தானே சொல்லிங்க? தன்னாலே குத்தவாளி வேன்னு விட்டுட்டுப் போறாங்க. அப்படியே போட்டாலும் ஒரு வருசம், ஆறு மாசம். போய்த்தான் இருந்துட்டு வரட்டுமே, ரெண்டு பயலுகளும். உசிரோட வெளையாடத் துணிஞ்சுக்கிட்டானுகளே?— ஒழுங்கு இல்லாத பயலுக உசிரோட வெளையாடத் துணியலாமா? அதுக்கு ஒரு தண்டனைகூட இல்லாமே தப்பிச்சிடறதா? — இதோ பாரு, சொர்ணம், ஆரு வந்திருக்காங்க, பாரு! ஆசையா, ஆப்பிள் வாங்கிட்டு வந்திருக்காரு செட்டியாரு....வந்து விழுந்து கும்பிட்டுப் போ!'' என்றார் தேவர்.

சொர்ணம் வந்து வணங்கி எழுந்தாள்.

''பிள்ளையாப் பொறக்கட்டும்னு ஆசீர்வாதம் செய்யுங்க செட்டியாரையா!'' என்று சொல்லி மிகுந்த மனநிறைவோடு சிரித்தார் சாமித்தேவர்.


டயர்ஸோல்ஸ்
மூலமாக புதிய டயர் ஆயுள்
டயர்ஸோல்ஸ் அளிக்கும் பிரத்தியேக லோடட் பொஸிஷன் க்யூர் முறையினுல் (Special Loaded Position cure) ஒவ்வொரு தடவையும் உங்கள் டயர்களுக்கு புதிய டயர் மைலேஜ், ஒழுங்காக ரோடுடன் பதியும் தன்மை (better road-holding), ஓடும்போது உஷ்ணமடையா திருத்தல் (cooler Running) ஆகியவற்றுடன் ஒவ்வொரு டயருக்கும் அதிக ட்ரெட்கள் கிடைக்கின்றன.
டயர்ஸோல்ஸ்-மீண்டும் மீண்டும் புதிய டயர் மைலேஜ் கொடுக்கிறது.
ஸ்டேன்ஸ் டயர் & ரப்பர் ப்ராடக்ட்ஸ் (பி) லிமிடெட்
திருச்சி ரோடு, கோயம்புத்தூர், தென் இந்தியா
மற்றும் ட்''க்டரிகள்: சென்னை, திருச்சி, வேலூர், மங்களூர், கோட்டயம் & விஜயவாடா.


பூர்ணமான
சிறந்த
பல ரக வர்ணங்கள்.
காஞ்செஸ் மைகளை
உபயோகித்து
உங்களது
அச்சிடும் தரத்தை
உயரச் செய்யுங்கள்
காஞ்செஸ் ப்ரிண்டிங் இங்க் பாக்டரி லிமிடெட்
கல்கத்தா • பம்பாய் • மதராஸ் • டில்லி


எமது தீபாவளி வாழ்த்துக்கள்
"தீயசக்திகளை ஒழித்து
உலகிற்கு நன்மை செய்வோம்"
திண்டுக்கல்
அங்கு விலாஸ்
M.V. முத்தையா பிள்ளை [FIRM]
வாசனைப் புகையிலை
REGD. NOS: 12700, 149348.
TEL: "ANGUVILAS" DINDIGUL PHONE: 71.
ANGUVILAS' M.V. MUTHIAH PILLAI [FIRM]
SCENTED TOBACCO IS VERY TASTEFUL FOR CHEWING

# ஏசால் ஒன்று வேண்டும்!

நெடுங்கதை



முதலில் இதைப் படியுங்கள் :

உணர்ச்சிகளை அப்படியே வடித்து வார்த்துச் சொல்லுவதற்கு உலகத்தில் பாஷை இல்லை. மனிதனுடைய உலகம் எத்தனை பலவீனங்கள் நிறைந்ததென்று பார்த்தீர்களா? நினைத்ததை நினைத்தபடியே பேசுவதற்குச் சொற்கள் இல்லாத உலகம் பலவீனமானதுதானே?

ஒரு பழத்தில் அதனுடைய சாறு கனிந்து நிறைந்திருப்பதைப் போல் எதைச் சொல்லுகிறோமோ அந்த உணர்ச்சி அதைச் சொல்லும் சொற்களில் ததும்பி நிற்க வேண்டும். அப்படிப் பரிபூரணமாகத் ததும்பி அல்லது ததும்பி நிற்கிற சொல் எதுவோ அதுதான் மந்திரம். அதை நாம் வணங்க வேண்டும்.

இங்கே சொல்லப் போகிற கதையைக் கந்தர்வர்களுக்கென்று தனிமையானதொரு மொழி இருந்து அதை நானும் பழகிக்கொண்டிருந்தால் நிச்சயமாய் அதில் தான் சொல்ல விரும்புவேன். மனிதர்களின் மொழியில் மனிதர்களுக்குச் சொல்ல வேண்டிய கதையாக இதை நான் நினைக்கவில்லை. ஆனாலும் எனக்குத் தெரிகிற மொழியில் எனக்குத் தெரிகிற மொழியைப் பேசுகிறவர்களுக்குப் புரியும்படி இந்தக் கதையை நான் சொல்லியாக வேண்டியிருக்கிறது. பழைய ஏட்டுச்சுவடிகளைத் தேடிப் பிடித்து ஆராயும் வேலையாகத் தமிழ் நாட்டின் பழம் பெருமை வாய்ந்த கிராமங்களில் நான் சுற்றி அலைந்து கொண்டிருந்த நாட்களில் எனக்கு இந்தக் கதை கிடைத்தது. இது ஓர் அபூர்வமான கதை. இந்தக் கதையில் வருகிறவர்களின் உணர்ச்சிகளை முழுமையாகச் சொல்லி முடிப்பதற்கு என்னிடம் நான் சேர்த்து வைத்துக் கொண்டிருக்கிற சொற்கள் போதுமானவையா, இல்லையா என்பதை என்னாலேயே உணர முடியவில்லை. ஆனாலும் சொல்கிறேன்.

இதை நாம் பூர்ணமாகச் செய்ய முடியுமா, இல்லையா, என்று சந்தேகம் இருந்தும் 'நம்மால்

## நா. பார்த்தசாரதி

முடிந்த வரை இதைச் செய்யலாமே' என்ற ஆசையோடும் தவக்கத்தோடும் எத்தனையோ காரியங்களை நாம் செய்யத் தொடங்கி விடுவதில்லையா? அப்படித்தான் இந்தக் கதையில் வருகிறவர்களைப் பற்றியும், அவர்களுடைய உணர்ச்சிகளைப் பற்றியும் நான் எழுதத் துணிகிறேன். படிக்கத் துணிகிற உரிமை இனி உங்களுடையது!

நாச்சியார்புரத்தைப் பற்றி உங்களுக்குத் தெரிந்திருக்க நியாயமில்லை. இந்தக் கதையில் இனிமேல் நான் சொல்லப் போகிற செய்திகள் தெரிந்த பின்புதான் அந்த ஊரிலும் உங்கள் ஞாபகத்துக்குள் நிரந்தரமாக இடம் பெறத் தக்கதொரு காவியம் இருக்கிறதென்பதை நீங்கள் புரிந்து கொள்வீர்கள்.

இந்த உலகத்தில் மழையும் சூரியனும் உள்ளவரை மறக்க முடியாதவை என்ற விதத்தைச் சேர்ந்தவையாக நினைத்துப் பார்ப்பதற்கு எத்தனையோ அமர காவியங்களைக் கடந்த காலத்துக் கவிகள் படைத்து வைத்து விட்டுப் போயிருக்கிறார்கள். யானை நடப்பது போல் கம்பீர கதியில் பாடிய கவிகள் சிலர். குயில் அகவுவது போல் நளின கதியில் பாடிய கவிகள் சிலர். மனத்திலிருப்பதைச் சொற்களால் பாடுகிறவர்கள் மட்டும் கவிகள் இல்லை. அழகிய நினைவுகளைச் சுமப்பவர்கள் எல்லாருமே ஊமைக் கவிகள். அப்படி அழகிய நினைவுகளை மனம் நிறையச் சுமந்து கொண்டிருக்கும் ஊமைக் கவிகள் இந்த உலகத்தில் பலர் இருக்கிறார்கள். பல்லாயிரம் ஊமைக்கவிகளுக்கு ஒற்றைப் பிரதிநிதியாகத்தான் எங்கோ ஒரு மூலையிலிருந்து யாரோ ஒரு கவி எழுந்து நின்று வாய் விட்டுப் பாடுகிறான். அந்த ஒருவனுடைய குரலிலிருந்து — தங்களுக்குக் குரல் இல்லாமற் போன காரணத்தால் பாட முடியாமல் இருக்கும் இலட்சோப இலட்சம் இதயங்களின் கதறுக்கங்கள் கேட்கின்றன. அந்தப் பல்லாயிரம் கதறுக்கங்கள்தாம் கவிதையில் உணர்ச்சிகள், சங்கீதத்தில் இராகங்கள், நிருத்தியத்தில் அபிநயங்கள், நாடகத்தில் மெய்ப்பாடுகள்—எல்லாவிதமான நுண் கலைகளுக்கும் மூலதனம் இந்த மனோபாவமே என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொண்டு பார்த்தால் சமூக உணர்ச்சியோடு கலைகள் எவ்வளவுக்கு ஒன்றிப் போயிருக்கின்றன என்பதைப் புரிந்து கொள்ளலாம். புரிந்துகொள்ள வேண்டிய அவசியமும் இந்தக் கதைக்கு உண்டு.

கோவிலை விடப் பெரிய தேவாலயம் சமூகம். சமூகத்தை மதிக்கவும் வணங்கவும் தெரிய வேண்டும். ஏனென்றால் இந்த நளின கலைகள் எல்லாம் சமூக உணர்ச்சிகளிலிருந்தே பிறந்தவை. இவ்வளவு அடிப்படை நினைவுகளும் இந்தக் கதையைப் படிக்கத் தொடங்குமுன் ஏற்பட வேண்டும் என்பது என் அபிப்பிராயம். சமூக



உணர்வுகளை உற்பத்தியாகும் இடமாகக் கொண்டு வளர்ந்துதான் கலைகள் தெய்வீகத்தோடு சங்கமமாகின்றன. பிறக்கும் இடமாகிய சமூகத்துக்கும் சங்கமமாகும் இடமாகிய தெய்வீகத்துக்கும் நடுவேதான் அந்தந்தக் கலைகளை ஆள்பவர்களின் சொந்த வாழ்க்கைப் போராட்டங்கள் ஏற்படுகின்றன. இந்தக் கதையில் வருகிற மணவாளனும், கோதையும் மனிதர்களுக்கிடையே மனிதர்களாக வாழ்ந்தபோது மனிதர்கள், கலைகளுக்கிடையே கலைஞர்களா யிருந்தபோது கலைஞர்கள், எண்ணங்களால் உயர்ந்திருந்த போது தேவர்கள் - என்று பல நிலைகளுக்கு ஆளாகியிருக்கிறார்கள். ஆனால் மண்ணின் சகல விதமான அழுக்குகளுக்கும் இடையே அவர்கள் தேவர்களாக வாழ முயன்றார்கள் என்பதுதான் கருத்து. இந்தக் கதையைப் படித்தபின் அதுவே உங்கள் கருத்தாகவும் இருக்கும்.

## 1. மலையடிவாரத்து மண்டபம்

நாச்சியார்புரம் இரகுநாத ஜெயசேகரக் கவுண்டர் வீட்டுப் பரணில் பழைய ஓட்டை உடைசல் பொருள்களுக்கு நடுவே அந்தப் பழைய ஏட்டுச்சுவடிக் கற்றையைத் தேடிக் கண்டெடுத்தேன் நான். 'கோதை மணவாளன் வில்லுப் பாட்டு' என்று ஏதோ ஒரு நாடோடிப் பிரபந்தம். அதே கற்றையில் அதன் தொடர்பாகவே 'கோதை- மணவாளன் தொண்டிச் சிந்து' என்று மற்றொரு பிரபந்தமும் இருந்தது. பல சிற்றூர்களில் பலவிதமான காலங்களில் எழுதப்பட்ட ஏட்டுச்சுவடிகளைப் பார்த்துப் பரிசோதித்துப் பழகிய எனக்கு நாச்சியார்புரம் இரகுநாத ஜெயசேகரக் கவுண்டர் வீட்டுப் பரணில் கண்டெடுத்த அந்தச் சுவடி எழுதப்பட்ட காலத்தைக் கண்டுபிடிப்பதில் அப்போது எந்தவிதமான சிரமமும் ஏற்படவில்லை. பழம் பெருமை வாய்ந்த அந்தச் சிற்றூரில் ஏதோ ஒரு வகையில் குறிப்பிட்டுப் பேசத் தக்கவர்களா யிருந்த கோதை, மணவாளன் என்ற இருவரைப் பற்றி இரண்டு மூன்று தலைமுறைகளுக்குமுன் பாடப்பட்ட பிரபந்தங்கள் என்று அவற்றைப் பற்றித் தெரிந்து கொள்ள முடிந்தது. நாச்சியார்புரம் பாளையத்தின் பொது வாழ்க்கையிலே கடந்த காலத்தில் மறைந்து போன எண்ணற்ற தலைமுறைகளில் ஏதோ ஓர் அழகிய தலைமுறை கோதை என்ற அந்தப் பெண்ணழகியும், மணவாளன் என்ற அந்த ஆணழகனும் காவிய நிகழ்ச்சிகளைப் படைத்துக் கொண்டு கந்தர்வர்களின் எண்ணங்களோடு மனிதர்களின் உடல் சுமந்து வாழ இடமாக இருந்திருக்கிறது என்பதைப் புரிந்து கொண்டேன்.

ஜெய சேகரக் கவுண்டர் அப்படி ஒன்றும் பெரிய தமிழறிஞர் என்று சொல்லி விடுவதற்கில்லை. ஆனால் அவருடைய குடும்பத்தில் முன்னோர்கள் பலர் தமிழறிஞர்களா யிருந்திருக்கிறார்கள் என்பதை அவர் சொல்லத் தெரிந்துகொண்டேன் நான். அந்த வீட்டுப் பரணிலிருந்த ஏட்டுச் சுவடிகளாலும் அது தெரிந்தது.

எனக்குக் கிடைத்த வில்லுப்பாட்டையும், தொண்டிச் சிந்தையும் பற்றிக் கவுண்டரிடம் விசாரித்தபோது இன்னோர் உண்மையையும் கூறினார் அவர்: ''இந்த ஊருக்கு மேற்கே மலையடிவாரத்து மண்டபம் ஒன்று இருக்கிறது. எனக்கு நினைவு தெரிந்த நாளிலிருந்து 'கோதை மணவாளன் மண்டபம்' – என்றுதான் அதைப் பெயர் சொல்லி அழைக்கிறார்கள். அந்த மண்டபத்துக்குப் பக்கத்தில் அதே பெயரில் ஆழம் காண முடியாத பயங்கரச் சுனை ஒன்றும் இருக்கிறது. மண்டபத்தைச் சுற்றிலும் அது அமைந்திருக்கிற பாறையின் கீழே அடர்த்தியான மூங்கிற் காடு. மேற்கு மலைத் தொடர்களிலிருந்து யானைகள் திமர் திமரென்று கூட்டம் கூட்டமாக இந்த மூங்கிற் காட்டில் இறங்கித் திரியும். ஆதலால் அந்தப் பகுதியில் அதிகமாக மக்கள் நடமாட்டம் இருக்காது. நீங்கள் அவசியம் அந்த இடத்தைப் பார்த்துத்தான் ஆக வேண்டுமென்றால் நாளைக்கு ஏற்பாடு செய்கிறேன். நாளைக்குப் பௌர்ணமி நிலா. சாயங்காலத்துக்குமேல் கட்டுச் சாதங் கட்டிக் கொண்டு மலையடிவாரத்துக்குப் புறப்படுவோம்'' என்றார் ஜெயசேகரக் கவுண்டர்.

''இந்த ஏட்டுச் சுவடிகளை ஆராய்ந்து நூல் வடிவில் அச்சிட்டு வெளியிடுவதனால் இதிலுள்ளவற்றோடு தொடர்புடைய இடங்களையும் நான் பார்த்தாக வேண்டும். சில உயர்ந்த கதாபாத்திரங்கள் தாங்கள் எந்த மண்ணை மிதித்து நடந்தார்களோ அந்த மண்ணையும் ஊரையும் தங்களைப் போலவே தங்களுடைய காவியங்களில் மணக்கச் செய்து கொண்டிருப்பார்கள். இராமனையும், சீதையையும் தொழும் போது அயோத்தியையும் சேர்த்துத் தொழவில்லையா நாம்? கோவலனையும், கண்ணகியையும் நினைக்கும்போது காவிரிப் பூம்பட்டினத்தையும் நினைப்பதில்லையா? அப்படியே இந்தக் கோதையும், மணவாளனும் தங்களுடைய இனிய ஞாபகங்களை இந்த ஊரில் விட்டுப்போயிருக்கலாம். இந்தப் பிரபந்தங்களை அச்சிட்டு வெளியிடப் போகிறவன் என்ற முறையில் அவர்களைப் பற்றிய ஞாபகங்களாக இங்கிருப்பவற்றை நான் பார்த்தே ஆக வேண்டும்.''

''இந்த ஆராய்ச்சியாளர்களிடம் மாட்டிக் கொண்டால் இப்படி வம்புதான். சரி...சரி....நாளைக்குச் சாயங்காலம் புறப்படலாம்'' என்று நட்புரிமையோடு அலுத்துக் கொண்டார் ஜெயசேகரக் கவுண்டர்.

''அப்படிச் சொல்லி விடாதீர்கள்.. நேற்றைய மனிதர்கள் இன்றைய ஞாபகங்கள். இன்றைய மனிதர்கள் நாளைய ஞாபகங்கள். வாழ்வதற்கு முன்னும் சரி வாழ்ந்து முடித்த பின்னும் சரி, வாழ்க்கையே ஒரு ஞாபகம் தான். வாழத் தொடங்குகிற வரை அது நிறைவேற வேண்டிய ஞாபகம். வாழ்ந்து முடித்த பின் நிறைவேறி முடிந்த ஞாபகம்! இந்த ஞாபகங்களை யெல்லாம் அநுபவித்துச் சுவைகாண்கிறவனே ஆராய்ச்சியாளன்.''

— என்று என் பேச்சினால் என் கட்சியைப் பலப் படுத்திக் கொள்ள முயன்றேன் நான்.

இரகுநாத ஜெய சேகரக்





கவுண்டர் தம்முடைய வெட்டரிவாள் போன்ற மீசைக்குக் கீழே வரிசையாகப் பெரிய பற்கள் தெரியும்படி சிரித்தார்.

''எனக்கு இப்போது ஒரே ஞாபகம், என்ன தெரியுமா? மலைச்சரிவில் மேட்டாங்காடாகிய செம்மண் நிலத்தில் ஒரே தாக்காக ஐம்பது ஏக்கர் நிலக்கடலை பயிர் செய்திருக்கிறேன். கடலை நன்றாகப் பருப்பு வைத்து விளைந்து விட்டது. இன்னும் ஒரு வாரத்திலோ, பத்து நாட்களிலோ தோண்டி எடுத்து விடலாம். அதற்குள் யானைக் கூட்டமோ, காட்டுப்பன்றிகளோ நிலத்தில் இறங்கிச் சாகுபடியைப் பாழாக்கி விடாமலிருக்க வேண்டுமே என்று நான் வேண்டிக் கொள்ளாத தெய்வமில்லை. இப்போது நான் நினைத்து அநுபவித்து அக்கறையோடு கவலைப் படுகிற ஒரே ஞாபகம் இதுதான்.''

''மிகவும் நல்லதாய்ப் போயிற்று. கடலைக் காட்டையும் பார்த்தாற் போல் இருக்கும். அதே சமயத்தில் நாளும் மலையடிவாரத்து மண்டபத்தைப் பார்த்துவிடலாம். நாளைக்குப் பௌர்ணமி நிலாவில் இரண்டு பேருடைய ஞாபகமும் நிறைவேறி விடும்'' என்றேன் நான்.

மறுநாள் பொழுது சாய்கிற நேரத்துக்கு வில் வண்டியைக் கட்டிக் கொண்டு மலையடிவாரத்துக்குப் புறப்பட்டோம் நாங்கள். நானும், கவுண்டரும், துப்பாக்கி சகிதம் இரண்டு வேட்டைக்காரர்களும் (ஷிகாரிகள்) அந்த வில் வண்டியில் சென்றோம். மாட்டுக் கழுத்து மணிகளும், சலங்கைகளும் ஒலிக்க, வில் வண்டியின் பின்புறக் கூட்டுக்கு அப்பால் அந்தக் கூட்டின் அரை வட்டத்துக்குள் அடங்கினாற் போலத் தெரியும் வானத்தில் முழுநிலாப் புறப்படும் அழகை அநுபவித்துக் கொண்டே பயணம் செய்தோம்.

நானும் எத்தனையோ மலையடிவாரத்துச் சாலைகளில் பிரயாணம் செய்திருக்கிறேன். ஆனால் இந்த நாச்சியார்புரம் ஊரிலிருந்து மேற்கே மலையடிவாரத்துக்குப் போகும் சாலையைப் போல் மனத்தை மயக்கும் அழகு வாய்ந்ததொரு சாலையை நான் இதுவரை கண்டதில்லை.

அதோ, கிழக்கே – அந்த மாந்தோப்பின் அடர்த்தியான பசுமை எந்த உயரத்தில் முடிகிறதோ, அந்த முடிவை ஆரம்பமாகக் கொண்டு, பங்குனி மாதத்து நிலா எழுந்து புறப்பட்டு விட்டது. தோட்டத்து மாம்பூக்களின் மணத்தைச் சுமந்து கொண்டு மதலைக் காற்று மெல்லத் தவழ்ந்து செல்லக் குழந்தை போலத் தீண்டிக் கொஞ்சுகிறது.

மாந்தோப்புக்கு இப்பால் சாலையில் வைக்கோல் பார வண்டிகள் வரிசை வரிசையாக நகர்ந்து கொண்டிருக்கின்றன. 'எந்த விநாடியிலும் நான் கிடைக்காமல் இருண்டு போய் விடலாம்' –என்று பயமுறுத்தும் இந்த மண்ணுலகத்தின் சாசுவதமற்ற சுகங்களைப் போல் வைக்கோல் பார வண்டிகளின் கீழே 'முணுக்' 'முணுக்' கென்று எரிந்து கொண்டிருந்த அரிக்கேன் விளக்குகள் காற்றில் தணிவதும், வளர்வதுமாக மினுக்கிக் கொண்டிருந்தன. இந்த அழகிய சூழ்நிலையில் மௌனமாயிருக்க முடியாத குறும்புக்காரக் குயில் ஒன்று விட்டு விட்டு அகவிக் கொண்டிருந்தது. நிலாப் பவனி புறப்படும் சௌந்தரியமயமான முன்னிரவில் அந்த வழியின் இருபுறமும் மாந்தோப்புக்களில் நிறைந்திருந்த ஏதோ ஓர் அழகு – சொற்களிலே அடக்கிச் சொல்ல முடியாத அழகு – அந்தக் குயில் கூவுகிற கணத்தில் மட்டும் தொனி வடிவில் மேலெழுந்து பொங்கி விட்டு அடுத்த கணமே தணிந்து விடுவது போலத் தோன்றியது. அந்தக் குயிலின் குரலை இப்படிக் கற்பனை செய்வதுதான் பொருந்தும். சாலைக்கும் மாந்தோப்புக்களுக்கும் நடுவே இருபுறமும் ஆறு என்றும் சொல்ல முடியாமல், ஓடை என்றும் சொல்ல முடியாமல் சின்னஞ் சிறு ஊற்றுக்கள் கலகலவென்று பாய்ந்து கொண்டிருந்தன. படிகம் உருகி ஓடுவதுபோல் நிலவொளியில் மின்னும் அந்த ஊற்று நீர் கற்களில் புகுந்து மோதும்போது நாட்டியக்காரியின் பாதங்களில் சிலம்பு குலுங்குவதைப் போலப் பிறக்கும் ஓசை எதுவோ அதைச் சொல்லுவதற்கு அந்த ஓசையே சொல்லாக முடிந்ததைத் தவிர வேறு சங்கேதங்கள் பயன்பட மாட்டா'–என்று உறுதியாகக் கூறிவிடத் தக்கதொரு தனிப்பட்ட ஒலியழகு அது.

அமைதியான அந்த முன்னிரவில் பால் நிலவின் கீழே தென்னை ஓலைகளும், மாமரத்துக் கிளைகளும் காற்றோடு

பேசும் பாஷையில் — மௌனமே சொல்லாகி நிறைந்தாற் போன்ற அழகுடனே விளங்கியது அந்தச் சூழ்நிலை. அந்தச் சாலையிலேயே எண்ணற்ற பல தடவைகள் பயணம் செய்து அலுத்துப் போனவரைப் போல ஜெயசேகரக் கவுண்டர் வண்டியில் உட்கார்ந்தபடியே தூங்கியிருந்தார். நான் ஏதோ புதியதாய் அப்போதுதான் காணாததைக் கண்டவன் போல் சாலையின் அழகையும், நிலாவையும், வெறித்து வெறித்துப் பார்ப்பதைக் கண்டு, ஷிகாரிகள் ஆச்சரியமடைந்திருக்க வேண்டுமென்று தோன்றியது. அவர்கள் என்னைக் கண்டு ஆச்சரியப்பட்டது எனக்கு ஆச்சரியமாயில்லை. இரண்டு மூன்று நாழிகைப் பயணத்துக்குப் பின் அந்த இடத்தை அடைந்து விட்டோம். வண்டிப்பாதை முடிகிற இடத்திலிருந்து மேடும் பள்ளமுமாகப் பாறைகள் தொற்றிக் கொண்டிருந்த காட்டு வழியாக மண்டபத்துக்குச் சிறிது தூரம் நடந்து போக வேண்டியிருந்தது.

அந்த மண்டபம் அமைந்திருந்த சூழலில் 'ஹோ' என்று சுழித்துக் கொண்டு வீசும் மலைக் காற்றும் எங்கோ தொலைவில் காட்டு யானைகள் பிளிறும் ஒலியும், பயங்கரமும், தனிமையும், சொல்லில்லாததொரு துயரத்தை எப்படியோ ஒரு விதத்தில் சொல்லிவிட முயலுவதைப் போன்ற சோகமும்,— தெரிந்தன. மேல் நோக்கி ஏறும் ஒரு பெரிய பாறையின் நுனியில் தொற்றிக் கொண்டு நிற்கிறாற் போல அந்த மண்டபம் கட்டப்பட்டிருந்தது. அதற்குப் பின்புறம் தலை சுற்றுகிறாற் போல் இரண்டாயிரம், மூவாயிரம் அடி பெரிய பள்ளம். மண்டபத்தின் முன்புறம் ஒரு பாறையும் இன்னொருபாறையும் கூடுகிற பொருத்து வாயில்மலையை இரண்டு கூறாகக் கீறி எடுத்துச் சொருகியதுபோலிருந்த பிளவில் அந்தச் சுனை நீண்டு அகன்று அமைந்திருந்தது. எதிரே வருகிற எல்லாவற்றையும் விழுங்கிவிட மலையே கோரமாகத் தன் வாயைத் திறந்து கொண்டிருப்பது போல் அந்தச் சுனை தேங்கியிருந்த பாறைப்பிளவு தோற்றமளித்ததால் அபூதமானதொரு பயங்கரத் தன்மை அங்கே காண்பவர்களுக்குத் தெரிந்து கொண்டிருந்தது. ஒரு காலத்தில் அந்தச் சுனைக்கு முதலை மடு என்று பெயர் இருந்ததாம். ஷிகாரிகளோடு என்னை அங்கே சுற்றிப் பார்க்கச் செய்துவிட்டு மறுபடியும் கீழே இறங்கிப் போய் வண்டியில் ஏறிக் கொண்டு கடலைக் காட்டைச் சுற்றிக் கண்காணிக்கச் சென்று விட்டார் கவுண்டர்.

''சிறிது நேரம் சுற்றிப் பார்த்து விட்டு நிலா உச்சிக்கு வருவதற்குள், மண்டபத்தின் மேற்பகுதியில் ஏறிக் கொண்டு விட வேண்டும். நேரம் ஆக ஆகக் காட்டு விலங்குகள் சர்வ சாதாரணமாக இந்தப் பக்கங்களில் திரியத் தொடங்கி விடும். அதோ; அங்கே பாருங்களேன்'' என்று மண்டபத்துக்குக் கீழே பள்ளத்துச் சரிவைச் சுட்டிக் காண்பித்தார் கூட இருந்த ஷிகாரிகளில் ஒருவர்.

அவர் சுட்டிக் காண்பித்த இடத்தில் [illegible]மூங்கிற் புதருக்கு அப்பால் வெட்ட வெளியில் கருங்குன்றுகள் நகருவதைப் போல ஒரு யானைக் கூட்டம் நகர்ந்து கொண்டிருந்தது. அந்த மண்டபத்தையும் சுனையையும் நன்றாகச் சுற்றிப் பார்த்த பின் உடனிருந்தவர்களிடம் விசாரித்துத் தெரிந்து கொண்டவற்றிலிருந்தும், எனக்குக் கிடைத்த சில ஏட்டுச் சுவடிகளிலிருந்தும் இந்த அற்புதமான கதையை நான் உருவாக்க முடிந்தது. நாச்சியார்புரத்தையும், அதன் அழகிய சூழ்நிலைகளையும், அந்த மலையடிவாரத்து மண்டபத்தையும் கோதையையும், மணவாளனையும் நான் எப்படி மறக்க முடியவில்லையோ, அப்படி இந்தக் கதையின் வாசகர்களும் மறக்க மாட்டார்களென நான் நிச்சயமாய் நம்புகிறேன். நம்பலாமல்லவா?

## 2. கழைக்கூத்து

முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னும் ஒரு கோடைகாலம். நாச்சியார்புரத்துக்கு வாய்த்திருந்த இயற்கையழகின் மிகுதியால் கோடையின் வெப்பமும் அங்கு அதிகமாகத் தெரியாது. கோடையிலும் சாரல் பொழிந்து குளிர்விக்கும் மலையடிவாரத்துக் குறிஞ்சி நிலமாயிற்றே அது? கோடை வருகிறதென்றால் நாச்சியார் புரத்து மனிதர்களுக்குக் கொண்டாட்டம். கோடையில் அந்தப் பாளையத்தின் எட்டுத் தலைக்கட்டுக்களும் ஒன்றுகூடிப் பன்னிரண்டு நாட்கள் வேனில் விழாக் கொண்டாடுவார்கள். அடாடா! 'அந்தப் பன்னிரண்டு நாட்களும் மயன் சிறப்புற இயற்றிய தெய்வீக அலங்காரங்களுடன் அமராவதி நகர் விழாக் கோலம் கொண்டாற் போல நாச்சியார் புரம் விளங்கும்' என்று ஒப்பிடுவதற்கு



எனக்கே கூச்சமாயிருக்கிறது. ஏனென்றால் அமராவதி விழாக் கோலம் கொண்டால் எப்படியிருக்குமென்பதை நான் பார்த்ததில்லை. ஒரு வேளை அமராவதியின் விழாக் கோலத்தைக் காட்டிலும் நமது நாச்சியார்புரத்தின் விழாக் கோலமே சிறப்பாயிருக்கும் பட்சத்தில் நான் ஒப்பிட்டது தப்பாகப் போய் விடுமே என்ற பயம் எனக்கு இருக்கிறது. இந்தப் பயத்திலிருந்து தப்பித்துக் கொள்ள ஒரே ஒரு வழிதான் உண்டு. அது மிகவும் சாமர்த்தியமான வழி. நாச்சியார் புரத்தின் வேனில் விழா எப்படி இருந்ததென்றால் நாச்சியார்புரம் என்ற பேரழகு வாய்ந்த சிற்றூரில் ஒரு விழா நிகழ்ந்தால் எப்படி இருக்குமோ அப்படி இருந்தது என்று சாதுரியமாகச் சொல்லி முடித்து விடுவதுதான்.

அன்று சித்திரா பௌர்ணமி. வேனில் விழாவின் முதல் நாள். ஊர் முழுவதும் பூத்திருப்பது போல மல்லிகையும் பிச்சியும் மணந்து கொண்டிருக்கின்றன. நாச்சியார் புரத்து மண்ணில் பூக்கும், மல்லிகைக்கும், பிச்சிக்கும் அபூர்வமான மணம் உண்டு. பெண்களுக்கு நாச்சியார் புரத்தின் பேரைக் கேட்டாலே இந்தப் பூக்களின் ஞாபகம்தான் வரும். திருவிழாக் காலத்தில் நாச்சியார்புரமே பூக்களால் மணந்து கொண்டிருக்கும் என்றால் அதில் வியப்பொன்றும் இல்லை.

ஆகா! சித்திரை மாதத்து முழு நிலவின் கீழ் அதோ நாச்சியார்புரம் ஊர்ப் பொதுவில் வசந்தமாலை அம்மன் கோவிலுக்கு முன்னால் கூடியிருக்கும் கூட்டத்தைப் பார்த்தீர்களா? எட்டுப்பாளையத்துச் சிற்றரசர்களும் கம்பீரமாக வீற்றிருக்கிறார்கள். தலைக்கட்டுக்கள் ஊர் நாட்டாண்மைக்காரர்கள், பதங்களை மனத்துக்குள்ளே இணைத்துக் கொண்டிருக்கும் கவிகள், அப்படிக் கவிகள் இணைத்த பதங்களை மெல்ல இதழ்களில் இசைத்துக் கொண்டிருக்கும் இசைக் கலைஞர்கள், பாளையத்துப் பொதுமக்கள், சிலம்ப வித்தைக்காரர்கள், மந்திரவாதிகள்,—என்று விதம் விதமான மக்கள் கூடியிருக்கும் கூட்டத்துக்குநடுவே கழைக் கூத்து நடைபெற்றுக் கொண்டிருந்தது. பக்கத்துக்குப் பக்கம் மூன்று மூங்கில்களை நட்டுத் தாங்கிய இரண்டு கம்பங்களுக்கு இடையே கயிற்றைக் கட்டி அதில் நின்று ஆடிக் கொண்டிருந்தாள் அந்த இளம் பருவத்துக் கழைக்கூத்தி. கூட்டத்தினரின் கண்கள் எல்லாம் கயிற்றின் மேல் ஆடிக் கொண்டிருக்கும் அவள் மேல் இலயித்திருந்தன. அந்தக் கூத்துக்கென்றே படைக்கப் பட்டாற் போன்ற நளினமான உடல் அவளுக்கு. நிலாவின் கீழே கூட்டத்துக்கு மேலே தனித்த உயரத்தில் பூச்சரம் சரிவது போல் அந்தப் பெண் கயிற்றில் நடந்த காட்சி, சந்திரனிலிருந்து கீழிறங்கிய தேவ கன்னிகை ஒருத்தி, 'நான் இதற்கும் கீழே இறங்கி வரலாமா? வேண்டாமா?' — என்று கேட்டுத் தயங்கியபடியே உலாவுவது போல் தோன்றியது. அவள் கயிற்றில் தான் நடக்கும் போது தடுமாறினால் அப்படியே கீழே ஊன்றித் தாங்கிக் கொள்வதற்கு நீண்ட மூங்கிற் கழி ஒன்றையும் கைகளில் ஏந்திக் கொண்டிருந்தாள். அவளுடைய கவர்ச்சி நிறைந்த முகத்தில் 'இப்படி நடப்பது எனக்கு வேதனை இல்லை. இப்படி நடப்பதே என்னுடைய உல்லாசம்'— என்ற பாவனையில் இடையிடையே குறுஞ் சிரிப்புக் குமிழிட்டுக் கொண்டிருந்தது. அந்தச் சிரிப்பு இதழ்களில் நெகிழாத போது கண்களில் நெகிழ்ந்தது. கால்களில் கட்டியிருந்த சலங்கைகளும், கைகளில் குலுங்கும் வளைகளும், அவளுடைய கழைக்கூத்துக்கு நாட்டியம் போன்றதொரு பாவனையைச் சேர்த்தன. அவளைக் கட்டவிட்டு ஆட்டிக் கொண்டிருந்த முதுமகள் கீழே அமர்ந்து பறை கொட்டிக் கொண்டே, 'கோதை! கவனம்.... கவனம்.... பராக்குப் பார்க்காதே'—

என்று உரிமையோடும் பாசத்தோடும் அவளைக் கட்டளையிட்டு ஆள்வதிலிருந்து அவர் அவளுடைய தந்தையாயிருக்கலாமென்று புரிந்து கொள்ள முடிந்தது.

கூட்டத்தில் ஒரே அமைதி. தாமரைப் பூவைப்போல் சிவக்கச் சிவக்கக் கயிற்றில் நகரும் அந்தச் சின்னஞ்சிறு பாதங்களையே எல்லாரும் வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தார்கள். நடு நடுவே அவள் சில இனிய பாடல்களைப் பாடிக்கொண்டே ஆடினாள். அவளுடைய குரலைத் தேனிலே செய்திருக்க வேண்டும். இல்லையென்றால் அந்தக் குரல் பரவிய நாச்சியார்புரத்தின் வீதிகள் எல்லாம் இனிமை பரவுமா? அவள் ஓர் அற்புதமாயிருந்தாள். அவள் பேரதிசயமாயிருப்பதை அந்தக் கூட்டத்தில் ஆழ்ந்து அநுபவித்து இரசித்துக் கொண்டிருந்த மனம் ஒன்று தனியாயிருந்தது. எட்டுப் பாளையத்தின் சிற்றரசர்களும் இரத்தினக் கம்பளம் விரித்து அமர்ந்து பார்த்துக் கொண்டிருந்தது கூட்டத்துக்குப் பெருமையாயிருக்கலாம். ஆனால் அந்தக் கழைக்கூத்திக்கே பெருமையைத் தந்த அழகிய இரசிகன் ஒருவன் தன் பொன் நிறத் தோள்களையும் பரந்த மார்பையும் போர்த்திக் கொள்ளவும் மேலாடையின்றித் தரையில் அமர்ந்திருந்தான். அவனுடைய கைகளில் ஏடெழுதச் சீவிய பனை ஓலைகளும் எழுத்தாணியும் இருந்தன. தன்னுடைய ஆட்டத்தைக் கண்டு அவனுடைய முகத்தில் ஆச்சரியம் மலர்ந்தபோது அவளுடைய மனத்தில் பரவசம் மலர்ந்தது. அவன் யாரென்று அவளுக்குத் தெரியாது. ஆனால் அவளுடைய பார்வையில் அத்தனை பெரிய கூட்டத்திலும் அவன் ஒருவன் மட்டுமே நிறைந்து தோன்றினான். தன்னுடைய கலை அத்தனை பேருடைய மனத்தையும் மகிழ்வித்துக் கொண்டிருப்பதைத் தனித்தனியே ஒவ்வொரு முகத்தையும், அகத்தையும் கண்டு தெரிந்து கொள்ள விரும்பாமல் அந்த ஒருவனுடைய மலர்ந்த முகத்தில் மட்டுமே அதைத் தெரிந்து கொண்டால் போதும் என்பது போல் முடிந்த போதெல்லாம் அவனையே பார்த்தாள் அவள். கட்டுக் கட்டாக அவனுடைய பொன் திணித்தாற் போன்ற தோள்களும், பரந்து நிமிர்ந்த நெஞ்சும், குறு குறு வென்று மலர்ந்த முகமும் இந்த உலகத்தையே சௌந்தரியப் பிரதிபிம்பமாகக் காண்பது போன்ற பருகும் விழிகளுமாக அவன் வீற்றிருந்தான். அவன் அங்கே கீழே அந்த மண் தரையில் வீற்றிருந்தான் என்பதை விட மேலே கழைக் கூத்தாடிக் கொண்டிருந்தாளே; அவளுடைய இதயத்தில் வீற்றிருந்தான் என்பதுதான் பொருத்தம். கீழே இறங்கி ஓடிப் போய் அவனைத் தழுவ முடியாத காரணத்தால் அவனைப் பற்றிய நினைவுகளைத் தழுவிக் கொண்டே அவள் அந்தக் கூத்தை ஆடிக் கொண்டிருந்தாள்; பாடிக் கொண்டிருந்தாள். கூட்ட மெல்லாம் அவளைப் பார்த்தது. அவளோ அவனை மட்டுமே பார்த்துக் கொண்டிருந்தாள்.

ஆயிற்று. ஒருவழியாகக் கழைக்கூத்து நிறைந்தது. அவள் கயிற்றிலிருந்து கீழே இறங்கி விட்டாள். கூட்டத்தில் கரக்கம்பம், சிரக் கம்பம், ஆரவாரக் குரல்கள். இனி எட்டுப்பாளையத்துச் சிற்றரசர்களையும் அவள் வரிசையாக வணங்கி அவர்கள் தனக்கு அளிக்கும் பரிசில்களைப் பெற்றுக் கொள்ள வேண்டும். அந்தக் கூத்தியின் தந்தை போலத் தோன்றிய முதுமகன் வாயெல்லாம் பல்லாய்ச் சிரிப்பு விரிய 'போய் அரசர்களையும், தலைக் கட்டுக்களையும் வணங்கிப் பரிசு கேள் மகளே' என்று குறிப்பால் சாடை காட்டினான். அவளோ அந்தச் சுந்தர இளைஞனைக் கடைக்கண்களால் பார்த்தபடி தயங்கி நின்றாள். கூட்டத்திலிருந்த பல்லாயிரம் கண்களோ, அவள் சலங்கை குலுங்க நடந்து சென்று பாளையத்துச் சிற்றரசர்களுக்கு முன் பரிசுக்கு நிற்கப் போவதையும், அவர்கள் ஒவ்வொருவரும் என்னென்ன பரிசுகள் தரப் போகிறார்கள் என்பதையும் அறிவதற்கு ஆவலுடன் காத்திருந்தன.

அப்போதுதான் யாரும் எதிர்பாராத காரியமாக அது நடந்தது. சிங்கம்போல் எழுந்து பாய்ந்து நடந்து வந்த அந்த வாலிபன், "இந்தா உன்னுடைய ஆட்டத்துக்கு இதைவிட மெய்யான பரிசு வேறு ஒன்றும் இருக்க முடியாது" என்று ஓர் ஓலை நறுக்கை அவள் பக்கம் கைகளில் விழுமாறு வீசி விட்டு மின்னலைப் போல் எங்கு எப்படி மறைந்தான் என்றுசொல்ல முடியாமல் கூட்டத்துக்குள் புகுந்து மறைந்து விட்டான். எட்டுப் பாளையத்துச் சிற்றரசர்களின் பதினாறு விழிகளும் கனல் கக்கின. தங்களை முந்திக் கொண்டு பரிசளித்த அந்தக் காளை யார் என்று மீசை துடிதுடிக்கப் பார்த்தார்கள் அவர்கள். அவனோ மின்னலைப் போல அவளுக்கு முன் ஒரே ஒரு கணம் தோன்றி அந்த ஓலை நறுக்கை வீசி எறிந்து விட்டுத் தோன்றிய சுவட்டில் கூட்டத்திடையே புகுந்து எங்கோ, எப்படியோ மறைந்து விட்டான்.

கழைக்கூத்தாடிய அந்தப் பெண்ணின் கண்களில் அவன் ஏறு போல் எழுந்து நின்றது, ஆண் சிங்கமாய்ப் பாய்ந்து தனக்கு முன் வந்தது, அந்த ஓலை நறுக்கை வீசியது, எல்லாம் ஆச்சரியங்களாய் நிறைந்திருந்தன. கண்களுக்கு மிக அருகே கொணர்ந்து அந்த ஓலை நறுக்கைப் படிக்க முயன்றாள் அவள்.

**'சீத மதிமுகமும் சீர்முத்துப்**
**புன்னகையும்**
**காது வரைநீள் கயல்விழியும்–கோதை**
**கழையாடக் கண்டாலும் கற்பனைகள்**
**எல்லாம்**
**இழைபோடி ஏங்கிடுமென் நெஞ்சு.'**

என்று எழுதியிருந்த நேரிசை வெண்பாவை ஒரு முறை படித்தாள். இரண்டு முறை படித்தாள். மூன்றாவது முறையாகவும் படித்தாள். பித்துப் பிடித்தவளைப் போலப் பலமுறை படித்துக் கொண்டே நின்றாள். தான் எட்டுப் பாளையத்துச் சிற்றரசர்களை வணங்கிப் பரிசு வாங்க வேண்டிய முறையை மறந்து அவர்களை அவமதிப்பது போல் நின்று கொண்டிருக்கிறோம் என்பது கூட அவளுக்கு அப்போது நினைவில்லை.

அவள் தந்தை அருகில் ஓடி வந்து தோளைத் தொட்டு உலுக்கி ஞாபகப் படுத்தியிரா விட்டால் அவள் இன்னும் எவ்வளவு நேரம் அந்த ஓலை நறுக்கையே பார்த்துக் கொண்டிருப்பாளோ? அந்தப் பேரழகனின் கவிதைப் பரிசு கிடைத்த பின் பாளையத்துத் தலைக்கட்டுக்களாகிய சிற்றரசர்கள் அளிக்கப் போகும் பரிசுகள் எவ்வளவு மதிப்புள்ளவையாயிருந்தாலும் அவ்வளவும் அலட்சியமாய்த் தோன்றியது அவளுக்கு. ஆனால் தந்தையின் வார்த்தையையும், கூட்டத்தையும் மதிப்பதற்காக எட்டுச் சிற்றரசர்களையும் வரிசையாக வணங்கி அவர்கள் அளித்த சன்மானங்களைப் பெற்றுக் கொண்டாள் அவள். ஒருவர் முத்து மாலை, இன்னொருவர் பவழ மாலை, மற்றொருவர் காசுமாலை, மோதிரம் என்று அவரவருடைய மனத்தின் மதிப்பில் பெரியதாய்த் தோன்றிய பொருள்களையெல்லாம் அவளுக்கு அவர்கள் அளித்தார்கள்.

அவளோ அவைகள் எல்லாம் தனக்குப் பெரிதாய்ப் படாதது போலவும், தன் தந்தைக்காக அவற்றை வாங்கிக் கொண்டது போலவும் அவற்றை அப்படியே வாரிச் சுருட்டித் தந்தையின் மேலாடையில் கொட்டிவிட்டுத் தன் மனத்தின் மதிப்பில் பெரிதாய்த் தோன்றியது அதுதான் என்பதுபோல் அந்த ஓலை நறுக்கை மட்டும் தனியே கையிலெடுத்து மின்னிடையில் சொருகிக் கொண்டாள்.

"கோதை! யார் அம்மா அந்தக் கிறுக்கன்? உன்னுடைய கழைக்கூத்தின் அற்புதங்களைக் கண்டு எட்டுப்பாளையத்துத் தலைக்கட்டுக்களும் மெய்ம் மறந்து கிறங்கிப் போய் வீற்றிருக்கும் போது பித்தனைப் போல எழுந்து பாய்ந்து வந்து ஓலை நறுக்கை வீசி எறிந்து விட்டு ஓடுகிறானே? ஆள் பறந்து போய் விட்டான். என் கையில் அகப்பட்டிருந்தால் நாலு பூசைக் காப்புச் சாத்தியிருப்பேன்...." என்று அவளுடைய மனத்தைப் புரிந்து கொள்ளாமல் பேசினார் அவள் தந்தை. இதைக் கேட்டு அவளுடைய விழிகளில் சீற்றம் சுழன்றது. சொற்கள் வேகத்தோடு பிறந்தன.

"அப்பா! உங்கள் வார்த்தைகளை நான் அப்படியே ஏற்றுக் கொள்வதற்கில்லை. இரசித்த பின் பதிலுக்கு என்ன கொடுக்கப் போகிறார்கள் என்பதை வைத்து இரசிகத் தன்மையை மதிப்பிடப் பழகிக் கொள்ளக் கூடாது. ஒன்றும் பதிலுக்குக் கொடுக்க முடியாமல் மனப்பூர்வமாக இரசிப்பவர்கள் ஆயிரம் பேர் இருக்கலாம். மனப்பூர்வமான அநுபவமே பெரிய கொடை. இலட்சம் பொற்காசு



களை விட ஒரு கவியின் இதயபூர்வமான வாக்கினுல் புகழப் படுவது பெரும் பாக்கியம் அல்லவா?'' என்று கோதை கூறியதை அவள் தந்தையால் வரவேற்றுப் புரிந்து கொள்ள முடியவில்லை. பெண்ணின் மனம் எந்த இடத்திலோ எதற்கோ நெகிழ்ந்து போயிருக்கிறதென்று மட்டும் புரிந்துகொள்ள முடிந்தது. கூத்துக்காகக் கூடியிருந்த கூட்டமெல்லாம் கலைந்து அவளும், அவளுடைய தந்தையும் கழைகளையும், மற்ற மூட்டை முடிச்சுப் பொருள்களையும் எடுத்துக் கொண்டு தங்கியிருந்த சத்திரத்துக்குப் போய்ச் சேர்ந்த போது பௌர்ணமி நிலா உச்சி வானத்துக்கு வந்திருந்தது. உணவுக்குப் பின் அவள் தந்தை முதுமையின் தளர்ச்சியாலும் அலுப்பாலும், உடனே உறங்கி விட்டார். அந்த நிலா இரவில் சத்திரத்து முன் பக்கத்திலிருந்த தோட்டத்தில் பன்னீர்ப் பூக்களும், பவழ மல்லிகையும் அப்போதுதான் பூத்துக் கொண்டிருக்கிற புதுமையான மணத்தில் வேறு எந்த ஞாபகமோ மணக்க எழுந்து நடந்தாள் கழைக்கூத்தி. அவள் தன் இடுப்பில் இருந்து அந்த ஓலை நறுக்கை எடுத்துக் கண்களிலும் பின்பு சற்றே வெட்கத்தோடு இதழ்களிலும் ஒற்றி எடுத்த போது அற்புதம் நிகழ்வது போல் தோட்டத்தின் மறு பக்கமிருந்து அதே சொற்கள் இங்கிதமான நாதத்தோடு கூடிய ஆண் குரலில் இசைக்கப் படுவது கேட்டது.

## 3. தீபவர்த்தினி

அதே ஆணழகனின் குரலைத்தான் அவள் கேட்டுக் கொண்டிருக்கிறாள். சிறிதும் சந்தேகமே இல்லை. ஒரு கவிதை எந்த இதயத்திலிருந்து பிறந்ததோ அந்த இதயத்துக்குச் சொந்தமான நாவினுல் பாடப்படுவது மிகவும் சுகமான அநுபவம். அப்படிப் பாடும் போது அதைப் படைத்த கவியின் நாவில் அது எப்படி ஒலிக்கிறதோ அப்படி ஒலிப்பதே அதன் ஜாதகராகமாய் நிலவி இனிமை பரப்பும் அது. கழைக்கூத்திக்கு அந்த அபூர்வமான அநுபவம் கிடைத்தது. அவள் தன் இரு விழிகளும் மலரப் பார்த்தாள்.

அவனேதான்! அதோ அந்த மகிழ மரத்தடியில் உட்கார்ந்து பாடிக்கொண்டிருப்பவன் அவன்தான். நிலா ஒளி, பூக்களின் மணம், மெல்ல வீசும் தென்றல், நிர்மலமான இராப் போது:— இத்தனையோடும் சேர்ந்து பொருந்தி மனத்தை உருக்குவது எந்தப் பண்ணுயிருக்குமோ, அந்தப் பண்ணில்தான் அவன் அதைப் பாடிக் கொண்டிருந்தான் என்று சொல்ல வேண்டும்.

'சீத மதிமுகமும் சீர்முத்துப்
புன்னகையும்'

.......... .......... ........

என்று அவன் மூன்றுவது முறையாக அதை உல்லாசமாய்ப் பாடத் தொடங்கியிருந்தபோது அதே விதமான மதிமுகத்துடனும், முத்துப் புன்னகையுடனும், கோதை அவனுக்கு முன் போய் நாணி நின்றாள்.

திடுமென்று அவளை எதிரே பார்த்ததும் அவனுடைய பாட்டு நின்று போய் விட்டது. அவன் அடைந்த ஆச்சரியம் அடங்குவதற்குச் சில விநாடிகள் ஆயின.



''நான் கனவு காணவில்லையே?''

''கனவு காண்பது உங்களைப் போன்ற கவிகளுக்கு வழக்கமாயிருக்கலாம்.''

''கனவிலும் கற்பனையிலும் இடைவிடாமல் தோன்றிக் கொண்டிருக்கிற உருவம் எதுவோ அதுவே நேரில் வந்து விட்டால் அப்பால் கனவு காண்பதற்கு என்ன இருக்கிறது?'' என்று அவள் பதில் சொல்ல முடியாத விதத்தில் அவளை மடக்கிப் பேசினுன் அவன்.

கழைக்கூத்தி மேலும் நாணித் தலை குனிந்தாள். பின்பு அப்படிக் குனிந்த தலை நிமிராமல் மனத்தின் அந்தரங்கத்தைப் பேசுவதற்கு இந்தக் குரல்தான் ஏற்றது என்று தானுகத் தேர்ந்தெடுத்துக் கொண்டவளைப் போல் கோமளமானதொரு மெல்லிய குரலில் அவனைக் கேட்டாள் :

''என் பெயர் கோதை என்று உங்களுக்கு எப்படித் தெரிந்தது? பெயர் கூடப் பாட்டுக்குள் பொருந்தி வருகிற விதத்தில் நான் ஆடிக் கொண்டிருக்கும் போதே அவ்வளவு விரைவில் அதை எப்படிப் புனைந்து பாடினீர்கள்?''

''உன் தந்தை உன்னை அழைத்ததிலிருந்து அந்தப் பெயரைத் தெரிந்து கொண்டேன். உன்னுடைய பெயரின் அர்த்தத்தில் இரண்டு அழகுகள் அடங்கியிருக்கின்றன. உன்னுடைய அழகு ஓர் அர்த்தம். அந்தப் பதத்தின் பொருளுக்கே இயல்பாக உள்ள அழகு ஓர் அர்த்தம். கோதை என்றால் பூமாலை என்று பொருள். நீயோ நிறமும் மணமும் நிறைந்த பூமாலையைக் காட்டிலும் அழகாயிருக்கிறாய்.''

''உங்கள் பெயர்?''

''மணவாளன். உன்னைப் போலவே இந்த விழாவுக்காக நாச்சியார்புரம் வந்தவன். இதே சத்திரத்தில்தான் தங்கியிருக்கிறேன்.''

''எத்தனை அபூர்வமான பொருத்தம் பார்த்தீர்களா? என்னுடைய பெயராய் வாய்த்திருக்கும் பதத்துக்குப் பூமாலை என்று பொருள் கூறினீர்கள்! உங்களுடைய பெயருக்கு மணத்தை ஆள்பவர் என்று பொருள். மணத்தை ஆள்கிறவர் பெயர்தானே மணவாளர்! பூமாலையின் மணத்தை....'' என்று சொல்லிக் கொண்டே வந்தவள் மேலே சொற்களால் பேச நாணியவளாய்க் கண்களால் பேசினுள். அவனே அந்தக் கயல் விழிகளைப் பார்த்தபடியே அவளிடம் சொற்களால் பேசினுன்:

''நீ வெறும் கழைக்கூத்திதானே என்று நினைத்தேன். உனக்குப் பாட்டும் நன்றாக வருகிறது. நல்ல குரல். இன்னும் பழக்கப்படுத்திக் கொண்டால் இசையிலும் வித்தகம் பெறுவாய்.''

''சற்று முன் நீங்கள் பாடிக் கொண்டிருந்தீர்களே! அதைக் காட்டிலும் சிறந்த இசை ஒன்று இந்த உலகத்தில் இருக்க முடியுமா?''

''நான் பாடுவதில் ஆச்சரியமென்ன? சங்கீதம் எங்கள் குலதனம். அதோடு சொந்தமாகக் கவியும் பாடுவேன்.''

''இன்று என்னுடைய கழைக்கூத்து அற்புதமாயிருந்ததாகப் பாளையத்துச் சிற்றரசர்கள் பவழ மாலையும், முத்து மாலையும் பரிசளித்தார்கள். ஆனால் என்னுடைய மனம் ஒப்பி நான் அங்கீகரித்துக் கொண்ட ஒரே பரிசு உங்கள் கவிதை மட்டும்தான்.''—

''இதைப் பாடு என்று என் இதயமே தானுகப் பொங்கி மேலெழுந்தால் ஒழிய நான் எதைப் பற்றியும் எந்தப் பயனை எதிர்பார்த்தும் பாடுவதில்லை.''

மணவாளனுடைய இந்தச் சொற்களைக் கேட்டுக் கோதைக்குப் பெருமிதமாக இருந்தது. அவன் மனத்தைப் பாடுவதற்குப் பொங்கச் செய்த பேரெழில் தன்னுடையதாயிருக்கிறது என்பதை எண்ணிப் பூரித்தாள் அவள். அன்றைய நிலாவும், சத்திரத்துத் தோட்டமும், தென்றல் காற்றும் நாச்சியார்புரத்தில் தங்களுக்காகவே ஏற்பட்டவை போல நெடுநேரம் பேசிக் கொண்டிருந்தார்கள் அவர்கள். மனத்தை மனம் தேடிப் புரிந்து கொள்ளும்போது பேசுவதற்குச் சொற்களே கிடைப்பதில்லை. ஆனாலும் அவர்கள் கிடைத்த சொற்களை வைத்துக் கொண்டு கிடைக்காமல் விலகிப் போய்க் கொண்டிருந்த சொற்களின் அழகும் கிட்டியவற்றிலேயே பொருந்தி வர ஏதேதோ பேசினார்கள்.

இருவரும் பிரிந்து செல்லுவதற்கு முன் மணவாளன் அவளைக் கேட்டான் :

''இந்த விழா முடிகிற வரை நாச்சியார்புரத்தில்தானே இருப்பாய்?''

''ஏன்?''

''ஒன்றுமில்லை! நாளைக்குச் சங்கீத இருவிழா. இந்த எட்டுப் பாளையத்துச் சிற்றரசர்களுக்குச் சங்கீத ஞானம் உண்டோ, இல்லையோ, தேச தேசாந்திரங்களில் இருந்து வந்திருக்கிற இசைக்




டாடா-மெர்ஸிடஸ்-பென்ஸ்

கலைஞர்கள் எல்லாம் இவர்களிடம் தங்கள் சாமர்த்தியத்தைக் காண்பிக்கப் போகிறார்கள்.''

'' நீங்களும்தானே ?''

''நாளைக்குத்தான் பார்க்கப் போகிறாயே?'' என்று சொல்லிச் சிரித்தவாறே விடைபெற்றான் அவன். சத்திரத்தின் மறுபக்கம் அவனுடைய உருவம் மறைகிற வரை அவனையே பார்த்துக் கொண்டு நின்றுவிட்டுத் திரும்ப மனமின்றித் திரும்பினாள் அவள்.

அவனைத் தழுவ முடியாத காரணத்தால் அவனைப் பற்றிய நினைவுகளைத் தழுவிக் கொண்டு உறங்கினாள் அவள். மணவாளனின் குறுகுறுப்பு நிறைந்த கண்களும் நீண்ட புயங்களும் இங்கிதமான பேச்சுமே அவளுடைய ஞாபகத்தில் நிறைந்திருந்தன.

ஓர் ஆண் பிள்ளையின் மனத்தில் இந்த விதமான அழகிய ஞாபகங்கள் தங்கி வளராமல் உலாவி விட்டுப் போய்விடலாம். ஆனால் ஒரு பெண் – இந்த விதமான அழகிய ஞாபகங்களினால்தான் தன்னுடைய வாழ்க்கையையே வளர்த்துப் படைத்துக் கொள்கிறாள். கோதையின் ஞாபகத்தில் மணவாளன் அப்படி வளர்ந்து கொண்டிருந்தான். வாழ்க்கையின் சாசுவதமான உறவுகள் எல்லாம் முன்னும் பின்னும் என்னவென்று தெரியாத ஏதோ ஒரு கணத்தில்தான் ஆரம்பமாகின்றன. அந்த ஒரு கணத்திலே பல பிறவிகளில் விட்ட குறை தொட்ட குறைகள் நேரலாம். ஏதோ நாச்சியார்புரத்துத் திருவிழாவுக்குக் கழைக்கூத்தாட வந்த இடத்தில் கண்ணில் தென்பட்ட அழகிய முகங்களில் ஒன்று என்று மட்டும் எண்ணி மணவாளனை அவளாலே மறந்துவிட முடியவில்லை. எந்தப் பிறவியிலோ இந்த அழகிய முகத்துக்குத் தன் மனத்தையும் கைகளையும் வணங்கக் கொடுத்து அந்த வணக்கம் நிறையாமல் இன்னும் பல பிறவிகளுக்கு மீதமிருப்பதுபோல அவள் தவித்தாள். அதைத் தவிப்பென்றுதான் சொல்ல வேண்டும்.

மறுநாள் நாச்சியார்புரம் வேலில் விழாவின் – சங்கீதத் திருநாளில் கூடியிருந்த பெருங் கூட்டம் வியக்கும்படி மணவாளன் செய்த விந்தைகளைக் கண்டபோது அவளுடைய மோகம் வளர்ந்தது. முதல் நாள் கழைக்கூத்திற்குப் பரிசு கொடுக்க முந்திக் கொண்டதால் எட்டுப்பாளையத்துச் சிற்றரசர்களின் கோபத்துக்கும் ஆளாகியிருந்தான் அவன். இன்றோ அவர்களை வியக்க வைத்தான். விழாவில் கலந்து கொள்ள வந்திருந்த மற்ற இசைக் கலைஞர்களையும் வியப்பில் மூழ்கச் செய்யும் செயல்களைச் செய்தான் மணவாளன்.

வசந்தமாலை அம்மன் கோவில் பொது வெளியில் அமைந்திருந்த அரங்கில்தான் சங்கீத விழாவும் நடைபெற்றது. தோளில் கிடந்த சரிகை மேலாடையை அதன் கரை தெரியும்படி வீசிப் போட்டுக் கொண்டோ, வெள்ளிப் பூண் பிடித்த பிரம்பை அலட்சியமாக ஊன்றிக் கொண்டோ, காதுகளில் வைரக் கடுக்கனும் கைகளில் மோதிரமும் தெரியும்படியோ, மற்ற வித்துவான்கள் அரங்கத்தில் ஆடம்பரமாக ஏறி அமர்ந்து பாடினார்கள். இதற்கெல்லாம் முற்றிலும் வேறாக மணவாளன் நடந்து கொண்டான். வலது கையில் ஒரு சின்னஞ்சிறு அகல்விளக்கை ஏற்றிக்கொண்டு அது அணைந்து விடாமல் கவனத்தோடு அரங்குக்கு வந்தான் மணவாளன். 'சென்ற கணம் வரை இந்த அரங்கிலே சங்கீதப் பிரபஞ்சமே இருண்டிருந்தது! இனி நான்தான் அதற்கு ஒளியூட்ட வேண்டும்' என்பவனைப் போல் தீபத்தோடு கம்பீரமாகப் பிரவேசித்தான் அவன்.

''வா அப்பா! வா.... உன் சங்கீதத்தை விளக்கேற்றி வைத்துக்கொண்டு தான் கேட்க வேண்டுமென்று நீயே முன்னேற்பாடாகத் தீபம் கொண்டு வந்து விட்டாயோ?'' என்று சொல்லிச் சிரித்தார் முந்தைய நாள் நிகழ்ச்சியால் அவன் மேல் வெறுப்படைந்திருந்த பாளையத்துச் சிற்றரசர் ஒருவர். மணவாளன் அந்தச் சொற்களைக் காதில் வாங்கிக் கொள்ளாமல் அலட்சியமாயிருப்பவனைப் போல் இருந்து விட்டான். மணவாளன் அரங்கில் புகுந்த விநாடியிலிருந்து கோதை கண்ணிமைக்காமல் அவன் பக்கமே பெருமையோடு பார்த்துக் கொண்டிருந்தாள்.

மணவாளன் அரங்கேறி நின்ற சில கணங்களுக்கெல்லாம் அந்த அற்புதத்தைச் செய்யத் தொடங்கினான். பல்லாயிரம் கண்கள் ஊசி விழுந்தாலும் ஓசை கேட்கும்படியான பேரமைதியினிடையே அவன் என்ன செய்யப்போகிறான் என்பதையே கவனித்துக் கொண்டிருந்தன. தீபத்தைத் தனது வலது கையின் நடுவே வைத்துக் காற்று சுடரை அவித்து விடாமல் இடது கையினால் அணைத்துக் கொண்டிருந்தவன், திடீரென்று காற்றுக்குப் பாதுகாப்பாக இருந்த இடது கை அணைப்பை விலக்கிக் கொண்டு, வலது கையை அப்படியே தீபத்தோடு உயர்த்திப் பிடித்தான்.

குபீரென்று நான்கு பக்கமிருந்தும் பாய்ந்த காற்றினால் அகல் விளக்கின் தீபச் சுடர் நசுங்கி நலிந்து பூவிலிருந்து கழன்று விழுந்து விடவிருக்கும் தனி இதழைப் போல நடுங்கியது. ஏறக்குறைய விளக்கு அணைந்தே போய்விட்டது என்று சொல்லத் தகுந்த நிலை. தீபச் சுடரின் கடைசிச் சுவடும் மறைந்து கரிய மைச் சுழற்சியாய் இரண்டு இழை புகை மேல் நோக்கி எழப் போகிறதென்று சொல்லத் தக்கதாயிருந்த அந்தச் சமயத்தில் மணவாளனுடைய நாவிலிருந்து ஏதோ ஒரு ராகம் ஒலிக்கத் தொடங்கியது. தீபத்தையே இரண்டு கண்களாலும் பார்த்தபடி வசியம் செய்கிறவனைப் போல அந்த இனிய ராகத்தை வளர்த்துப் பாடினான் மணவாளன்.

என்ன ஆச்சரியம்! அத்தனை காற்றுக்கும் நடுவே தீபச் சுடர் குதித்துக் கொழுந்துவிட்டுப் பொங்கி யெரிந்தது. கந்தர்வ கானம் செய்யும் அந்தச் சுந்தர இளைஞனுடைய நாவில் குரல் ஒலித்தால் தீபம் காற்றையும் மீறிக் கொழுந்து விட்டு எரிந்தது: குரல் ஒலிக்காமல் குன்றி ஒடுங்கினாலோ தீபமும் காற்றில் நலிந்து ஒடுங்கியது. அந்த ராகத்துக்கும் தீபம் எரிவதற்கும் ஏதோ சம்பந்தம் இருக்கிறது என்பதைக் கூட்டத்தினர் புரிந்து கொண்டனர். ஏதோ ஒருவிதத்தில் தீபச் சுடரை வளர்ப்பதற்குரிய உரமாக அந்த ராகத்தின் ஒலிநயம் அமைக்கப் பட்டிருக்கிறது என்பது மிக நன்றாக விளங்கியது. அரை நாழிகைக்கும் மேலான நேரம் வரை இந்த அற்புத சாகஸத்தைச் செய்து காண்பித்தான் மணவாளன். அவனுடைய குரல் அந்த ராகத்தின் பரிபூரணமான எல்லையைத் தொட்ட போது தீபச் சுடர் நீண்ட சோதியாய்க் குதித்தெழுந்து மேல் நோக்கிப் பாய்ந்த வேளையில் மிக அருகிலிருந்த பந்தல் கீற்றில் தீப்பற்றி விடுமோ என்று கூட்டம் பிரமித்துப் போயிற்று. இதைப் பார்த்து மகிழ்ந்த போது கோதையின் பெருமைக்கு ஓர் அளவே யில்லை.

அதியற்புத சாமர்த்தியங்களைச் செய்து காட்டுகிறவர்கள் இளைஞர்களாயிருந்து விட்டால் மூத்த கிழவர்களுக்கு அந்த இளைஞர்கள் மேல் ஏற்படுகிற காய்ச்சல் சொல்லி முடியாது. இந்த உலகத்தில் கிழப் பொறாமையைப் போல் ஆளை எரிக்கிற நெருப்பு வேறொன்று இருக்க வழியில்லை. சபையில் முன்புறமாக அமர்ந்திருந்த வயது முதிர்ந்த இசைக்கலைஞர் ஒருவர் கோபத்தோடு தம் உடம்பே ஆடும்படி எழுந்து நின்று கொண்டு, ''இதை நாங்கள் ஒப்புக்கொள்ளவே முடியாது. இது சங்கீதமில்லை. மாந்திரீகத்தையும் வசியத்தையும் கலந்து சங்கீதம் போல் காட்டிப் பாமரர்களை ஏமாற்றக் கூடாது'' என்று கூப்பாடு போட்டார். அதுவரையில் முகம் மலரச் சிரித்துக் கொண்டே அமர்ந்திருந்த கோதை அந்தக் கிழவர் எழுந்திருந்து இப்படிப் பொறாமையைக் கக்கியதும் முகத்தைச் சுளித்து வெறுப்போடு கைகளைச் சேர்த்துச் சொடுக்கினாள்.

ஆனால் மணவாளன் இந்தக் கிழப் பொறாமைக்குச் சிறிதும் அஞ்சவில்லை. சிரித்துக் கொண்டே மறுமொழி கூறினான்: ''ஐயா ! இது தீபவர்த்தினி என்று ஒரு ராகம். என் பாட்டனார் இந்த அபூர்வ ராகத்தை எனக்குச் சொல்லிக் கொடுத்தார். இதற்குக் குரல் மட்டும் போதாது. குருமுகமான அருள், குடும்பத்துப் பரம்பரையாய் வரும் தவம், சித்தி, எல்லாமே வேண்டும். சங்கீதம் எங்கள் குடும்பத்தின் தவம். தலைமுறை தலைமுறையாய் அக்கினியை அணையாமல் காத்து வரும் முனிவர்களின் வேள்வி முறையைப் போல் இப்படிச் சில அபூர்வ ராகங்களை எங்கள் குடும்பத்தில் ஒடுங்கிவிடாமல் வளர்த்து வருகிறோம். மாந்திரீகம், வசியம் என்று ஏதேதோ சொல்லுகிறீர்கள் பெரியவரே! சங்கீதமே ஒரு மந்திரம் என்றுதான் எங்கள் பாட்டனார் சொல்லுவார். இசை தெய்வத்தையே வசியம் செய்ய முடிந்த மந்திரமானால் சங்கீதத்தைக் கொண்டு மனிதர்களை வசியம் செய்வது என்ன பிரமாதம்? சிலரால் அப்படி முடிவதில்லை. அது அவர்களுடைய சொந்தக் குறையே தவிரச் சங்கீதத்தின் குறையில்லை....''

ஆப்பு வைத்து அறைந்தாற்போல் இந்தப் பதிலைக் கூறியதைக் கேட்டதும் இரண்டு கைகளும் ஓய்கிற வரை கரகோஷம் செய்ய வேண்டும் போல ஆர்வமாயிருந்தது கோதைக்கு. மேலும் தொடர்ந்து சில அற்புதங்களைச் செய்து காண்பித்தான் மணவாளன். சில உயர்ந்த சாதிப் பூக்களைக் கையில் அள்ளி வைத்துக் கொண்டு அந்தப் பூக்களின் நறுமணம் அங்கே கூடியிருந்த பல்லாயிரம் பேருடைய நாசிகளிலும் போய்ப் பொங்குகிறாற் போன்ற பிரமையை உண்டாக்கும் ராகமொன்றைப் பாடி



னான். ஒன்றரை நாழிகை இடைவிடாமல் 'மேக ராகக் குறிஞ்சி' என்ற பண்ணைப் பொழிந்து ஆகாயத்தில் அங்கொன்றும் இங்கொன்றுமாகத் திரண்டிருந்த நான்கைந்து மேகங்களிலிருந்து மழை பொழியச் செய்து பத்து விநாடி அந்தக் கூட்டத்தை நனைய வைத்தான்.

ஒவ்வொரு சாமர்த்தியமாக வெளிப்பட வெளிப்பட அந்தக் கூட்டத்தினரின் கண்களில் அவன் தெய்வ சக்தி வாய்ந்த இளைஞனாகத் தோன்ற ஆரம்பித்தான். அவன் பாடும்போது வேறு ஒரு சிறந்த தன்மையையும் அங்கே கூடியிருந்த கூட்டம் அவனிடம் கண்டது.

முகமோ, கைகால்களோ, எந்தவிதமான அங்க சேஷ்டைகளையும் பிறப்பிக்காமல் சித்திரத்தில் உதடுகள் மட்டுமே அசைவதைப் போல் பாடினான் அவன். உயர்ந்த சங்கீதத்தில் ராகத்தின் உணர்ச்சி அலைகள் எல்லாம் பாடுகிற குரலில் மட்டும் தெரிய வேண்டுமே ஒழியப் பாடுகிறவனின் முகத்திலும் அவன் நெற்றியைச் சுருக்கி விரிப்பதிலும் கைகால்களை ஆட்டுவதிலும் உணர்வுகள் தெரிந்து குரலில் தெரியாமலே போய் விடக் கூடாது. அபிநயம் தனியாக ஒரு கலை. அது நிருத்தியத்தைச் சேர்ந்தது. நடிப்பும் தனியாக ஒரு கலை. அது நாடகத்தைச் சேர்ந்தது. அபிநயத்தையும் நடிப்பையும் முகத்திலும் கைகால்களிலும் படைத்துக் கொண்டே சங்கீதத்தையும் குரலில் ஆள முயல்வது இரசாபாசமென்பார் மணவாளனின் பாட்டனார். அபிநயம், நடிப்பு எல்லாம் குரலிலேயே நாத ரூபமாகக் கலந்து வருவதே உயர்ந்த இசை. நாத ரூபமாக அவற்றை அபிநயிக்கவும், நடிக்கவும் முடியாமல் அங்க சேஷ்டைகள் புரிவதை மணவாளனின் பாட்டனார் அறவே வெறுப்பவர். அதனால்தான் தமது இலட்சியப்படி மணவாளனின் பாட்டனார் அவனை உயர்ந்த தரத்துக் கலைஞனாகப் பழக்கப் படுத்தியிருந்தார்.

அன்று அந்தச் சங்கீதத் திருவிழாவில் பாடி முடித்தபோது அவனுடைய அந்தரங்கமான இரசிகையாய் எதிரே உட்கார்ந்து கேட்டுக் கொண்டிருந்த கோதைக்கு அப்படியே அரங்கில் ஓடிப் போய், 'நான் உங்கள் தோளில் மணக்கப் பிறந்த பூமாலை! என்னை அங்கீகரித்துக் கொள்ளுங்கள்' என்று மணவாளனைத் தழுவிக் கொண்டுவிட வேண்டும் போலத் தவிப்பாயிருந்தது. ஆனால் அப்படி முடியுமா? வழக்கம் போல் அவனைத் தழுவிக் கொள்ள முடியாத காரணத்தால் அவனைப் பற்றிய நினைவுகளைத் தழுவியபடியே சத்திரத்துக்குத் திரும்பினாள் அவள். ''ஏன் அம்மா என்னவோ போல் ஏங்கிப் போயிருக்கிறாய்? உன்னுடைய கழைக்கூத்துக்கு ஈடாக எதுவுமே இல்லை கோதை. இன்றைக்கு இந்த இசையில் கூட்டம் ஏதோ பொம்மைகளைப் போல் பிரமித்துப் போயிருந்ததே தவிர நேற்று உன் கூத்தின் போது இருந்த ஆரவாரமும் ஆர்வமும் இன்றைய இசை விழாவில் இல்லையே அம்மா?'' என்று பெண்ணின் மனத்தைப் புரிந்து கொள்ளாமல் அவளை உற்சாகப்படுத்தும் கருத்துக் கொண்டவரைப் போல ஏதோ பேசினார் அவள் தந்தை.

''ஆரவாரமும் ஆர்வமும் இருந்தால் போதுமா அப்பா? சபையை அப்படியே அடக்கி ஆள்கிற கலையல்லவா உயர்ந்த கலை; இந்த மணவாளன் இருக்கிறாரே; இவர் தெய்வீக அம்சம் பொருந்தியவர்....'' என்று தன் மனம் தனக்குள் புகழ்ந்து கொண்டிருந்த அந்தரங்கம் எதுவோ அதையே தந்தையிடமும் அடக்க முடியாமல் பேசினாள் கோதை.

சினம் கொண்ட தந்தை அவளை ஒரு விதமாக உறுத்துப் பார்த்தார். ''உன்னுடைய கழைக்கூத்துக்கு வனப்பான உடம்புதான் முதல் பெண்ணே! எந்த நினைப்பினாலும் நீ உருகி இளைக்கக் கூடாது.... உடம்பை அப்படியே பூச்சரமாக வளைத்த வளைவுக்கு வருகிறது போல மின்ன மின்ன வைத்துக் கொள்ள வேண்டும்'' என்று வாய்க்கு வாய் வற்புறுத்திக் கொண்டே இருபத்தைந்து வயதுக்கு மேலாகியும் கன்னியாகவே வளர்த்து வரும் பெண்ணிடமிருந்து இப்படி ஓர் வாலிபனைப் புகழும் சொற்கள் பிறந்தால் அவளுடைய தந்தை உறுத்துப் பார்க்காமல் வேறென்ன செய்வார்?

### 4. பாளையத்து இளவரசி

கோதை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருந்தது போல மணவாளன் நீபவர்த்தினியையும், மேக ராகக் குறிஞ்சியையும் பாடி அற்புதங்களை நிகழ்த்திய தினத்தன்று இரவில் சத்திரத்துக்குத் திரும்பவேயில்லை. தன் தந்தை உறங்கிய பின்பு பூனை போல் மெல்ல எழுந்து அந்த மகிழ மரத்தடியில் போய் அவள் அவனுக்காகக் காத்திருந்தாள். எந்த ஆண்பிள்ளையின் மேலும் அவள் மனம் ஈடுபடுவது தந்தைக்கு நிச்சயமாகப் பிடிக்காது என்று அவளுக்கே தெரியும். அவள் அப்படிப்பட்டதொரு நோக்கத்தோடு கழைக்கூத்துக்காகவே வளர்க்கப் பட்டாள். ஆனால் நேற்றிலிருந்து, 'நானும் என் சரீரமும் அதன் அழகுகளும் இவருக்காகவே வளர்க்கப்பட்டோம் போல் இருக்கிறது' என்று மணவாளனை நினைத்து ஏங்கத் தொடங்கியிருந்தாள் கோதை. அது அவளுக்கே ஒரு வகையில் புதுமையான அனுபவம்.



நேற்று அவன் தனக்குப் பரிசாக அளித்த பாடலை எடுத்துப் படித்து மறுபடியும் அந்தப் பெருமிதத்தில் சிறிது நேரம் நினைத்தாள். நெடுநேரமாகியும் அவன் வரக் காணாமல் பொறுமை இழந்து சத்திரத்து மணியகாரரைப் போய் விசாரித்தாள். மணியகாரர் கூறிய மறுமொழி அவளைத் திகைக்கச் செய்தது.

''நாச்சியார்புரத்து அரண்மனையிலிருந்து அலங்காரப்பல்லக்குக்கொணர்ந்து அவரை அழைத்துப் போயிருக்கிறார்கள். இளையராணி முத்துநாச்சியார் மீது அரசருக்கு அளவுகடந்த பிரேமை. அந்த முத்துநாச்சியாரின் மகளான பாளையத்து இளவரசி மோகனவல்லிக்கு இவரைக் கொண்டு சங்கீதம் கற்றுத்தர ஏற்பாடு நடக்கும் போல் இருக்கிறது. இளையராணி 'இப்போதே மணவாளனை அழைத்துக் கொண்டு வந்து ஏற்பாடு செய்தால்தான் ஆயிற்று' என்று பிடிவாதம் பிடித்தாளாம். அரசர் உடனே அழைத்துக் கொண்டு வரச் சொல்லிப் பல்லக்குடன் இவரைத் தேடி ஆட்களை அனுப்பி விட்டார். இளையராணிகள் ஆசைப்பட்டு அகம்

குச் செவிசாய்க்காத பாளையத்து ராஜாக்கள் எந்தக் கதையிலாவது உண்டா அம்மா?'' என்று மிகவும் சாதுரியமாக அந்த விஷயத்தை அனுபவித்துக் கூறினார் சத்திரத்து மணியக்காரர். கோதையின் மனத்தில் அந்த முகம் தெரியாத மோகனவல்லியின் மீது எதற்காகவோ தாங்க முடியாத பெருஞ் சினம் மூண்டது. கோபத்தோடு, கோபமாக அவள்,

**'காது வரையில் கயல்விழியும்–கோதை**
**கழைபாடக் கண்டாடும் கற்பனைகள்**
**எல்லாம்**
**இழைபோடி ஏங்கிடுமென் நெஞ்சு.'**

என்று அந்தக் கவிதையின் பின் மூன்று வரிகளையும் மெல்லத் தனக்குள் சொல்லிப் பார்த்துக் கொண்டாள். 'இப்படிப் பாட்டில் எனக்காக ஏங்கும் நெஞ்சு மெய்யாகவே எனக்காக ஏங்குமானால் நான் ஒருத்தி இந்த மகிழ மரத்தடியில் வந்து காத்திருப்பேன் என்பதை மறந்து எப்படி அரண்மனைப் பல்லக்கில் அவர் ஏறிக் கொண்டு போனார்?' என்று எண்ணி எண்ணி நெட்டுயிர்த்தாள் கோதை.

தான் மனத்தில் நினைத்துக்கொண்டு வந்திருந்த இனிய நினைப்புக்கள் எல்லாம் சரிய, அவனைத் தழுவ முடியாத காரணத்தால் அவனைப் பற்றிய நினைவுகளைத் தழுவியபடியே அவள் திரும்பிய போது மேலே நடக்க இருக்கும் பாதையை மறித்தாற்போல் அவள் தந்தை எதிரே வந்து நின்று கொண்டிருந்தார். அவர் கண்களிலும் மூச்சிலும் சீற்றம் தெரிந்தது. அவளிடமிருந்து ஏதோ ஒரு திருட்டைக் கண்டுபிடித்து விட்ட பெருமிதமும் தெரிந்தது.

''உன் போக்குச் சிறிதும் நன்றாயில்லை மகளே! நான் உறங்கி விட்டதாக நினைத்துக் கொண்டுதானே நீ இங்கு எழுந்திருந்து வந்தாய்? நாலு வயதுக் குழந்தையாக உன் தாய் உன்னை விட்டுப் போன நாளிலிருந்து அபூர்வமான மூலிகைச் செடியை மிகவும் போற்றிப் பேணிப் பாதுகாப்பாய் வளர்ப்பதைப் போல உன்னையும் உன் உடம்பையும் வளர்த்தது இந்தக் கழைக்கூத்துக் கலைக்காகவே என்பதை நீ மறந்து விடக் கூடாது. மற்றப் பெண்களைப் போல உலக ரீதியான ஞாபகங்களை உன் மனம் தழுவக் கூடாது கோதை...''

அவர் எந்த ஞாபகங்களை அவளுடைய மனம் தழுவக் கூடாதென்று சூசகமாக அறிவுறுத்தினாரோ அந்த ஞாபகங்களை மட்டும் இறுகத் தழுவியபடியே மௌனமாகத் தலை குனிந்து நடந்தாள் அவள்.

மணவாளனைப் பற்றிய ஞாபகங்களைத் தழுவிக் கொண்டு கோதை சத்திரத்துத் தனிமையில் உறங்காமல் தவித்துக் கொண்டிருந்த அதே வேளையில் நாச்சியார்புரத்து அரண்மனையின் தனியறை ஒன்றில் தனியாக உறக்கமின்றித் தவித்துக் கொண்டிருந்தான் மணவாளன். நிறைந்த அசௌகரியங்களோடு மேலே ஆகாயம், கீழே பூமி என்று நிற்கிறபோதுதான் அவன் மனம் சுதந்திரமாகவும், உல்லாசமாகவும் இருக்கும். அப்போதுதான் அவனிடம் மலர்ச்சி தெரியும். சௌகரியமான சூழ்நிலைகளில் தேவைக்கு அதிகமான உபசாரங்களுக்கிடையே அகப்பட்டுக்கொள்ளும்போது அவற்றிலிருந்து விடுபட்டுப் பறக்கத் துடிப்பது அவன் இயல்பு. இப்போதும் அப்படித் துடித்துக் கொண்டுதான் இருந்தான் அவன். பாளையத்து அரசரும் இளையராணி முத்து நாச்சியாரும் தங்கள் குமாரி மோகனவல்லிக்குச் சங்கீதம் கற்பிக்க வேண்டுமென்று சொல்லி அவனை அந்த ஆடம்பர சுகபோகச் சிறையில் கொண்டு வந்து பிணித்து விட்டார்கள்.

அரண்மனையில் மணவாளனின் மனமும் கோதையைப் பற்றிய நினைவுகளைத் தழுவிக் கொண்டு வேதனைப்பட்டது. கோதையைப் போல் செழித்து மதர்த்து நிற்கும் பேரழகி ஒருத்தியை அவன் இதுவரை கண்டதே இல்லை. கடலையும், மலையையும், ஆற்றையும், அருவியையும், மலர்களையும், மரக்கூட்டங்களையும் தவிர, மனிதர்களைப் பாடியறியாத அவன் முதன் முதலாகக் கோதையைப் பற்றித்தான் பாடினான். கோதையைப் பற்றி நினைத்த நினைப்புக் காகத்தான் ஏங்கினான். அவள் தனக்காகவே பிறந்து வளர்ந்திருக்கிறாற் போல அவன் மனத்தில் தோன்றியது. மின்னலில் வடித்து எடுத்தாற் போன்ற அந்தப் பெண்ணின் நிறமும், பெருமிடத்துப் பெருகிச் சுருங்குமிடத்துச் சுருங்கி அளவாய் அழகாய் அமைந்த உடலும் அவன் மனத்தில் சித்திரமாய்ப் பதிந்துவிட்டது.

நாச்சியார்புரம் அரண்மனையில் மறுநாள் பொழுது விடிந்ததிலிருந்து தன் மனத்துக்குச் சிறிதும் விருப்பமில்லாத புதுப் புது அநுபவங்களை அடைந்தான் மணவாளன். இந்த விதமான அநுபவங்களை அவன் வெறுத்தான்.

பாளையத்து இளவரசி தன்னிடம் சங்கீதம் கற்றுக்கொள்ள வந்திருக்கிறாளா, அல்லது அவளுடைய அலங்காரங்களால் தன்னை மருட்ட வந்திருக்கிறாளா என்பதைப் புரிந்து கொள்ள முடியாமல் திகைத்தான் மணவாளன். அந்தப் பெண்ணுக்கு மோகனவல்லி என்பதற்குப் பதில் அலங்காரவல்லி என்று பெயரிட்டால் மிகவும் பொருத்தமாக இருக்கும் போலத் தோன்றியது மணவாளனுக்கு. அரச கம்பீரமான ஆடம்பர அலங்காரங்களுடன், வீணையைத் தன் கைகளால் ஏந்தி வருவதற்குச் சோம்பினவள் போல் பக்கத்தில் ஒரு தோழி அதை ஏந்தி வர 'நான் அழகாக நடக்கிறேன்' — என்பதை ஒவ்வோர் கணமும் நிரூபிக்க விரும்புகிறவளாக நடந்து வந்து குரு வணக்கமும் செய்யாமலே மணவாளனுக்கு எதிரே அமர்ந்து கொண்டாள் பாளையத்து இளவரசி. அவளிடத்தில் பணிவோ, விநயமோ சிறிதும் இல்லை என்பதை முதற் பார்வையிலேயே மணவாளன் புரிந்து கொண்டு விட்டான். பணிவும், விநயமும் இல்லாத மனத்தில் கலைகளின் சூழ்ந்தும் பக்குவம் அமையாதென்பது அவனுக்குத் தெரியும். ஆனாலும் அவள் தன்னிடம் சங்கீதம் கற்பதற்குத் தகுதியா, இல்லையா, என்பதைப் பரிசோதிக்க விரும்பியவனாகப் பூர்வாங்க ஞானமாவது அவளுக்கு இருக்குமா இல்லையா, என்பதை அறியும் நோக்கத்துடன் கேள்விகள் சிலவற்றை அவளிடம் கேட்டான்.

''காந்தருவம், கீதம், பாணி, காமரம்.....இந்தப் பெயர் வகைகள் எதைக் குறிக்கும் என்று தெரியுமா?''

''......தெரியாது.....''

''குறிஞ்சியில் தோன்றிய செவ்வழிப் பாலைப் பண்ணைப் பாடினால் அது எந்த இராகத்துக்குச் சமமாயிருக்கும்?''

''......தெரியாது.''

''நைவளம், காந்தாரம், — படுமலை, மருள், அயிர்ப்பு, பஞ்சரம், மெய், ஆற்றுச்செந்திறம் இவை எந்தயாழ்த்திறத்தின்பெயர்கள்..?''

''......தெரியாது....''

''பின்பு உங்களுக்கு என்னதான் தெரியும்?''

''இப்போது உங்களிடம் கற்றுக் கொள்ள வந்திருக்கிறேன் என்பது மட்டும் தெரியும்....''

''அது எனக்கும் தெரியும். ஆனால் பூர்வாங்க ஞானம் கூட இல்லாதவர்களுக்கு நான் எதைக் கற்பிக்க முடியும்? மலையுச்சியில் நின்று கொண்டிருக்கிறவனிடமிருந்து அதலபாதாளப் பள்ளத்தில் நிற்கிறவர்கள் எதையாவது கைநீட்டிப் பெற முடியுமா? பெறுவதற்குத்தான் எட்டுமா?''

இதைக் கேட்டுப் பாளையத்து இளவரசி மோகனவல்லி கோபத்தோடு உதடுகளை மடக்கிக் கடித்துக் கொள்வது போல் முகம் சுளித்தாள். சிவந்த முகமே சினத்தினால் மேலும் சிவந்தது.

''ஊர் பேர் தெரியாமல் முன் பின் பார்த்திராத நாடோடிக் கழைக் கூத்தியைப் புகழ்ந்து கவி பாடுவீர்கள் நீங்கள்! அப்படிப் பாடுவதற்குப் பாத்திரமாகிற ஞான சூன்யங்கள் எல்லாம் உங்களைக் கவர முடியும். நாங்கள் கவர முடியாது. அப்படித்தானே?''

''அது என் விருப்பம்! 'இதைப் பாடு' என்று என் மனம் தானாகவே பொங்கி மேலெழுந்தாலொழிய நான் எதையும், யாரையும், எதற்காகவும் எதிர்பார்த்து மதித்துப் பாடுவதில்லை. நீங்களும் ஊர் பெயர் தெரியாத கழைக்கூத்தியாய்ப் பிறந்து அதே விதமான அழகுடன் தோன்றினால் உங்களையும் பாடி விருப்பேனோ என்னவோ?'' —

தான் அவளுக்குச் சொல்லிய பதிலில் இகழ்ச்சியும், அலட்சியமும் தொனிக்கப் பேசினான் மணவாளன். ஆசிரியரும் மாணவியுமாகச் சந்திக்க வேண்டிய அவர்கள் முதல் நாளே எதிரிகளைப்போலச் சந்தித்துப் பேசிக் கொண்டு விட்டார்கள். பாளையத்து அரசரும், அவருடைய பிரேமைக்குரிய இளையராணி முத்து நாச்சியாரும் தங்கள் குமாரிக்கு மணவாளனிடம் இருக்கும் அற்புதமான சங்கீத சாமர்த்தியங்கள் எல்லாம் பிடிபட வேண்டுமென்று இந்த ஏற்பாட்டைச் செய்திருந்தார்கள். தங்கள் பெண் மோகனவல்லியை இளவரசியாக மட்டும் அன்றிக் கலையரசியாகவும் உலகம் புரிந்து கொள்ளச் செய்ய வேண்டுமென்று அவர்களுக்கு ஆசை. மனிதர்கள்




hands of Experts
choose ONLY
YARNS OF
Quality!
"Industrial freedom is
Individual freedom
and
Individual freedom is
India's freedom"
TRADE MARK No. 191832
SEKHAR
THE COIMBATORE COTTON MILLS LTD.,
COIMBATORE.5.

ஆசைப்பட்டபடி என்னதான் நடக்கிறது இந்த உலகத்தில்?

ஏறக்குறையப் பதினைந்து நாட்களோ இருபது நாட்களோ, அந்த அரண்மனையாகிய சுகபோகச் சிறையில் இருந்த பின் ஏதோ ஒரு நாள் சாயங்காலம் மலையடிவாரத்தில் உலாவப் போய் வருவதாய்ச் சொல்லி விட்டுப் புறப்பட்டுவந்த மணவாளன் திரும்ப அந்த அரண்மனையில் நுழையவே இல்லை. 'தங்கக் கூட்டில் வைத்து வளர்க்கிறோம்' — என்று கிளியை வளர்ப்பவர்கள் பெருமைப்பட்டுக் கொண்டிருக்கலாம். ஆனால் அதற்குள் அடைபட்டு விட்ட கிளிக்கு ஒடித்த கிளைகளும், பச்சை மரங்களும் கட்டுக் காவலில்லாமல் விட்டு விடுதலையாகிப் பறக்கும் விரிந்த வானமும் அல்லவா வேண்டியிருக்கிறது! மணவாளனுடைய நிலையும் அப்படித்தான் இருந்தது.

சுதந்திரமாக வெளியேறி வந்துவிட்டோம் என்ற நிம்மதியும், கோதையைப் பற்றிய நினைவுகளும் மனத்தில் உலவிட அந்த மாலை வேளையில் மலையடிவாரத்துச் சாலையில் உலாவிக் கொண்டிருந்தான் மணவாளன்.

இந்த இருபது நாட்களாய் எப்படிக் கோதையைப் பார்க்காமல் இருந்தோம் என்று நினைத்தபோது மணவாளனுக்குத் தான் நிறைய நஷ்டப்பட்டுப் போய் விட்டது போலிருந்தது. நாச்சியார்புரத்தில் வேளில் விழாக்கூட முடிந்து போய் விட்டதே? கோதையும் அவள் தந்தையும் ஊர் திரும்பியிருக்கலாமென்று நினைத்தான் அவன். உலாவி விட்டுத் திரும்பிச் செல்கிறபோது கோதையும், அவள் தந்தையும், தங்கியிருக்கிறார்களா, இல்லையா என்பதைச் சத்திரத்தில் போய் விசாரிக்க வேண்டும் என்று ஆவல் உண்டாயிற்று அவனுக்கு.

இருட்டுவதற்கு முன் விரைவில் ஊருக்குள் திரும்பி வந்து சத்திரத்தில் விசாரிக்க வேண்டுமென்றெண்ணத்தினால் உலாவிக் கொண்டிருந்த அவனது நடை விரைவாயிற்று. கோதையைப் பற்றிய நினைவும் மெல்ல இருண்டு வரும் சாயங்கால வேளையின் மனோரம்மியமான சூழ்நிலையும் சேர்ந்து மணவாளனைப் பாடிக் கொண்டே நடக்கச் செய்தன. நளினமானதொரு ஞாபகம் எந்த ரூபத்தில் ஒலிக்கிறதோ, அந்த ரூபத்தின் அநுபவமே ராகம். இருள் கலக்கும் சாயங்கால வேளையின் அழகை ஒலி வடிவில் பேசுகிற இனிமையாய் நீலாம்பரி அமையலாமே! அந்த மலையடிவாரத்துச் சாலையெல்லாம் நீலாம்பரி ராகத்தை ஒலித்துச் சாயங்கால வேளையின் அழகை மிகைப்படுத்தும்படி செய்து கொண்டிருந்தான் மணவாளன். அபூர்வமான கற்பனைகள் பிடிபடுகிறவரை ஒரு ராகத்தில் உலாவுவது சுகமான யாத்திரைக்குச் சமமானது. நாவும், இதழ்களும், இதயத்தில் கரந்திருந்த கோதையின் ஞாபகமும், ஒலியாய் உலவிட அந்தஅநுபவத்தை முடிக்கவே விரும்பாதவனை மேலே மேலே நடத்து போய்க் கொண்டிருந்தான் அவன். வர்ணங்கள் குழம்பித் தவிக்கும் சாயங்கால வானமும் மலைத்தொடர்களும், அவற்றின்மௌனத்தில் என்ன நிரம்பியிருக்கிறதோ அதை எடுத்துப் பேசுவது போன்ற நீலாம்பரி ராகமும்,—சுகமான அநுபவமாயிருந்த போது மலையடிவாரத்து மூங்கிற்காட்டிலிருந்து அந்த அழுகைக் குரலைக் கேட்டான் அவன். அவன் நாவில் உலாவிய ராகம் நின்றது.

## 5. இங்கிதநாத நிலையம்

மூங்கிற் காட்டிலிருந்து தனியே விசும்பியழும் அந்தக் குரலைக் கேட்டு, மணவாளன் ஓடிப் போய்ப் பார்த்த போது, அவனுடைய ராகத்தின் ஞாபகமாக இருந்தவள் எவளோ அவளே தவிப்பவளாக அங்கு எதிரே நின்று



கொண்டிருந்தாள். சில பச்சை மூங்கிற் கழிகள் வெட்டிக் குவிக்கப்பட்டு அருகில் கிடந்தன. மூங்கிற் புதரருகே கோதையின் தந்தையாகிய அந்த முதியவர் கையிலிருந்து நழுவிய வெட்டரிவாள் ஒருபுறம் கிடக்க, நிலைகுலைந்து விழுந்திருந்தார். அருகில் சென்று பார்த்த போது அவருடைய உடம்பு நீலம்பாரித்துக் கிடந்தது. மணவாளனை அந்த நிலையில் அங்கே சந்தித்ததும் கோதை கோவென்று கதறிக் கதறி அழுதாள்.

"இந்த உலகத்தில் இனிமேல் நான் அநாதை. கழைக்கூத்துக்கு ஏற்றாற்போல் நல்ல மூங்கில்கள் இங்கே கிடைக்குமென்று காட்டுக்கு மூங்கில் வெட்ட வந்து மூச்சையே விட்டு விட்டார் என் தந்தை. மூங்கிற்புதரில் இருந்த பாம்புப் புற்றைக் கவனிக்காமல் புற்றின் மேலேயே காலை வைத்து ஏறி விட்டார். ஐயோ! இப்படி உயிரைக் கொடுக்கவா நாச்சியார்புரத்து வேளில் விழாவுக்கு என்னை ஆவலோடு அழைத்து வந்தார்? விழா முடிந்ததும் இங்கிருந்து புறப்பட்டிருந்தாலும் நல்லதாயிருக்குமே! ஏன் தான் இங்கே சில நாட்கள் தங்கி, நல்ல மூங்கில்கள் வெட்டிக் கொண்டு போக வேண்டுமென்ற பேராசை அப்பாவுக்கு வந்ததோ?" என்று சொல்லி நினைத்து நினைத்துக் குமுறிக் குமுறி அழுதாள் கோதை. மணவாளன் இந்தச் செய்தியறிந்து கண்கலங்கி நின்றான். நடுக்காட்டில் மூங்கில் வெட்டிக் கொண்டு போக வந்த இடத்தில் அந்த முதியவருக்கு எமன் காத்துக் கொண்டிருப்பான் என்று யார்தான் எதிர்பார்த்திருக்க முடியும்? கோதையின் நிராதரவான நிலை மணவாளனுக்குப் புரிந்தது. சாவு மனத்தை அறுக்கக் கூடிய சோக அநுபவம். அதுவும் இப்படி எதிர்பாராத விதமாக வருகிற துர்மரணத்தைத் தாங்கிக் கொள்ளவே முடியாதுதான். அவன் கோதையைத் தேற்றினான்.

"கவலைப்படாதே கோதை! உலகத்தில் யாருமே அநாதை இல்லை. அரண்மனையில் அடைபட்டுக் கிடந்த நான் இன்றைக்கு இந்த மலையடிவாரத்துச் சாலையில் உலாவப் புறப்பட்டதே இப்படி ஓர் அநாதைக்கு உதவ வேண்டுமென்ற தெய்வ சித்தத்தினால் தான் போலிருக்கிறது. நானே உலாவிவிட்டுத் திரும்பும் போது அந்தச் சத்திரத்துக்குப் போய் உன்னைப் பற்றி விசாரிக்க வேண்டுமென்று எண்ணிக் கொண்டிருந்தேன். சிரித்த முகமும், இனிய பேச்சுமாக உன்னைச் சந்திக்க விரும்பிய சந்திப்பு இப்படித் துக்கமயமாக நேரும் என்று நான் சிறிதும் எதிர்பார்க்கவில்லை." — இந்த வார்த்தைகளைச் சொல்லும் போதே மணவாளன் மனப்பூர்வமாக நெகிழ்ந்து பேசினான். மலையடிவாரத்தில் போது இருட்டிக் கொண்டிருந்த சமயத்தில் கோதையின் அழுகையும் கதறலும் அந்த வனாந்தரத்து மூங்கிற் காடெல்லாம் எதிரொலித்துக் கொண்டிருந்தது. மிகப் பெரிய துயர நிகழ்ச்சி நடைபெற்று விட்டாலும் மிருகங்கள் திரியத் தொடங்குகிற நேரத்தில் நடுக்காட்டிலே, தங்குவதை மணவாளன் விரும்பவில்லை. தானாகவே மிகுந்த உரிமையும், பாசமும், எடுத்துக்கொண்டு அவளருகே சென்று உதடுகள் துடித்துக் கண்கள் பெருகிக் கலங்கிட அழுது கொண்டிருக்கும் பனிந்த முகத்தை நிமிர்த்தினான் அவன். பின்பு இதய பூர்வமான வார்த்தைகளால் அவளை நோக்கிச் சொல்லலானான்:

"கோதை! இதோ என்னைப் பார்! இந்த ஊருக்கு நீயும் புதியவள், நானும் புதியவன். இரவு ஆக ஆகக் காட்டில் மிருகங்களின் தொல்லை அதிகம். உன் தந்தையாரின் சடலத்தை இங்கிருந்து ஊர் மயானத்துக்குச் சுமந்து சென்று ஈமக்கிரியைகளைச் செய்து விடலாம். சந்தர்ப்பத்துக்கு மட்டும் உதவ வந்த சாதாரணத் துணையாக என்னை நினைத்து விடாதே. என்னுடைய சத்தியமான துணையும், ஆதரவும், உனக்கு என்றும் உண்டு. உன்னுடைய கழைக்கூத்தைப் பார்த்த முதல் விநாடியே கல்லாய் இறுகிப் போயிருந்த என் இதயத்தை நீ வென்றிருக்கிறாய். இந்த வெற்றி உன்னைக் காப்பாற்றும்...."

"தவறு. என் இதயம் தான் உங்களுக்குத் தோற்றுப் போயிருக்கிறது. நீங்கள் மகாகவி. இசை மேதை. நான் உங்கள் தோளில் மணப்பதற்காகவே மலர்ந்த பூமாலை. நீங்கள் மணவாளர். நான் உங்களை மணக்கும் கோதை! எனக்கு உற்றார் உறவு எல்லாம் நீங்கள்தான். என்னுடைய தந்தை இறந்ததற்காக நான் உங்களைத் தழுவிக் கொண்டுதான் அழ வேண்டும். உங்களைச் சாதாரணத் துணையாக நான் ஒரு போதும் நினைத்ததில்லை. உங்களை என் வாழ்க்கைக்கே துணையாக அடைய வேண்டுமென்று பார்த்த கணத்திலிருந்து நான் தவிக்கிறேன். என்னுடைய இந்தக் கைகள் உங்களுடைய பாதங்களைத் தொழுவதற்

காலையே மலர்ந்த பூக்கள்'' என்று விழிகளில் நீர் பெருக உணர்ச்சி வசப்பட்டுச் சொன்னாள் கோதை. மணவாளன் அவளுக்கு அபயமளித்தான். மலையடிவாரத்து மூங்கிற் காட்டிலிருந்து நாச்சியார்புரத்து மயானம் வரை கோதையின் தந்தையது உடலைச் சுமந்து கொண்டு அவளையும் அழைத்துச் சென்று அந்த இரவில் ஈமக்கிரியைகளைச் செய்தான் மணவாளன். மயானத்தில் எல்லாம் முடிந்ததும் இடைவிடாமல் அழுது அழுது வீங்கிய முகத்தோடு துவண்டு வாடிப்போன கொடியாய் மணவாளனைப் பின்தொடர்ந்து நடந்தாள் கோதை. நள்ளிரவில் மயானத்துத் தனிமையிலிருந்து வெளியேறிய போது முன்னால் மணவாளன் வழிகாட்டி நடக்கப் பின்னால் எரிகின்ற தந்தையின் சிதையைத் திரும்பித் திரும்பிப் பார்த்தபடி கோதை பின்தொடர்ந்து சென்ற நிலை பரிதாபம் நிறைந்ததாயிருந்தது. பின்னால் ஓர் உறவு எரிந்து அழிய முன்னால் எல்லையற்று விரிந்திருந்த இருளில் இன்னோர் உறவு தோன்றி அவளுக்கு வழி காட்டிக் கொண்டு சென்றது. தந்தை இறந்த சோகம் அவளை வாட்டினாலும் இந்தப் புதிய உறவு தனக்கு வாய்த்த பாக்கியத்தை அவள் போற்றினாள். பார்த்த முதல் விநாடியிலிருந்து எவனைப் பற்றிய நினைவுகளைத் தன் நினைவுகளால் இடையறாது தழுவிக் கொண்டிருந்தாளோ அவனே தனக்கு அபயமளித்தது அவளுக்குப் பெருமையாயிருந்தது. மயானத்திலிருந்து வெளியேறி நாச்சியார்புரத்து வீதிகளில் பாதி இரவின் அமைதியில் இருளிடையே நடந்து போய்க் கொண்டிருந்தபோது ஓரிடத்தில் கோதை நடக்க முடியாமல் சோர்ந்து தள்ளாடினாள். அதைக் கவனித்த மணவாளன் அவள் கையைப் பற்றி அவளைத் தாங்கிக் கொண்டு சொல்லிய வார்த்தைகள் அவளுக்குப் பெரிதும் ஆறுதலாயிருந்தன.

''கோதை! இந்த உலகத்தில் நீயும் ஓர் அநாதை. நானும் ஓர் அநாதை. நீயும் ஒரு கலையில் தேர்ந்தவள். நானும் ஒரு கலையில் தேர்ந்தவன். இரண்டுபேரும் தனித்தனியாய்த் தவிப்புக்களை உணர்ந்தவரை அநாதைகள். ஆனால் இனிமேல் அப்படியில்லை. இரண்டு பேரும் ஒன்றாக நடக்கிறோம். ஒரே வழியில் நடக்கிறோம். ஒன்றாக உணர்கிறோம். ஒன்றாகத் தவிக்கிறோம். ஆகவே இந்த விநாடியிலிருந்து இரண்டு பேருமே அநாதைகள் இல்லை. பாளையத்து இளவரசி மோகனவல்லிக்குச் சங்கீதம் கற்பிக்கச் சொல்லி என்னை அரண்மனைக்கு அழைத்துக் கொண்டு போனார்கள். அந்த அரண்மனையிலிருந்து விடுபட்டு ஓடிவரவும், உன்னைக் காணவும் நான் தவித்த தவிப்பைச் சொல்லி முடியாது. இன்று விடுபட்டு வந்து விட்டேன். இனிமேல் மறுபடி அரண்மனை வாயிற்படிகளில் ஏறுகிற நோக்கமில்லை. பாளையத்து இளவரசிக்கு இசை கற்பிப்பதை விட உனக்கு அதைக் கற்பித்து உன்னை என்னுடையவளாக அங்கீகரித்துக்கொள்ள விரும்புகிறேன் நான். நீ என்னுடையவள். என்னுடைய குடும்பச் சொத்துக்களாகிய அபூர்வ ராகங்களைக் கற்பிக்க நீயே பாத்திரமானவள்.''

''என் தவம் வீண் போகவில்லை. இப்படி நீங்கள் சொல்வது என் பூர்வபுண்ணிய வசத்தால் நான்பெறும் பாக்கியம்'' என்று அவன் பாதங்களைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக்கொண்டாள் கோதை. அன்று இரவு அவர்கள் சத்திரத்தில் தங்கச் சென்றபோது அந்த அகாலத்தில் உறக்கம் சோர்ந்த விழிகளோடு கதவைத் திறந்து விட வந்த சத்திரத்து மணியகாரர் மணவாளனைக் கோதையோடு சேர்த்துப் பார்த்தவுடன் திகைத்துப் போனார்.

''என்ன ஐயா இது? அரண்மனை வித்துவானாக இருந்து பாளையத்து இளவரசிக்குச் சங்கீதம் கற்பிப்பதாக உன்னைப் பற்றி ஊரெல்லாம் பெருமையாய்ப் பேசிக் கொண்டிருக்கிறார்கள். நீ என்னடாவென்றால் கழைக்கூத்திப் பெண்ணோடு சுற்றிக் கொண்டிருக்கிறாய்?'' என்று சத்திரத்து மணியகாரர் கேட்டபோது கோதை தலைகுனிந்தாள். 'நீங்கள் என் மேல் கொள்கிற அன்பையும், ஆதரவையும் உலகம் எப்படி வரவேற்கிறது பார்த்தீர்களா?' என்று கேட்கிறவளைப் போல் கண்களில் நீர் ததும்பச் சற்றே நிமிர்ந்து அவள் மணவாளனைப் பார்த்தாள். அவனோ தன் பார்வையாலேயே



சத்திரத்து மணியகாரரைச் சுட்டுக் கொண்டிருந்தான்.

''ஐயா, மணியகாரரே! உங்கள் நாச்சியார்புரம் பாளையத்து அரண்மனையில் யானையும், குதிரையும் வளர்ப்பது போல் சங்கீதத்தையும் வளர்த்து விட முடியாது. சத்திரம் எல்லாருக்கும் பொதுவான தர்மசாலை என்று நினைப்பதால் உங்களிடம் தங்குவதற்கு இடம் கேட்கிறோம். பாளையத்து அதிகாரத்துக்குப் பணியாதவர்களைத் தங்க விடமாட்டீர்களானால் தெருவில் எங்காவது மரத்தடியில் படுத்து உறங்கிக் கொள்கிறோம். நான் அரண்மனையிலிருந்து சொல்லாமல் கொள்ளாமல் வெளியேறி வந்து விட்டேன். மறுபடி அங்கே போய் இளவரசிக்குச் சங்கீதம் கற்பிக்கிற உத்தேசம் எனக்குச் சிறிது கூட இல்லை. இந்தப்பெண் கோதை காட்டுக்கு மூங்கில் வெட்ட வரப் போன இடத்தில் தந்தையைச் சாவுக்குப் பலி கொடுத்து விட்டு வேதனையோடு வந்திருக்கிறாள். வாயில் தோன்றுகிற சொற்களை வரம்பின்றிப் பேசாதீர்! உங்கள் பாளையத்து இளவரசியைவிட இவளுக்கு இசை கற்பிப்பதை நான் அதிகமாக விரும்புவேன். என் விருப்பத்துக்கு எதிரே எனக்கு வேறெவரும் இலட்சியமே இல்லை'' என்று சீற்றத்தோடு அவருக்கு மறுமொழி கூறினான் மணவாளன். அந்த அன்பு கோதையை மனமுருகச் செய்தது.

''என் பொருட்டு உங்களைக் குறைத்துக் கொள்கிறீர்களே கண்ணா? நான் எந்தவிதத்தில் உங்களுக்குச் சமமானவள்? உலகத்தார் சாதாரணமாக எடைபோடும் கழைக் கூத்தாடியினத்தைச் சேர்ந்தவள்தானே நான்?'' என்று அவன் காதருகே வந்து மனம் நெகிழக் கூறினாள் கோதை.

''அப்படிச் சொல்லாதே கோதை! உன்னைப் படைத்த படைப்புக் கடவுளே என்னெதிரில் வந்து நீ குறைவான குலத்தைச் சேர்ந்தவள் என்று இழிவு கூறினாலும் நான் அதை ஏற்றுக் கொள்ள மாட்டேன். என் மனத்தில் நான் முடிவு செய்வது தான் என்னுடைய தீர்மானம். அதற்கு அப்பால் அதை முடிவு செய்யும் உரிமை வேறு யாருக்குமே இல்லை'' என்று தைரியமாக உரத்த குரலில் சத்திரத்து மணியகாரருக்கும் கேட்கும்படி மறுமொழி கூறினான் மணவாளன்.

இப்படியெல்லாம் எடுத்தெறிந்து பேசிய பேச்சுக்கு விளைவு மறுநாள் பொழுது விடிந்ததும் காத்திருந்தது. அப்படி ஒரு விளைவு நேருமென்று கோதையும் எதிர்பார்க்கவில்லை. மணவாளனும் எதிர்பார்க்கவில்லை. கொடுமையிலும், குரூரச் செயல்களிலும், தழும்பேறிப் போன பழக்கமுள்ளவர்களாகிய பாளையத்து அரச பரம்பரையைச் சேர்ந்தவர்கள் ஓர் அப்பாவிக் கலைஞன் தங்களை எடுத்தெறிந்து பேசியதைக் கேள்விப்பட்டால் சும்மா விட்டு விடுவார்களா?

விடிந்ததும் விடியாததுமாக அரண்மனைக்குப் போய்க் கோள் மூட்டி விட்டார் சத்திரத்து மணியகாரர். 'பாளையத்து இளவரசிக்குச் சங்கீதம் கற்பிப்பதைக் காட்டிலும் நாடோடியான கழைக் கூத்தியோடு ஊர் சுற்றுவது பெரிய காரியமாகப் போயிற்றாம் அவனுக்கு' என்று தன்னிடம் எடுத்தெறிந்து பேசிய காய்ச்சலை அரசனிடமும் மூட்டி விட்டார் மணியகாரர். கோதைக்கும் மணவாளனுக்கும் மறுநாள் போது நன்றாக விடியவில்லை. ஆனாலும் அவர்கள் அதற்காகச் சிறிதும் அஞ்சவே இல்லை.

பாளையத்து அரண்மனையிலிருந்து மாடு மாடாய் வளர்ந்திருந்த கொலை மறவர்கள் பத்துப் பன்னிரண்டுபேர் மணவாளனைத் தேடிச் சத்திரத்துக்கு வந்தார்கள். ஏதேதோ சொல்லி மிரட்டினார்கள்.

''மரியாதையாக மறுபடியும் அரண்மனைக்கு வந்து பாளையத்து இளவரசி மோகனவல்லிக்குச் சங்கீதம் கற்பிக்கச் சம்மதமா? அல்லது அந்தக் கழைக் கூத்தியோடுதான் சேர்ந்து இருக்க விரும்புகிறாயா? நீ அந்தக் கழைக்கூத்தியோடு சுற்றிக்கொண்டு திரிவதைத்தான் விரும்புவாயானால் ஆயுள் பரியந்தம் இந்த நாச்சியார்புரம் பாளையத்தின் ஊர் எல்லைக்குள் எங்கும் பிரவேசிக்கக் கூடாது. மீறிப் பிரவேசித்தால் உன்னைச் சிரச்சேதம் செய்வோம்'' — என்று பாளையத்து அரசரின் முத்திரையிட்ட ஓலையைக் கொணர்ந்து அவனிடம் நீட்டினார்கள் கொலை மறவர்கள்.



# திருவொற்றியூர் இப்பொழுது

## ஒரு தொழில் ஸ்தலம்



சென்னைக்கு வடக்கே 12 மைல் தூரத்தில் இருக்கிறது திருவொற்றியூர். இச்சிறிய கிராமத்தில் உள்ள தியாகராஜர் கோவிலும், தமிழ் நாட்டின் கவி-யோகியான பட்டினத்தாரின் சமாதியும் பிரசித்தமானவை. இன்று இந்தியாவின் தொழிற் பெருக்கத்திற்கேற்ப, திருவொற்றியூரும் கொஞ்சம் கொஞ்சமாக தொழில் ஸ்தலமாக மாறிவருகிறது.

இங்குதான் ஐந்து ஆண்டுகளுக்கு முன்பு என்பீல்ட் இந்தியா ஸ்தாபனத்தினர் ராயல் என்பீல்ட் மோட்டார் ஸைக்கிள்கள் உற்பத்தி செய்வதற்கான தொழிற்சாலையை நிறுவினர். இதுவரை அவர்கள் பல்லாயிரக்கணக்கான மோட்டார் ஸைக்கிள்களையும் மூன்று சக்கர வண்டிகளையும் தயாரித்திருக்கின்றனர்.

இப்பொழுது என்பீல்ட் இந்தியா ஸ்கூட்டர்களும் பல்வேறு தொழில் மற்றும் விவசாய இயந்திரங்களை இயக்குவதற்கு முக்கியமான வில்லியர்ஸ் என்ஜின்களும் உற்பத்தி செய்வதைத் தொடங்கியிருக்கின்றனர். திருவொற்றியூரில் உள்ள இந்தத் தொழிற்சாலையில் 2000க்கும் அதிகமான ஆட்களுக்கு வேலை கிடைக்கிறது.



**திருவொற்றியூர்**

நாட்டின் முன்னேற்றத்தைப் பிரதிபலிக்கிறது

**தி என்பீல்ட் இந்தியா லிமிடெட்,**

திருவொற்றியூர், சென்னை-19



MADRAS CEMENTS LIMITED
RAMCO BRAND
PORTLAND CEMENT
தீபாவளி
நல்வாழ்த்துக்கள்
மதராஸ் சிமெண்ட்ஸ்
லிமிடெட்
ராஜபாளையம்
"ராம்கோ பிராண்ட்" போர்ட்லண்ட் சிமெண்ட் தயாரிப்பாளர்கள்
மானேஜிங் ஏஜண்டுகள்
மெஸர்ஸ் P. A. C. ராமசாமி ராஜா & கோ
ராஜபாளையம்

அந்த ஓலையைப் படித்ததும் அலட்சியமாய்ச் சிரித்துக் கொண்டே அதைக் கிழித்துப் பறக்க விட்டான் மணவாளன்.

''போய் உங்கள் பாளையத்து மன்னரிடமும், இளையராணியிடமும் இதைச் சொல்லுங்கள். பாளையத்து அரண்மனையின் அதிகாரத்தையும் அந்த அதிகாரம் எழுதப்பட்டிருந்த ஓலையையும் கிழித்துக் காற்றில் பறக்க விட்டு விட்டான் மணவாளன் என்று சொல்லுங்கள். என்னைப் போல் சிங்கங்கள் காட்டில் தான் வாழ வேண்டும். நாட்டில் வாழ முடியாது. வாழவும் விட மாட்டார்கள். தெரிந்ததுதானே? இந்த உத்தரவிலும் பயமுறுத்தலிலும் புதுமை என்ன இருக்கிறது?'' என்று அவன் கூறிய பதிலைக் கேட்டுச் சத்திரத்து மணியகாரரும் அவன் அழைத்து வந்திருந்த கோலை மறவர்களும் மருண்டு போனார்கள். இப்படித் திரானை அவர்கள் இதற்கு முன்னால் சந்தித்ததில்லை.

அடுத்த விநாடி கோதையைக் கைப் பற்றி அழைத்துக் கொண்டு அங்கிருந்து வெளியேறி விட்டான் மணவாளன். முதலில் சத்திரத்து எல்லையிலிருந்தும் பின்பு அந்த ஊர் எல்லையிலிருந்தும், இறுதியில் அந்தப் பாளையத்து எல்லையிலிருந்துமே வெளியேறி மலையடிவாரத்தை அடைந்துவிட்டார்கள் அவர்கள். மணவாளன் தன்பொருட்டுச்செய்ததியாகம் கோதையை மனமுருகச் செய்தது.

''கண்ணு! எனக்காக நீங்கள் உங்களுடைய சௌகரியங்களை எவ்வளவோ விட்டுக் கொடுக்கிறீர்கள். நான் அவ்வளவிற்குத் தகுதியானவளா?'' என்று நாத் தழுதழுக்கக் கேட்டாள் கோதை.

''கோதை! நீயும் நானும் இதற்குமுன் எந்தப் பிறவியிலுமே மண்ணை மிதித்து நடந்ததில்லை. பூக்களை மிதித்து அவற்றின் மென்மைகூட உறுத்தி விடுமோ என்று கூசிக் கூசி நடந்திருக்கிறோம். இப்போது இந்த மண்ணில் நடப்பது எவ்வளவோ வேதனையாகத்தானிருக்கிறது. கவலைப்படாதே! நீ என்னுடைய அபூர்வ ராகங்களுக்கு எல்லாம் இங்கிதநாத நிலையம். உன்னை நான் ஒரு போதும் கைவிட மாட்டேன். பாளையத்து அதிகாரமும், மனிதர்களின் பொறாமையும், மண்ணுலகத்து அழுக்குகளும் நாட்டில் நம்மை வாழவிடப் போவதில்லை. ஆனாலும் நாம் சேர்ந்து வாழத்தான் வேண்டும். காட்டிலும் மலையிலும் சேர்ந்து வாழ்வோம். மனிதர்களின் மூச்சுக் கலவாத தூய மலைக்காற்றில் உலவுவோம். மனிதர்களின் கைபடாத கனைத் தண்ணீரைக் குடிப்போம். மூங்கில் அரிசியையும், காட்டுக் கிழங்குகளையும் வேக வைத்து உண்போம். நாட்டு மனிதர்களின் நாகரிகமற்ற பொறாமையை எள்ளி நகையாடிக் கொண்டே காட்டில் வாழ்வோம்'' என்று அவன் வலது கையில் தன்னுடைய வலது கையைப் பொருத்தி — 'இந்த அன்பு சத்தியமானது'— என்பது போல் அவள் முகத்தைப் பார்த்தான். அவளும் அப்படியே அவனைப் பார்த்தாள்

## 6. காலை நடையினிலே

வளம்நிறைந்த நாச்சியார்புரம் பாளையத்தின் ஊர் எல்லைக்குள் எப்படி ஓடிக்



கொண்டிருந்ததோ அப்படித்தான் மலையடிவாரத்திலும் காலம் ஓடிக் கொண்டிருந்தது. அமைதி, அமைதியின்மை என்ற ஒரு வேறுபாடு வேண்டுமானாலும் இரண்டிற்கும் இடையே இருக்கலாம்.

நாச்சியார்புரத்து மலைகளுக்கும் மூங்கிற் காட்டுக்கும் கடந்த சில ஆண்டுகளாகக் கொண்டாட்டம் என்றுதான் சொல்ல வேண்டும். பண்ணும் பாவும் போல் கோதையும், மணவாளனும் அபூர்வ ராகங்களைப் பாடிக் கொண்டு மகிழ்ந்து திரியும் பாக்கியம் அந்த மலைகளுக்கும் காட்டுக்கும் கிட்டியிருக்கிறதே? அது மிகப் பெரிய பாக்கியம் அல்லவா? அழகான தோற்றமும் அழகான நினைவுகளும் அழகான சாமர்த்தியங்களும் உள்ளவர்கள் ஒன்று சேர்ந்து நடப்பதனால் அப்படி நடப்பதற்கு இடமாகிற மண் தவம் செய்திருக்க வேண்டும்.

நாச்சியார்புரத்து மலைகள் அப்படித் தவம் செய்திருந்தன போலும். அந்தச் சில ஆண்டுகளில் நாச்சியார்புரம் பாளையத்தின் வாழ்க்கையிலும் எத்தனையோ மாறுதல்கள். பாளையத்து அரசர் காலமாகி விட்டார். மூத்த ராணிக்கு மக்கட் பேறில்லை. இளைய ராணிக்கு ஒரே பெண் மோகனவல்லிதான். அவளும் திருமணம் செய்து கொள்ளவில்லை. அவளுடைய வார்த்தைப்படி அரண்மனைக் காரியஸ்தர்கள் பாளையத்து நிர்வாகத்தை நடத்திக் கொண்டிருந்தார்கள். அந்த 'அகங்காரவல்லி'யோடு கூடப் பிறந்த திமிரும், ஆணவமும் என்றும்போல் அவளோடு சேர்ந்து வளர்ந்து கொண்டிருந்தன.

மணவாளனும், கோதையும் தன்னுடைய பாளையத்தை அடுத்திருக்கும் மலைத் தொடரில் மறைந்து வாழ்கிறார்கள் என்பதை அடிக்கடி வேட்டைக்குச் சென்று திரும்பும் அரண்மனை மறவர்கள் மூலம் தெரிந்து கொண்டிருந்தாள் மோகனவல்லி. அவளுடைய மனத்துக்குள் அந்தரங்கமாக ஒரு சபதம் இருந்தது. மணவாளன் தன்னை அலட்சியம் செய்து விட்டு அரண்மனையிலிருந்து வெளியேறிய நாள் தொடங்கிக் கனன்று கொண்டிருந்த அந்தச் சபதம் நீறுபூத்த நெருப்பாய் இன்னும் அவள் உள்ளத்தில் இருந்தது.

''இதைப் பாடு என்று என் இதயமே தானாகப் பொங்கி மேலெழுந்தாலொழிய நான் எதையும் எதிர்பார்த்து யாரையும் பாடுவதில்லை'' என்று நெஞ்சை நிமிர்த்திக் கொண்டு தன்மானம் பேசிய அந்தக் கவிஞைத் தன்னிடமிருந்து ஏதாவது எதிர்பார்த்துத் தன்னைப் பாடச் செய்ய வேண்டுமென்று எண்ணினாள் மோகனவல்லி. பாளையத்து அதிகாரமும் தன் கையிலிருந்ததனால் மணவாளனைப் பழி வாங்குவதற்கு அதுவே ஏற்ற தருணமென்று அவளுக்குத் தோன்றியது. நாச்சியார்புரம் ஊருக்கு மேற்கே மலைத் தொடர்கள் ஆரம்பமாகும் பகுதியில் மூங்கிற்காட்டை ஒட்டி நடுவாக அமைந்திருந்த செங்குத்தான பாறை ஒன்றின் மேல் சுனையின் அருகே பர்ணசாலைபோல் ஒரு குடிசை அமைத்துக் கொண்டு கோதையும், மணவாளனும் அதில் வாழ்ந்து வருவதாகக் காட்டுக்கு வந்து செல்லும் வழக்கமான வேட்டைக்காரர்கள் மோகனவல்லிக்குச் சொல்லியிருந்தார்கள். எப்போதாவது ஒரு நாள் அந்த மலையடிவாரத்துக் குடிசைக்குப் போய் அங்கே கோதையும் மணவாளனும் வாழ்கிற சீரைப் பார்த்துவிட வேண்டுமென்று மனத்துக்குள்ளே அசூயையால் புகைந்து கொண்டிருந்தாள் மோகனவல்லி. தன்னிடமிருந்து மணவாளன் ஏதாவது உதவியையாவது எதிர்பார்க்கும்படி செய்துவிட வேண்டும் என்று பொறாமையால் தவித்தாள் அவள்.

பாளையத்து இளவரசி மோகனவல்லி எதிர்பார்த்துக் கொண்டிருந்த அந்தச் சந்தர்ப்பமும் ஒரு நாள் வாய்த்தது. கார்த்திகை மாதத்தில் ஒரு நாள் வன போஜனத்துக்காகப் பாளையத்து அரண்மனையைச் சேர்ந்தவர்கள் எல்லாரும் மலையடிவாரத்துக்குப் போயிருந்தார்கள். வன போஜனம் முடிந்ததும் ஊர் திரும்புவதற்குமுன் வேட்டைக்காரர்களை வழி காட்டச் சொல்லி மணவாளனும், கோதையும் வாழ்கிற குடிசைக்குப் போனாள் மோகனவல்லி.

அவள் போனபோது மணவாளன் மட்டும்தான் குடிசை வாசலில் அமர்ந்திருந்தான். மூங்கிலில் புதிதாய்ச் செய்த புல்லாங்குழலுக்குத் துளையிட்டுக் கொண்டிருந்தான். சிறிது தொலைவு தள்ளிப் பாறைப் பிளவிலிருந்த சுனையில் ஒரு பெண் குளித்துக் கொண்டிருப்பது தெரிந்தது. அவள்தான் கோதையாயிருக்க வேண்டுமென்று புரிந்து கொண்டாள் மோகனவல்லி.

மிக அருகே நிறைய ஆட்கள் நடந்து வருகிற ஓசையைக் கேட்டுக் கீழே குனிந்து புல்லாங்குழலுக்குத் துளையிட்டுக் கொண்டிருந்த மணவாளன் நிமிர்ந்தான். அலங்காரமும், அகங்காரமும் ஒருங்கு தோன்றப் புதிதாய்க் கிடைத்திருந்த பாளையத்து அதிகார ஆணவத்துடனே மோகனவல்லி அவன் எதிரே வந்து கொண்டிருந்தாள். அவளை அலட்சியம் செய்வது போல் வேறு பக்கமாகப் பார்த்தான் மணவாளன். அன்றிருந்தாற் போலவே கட்டழகு குறையாமலிருக்கும் அவன் தோற்றத்தைக் கண்டு மனத்தின் ஒரு பகுதி பொறாமையால் விம்மிடவும், மறு பகுதி தாபத்தால் ஏங்கிடவும் நின்றாள் மோகனவல்லி. அவன் தன்னுடைய வரவையே அலட்சியம் செய்கிறான் என்பது அவளுக்குப் புரிந்தது. அந்த அழகிய கலைஞனின் அலட்சியம் அவள் மனத்தை அந்தரங்கமாக வேதனைப் படுத்தினாலும் அதை வெளியே காண்பித்

துக் கொள்ள முடியாமல் அதிகாரமும் பதவியும் அவளைத் தடுத்தன. அதிகாரக் குரலிலேயே அவள் அவனைக் கேட்டாள்: "நீண்ட நாட்களுக்குப் பிறகு சந்திக்கிறோம். உங்களிடம் சங்கீதம் கற்றுக் கைவிடப்பட்ட மோகனவல்லி வேறு. இப்போது உங்கள் எதிரே நிற்கிற மோகனவல்லி வேறு. இப்போது நீங்கள் சந்திக்கிற மோகனவல்லி இந்தப் பாளையத்தை ஆளும் இளவரசி. அவள் எதிரே நீங்கள் இப்படி அலட்சியமாக உட்கார்ந்திருக்கலாகாது. மரியாதையாக நடந்து கொள்ளத் தெரிய வேண்டும்.."

"முதலில் அது உங்களுக்குத் தெரிய வேண்டும் பாளையத்து இளவரசியாரே! உங்கள் பாளையத்து எல்லைக்கு அப்பால் காடு தேடி வந்து அந்த மரியாதையை நீங்கள் எதிர்பார்க்க முடியாது."

"இருக்கலாம்! ஆனால் நீங்கள் என்னிடமிருந்து எதிர்பார்க்காதே ஆகவேண்டிய பெரும் பயன் ஒன்று உண்டு கவிஞரே! நீங்களும் உங்களுடைய அபூர்வமான கலை நுணுக்கங்களும் பரம்பரை இல்லாமல் இந்தக் காட்டிலேயே வாழ்ந்து அழிந்து போகாதபடி நான் மனம் வைத்தால் அதிகாரத்தைத் தளர்த்த முடியும். தலைமுறை தலைமுறையாக ஒருமுகப்பட்டு அழியாமல் காக்கும் முனிவர்களின் பரம்பரையைப் போல் உங்கள் கலைச் சுடரின் ஒளி அணைந்துவிடாமல் உலகத்தில் யாரேனும் ஒருவருக்காவது நீங்கள் அவற்றைக் கற்பித்து விட்டுச் சாகலாம். என்னுடைய அதிகாரம் உங்களை நாட்டுக்குள் நுழைய விடாமல் தடுக்கிற வரை உங்களால் அதுவும் முடியாது. தன்னுடைய புத்திக்குப் பரம்பரை உண்டாக்காமல் தன்னுடனேயே அதை அழித்துக் கொண்டு சாகிற கலைஞன் இந்த உலகத்துக்குத் துரோகம் செய்தவனாகிவிடுவான். நீங்களும் அப்படி ஒரு துரோகத்தை உலகத்துக்குச் செய்ய விரும்புகிறீர்கள் போலிருக்கிறது...." என்று தொடர்ந்தாள் மோகனவல்லி. எந்த உணர்ச்சியைத் தாக்கினால் ஒரு கலைஞனுடைய மனம் முடங்குமோ, அந்த உணர்ச்சியைத் தாக்கியிருந்தாள்.

இதனால் மணவாளனும் அவளுடைய தாக்குதலில் சற்றே மனம் தளர்ந்து போய்த்தான் இருந்தான். தன் குடும்பத்தின் குலதனமாகிய நிர்மலத்தினி, மேகராகக் குறிஞ்சி—போன்ற அபூர்வ ராகங்களையும், மற்ற இசை நுணுக்கங்களையும் இந்தப் பரந்த உலகத்தில் ஒரே ஒரு மனத்தில் கூடப் பயிர் செய்யாமல் சாக வேண்டியிருக்கிறதே என்ற வேதனை அவனுக்கும் இருந்தது. அவனுடைய வாழ்க்கையோ அந்தக் காட்டிலேயே ஒடுங்கி விட்டது. கோதைக்கு அவற்றை யெல்லாம் கற்பித்திருந்தும் பயனில்லை. ஏனென்றால் அவளும் அந்தக் காட்டிலேயே ஒடுங்கிவிட வேண்டியவள். சொல்லப் போனால் அவளைத் தன்னுடையவளாக்கிக் கொண்டிருந்த காரணத்தினால்தான் அப்படி ஒரு தண்டனையை அவள் அடைந்திருந்தாள்.

"இன்னிசைக் கலைஞரே! உங்களைத்தான் கேட்கிறேன். இப்போதுகூட நீங்கள் மனம் வைத்தால் உங்கள் புத்திக்குப் பரம்பரை உண்டாக்கும் உரிமையும், இந்தக் காட்டு வாழ்க்கையிலிருந்து வெளியேறி மனிதர்களிடையே உங்கள் திறமைக்குரிய புகழ் வெள்ளம் பெருகும்படி நாட்டுக்கு வந்து வாழும் உரிமையும் உங்களுக்குக் கிடைக்கும்."

"எந்த விதத்தில் அதை நான் எதிர்பார்க்க முடியும்?"

"உங்களைப் போல் பேரழகு வாய்ந்த ஒரு கலைஞர் நாச்சியார்புரம் பாளையத்திலிருந்து எவை யெல்லாம் வேண்டுமென்று எதிர்பார்க்கிறீர்களோ அவை யெல்லாம் கிடைத்திருக்கும்....."

"ஏன் கிடைக்கவில்லையோ?"

"ஏன்? அது உங்களுக்கே தெரியுமே? எவளோ ஒரு நாடோடிக் கழைக் கூத்தியிடம் மயங்கி நீங்கள் அரண்மனையைக் கேவலப்படுத்தினீர்கள்?"

"கோதை என் காவிய நாயகி. அவளைப் பற்றிக் கேவலமாகப் பேசுகிறவர்கள் எந்தப் பாளையத்தை ஆள்கிறவர்களாயிருந்தாலும் நான் பொறுத்துக் கொள்ள மாட்டேன். எங்களுக்கு நாட்டில் வாழும் உரிமை வேண்டாம். உலகம் புகழ்கிற புகழ் வேண்டாம். நாங்கள் மண்ணுலகத்து மனிதர்களைப் பார்த்துப் பழகி எங்கள் கலைகளுக்குப் பரம்பரையும் மரபும் தேட வேண்டாம். ஆனால் நாங்கள் பிறவி பிறவியாகச் சேர்ந்தே வாழ்வோம். எங்களை எவராலும் பிரிக்க முடியாது. நாங்கள் நித்தியமான அன்பை ஆளுகிறவர்கள்...."

"அப்படியானால் உங்களுக்கு இந்தக் காட்டைத் தவிர வேறு கதியில்லை, கலைஞரே! நீங்கள் மட்டும் தனியாகப் புறப்பட்டு வருவதாக இருந்தால் நாச்சியார்புரம் பாளையத்தின் பல்லாயிரம் குடிமக்களும் உங்களைப் புகழ்ந்து போற்றித் தலை வணங்க எப்போதும் காத்திருப்பார்கள். மேற்குப் பக்கமும், வடக்குப் பக்கமும், தெற்குப் பக்கமும் பயங்கரமான வனமும் மலைத் தொடர்களும் தான் இருக்கின்றன. அந்த மலைத் தொடர்கள் முடியுமிடத்தில் கடல் தொடங்கிவிடுகிறது. கிழக்குப் பக்கமாக நீங்கள் உலகத்து வாழ்க்கையில் புகுந்து கலக்க விரும்பினாலோ நாச்சியார்புரம் பாளையத்தில் நுழையாமல் முடியவே முடியாது. எனவே உங்கள் நிலையை நீங்கள் தீர யோசிக்க வேண்டும்...."

"யோசிப்பதற்கு எதுவுமே இல்லை! உலகத்து மனிதர்களிடையே உலகத்தோடு கலந்து வாழ நாங்கள் விரும்பவில்லை. மனிதர்களிலிருந்து விலகி வேறுபட்டு வாழ்ந்தாலும் நாங்கள் நினைப்பாலும், பாவனைகளாலும், பழக்கத்தாலும் தேவர்களாக வாழ்கிறோம். இப்படியே எங்களை வாழ விடுங்கள். எங்களிடமிருக்கும் அபூர்வமான கலை நுணுக்கங்களும் எங்களோடு சேர்ந்தே அழிந்து போகட்டும்" என்று உறுதியாகவும் பிடிவாதமாகவும் மறுமொழி கூறினான் மணவாளன்.

"உங்கள் பிடிவாதம் மாறாத பட்சத்தில் உங்களுடைய அந்த அபூர்வமான கலை நுணுக்கங்கள் இந்தக் காட்டோடு அழிந்து போக வேண்டியதுதான்" என்று சீற்றத்தோடு தன் முடிவை அவனிடம் சொல்லி விட்டு மோகனவல்லி புறப்படுவதற்குத் திரும்பிய போது, "இல்லை! நிச்சயமாக இல்லை! அவருடைய தெய்வீகக் கலை நுணுக்கங்கள் ஒரு நாளும் அழியப் போவதில்லை" என்று பின்னாலிருந்து ஓர் இனிய குரல் ஒலித்தது. திகைத்துப் போய்த் தன் பார்வையை அந்தப் பக்கமாகப் படரவிட்ட மோகனவல்லி சுனையிலிருந்து நீராடிய கோலத்தில் கோதை வந்து நின்று கொண்டிருப்பதைப் பார்த்தாள். கோதையைப் பார்த்ததும் பாளையத்து இளவரசியின் பார்வை எரிந்தது. அந்தப் பார்வையில் பொறாமை கனன்று கொழுந்துவிடத் தொடங்கியது. பார்வையில் தெரிந்த பொறாமை சொற்களிலும் தொனிக்கக் கோதையை ஒரு கேள்வி கேட்டாள் மோகனவல்லி.

"இந்த மகாகவிஞருடைய வாழ்க்கை இப்படி ஒடுங்கிப் போகும்படி இவருக்குச் சத்துருவாக வாய்த்த சபலம் நீதானடி பெண்ணே! அவ்வாறிருக்கும் போது நீயே எப்படி இவருடைய கலை நுணுக்கங்கள் அழியாமல் உலகத்தில் பரவுவதற்குத் துணை செய்ய முடியும்?"

"எப்படியோ, முடிகிறதா இல்லையா என்று நீயும் பார்க்கத்தானே போகிறாய்? ஒரு செயலைத் தீர்மானமாகச் செய்து கொண்டவர்கள் அதை வார்த்தைகளில் பின்னிப் பின்னிச் சொல்லிக் கொண்டிருக்க மாட்டார்கள்" என்று கண்களில் தீர்மானம் ஒளிரப் பேசினாள் கோதை. அன்று அந்த விநாடி அவளுடைய கண்களில் ஒளிர்ந்த தீர்மானம் அடுத்த நாள் அதிகாலையில் செயலாக நிறைவேறி உலகத்துக்கு அவளைப் புரிய வைத்து விட்டது. கோதைக்கு மணவாளன்மேல் ஏற்பட்டிருந்த அன்பு எத்தகைய உயர்ந்த பக்குவம் என்பதை அந்த நிகழ்ச்சிக்குப் பின்புதான் உலகம் நன்றாகப் புரிந்துகொள்ள முடிந்தது.

நாச்சியார்புரம் பாளையத்து இளவரசி காட்டுக்கு வந்து மணவாளனைச் சந்தித்து அவனுள்ளே உறங்கிக் கிடந்த கலையுணர்ச்சியின் நிகழ்கால நஷ்டத்தை அவனுக்கு ஞாபகப்படுத்தி விட்டுச் சென்ற தினத்துக்கு மறுநாள் அதிகாலையில் தான் அது நிகழ்ந்தது. உண்மையில் அது ஒரு காவிய நிகழ்ச்சிதான்.

அன்று வெள்ளிக்கிழமை. மங்கலமான தன்மைகள் எல்லாம் நிறைந்த நாள். கோதையும், மணவாளனும் முதன்முதலாக நாச்சியார்புரம் வேனில் விழாவில் சந்தித்து மனம் கலந்த நாளும் வெள்ளிக்கிழமைதான். அந்தக் கிழமையின் இனிய ஞாபகத்தைப் போற்றுவதற்காக ஒவ்வொரு வெள்ளியன்றும் காலையில் பொழுது புலர்ந்ததும் அந்த மலையடிவாரத்தில் குடிசைக்கருகே இருந்த மகிழ மரங்களினடியில் உதிர்ந்திருக்கும் பூக்களைத் திரட்டிவந்து பொற்சரம் போல் சிறிய மாலையாகக் கோத்துக் கோதையின் தங்க நிறக் கழுத்தில் சூடுவான் மணவாளன். அவர்களுடைய தனிமையான கந்தர்வக் காதல் வாழ்க்கையில் ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் இப்படி மகிழம்பூ மணக்கிற திருமணநாள்தான்.

அவர்களுடைய வழக்கப்படி அன்றும் அப்படி ஒரு மண நாள். அவர்களுடைய வாழ்வில் மணக்காத நாள் ஒன்று கூட இல்லைதான். ஆனாலும் வெள்ளிக்கிழமைக்கு அதிக மணம் உண்டு. ஏனென்றால் அவர்கள் இரண்டு பேர்களுடைய ஞாபகங்களும் முதன் முதலாக அன்றுதான் மலர்ந்து மணந்து ஒன்றை யொன்று பற்றித் தழுவின. அந்த இனிய நினைவு அன்று அதிகமாக மணக்கும் மனத்துடன் அதிகாலையில்

எழுந்ததும் மணவாளனை வணங்கினாள் கோதை. அப்படி வணங்கி எழுந்தவளுடைய கழுத்தில் வழக்கம்போல் மகிழ மாலையைச் சூட்டினான் அவன். ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் அப்படி அவன் சூட்டிய மாலையோடுதான் கோதை சுனைக்கு நீராடச் செல்வாள். அன்றும் அப்படித்தான் சென்றிருந்தாள். அவளை நீராடுவதற்கு அனுப்பிய பின்பு மணவாளன் மூங்கிற் காட்டில் சிறிது தொலைவு உலாவி விட்டு வருவான். அவன் உலாவி விட்டுத் திரும்பி வரவும் அவள் சுனையிலிருந்து நீராடிய பொன் மேனியோடு இடுப்பில் குடமேந்தி அந்தக் குடத்து வாயில் தண்ணீருடன் அப்போது தான் பறித்த புத்தம் புதிய தாமரைப் பூக்கள் சிலவும் பொங்கித் ததும்ப வாடாத தாமரையாய்த் தன் முகத்தை மலர்த்திக் கொண்டு வந்து சேருவாள். அன்று என்னவோ சோதனை போல் மணவாளன் உலாவி விட்டுத் திரும்பி வந்தபின் வெகு நேரமாகியும் கோதை சுனையிலிருந்து நீராடி விட்டுத் திரும்பி வந்து சேரவில்லை.

மணவாளனுக்குப் பலவிதமான சந்தேகங்கள் உண்டாயின. கோதைக்கு நீந்தத் தெரியாது. சுனையின் முன்பக்கமாக ஆழம் அதிகமிராதாகையினால் — வழக்கமாக அவள் அங்கேயே தண்ணீர் ஆழமில்லாத இடமாகப் பார்த்து நீராடி விட்டு வந்து விடுவாள். நீண்ட பாறைப் பிளவில் அமைந்திருந்த அந்தச் சுனையின் மேற்கு மூலையில் ஆழம் அதிகம். அந்த மூலையில் மட்டும் தண்ணீர் சுழித்து ஆளை உள்ளே இழுக்கும் மடு ஒன்று உண்டு! அந்த இடத்தில் பாறைப் பிளவு முதலை வாய் திறந்தாற் போல் அமைந்திருந்ததனால் அதற்கு 'முதலை மடு' என்று பெயர். சாதாரணமாக முதலை மடுப் பக்கம் யாருமே போக மாட்டார்கள். கோதை எப்போதும் கரையிலிருந்தே மூங்கிற் கழியை நீட்டித் தாமரைப் பூப் பறித்து வழக்கமாகையால் காலில் தாமரைக் கொடி சுற்றிக் கொண்டதோ என்று நினைத்துப் பயப்படவும் வழியில்லை. எதற்கும் நாமே சுனைக்குப் போய்ப் பார்த்து விட்டு வருவதுதான் நல்லதென்று எண்ணிய மணவாளன் குடிசை வாயிலிருந்து சுனையை நோக்கி விரைந்து நடந்தான். தொலைவிலிருந்து பார்த்தபோதே சுனைக்கரையில் பறித்துவைத்த தாமரைப்பூவோடு குடம் தெரிந்தது. ஆனால் நீராடுகிற அரவம் கேட்கவில்லை. சற்றே சந்தேகத்தோடு சுனையருகில் சென்ற மணவாளன் கோதையை அங்கே காணாமல் திகைத்தான். பயமும் பரபரப்பும் தூண்ட சுனையின் கோடி வரை ஓடினான். முதலை மடுவின் நீர் கலங்கிச் சுழித்துக் கொண்டிருந்தது. அந்தச் சுழிப்பினிடையே காலையில் அவன் தன் கைப்படத் தொடுத்த மகிழ மாலை மிதந்து தத்தளித்துக் கொண்டிருந்தது. அடுத்த கணம் ''கோதை! அடி பாவி....என்ன காரியம் செய்து விட்டாய்?....'' என்று மணவாளன் அலறிய குரல் அந்த மலைப் பாறைகளிலும், மூங்கிற் காட்டிலும், சுனைப் பிளவிலும் எதிரொலித்துச் செய்த வினை செய்தவனையே நாடித் திரும்பி வருவது போல் அவன் செவிகளிலேயே வந்து பயங்கரமாய் மீண்டும் ஒலித்தது. அவன் கதறியழுதான். நம்பிக்கைகள் வேரறுந்து வீழ்ந்தாற் போன்ற அந்தச் சோகக் குரல் காட்டில் கலந்தது.

## 7. காவியமாகிவிட்டார்

அதிபயங்கரமானதும்பேராழமுடையதுமாகிய முதலை மடுவில் இறங்கி எடுக்க முடியாததொரு மூலையில் பாதாளத்தில் மிகப் பெரிய சுழிப்பின் அருகே அவள் உடம்பு சொருகியிருந்தது. கரையில் தாமரைப் பூக்களோடு வைத்திருந்த குடத்தின் அடியில் இரண்டு ஓலைகள் இருந்தன. குமுறியழுது கொண்டே அந்த ஓலைகளை எடுத்துப் படித்தான் மணவாளன். அவன் கண்களில் நீர் பெருகி எழுத்தை மறைத்தது.

''என் ஆருயிர்க் காதலர்க்கு அநேக வணக்கங்கள். இந்த ஓலைகளை நீங்கள் எடுத்துப் படிக்கும்போது, முதலை மடுவின் குளிர்ந்த நீரில் என் ஆவி கலந்து போயிருக்கும். வழக்கம்போல் உங்கள் பாதங்களில் சூடுவதற்காக இந்த ஓலையோடு இரண்டு தாமரைப் பூக்களும் பறித்து வைத்திருக்கிறேன். உங்கள் பாதங்களைத் தழுவிக் கொண்டே சாக வேண்டுமென்று எனக்கு ஆசை. அவற்றைத் தழுவ முடியாத காரணத்தால் அவற்றைப் பற்றிய புனிதமான நினைவுகளைத் தழுவிக் கொண்டே சாகிறேன். என்னுடைய புண்ணியப் பயன்களும், நான் நினைத்த நினைப்புக்களும் பரிசுத்தமாக இருக்குமானால் இன்னொரு பிறவியில் உங்களைப் பரிபூர்ணமாக அடைவேன். நீங்கள் அபூர்வ கவி. அபூர்வ ராகங்களின் பிறப்பிடம். பேரழகர். தீர புருஷர். சுந்தரமான நினைவுகளைச் சுமந்து திரிகிறவர். என் ஒருத்தியின் பொருட்டு இந்தக் காட்டிலிருந்து வெளியேற முடியாமல் நீங்களும் உங்கள் சாமர்த்தியங்களும் அழிந்து வீணாவதை நான் எப்படி ஒப்புக் கொள்ள முடியும்? தர்ம பத்தினியாயிருக்கிறவள் கணவனுக்காகத் தன் உயிரையும் தியாகம் செய்து கணவனுடைய ஒற்றை உயிரோடு தானும் இரண்டறக் கலந்து விடலாம். நேற்று அந்தப் பாளையத்து இளவரசி உங்களைச் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்தவற்றையெல்லாம் நான் கேட்டேன். நீங்கள் நாட்டு எல்லைக்குள் புகுந்து புகழ் பெறத் தடையாயிருப்பவள் இழி குலத்தினளாகிய இந்தப் பேதைக் கழைக்கூத்தி கோதைதான் என்பதை என் செவிகளாலேயே கேட்டேன். நான் உங்கள் தடந்தோள்களில் மணக்கப் பிறந்த பூமாலை. நீங்கள் இல்லாது எனக்கு உலகமில்லை. நான் செத்தொழிந்த மறு விநாடியிலிருந்து உங்கள் புகழ் உலகெல்லாம் பரவி நீங்கள் பெருமை பெறுவதை ஆவியாயிருந்து பார்க்கக் காத்திருப்பேன். 'சீத மதிமுகமும் சீர் முத்துப் புன்னகையுமாக'க் கழைக்கூத்தாடும் போது முதன் முதலாக உங்கள் கண்களுக்கு எப்படித் தோன்றி உங்களைக் கவி பாட வைத்தேனோ, அப்படியே இடைவிடாமல் உங்கள் ஞாபகத்தில் நான் இருப்பேன். நீங்கள் பாடுகிற பண்களில் எல்லாம் என்னுடைய ஞாபகம் இருக்கும். என்னை ஆசீர்வதித்து அனுப்புங்கள். மீண்டும் அடுத்த பிறவியில் உங்கள் பாதங்களைத் தொழுவதற்குப் பிறக்கிறேன். அதுவரை என்னை மன்னித்துக் கொண்டிருங்கள். 'தன்னுடைய புத்திக்குப் பரம்பரை உண்டாக்காமல் தன்னுடனேயே அதை அழித்துக் கொண்டு சாகிற கவிஞன் இந்த உலகத்துக்குத் துரோகம் செய்தவனாகி விடுவான்' — என்று நேற்றுப் பாளையத்து இளவரசி கூறிய வார்த்தையை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். நான் உங்களுக்காகவே பிறந்தவள். **உங்கள் அடியாள் கோதை—''**

....என்று அந்த ஓலைகளில் முத்து முத்தாய் எழுதியிருந்தாள் அவள். மணவாளனின் கண்களுக்கு முன்னால் அந்த மலைகள், கைகளிலிருந்த ஓலை, குடம், தாமரைப் பூக்கள், நீரில் சுழித்து மிதந்த மகிழம்பூச் சரம் எல்லாமே சுழன்றன. அழகிய நினைவுகளைச் சுமக்கும் அந்தக் கவியின் மனத்தில் இப்போது எல்லையற்ற சோகமே கனமாகிக் கனத்தது. 'இந்தப் பாழாய்ப் போன பாளையத்து இளவரசி இத்தனை காலத்துக்குப் பின் இங்கு என்னை எதற்காகத் தேடி வந்தாள்? ஏன் என்னுடைய கலையுணர்ச்சியின் நஷ்டத்தை எனக்கு நினைவூட்டி



னாள்?' என்று மோகனவல்லியின் மேல் அடங்காத சினம் மூண்டது அவனுக்கு.

யாரைக் கோபித்துக்கொண்டு என்ன பயன்? நேற்று வரை அவன் கண்களுக்கு முன் மங்கலச் செல்வியாய் நடமாடிக் கொண்டிருந்த கோதை இன்று காவியமாகி விட்டாள். நாளாக நாளாக அந்த ஞாபகம் அவன் மனத்திலும் ஒரு காவியமாகி விட்டது. அல்லது எப்போதோ பாடிய இனிய பண்ணும் நினைப்பில் ஒடுங்கி விட்டது. கால நடையிலே அவளே ஒரு காவியமாகி விட்டாள்.

கோதை இறந்த பின் நீண்ட நாட்கள் வரை அந்த மூங்கிற் காட்டிலும், மலையடிவாரத்திலும், சுனைக்கரையிலும் பித்தனைப் போல் திரிந்து கொண்டிருந்தான் மணவாளன். அவனுடைய இதயம் எதையுமே பாடுவதற்காகப் பொங்கி மேலெழவில்லை. சாயங்காலத்து மெல்லிருட்டில் அந்தக் காட்டிலிருந்து நீலாம்பரி ஒலிக்கவில்லை. மணவாளனின் மனத்துக்கு நிம்மதியளிக்கிற ஒரே ஒரு நாளாக வெள்ளிக்கிழமை மட்டும் வந்து போய்க் கொண்டிருந்தது. வெள்ளிக்கிழமைகளில் விடியுமுன்பே எழுந்து மலையடிவாரத்து

மகிழ மரங்களின் அடியில் உதிர்ந்திருக்கும் பூக்களை அள்ளிக் கொணர்ந்து அழகிய மாலையாய்க் கோத்து அப்படிக் கோத்த மாலையை எடுத்துக் கொண்டு போய் முதலை மடுவில் போடுவான். மடுவின் நீர்ப்பரப்புக்கு மேலே தண்ணீரின் அடியிலிருந்து மூழ்கி யெழுபவளைப் போல் கோதை எழுந்திருந்து தான் போடும் மாலையைக் கழுத்தில் தாங்கிக் கொள்வதாய் அவன் பாவித்துக் கொள்வான். பின்பு சுனைக் கரையில் அலைமோதி வீசும் மலைக்காற்றுக்கு நடுவே சின்னஞ்சிறு அகல் விளக்கு ஒன்றைப் பொருத்தி வைத்துக்கொண்டு தீபவர்த்தினியைப் பாடிக் கொண்டு— நேரம் போவது தெரியாமல் வீற்றிருப்பான். அப்புறம் வெறி கொண்டவனைப் போல் கால்கள் போனபோக்கில் மலைமேல் சுற்றித் திரிவான். ஓலைகளைச் சிவப்பட்டை அரைத்துப் பூசிக் கோதையைப் பற்றி அவற்றில் ஏதாவது கவி எழுதுவான். இப்படி அவனுடைய நாட்கள் புயலாய்க் கழிந்து போய்க் கொண்டிருந்த போது காட்டு வேடர்கள் மூலம் இவையெல்லாம் மோகனவல்லிக்குத் தெரிந்தன. அந்த நிலையில் மணவாளனைத் தானே சந்திக்கச் செல்வது அநுசிதமென்று கருதிய அவள் பாளையத்து அரண்மனையிலிருந்து காரியஸ்தர்களை அனுப்பி 'அவர் மீண்டும் நாட்டுக்கு வந்து விருப்பம் போல் அரண்மனைக் கலைஞராயிருந்து தன் கலைகளையும் புகழையும் வளர்க்கலாம்' எனக் கூறி விட்டிருந்தாள். மணவாளனோ இந்தச் செய்தியோடு காட்டுக்கு வந்தவர்களைச் சினத்தோடு அலட்சியம் செய்து திருப்பி அனுப்பி விட்டான். அவர்கள் ஏமாற்றத்தோடு நாச்சியார்புரத்துக்குத் திரும்பினார்கள்.

''என்னுடைய அபூர்வ ராகங்கள் எந்த ஞாபகத்திலிருந்து செழித்தனவோ, அந்த இனிய ஞாபகம் இந்த மடுவில் மூழ்கி விட்டது. என்னுடைய பண்ணும் பாட்டும் கலையும் கற்பனைகளும் இந்த மலையடிவாரத்துச் சுனையைச் சுற்றியே வட்டமிடுகின்றன. நான் உலகத்தையும் உலகத்து மனிதர்களையும் பார்க்கக் கூசுகிறேன். எனக்கு அவர்களைப் பிடிக்கவில்லை. நான் அவர்களைத் தொழவோ, மதிக்கவோ விரும்பவில்லை. உலகத்தில் வகை வகையாய் மனிதர்களாக வகுத்துக் கொண்டிருக்கிற பொய்யான உயர்வு தாழ்வுகளையும், போலிக் கௌரவ முறைகளையும் பார்த்து நான் பயப்படுகிறேன். என்னை உலகத்துக்கு அழைக்காதீர்கள். என்னுடைய குரல் எந்த வெள்ளிக்கிழமையாவது இந்த மலைமுகட்டிலிருந்து ஒலிக்கத் தவறினால் நான் இந்த உலகத்தை விட்டுப் போய் விட்டேன் என்பதைப் புரிந்து கொள்ளுங்கள்....'' என்று கண்களில் நீர் மல்கச் சொல்லி அனுப்பி விட்டான் மணவாளன். இந்தச் செய்தியைத் திரும்பி வந்து காரியஸ்தர்கள் பாளையத்து இளவரசியிடம் கூறியபோது அவள் கண்களும் கலங்கி விட்டன. காரியஸ்தர்களுக்கே வியப்பை அளித்தது ராணியின் இந்த மாறுதல். அவர்களில் முதியவரான ஒருவர் தனிமையில் மோகனவல்லியைச் சந்தித்து அவள் கண் கலங்கியதன் அந்தரங்கமென்னவென்று விசாரித்தார். அவள் அப்போதும் கண் கலங்கிப் போய்த்தான் அவருக்கு மறுமொழி கூறினாள்:

''தாத்தா! எனக்கு அந்தக் கலைஞர் மேல் அளவுகடந்த வெறுப்பு என்று நீங்கள் எல்லாரும் தவறாகப் புரிந்து கொண்டிருக்கிறீர்கள். உண்மை அதுவில்லை. அந்தச் சுந்தரக் கலைஞரிடம் எனக்கு இருக்கும் பிரேமை அசாத்தியமான பிரேமை. நான் அவர் மேல் பிரியப்படுகிற காரணத்தால் அதேவிதமான பிரியத்தை அவர் மேலோ அவரிடமிருந்தோ கொள்கிறவர்கள் இந்த உலகில் வேறு எவரும் இருக்கக் கூடாதென்று எண்ணினேன். கழைக்கூத்தி கோதை அதற்குத் தடையாக இருந்தாள். அவளை அவரிடமிருந்து பிரிக்க விரும்பினேன். அதற்காகத் தமது கலையுணர்ச்சியின் நஷ்டத்தை அவர் உணரும்படி செய்தேன். என் முயற்சி பலிக்கவில்லை. ஆனால் அந்தப் பெண் கோதை அவர் மேல் கொண்ட பிரியம்தான் என் பிரியத்தை விட உயர்ந்தது. அவள் அவருடைய கலைத் திறமையையும் சேர்த்து வணங்கினாள். அதனால்தான் அந்தத் திறமை உலகில் பிரகாசிக்க வேண்டும் என்ற ஒரே நோக்கத்துக்காகத் தன் உயிரையும் கொடுத்து விட்டாள். அவள் தெய்வலோகத்துப் பெண்களின் வகையைச் சேர்ந்தவள். அதனால்தான் அப்படி உயர்வான காதலைச் செய்தாள். நான் வெறும் மானிடப் பெண்தான். மணவாளனை வெறுப்பது போல் உலகத்துக்குக் காண்பித்துக் கொண்டு அந்தரங்கமாக அவனைக் காதலித்தேன் நான். ஆனால் அந்த மகாகவிக்காக எதையும் விட்டுக் கொடுக்கத் தெரியவில்லை எனக்கு. நான் பாளையத்து ராணியாக இருந்தும் காதலில் பேதையாய் வெறும் மானிட ஞாபகத்தோடு இருந்துவிட்டேன். என்னைவிடக் கோதைதான் உயர்ந்தவள்....'' என்று பொங்கிப் பொங்கி அழுதாள் மோகனவல்லி. மிகவும் விந்தையானதொரு அந்தரங்கத்தைப் புரிந்து கொண்டு வேதனையோடு அங்கிருந்து வெளியேறிச் சென்றார் அந்த முதிய காரியஸ்தர். மணவாளனைப் பொறுத்த வரை கோதை போன பின்பு நாச்சியார்புரத்தின் காலப் பெருக்குப் பொய்மை நாட்களாய் மாதங்களாய் அர்த்தமில்லாமல் விரைந்து ஓடிக் கொண்டிருந்தன.



ஓர் ஆடிமாதம் முதல் வெள்ளிக்கிழமையன்று மணவாளன் காலையில் கண் விழித்த போது சடசட வென்று மூங்கில்களெல்லாம் முறியும் ஓசையும், மரக்கிளைகள் உரசும் சப்தமுமாகக் காடே ஊழிக் காலத்தைப் போல் இருந்தது. பயங்கரமான ஆடிக் காற்றுப் புயலாய்ச் சாடிக் கொண்டிருந்தது. மகிழ மரத்தடியில் பூக்கள் நிறைய உதிர்ந்து காற்றே அந்தப் பூக்களை ஒன்று சேர்த்துத் திரட்டிக் குவித்து வைத்தாற்போல ஒதுங்கியிருந்தன. அந்தக் காற்றில் வெளியே எழுந்து நடப்பதே சோதனையாக இருந்தும் மணவாளன் எப்படியோ தட்டுத் தடுமாறி நடந்து வந்து மகிழம் பூக்களை அள்ளிக் குடிசைக்குக் கொணர்ந்து மாலையாகக் கோத்துக் கொண்டு சுனையில் சூட்டுவதற்குப் போய் விட்டான். முதலை மடுவின் கரையிலோ காற்று மற்ற இடங்களைவிட இன்னும் பயங்கரமாயிருந்தது. பாறைப் பிளவில் பிடித்துத்தள்ளி விடுவது போல் வீசிய காற்றை எதிர்த்து நடந்து போய் அவன் மாலையைச் சுனையில் போட்டு விட்டுக் கல்லின் இடுக்கு ஒன்றில் அகல்விளக்கை ஏற்றிய போது விளக்குச் சுடர் காற்றோடு போராடியது. கோதையின் ஞாபகத்துக்கு எதிராக யார் போராடினாலும் மணவாளனால் தான் அதைப் பொறுக்க முடியாதே! விளக்கு அவிந்து விடாமல் தன் முழுமூச்சுக் காற்றையும் ஒன்று திரட்டி அந்த ஆடிக் காற்றை எதிர்த்துத் தீபவர்த்தினி ராகத்தை அமுத வெள்ளமாய்ப் பொழியத் தொடங்கினான் அவன். காற்றும் நிற்கவில்லை. அவன் குரலும் நிற்கவில்லை. கல்லிடுக்கில் அந்தச்சின்னஞ்சிறு தீபமும் நடுங்கி நடுங்கி எப்படியோ ஒரு வழியாய் நின்று விடாமல் எரிந்து கொண்டிருந்தது.

அதற்குமுன் எந்த நாளிலும் தீபவர்த்தினியை அத்தனை ஆக்ரோஷமாக மணவாளன் முனைந்துபாடியதில்லை. அந்தராகமே அவனுடைய மனத்தில் கோதையின் ஞாபகம்தான். அவளுக்காக ஏற்றிய தீபம் எந்தக் காற்றிலும் அணையக்கூடாது என்று அவன் தவித்தான். அந்தத் தவிப்புத்தான் அப்போது அவனிடமிருந்து பிறந்த ராகமாக இருந்தது. அந்தத் தவிப்புத்தான் அப்போது அவன் பாடிய சங்கீதமாயிருந்தது.

அன்று அந்தப் புனிதமான ஆடி வெள்ளிக்கிழமையில் வைகறை வேளையில் காற்றோடு காற்றாய்க் கலந்து அங்கு மலையடிவாரத்தில் ஒலிக்கத் தொடங்கிய தீபவர்த்தினி ராகம் நடுப் பகலுக்குப் பின் மெல்லத் தேய்ந்து குரல் மங்கியது. அப்புறம் சாயங்காலம் கேட்கவே இல்லை. அந்த ராகம் கேட்கவில்லையே என்ற வேதனையில் தவிப்பது போல் காலையில் மலையடிவாரத்தில் மிக உக்கிரமாக இருந்த காற்றும் இப்போது மெல்ல மெல்லத் தணிந்து போயிருந்தது. இருட்டுவதற்குச் சில நாழிகைகள் இருக்கும் போது மலையிலிருந்து இறங்கி ஊர் திரும்புகிற வழியில் முதலை மடுவுக்குத் தண்ணீர் குடிக்க வந்த நாச்சியார்புரத்து வேட்டை மறவர்கள் மன நெஞ்சை உருக்கும் அந்தச் சோகக் காட்சியை அங்கே சுனைக் கரையில் பார்த்தார்கள். மணவாளன் பாறையில்


குன்றாத எழிலுக்கும்,
குறையாத நறுமணத்திற்கும்...
ரெமி
ஸ்னோ
&
பவுடர்


"என் ஆபீஸ் பிரச்னைகள்
உடனுக்குடன் தீர, நான்
அருகில் வைத்திருப்பது–"
அய்யனார் காபி!
அய்யனார் காபி & டீ கம்பெனி,
தூத்துக்குடி

சாய்ந்தபடியே தூங்குகிறவனைப் போல் துவண்டு கிடந்தான். அவனுடைய கடைவாயில் தீபவர்த்தினி என்ற ராகத்தின் பரிபூரணமான எல்லையைத் தொட்டுத் தானே அந்த ராகத்தின் விளைவாகத் தனக்குள் எரிந்து பொங்கினாற் போல் செக்கச் செவேரென்று குருதி வடிந்திருந்தது. சுனையிலிருந்து யாரோ அவசரமாய்ப் பறித்துக் கொணர்ந்து சூட்டினாற்போல அவனுடைய கால்களின் ஓரமாக நீரருகே இரண்டு தாமரைப் பூக்கள் ஒதுங்கியிருந்தன. கல்லிடுக்கில் அகல்விளக்குத் திரி உள்பட எரிந்து அணைந்து போயிருந்தது. முதலை மடுவின் நீர்ச் சுழிப்பில் சின்னஞ்சிறு தண்ணீர்ப் பாம்பு ஒன்று நெளிவது போல மகிழம்பூச் சரம் சுழன்று சுழன்று நெளிந்து கொண்டிருந்தது. தீபவர்த்தினி என்ற பரிசுத்தமான ராகத்தோடு அந்த ராகமும், தானுமாக இரண்டறக் கலந்து அதன் விளைவாய்த் தானே எரிந்துபோனாற் போல் மண்ணுலகத்தின் அழுக்குகளிலிருந்து விடுபட்டுப் போயிருந்தான் மணவாளன்.

நாச்சியார்புரம் காட்டு வேட்டை மறவர்கள் ஊர் திரும்பியதும் முதல் வேலையாக இந்தச் செய்தியைப் பாளையத்து அரண்மனையில் போய்த் தெரிவித்தார்கள். மோகனவல்லி இந்தச்செய்தியைக் கேட்டுப் பேயறை பட்டவள் போல் அதிர்ந்து போய்ச் சிலநாழிகை ஒன்றும் பேசத் தோன்றாமல் மௌனமாய்க் கண்ணீர் சிந்தினாள். பின்பு பாளையத்து அரண்மனையின் பிரதான காரியஸ்தரைக் கூப்பிட்டாள். அந்த இருளில் தன்னோடு தனக்குத் துணை வருமாறு அந்தக் காரியஸ்தரையும் உடன் அழைத்துக் கொண்டு ஏதோ ஒரு நிர்மானத்துக்கு வந்தவள் போல் மலையடிவாரத்துக்குப் புறப்பட்டாள் அவள்.

## 8 - ஞாபக மாளிகை

பாளையத்து அரண்மனையைச் சேர்ந்த பிரதான காரியஸ்தரும், மோகனவல்லியும் முதலை மடுவை அடைகிற போது நடு இரவுக்கும் மேலாகி விட்டது. முதலை மடுவின் கரையில் அந்தச் சுந்தரமான கலைஞன் தூங்குவது போல் உயிரற்றுக் கிடந்த காட்சி மோகனவல்லியை விசும்பி அழுது குரல் வெடித்துக் கதறச் செய்தது.

"கதறி அழுது என்னம்மா பயன்? இந்த உலகத்தில் மிகஅபூர்வமான கலைஞர்கள் எல்லாம் மணமுள்ள நல்ல பூக்களைப் போல் பூத்து விரைவாக வாடி உதிர்ந்து போய் விடுகிறார்கள். இந்த உலகம் மிகவும் துரதிர்ஷ்டமுள்ள உலகம். அபூர்வமான சாமர்த்தியங்கள் எல்லாம் அதிக நாள் இங்கே தங்குவதில்லை" என்று உடன் வந்திருந்த முதிய காரியஸ்தர் மோகனவல்லிக்கு ஆறுதல் கூறிய போது அவள் மேலும் பொங்கி யழுதாள். பின்பு துயரம் கன்றிய குரலில் அவரை நோக்கிக் கூறலானாள்:

"ஐயா! இந்த மலையடிவாரம் மிகவும் பாக்கியம் செய்த இடம். இந்த இடத்தில் இரண்டு தேவர்கள் தங்கள் ஆயுள் பரியந்தம் வாழ்ந்திருக்கிறார்கள். இல்லை! இல்லை! ஆயுள் பரியந்தம் முழுமையாக வாழ்ந்து இந்தத் துரதிர்ஷ்டம் பிடித்த உலகத்தை அதிர்ஷ்டமுள்ளதாக்கத்



தவங்கிக் கொண்டு பிஞ்சிலேயே வாடிப் போய் விட்டார்கள். அந்தத் தெய்வீகக் கலைஞர்களுக்குப் பாளையத்து அரண்மனையிலிருந்து பொருள் செலவழித்து இங்கே ஒரு மண்டபம் கட்ட வேண்டும். அந்த மண்டபம் அவர்களுடைய கோயிலாக இருக்கும். அந்த மண்டபத்தில் வெள்ளிக்கிழமை வெள்ளிக்கிழமை தவறாமல் விளக்கேற்றவும் மாலையும் எழுதி வைக்க வேண்டும். இந்தப் பக்கமாக மலைக்கு வருகிற நாச்சியார்புரத்து மக்கள் எவராயினும் மலையடிவாரத்து மகிழமரங்களிலிருந்து கைநிறையப் பூக்களை அள்ளி வந்து இந்தச் சுனையில் தூவிக் கைகூப்பி வணங்கி விட்டுத்தான் மேலே செல்ல வேண்டும். இந்தக் கட்டளையை எவரும் மீறலாகாது. காலம் காலமாக இந்தக் கட்டளை நீடிக்க வேண்டும். இங்கே அமர பதவி அடைந்த தெய்வீகக் காதலர்களை உலகம் மறக்காமலிருக்க இந்த வழக்கங்கள் துணை புரியும்" என்று கூறிவிட்டுப் பாளையத்துக் காரியஸ்தரிடம் அப்படியே செய்வதாகச் சத்தியமும் பண்ணி வாங்கிக் கொண்டபின் சுனையிலிருந்து மேலும் இரண்டு தாமரைப் பூக்களைப் பறித்துப் பயபக்தியோடு அவற்றை மணவாளனின் பாதங்களில் வைத்து விட்டு வணங்கிக் கண்களில் ஒற்றிக் கொண்டாள் மோகனவல்லி.

"உங்கள் கட்டளைப்படியே செய்கிறேன் அம்மா! அகாலமாகிறதே! இப்போது அரண்மனைக்குத் திரும்பலாமா அம்மா?" என்று காரியஸ்தர் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லாமல் சோகத்தோடு மெல்லச் சிரித்தாள் அவள். பிறகு, "ஒரு விநாடி பொறுத்திருங்கள்; இதோ வந்து விட்டேன்!" என்று கூறிவிட்டு முதலை மடுவின் சுழிப்பருகே சென்று அந்த மகிழம்பூச் சரம் மிதப்பதையே பார்த்துக் கொண்டு நின்றாள். அடுத்தகணம் மோகனவல்லி குபீரென்று தானும் அந்த மடுவில் பாய்ந்து விட்டாள். காரியஸ்தரின் கூக்குரல் இரவின் அமைதியைக் கிழித்துக் கொண்டு மூங்கிற் காடு முழுவதும் ஒலித்தது. மோகனவல்லியின் பிரேமைப் பிடிவாதம் சாதாரணமானதில்லை. தேவருலகத்தில் போயாவது கோதையையும் மணவாளனையும் சந்தித்து, "என்னையும் உங்களோடு தேவர்களாகச் சேர்த்துக் கொள்ளுங்கள். நான் தெரியாத்தனமாக இதுவரை மனிதர்களோடு மனிதர்களாய் இருந்து உங்களுக்குக் கெடுதல் செய்து விட்டேன். நீங்களோ மனிதர்களோடு மனிதர்களாக இருந்த காலத்திலும் தேவர்களாக வாழ்ந்து பெருமை பெற்றீர்கள். உங்களை நெருங்க எனக்கு யோக்கியதை இல்லை. ஆனால் உங்கள் அருகிலிருந்து உங்களைத் தொழுது வணங்கிக் கொண்டிருக்கும் உரிமையையாவது எனக்கு அளியுங்கள்" என்று நேரில் வேண்டிக்கொண்டு கதறுவதற்காகப் புறப்பட்டுப் போகிறவளைப் போல் தானும் அந்த மடுவில் குதித்து விட்டாள் பாளையத்து இளவரசி மோகனவல்லி. கிழட்டுக் காரியஸ்தரால் அந்த அகாலத்தில் மலையடிவாரத்துச் சுனையிலிருந்து இளவரசியைக் காப்பாற்றலாமென நினைக்கவும் முடியவில்லை. முதலை மடுவில் யாராவது விழுந்து விட்டால் இன்னொருவர் இறங்கி விழுந்தவர்களைக் காப்பாற்றுவது என்பது துர்லபம். அந்த மடுவில் இறங்கினால் இறங்கியவர் மீண்டு வருவதென்பதே நடவாத காரியம். அந்த இரவில் காரியஸ்தர் 'காட்டு விலங்குகளிடமிருந்து தப்பி அரண்மனைக்குத் திரும்புவதே பெரும்பாடாய்ப் போயிற்று.

அடுத்தடுத்துத் தொடர்ந்த இந்தத் துயர நிகழ்ச்சிகளுக்கும் அப்பால் நாச்சியார்புரம் பாளையத்தின் அரச குடும்பமே மங்கலமில்லாமல் போய் விட்டது. ஆண்டுதோறும் கோடையில் கொண்டாடப் படுகிற வேனில் விழாக்கள் சிறிது சிறிதாய்க் குறைந்து முடிவில் இல்லாமலே நின்று போய்விட்டன. மோகனவல்லியது இறுதி வேண்டுகோளின்படி அந்த மலையடிவாரத்தில் மணவாளனும் கோதையும் வாழ்ந்திருந்த குடிசையைப் பிரித்து விட்டு அதே இடத்தில் மண்டபம் கட்ட முயன்றபோது குடிசை இருப்பிலிருந்து சிற்சில ஏட்டுச் சுவடிக் கற்றைகள் கிடைத்தன. பாளையத்து அரசாங்கக் காரியஸ்தர் அவற்றை யெல்லாம் அரண்மனையில் பத்திரப்படுத்தி எடுத்து வைத்தார். மண்டபம் கட்டி முடிந்தபின் மண்டபத்துக்குக் கோதை — மணவாளன் மண்டபம் என்று பெயர் ஏற்பட்டதை ஒட்டி முதலை மடுவுக்கும் அப்படியே புதுப் பெயர் மாறியது. முதலைமடு என்று அதன் தோற்ற அமைப்பை வைத்து ஏற்பட்டிருந்த பெயர் கோதையின் பெயராலும் மணவாளனின் பெயராலும் நிலவலாயிற்று. நாச்சியார்புரத்து மலைக்கு வேட்டைக்கு வருகிற காட்டு வேடர்களும், மறக்குலத்தைச் சேர்ந்த சுமங்கலிப் பெண்களும் அந்தப் பக்கமாகச் செல்ல நேரும் போதெல்லாம் கீழே அடிவாரத்தில் உள்ள ஏராளமான மகிழ மரங்களிலிருந்து உதிர்ந்திருக்கும் பூக்களில் ஒரு பிடி அள்ளி அந்தச் சுனையில் எறிந்து விட்டுக் கைகூப்பி வணங்கியபின் மேலே செல்வது பரம்பரையாகி விட்டது. வெள்ளிக் கிழமைகளில் அந்தப் பக்கமாக வருகிறவர்கள் சுனைக் கரையில் அகல் விளக்கு ஏற்றிக் கும்பிடுவதும் வழக்கமாகி விட்டது. அந்தக் கலைக் காதலர்களுக்கு உலகம் செய்யும் நிரந்தரமான மரியாதையாக அந்தச் சுனையில் மகிழம்பூக்களைத் தூவி வழிபட்டுக் கொண்டே இருந்தார்கள். அந்த மண்டபமும், முதலை மடுவும், சுற்றியிருந்த மூங்கிற் காடுகளும் மகோன்னத

மான அந்தக் காவியக் காதலர்களை என்றுமே மறக்கப் போவதில்லை. அந்த மலையடிவாரத்துக் காற்றில் நீலாம்பரியும், நீலவர்த்தினியும் இனிய குரலில் ஒலிப்பது போல் ஒரு பிரமை எப்போதுமே உண்டாகிக் கொண்டிருக்கும். அடை மழை பெய்கிற சரத்காலத்து மாலை வேளைகளில் அந்தச் சுனைக் கரை மண்டபத்திலிருந்து யாரோ மேகராகக் குறிஞ்சியைப் பாடுவது போல் கேட்கும். நாச்சியார்புரத்து மக்கள் ஆடி வெள்ளிக்கிழமைகளில் அந்தச் சுனைக் கரையில் ஏராளமான அகல்விளக்குகளை ஏற்றித் திருவிழாப் போல் சிறப்புச் செய்து மறைந்து போன தெய்விகக் காதலர்களை நினைவு கூர்ந்தார்கள். அந்த மலையடிவாரத்து மகிழ மரங்கள் கோதையையும் மணவாளனையும் கௌரவிப்பதற்காகவே சோம்பலில்லாமல் நாள் தவறாது வைகறையில் பூத்துக் கொட்டிக் கொண்டிருந்தன. மழைக் காலங்களில் அந்தச் சுனையிலே பாய்ந்து நிறைந்து அதை என்றும் வற்றாமல் வைத்துக் கொள்வதில் அதிக அக்கறை கொண்டாற்போல மலையின் அருவி நீரெல்லாம் முதலில் மடுவையே தேடி வந்து நிறைந்து கொண்டிருந்தது.

ஆனால் பாவம்! காலப் போக்கில் நாச்சியார்புரம் பாளையம்தான் வம்சாவளியின்றி நலிந்து ஒடுங்கிப் போய் விட்டது. மோகனவல்லி திருமணமின்றி மணவாளனுக்காகத் தன்னை ஆத்மஹத்தி செய்து கொண்டதனால் அந்தப் பரம்பரையே அழிந்து போய் விட்டது. 'சத்ய கவிகளின் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொண்டவர்கள் அதற்குப் பிரதிபலன் அநுபவிக்காமல் போக மாட்டார்கள்' — என்று நாச்சியார்புரம் பாளையத்துக்கு ஏற்பட்ட நிலைமையைப்பற்றி மற்றப் பாளையத்துக்காரர்கள் தாங்களாகவே அபிப்பிராயம் சொல்லிக் கொண்டார்கள். கோதைக்கும் மணவாளனுக்கும் ஞாபக மாளிகை கிடைத்து அந்த ஞாபக மாளிகையாகிய மலையடிவாரத்து மண்டபத்தில் அகல் விளக்குகள் பலப்பலவாய்ப் பிரகாசிக்கத் தொடங்கிய காலத்திலிருந்து நாச்சியார்புரம் பாளையத்து அரச மாளிகை மெல்ல மெல்ல மங்கலும் ஒளியுமிழந்து இருண்டே போய்க் கொண்டிருந்தது.

## இறுதியில் இதைப் படியுங்கள்

நாச்சியார்புரத்துப் பிரமுகரும் பண்ணையாருமாகிய இரகுநாத ஜெயசேகரக் கவுண்டருடன் நான் மலையடிவாரத்து மண்டபத்தைப் பார்க்கச் சென்றிருந்த நிலா இரவில் கட்டுச் சோறு சாப்பிட்டுக் கதை பேசி முடித்த போது அகாலமாகி விட்டது. அதனால் கையோடு உபயோகத்துக்குக் கொண்டு வந்திருந்த கம்பளிப் போர்வைகளையும் விரிப்புக்களையும் பயன்படுத்தி மண்டபத்தின் மேற்பகுதியிலேயே ஒருவாறு இரவைக் கழிக்க நேர்ந்தது. மண்டபத்துக்கும் வண்டிப் பாதை ஆரம்பமாகிற இடத்துக்கும் நடுவேயுள்ள காட்டை அந்த வேளையில் கடந்து செல்வது அசாத்தியமான காரியம் என்று ஷிகாரிகளும், ஜெயசேகரக் கவுண்டரும் அபிப்பிராயப்பட்டதனால் தான் நாங்கள் இரவில் அங்கேயே தங்கிவிடும்படி நேரிட்டது.



எனக்காகவே தற்செயலாய் நேர்ந்தாற் போல் மறுநாள் வெள்ளிக்கிழமையாய் வேறு இருந்தது. விடிந்ததும் விடியாததுமாக உடனிருந்த ஷிகாரிகளில் ஒருவரைத் துணைக்கு அழைத்துக் கொண்டு நான் மலையடிவாரத்தில் பாறைக்குக் கீழே இறங்கி உடம்பில் போர்த்திக் கொண்டிருந்த மேல் துண்டு நிறைய மகிழம்பூவை அள்ளிக் கொண்டு சென்று அந்தச் சுனையில் தூவி வணங்கினேன். எண்ணெயும் திரியும், அகல் விளக்கும் இல்லாததனால், என்னோடு இருந்த ஷிகாரியிடமிருந்து மெழுகுவத்தி ஒன்றை வாங்கிக் கொளுத்தி அதைச் சுனைக்கரையில் ஊன்றினேன் நான். அவ்வளவாவது என்னால் அந்தத் தெய்வீகக் காதலர்களுக்கு மரியாதை செய்ய முடிந்ததே என்று எனக்குப் பெருமிதமாயிருந்தது. பின்பு ஊர் திரும்பும்போது ஜெயசேகரக் கவுண்டர் எனக்குப் பல விவரங்களைச் சொன்னார். ''கோதையும் மணவாளனும் வாழ்ந்த தலைமுறைக்குப் பின்னால் இரண்டு மூன்று தலைமுறையாக இந்தப் பாளையத்துக் கவிகள் அவர்களைப் பற்றி ஏராளமாகப் பிரபந்தங்கள் எழுதி யிருக்கிறார்கள். கோதையைப் பற்றி மணவாளனே பாடிய பாடல்களின் ஏட்டுச் சுவடிகள் கூட இந்தப் பாளையத்து அரண்மனைக் கிரந்தசாலையில் இருக்கின்றன. அரண்மனையே நலிந்து அரச குடும்பம் கேட்பாரற்றுப் போய் விட்ட போது இன்று அந்த ஏடுகளை யார் கவனிக்கிறார்கள்? நீங்கள் வேண்டுமானால் பாளையத்து அரண்மனைக் கிரந்தசாலைக்குப் போய் ஒருமுறை சுற்றிப் பார்த்து விட்டு வாருங்கள். உங்களுக்கு அங்கே ஏதாவது சுவடிகள் கிடைக்கலாம்''— என்றார் ஜெயசேகரக் கவுண்டர். அவருடைய யோசனைப்படியே அன்று காலையில் மலையடிவாரத்திலிருந்து திரும்பியதும் நாச்சியார்புரம் அரண்மனைக் கிரந்தசாலைக்குப் போயிருந்தேன் நான். கவனித்துப் பேணுவதற்கு ஆளில்லாத காரணத்தால் கிரந்தசாலையில்வௌவால்கள் சிரசாசனம்செய்து தொங்கிக்கொண்டிருந்தன. ஏடுகளையும் அங்கங்கே கரையான் அரித்திருந்தது. ஏடுகள் கெடாமலிருக்க வருடத்துக்கு ஒரு முறை சரஸ்வதி பூஜையின் போது பூவரசம் பட்டை, மஞ்சள், கரி மூன்றையும் அரைத்த குழம்பை அவற்றின் மேல் தடவுவார்கள். ஏட்டிலிருக்கும் எழுத்துக்கள் மங்காமலிருப்பதற்கும் இந்தக் குழம்புதான் துணை செய்யும். நாலைந்து சரஸ்வதி பூஜையாகப் பட்டை அரைத்துத் தடவாத காரணத்தால் அங்கிருந்த ஏடுகள் மிகவும் கெட்டுப் போயிருந்தன. ஏடுகள் கைப்பழக்கமின்றிப் பிரிக்கப் படாமலிருந்த காரணத்தாலும் ஒன்றோடொன்று ஒட்டி மொத்தத்தில் சுவடியே ஒரு கட்டையைப் போல் இறுகிப் போயிருந்தது. சுவடியை நெகிழ்த்தித் தனித் தனியே ஏடுகளைப் பிரிப்பதற்காக வாளிநிறைய மண்ணெண்ணெயை வைத்துக் கொண்டு அலசி எடுக்க வேண்டியிருந்தது. என் முயற்சிகள் வீண் போகவில்லை. அந்தச் சுவடிகளிலிருந்து நான் தேடிய விலைமதிப்பற்ற இரத்தினம் எனக்குக் கிடைத்தது. கோதையின் ஞாபகமாக மணவாளனே தன்வாக்கால் பாடிய 'ஒரு துறைக் கோவை' என்ற பிரபந்தத்தின் நானூறு பாடல்கள் அடங்கிய ஏட்டுச் சுவடி ஒன்று எனக்குக் கிடைத்தது. வாக்கும், பொருளும், அலங்காரங்களும், உள்ளுறை முதலிய கவிதை நயங்களும் மிக அற்புதமாக அமைந்த 'ஒரு துறைக் கோவை' என்று அதை அங்கும் இங்குமாக வாசிக்க முயன்றபோது நான் தெரிந்துகொண்டேன். ஆனால் என்ன துரதிருஷ்டம்! ஏட்டுக்கு ஒரு பாடல் வீதம் நானூறு ஏடுகளில் எழுதப்பட்டுத் துளையிட்டுக் கோத்திருந்த அந்தச் சுவடிக் கற்றையில் இடது ஓரமாக ஒரு கட்டை விரல் அகலத்துக்குச் செல்லரித்து ஏடு மக்கிப் போயிருந்தது. அதன் விளைவாக நானூறு ஏடுகளிலுமிருந்த நானூறு பாடல்களிலும் கடைசி வார்த்தை இல்லாது மூளியாய்ப் போய் இருந்தது. ஒவ்வொரு பாட்டிலும் இல்லாமல் செல்லரித்துப் போன அந்த ஒரு சொல் கிடைக்கிற வரை மணவாளனின் அற்புதமான கவிதைகளை நான் அச்சிட்டு உலகத்துக்கு வெளியிடுவதற்கில்லாமல் போயிற்று. அந்த ஒரு சொல்லை இட்டு நிரப்புவதற்குச் சாதாரண மனிதரால் ஆகாது. பாடல்களில் விடுபட்டுப் போயிருந்த அந்த ஒரு சொல் தேவசக்தி நிறைந்ததா யிருக்க வேண்டும். அந்த ஒரு சொல் மனிதர்களுடைய பாஷையில் எதுவாயிருக்குமென்று கண்டு பிடிப்பதற்கில்லை. தேவர்களின் பாஷையில் எதுவா யிருக்குமென்று எனக்குத் தெரியாது. மணவாளனுடைய எல்லாச் சொற்களுமே தேவ சக்தி நிறைந்தவை என்பதில் சிறிதும் சந்தேகமில்லை. அந்த வகைய தேவசக்தி நிறைந்த சொற்களில் ஒன்றாகத்தான் விடுபட்டுச் செல்லரித்துப் போன அந்த ஒரு சொல்லும் இருக்க வேண்டும். அந்த ஒரு சொல் கிடைக்காதவரை அவற்றுக்குநிறைவில்லை. எனக்குப் பாரதியாருடைய பாடல் ஒன்று நினைவு வந்தது. நான் பெருமூச்சு விட்டேன்.

''சொல் ஒன்று வேண்டும்
தேவ சக்திகளை நம்முள்ளே
நிலைபெறச் செய்யும்
சொல் ஒன்று வேண்டும்''


உங்களனைவருக்கும் எமது மனமார்ந்த தீபாவளி வாழ்த்துக்கள்!
Latest DESIGN
Best Quality
SILK Sarees
Nalli CHINNASAMI CHETTY
Phone: 41115
Nalli CHINNASAMI CHETTY
SILK CLOTHS & PIECE GOODS MERCHANTS
OPPOSITE TO PANAGAL PARK
THYAGARAYA NAGAR.........MADRAS-17
அனைவருக்கும் எமது தீபாவளி வாழ்த்துக்கள்! பண்டிகைப் பெருநாள் மற்றும் கலியாண காலங்களுக்குச் சிறந்த பட்டுச் சேலைகளை வழங்கும் வாய்ப்பை சமூகத்தினருக்கு ஓர் ஒப்பற்ற சேவையாகவே கருதுகிறோம்.
நல்லி சின்னசாமி செட்டி
பனகல் பார்க்
தியாகராய நகர்—சென்னை-17



# TATA-MERCEDES-BENZ

THE STAR THAT HAULS A FORTUNE

**Diesel Trucks and Buses**



## V. S. T. MOTORS Private LTD.,

MADRAS • TRICHY • SALEM • VELLORE

*SERVICE FACILITIES ARE AVAILABLE AT EACH CENTRE*


POPULAR
everlasting like a diamond
Designs that win your heart
club quality
Mfd. by. POPULAR FINE ART LITHO WORKS (PVT) LTD. BOMBAY-55
POPULAR
PLAYING CARDS


பிரகாசமான தீபாவளிக்கு
தீப்
Sâlmen ek-din âti Diwali,
Godrej Dip râktâ gharko roj ujiâli
சிரமமின்றியும், அடித்துத் துவைக்காமலும், நான் என்னுடைய எல்லாத் துணிமணிகளையும்—உல்லன், சில்க் ரேயான் மற்றும் பருத்தி—நுண்மையான சிறு பாண்டங்கள் சுகாதார நிமித்தம் உபயோகிக்கப்படும் பீங்கான் வீட்டுத்தளங்கள் ... இந்தப் புதிய சிக்கனமான சிறந்த முறையில் சுத்தம் செய்கிறேன்.
நன்றாக சுத்தம் செய்யும் இரகசியம் தீப்பில்தான் இருக்கிறது என்று நான் அறிவேன். தீப்பினால் வெண்மையாக்குங்கள்! தீப்பினால் பிரகாசிக்கச் செய்யுங்கள்!
'ஆப்டிகல்' ரசாயனம் சுத்தமான பவுடர் சோப் சோடா கிடையாது
பல நிறங்களிலுள்ள அழகிய ஸ்பூன்கள் தீப்புடன் இலவசம்.
Dip
கோத்ரெஜ்
தீப்
.45, 1.35 கிலோ கிராம் கார்ட்டன்கள்
100% சுதேசி
Godrej கோத்ரெஜ் சோப்புகளில் புகழ்பெற்ற பெயர்


பாரதி
ஸ்பெஷல் பார் சோப்
BHARATHI Special BAR SOAP
A. வேலாயுதம்
பாரதி
சோப் ஒர்க்ஸ்,
சேலம்-உ.

## The Scindia Group of Companies

**The Scindia Steam Navigation Co., Ltd.**
Scindia House, Ballard Estate, Bombay
Grams: "JALANATH" (For Coastal services)
"SAMUDRAPAR" (For Overseas services)
Telephone: 260161

### OVERSEAS SERVICES

**CARGO INDIA-PAKISTAN-U.K.-CONTINENT**
Calling at Aden, Port Said, Port Sudan, London, Liverpool, Hamburg, Bremen, Rotterdam, Antwerp and other ports according to demand

**INDIA WEST-AFRICA**
via Mauritius
Calling at Port Louis, Matadi, Port Harcourt, Lagos / Appapa, Takaradi, Freetown, Dakar

**INDIA U.S.S.R.**
Calling at Black Sea Ports, Lattakia, Beirut, Istanbul and other Eastern Mediterranean Ports

**INDIA-U.S.A. (Atlantic Ports) SERVICE**
Calling at Karachi, Aden, Port Said, New York, Philadelphia, Baltimore, Beirut, Jeddah and other ports according to demand

### COASTAL SERVICE

**CARGO INDIA-PAKISTAN-BURMA-CEYLON CARGO-CUM-PASSENGER**
Bombay-Kathiawar Karachi
Bombay-Mangalore Cochin

**PASSENGER SERVICE**
Bombay-Konkan Coast and Harbour Services

CHARTERING AND SHIPPING
SHIP REPAIRS
MARINE INSURANCE

**BOMBAY STEAM NAVIGATION CO., (1953) LTD.**
100 Frere Road, Bombay 9. Tel: 22021 Grams: "KONKAN" Line

**KAMAL SHIPPING CO., LTD.** Scindia House, Ballard Estate, Bombay

**SCINDIA WORKSHOP LTD.** Patent Slip Mazagaon, Bombay 10
Grams: "SLIPWAY" Tel: 72484

**JALANATH INSURANCE LTD.** Scindia House, Ballard Estate, Bombay

AGENCIES AND STEVEDORING | **THE EASTERN BUNKERERS LTD.** Scindia House, Ballard Estate, Bombay | **NAROTTAM & PEREIRA LTD.** Princess Street, Fort, Colombo | **SCINDIA STEAMSHIPS (LONDON) LTD.** Kempson House, Camomile Street, London, E.C.3

**Scindia Ships Serve India's Needs**

---

மங்கையின்
மேனி பொலிவுக்கான
ரகசியம்

நீங்களும் கூட
பெறலாம்.

இடையறாமல், அவள் கேரளா (சாண்டல் உட்) சந்தண சோப் உபயோகிப்பதே. அவள் மேனியை பொலிவு பெறச் செய்கிறது. கேரளா சந்தண சோப்பின் நறு மணம் மிகுந்த நுரையே இந்த அதிசயத்தை அவள் சருமத்தின் பேரில் நிகழச்செய்து, மேனி பொலிவுறச் செய்துள்ளது.






# கேரளா சந்தண சோப்

கேரளா சோப் இன்ஸ்டிடியூட், கள்ளிக்கோட்டை-1
(ஓர் கேரள சர்க்கார் நிறுவனம்)

SISTA'S-KSI-624


தரத்திற்கும்
உறுதிக்கும்
நிகரற்றது
ஹத்திபாயின்
ஸ்டேயின்லெஸ் ஸ்டீல்
பாத்திரங்கள்
நீடித்து உழைப்பவை, ஜொலிப்புடன் திகழ்பவை
ஸ்டேயின்லெஸ் ஸ்டீல்
பாத்திரங்கள் தயாரிப்
பவர்களில் முதன்மை
யானவர்கள்.
ஹத்திபாய் துளஸிதாஸ் & சன்ஸ் 122, கல்பாதேவி, பம்பாய் 2




Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10 Managing Editor T. Sadasivam.

# திரு உடல் தாங்கிய தீபாவளி

**தீ**ண்மெனன்று இனிக்கும் தத்துவம் கருணை. பிழம்பாக ஒளிர்வது ஞானம். நீரும் நெருப்பும் முறையே அருளையும் அறிவையும் நினைவூட்டுகின்றன. தீபாவளி விழாவில் இவ்விரண்டுமே பிரதானமாக விளங்குகின்றன. நீராடுவதையும், மங்கல தீபமேற்றுவதையும் முக்கியமாகக் கொண்ட தீபாவளி கருணையையும் ஞானத்தையும் இணைத்துத் தரும் இணையற்ற நன்னாளாகும்.

தீபாவளிப் பண்டிகை எந்த இரு தத்துவங்களைக் குறிக்கிறதோ, அந்த அருளும் அறிவுமேதான் ஆசாரிய புருஷர்களாகத் தேகம் தரிக்கிறது. இவ்வாறு கருணையில் நீராகவும், ஞானத்தில் தீயாகவும் விளங்கிய ஆதி சங்கரரைப் போற்றும் தோடகர் ஒரே துதியில் அவரைக் கடல் (**வருணலய**) என்றும் கதிரவன் (**அஹிமாம்சு**) என்றும் பாடியிருக்கிறார். அத்தகைய குருமணியின் வழி வந்து, கருணைக்கு நாயகமாகவும், ஞானத்துக்குத் நாயகமாகவும் நம்மிடையே திகழும் காமகோடி முனிபுங்கவரைத் தீபாவளிப் புனித காலத்தில் தியானித்து வணங்குகிறோம்.

திவ்விய தீர்த்தங்களும், தெய்வ மூர்த்தங்களும் மகான்களின் மேனியில் மேவியிருப்பதாகச் சொல்வார்கள். இதனை உணர்த்துவது போலவே தேவாலயத்தையும், அதையடுத்த திருக்குளத்தையும் ஜகத் குருவின் பின்னணியில் பாங்குறச் சித்திரித்திருக்கிறார் ஓவியர் 'மணியம்'.

**'என்று வந்தாய்?' என்னும் எம்பெருமான் தன் திருக்குறிப்பே** என்று சித்சபேசனை அப்பரடிகள் ஏத்தினார். அதேபோல, 'எப்போது வந்தாய் குழந்தாய்?' என்ற குறிப்பினை அகமும் முகமும் மலரக் காட்டும் குருவரர் காசினியெங்கும் கருணையும் ஞானமும் கமழ அருள்புரிவாராக!

**கல்கி தீபாவளிமலர் 1962**



# சங்கராபரணம்

பகவத் பாத சங்கர குரு, பலவாகத் தோன்றும் பிரபஞ்சத்தை ஒன்றேயான பரம்பொருளாகக் கண்ட பரம ஞானி மட்டுமல்ல; ஒன்றேயான அப் பரம் பொருளைப் பலப்பல தேவதைகளாகக் கண்டு ஆராதித்த பரம பக்தரும் அவர்; அதோடு அந்தப் பக்தியை அமுதப் பெருக்கான தோத்திரங்களாக வெளி விட்ட மகாகவியுமானவர் ஆசாரியர். அந்த அமுதக் கடலின் அலைகள் சிலவற்றையே **சங்கராபரணம்** என்ற இந்த ஓவிய மடலில் சைத்திரிகர் **'வினு'** கவினுறத் தீட்டியிருக்கிறார்.

அமுதக் கடலின் மத்தியில் உறையும் அம்பிகையின் சந்நிதி. திருமகள் முத்துக் குடை பிடிக்க, இந்திராணியும் ரதியும் சாமரம் வீச, வாணி வீணை இசைக்கக் கொலு வீற்றிருக்கிறாள் ராஜ ராஜேசுவரி. **மந்திர மாத்ருகா புஷ்பமாலா ஸ்தவ**த்தில் இந்தத் திவ்விய தரிசனத்தைக் கூறும் ஜகத்குரு **ஸௌந்தர்ய லஹரி**யில் இதே காட்சியை மேலும் தொடர்கிறார்.

விபஞ்சி என்ற தன் வீணையில் வாணி என்ன கீதம் இசைத்தாள்? சங்கரனின் வீரப் பிரபாவத்தைத் தான் பாடல்களாக வாசித்து அதனை சங்கரிக்கு ஆபரணமாகச் சூட்டுகிறாள். ஒருவேளை சங்கராபரண ராகத்திலேயே தான் வீணையில் இசைத்திருப்பாளோ என்னவோ?

அந்தச் சங்கீதத்தின் சிறப்பிலும் சங்கரனின் சரிதத்தின் சிறப்பிலும் களிப்படைந்தாள் 'நரம்பையடுத்த இசை வடிவாய் நின்ற நாயகி'. சிரக்கம்பம் செய்தபடி 'ஆஹா ஆஹா' என்று அந்தக் கீதத்தைப் பாராட்டத் திருவாயைத் திறந்தாள். அவ்வளவுதான், தேவியின் அதி மதுரமான இன் குரலொலி எழுந்ததும் விபஞ்சி வீணையின் சுநாதமும் ஒரு நாதமா என்று சரஸ்வதியே விலவிலத்துப் போய் விட்டாள். இந்தத் தேன் குரலாள் முன்பு கானமிசைத்தோமே என்று வெட்கி, அக் கணமே வீணையை உறையால் மூடத் தொடங்கினாள். இது முதல் சித்திரம்.

ஈசுவரனின் வீரத்தைக் காணாமலே அந்த வீர சரித கானத்தை மட்டும் முதல் ஓவியத்தில் கண்டோம், அல்லது கேட்டோம். திருமாலின் வீரத்தை இரண்டாவது ஓவியத்தில் காண்கிறோம். கமலப் பூவில் இருந்த அன்னையாகிய திருமகளின் அல்லிக் கரம் முத்துக் குடையைத் தாங்க முடியாமல் தாங்குவதை அங்கு கண்டோம். அந்தப் பூங்கரங்கள் பூமாலையைக் கொஞ்சி இளைப்பாறுவதை இங்கு காண்கிறோம்.

லோகத்தைக் காப்பதற்காகத் துஷ்டர்களை விநாசம் செய்வதே வைகுண்டநாதனின் பொறுப்பல்லவா? அசுர சக்திகளுடன் போரிட்டு வென்ற பரந்தாமன் வெற்றியின் அடையாளமாகச் சூடும் ஹாரம் வைஜயந்திமாலை எனப்படும். அவ்வாறு வெற்றி வாகை சூடி பரமபதம் திரும்பும் பரம புருஷனை வரவேற்கிறாள் பதுமை. மெல்லிய பூங்காற்று வீசுகிறது. அப்போது, 'தோள் கண்டார் தோளே கண்டார்' என்ற புகழினைப் பெற்ற புஜபல பராக்கிரமனான வீர விஷ்ணுவின் கொழுவிய திருத் தோள்களைக் காற்றில் அசையும் வைஜயந்திமாலை சொகுசாகத் தழுவுகிறது. 'தழுவுகிறது' என்று நாம் அஃறிணையில் கூறினாலும் அம்மாலையை மங்கையாகவே உருவகப்படுத்துகிறார் ஆசார்ய சங்கரர். எனினும் தன் நாதனுடன் ரமிக்கும் அந்த மாலை எனும் மங்கையைக் கண்டு பரந்தாமனுக்கு மாலையிட்ட மங்கையாகிய செந்திரு அசூயை கொள்ளவில்லை. வெற்றி வீரனாகத் திரும்பிய பதிக்கு வரவேற்பு நல்கிய லக்ஷ்மி அதனை எடுத்தணைத்துக் கொஞ்சுகிறாள். 'மாலா மா லாலிதா' என்று சொல்லழகு சொட்ட இந்தச் சம்பவத்தை **விஷ்ணு பாதாதி கேசாந்த ஸ்தோத்திர**த்தில் வர்ணிக்கிறார் ஜகத்குரு.

வீர புருஷனாக இருந்து தன் பெருமையைக் காட்டிய இதே மாலவன் பக்தனாக இருந்து தன் எளிமையைக் காட்டிய ஒரு நிகழ்ச்சியும் உண்டு. அமுதத்துக்காகப் பாற்கடலைக் கடைந்த போது ஆலகால விஷம் உண்டாக, அதனைச் சிவபெருமான் ஒருவன்தான் தாங்கி தேவரைக் காக்க முடியும் என்று கூறி ஹரனைச் சரணடைந்தான் ஹரி. 'நஞ்சை உண்டு, பஞ்சையரான தேவரைக் காக்கும் விஞ்சையை நீதான் புரிய முடியும்' என்றான் நாரணன். கருணாநிதியான கைலாசநாதனும் உடனே தன் திருக்கரத்தை நீட்ட விஷம் அவ்வளவும் அதில் உருண்டு திரண்டது. தேவி கலக்கமுற்றாள். ஆதிசக்தி எனினும் பெண் உள்ளமானமையால் கலவரமடைந்தது. நஞ்சை உண்ண வேண்டுமென்று பரமேசனை ரமேசன் ஆவேசமாகத் தூண்ட, உண்ணலாகாது என அம்மை தேவி ஆத்திரத்துடன் தடுக்கலானாள். இருவர் பேச்சுக்கும் சமரசமாக அவ் விஷம் பெருமானின் வயிற்றிலும் செல்லாது வெளியிலும் வராது அவனது சங்குக் கழுத்தில் நிரந்தர பதவி அடைந்தது. 'கிரிசஸுதையின் நீல' என்று சங்கரரே ஞானமயமாகக் கூறுகிறார் தமது **சிவ பாதாதி கேசாந்த வர்ணனை ஸ்தோத்திர**த்தில்.

பரம புருஷனின் பக்தியையும், பர்வத ராஜகுமாரியின் பாதிவிரத்தியத்தையும், பரமேசுவரனின் பரம கருணையையும் கூறும் அற்புத நிகழ்ச்சி இது.

'ஐயா, நீலகண்டா! அண்டியோரிடம் இப்படியும் ஓர் அருளா? கொடிய ஆலகாலத்தைக் கையமலில் ஏந்தினாயே, அதென்ன நாவற்பழமா? வாயில் போட்டுக் கொண்டாயே, அது என்ன சித்தர் குளிகையா? கழுத்தில் அணிந்தாயே, அதென்ன நீல மணியா? சொல்லு மகாத்மன்!' என்று சிவானந்த லஹரியில் கேட்கிறார் ஆசாரியர். நீல முடியனுக்கு நீல மணியாபரணம் கிடைத்த இந் நிகழ்ச்சி 'சங்கராபரண'த்தில் மூன்றாவது சித்திரமாக இலங்குகிறது.

பிரபுவுக்கு எத்தனை அணி மணி ஆபரணம் இருந்தாலும் ஆறுமுகனைப் போல அவனது உள்ளத்துக்கு உகந்த ஆபரணம் உண்டா? சங்கராபரணனாகிய அந்த ஷண்முகனை அன்னை தந்தையுடன் அழகுறக் காண்கிறோம் இம்மடலின் கடைசிச் சித்திரத்தில்.

ஷண்முகன்தான், ஆறுமுகன்தான். அதனாலேயே அவன் ஓர் அரும் பேற்றினை ஆறுமுறை அனுபவிக்க முடிந்தது. அவனைப் பெற்ற ஈசன் 'கண்மணி, என் மடியில் அமர்ந்து கொள்' என்று கூறி அவனை வாத்ஸல்யத்துடன் தன் மடி மீதிருத்தி மந்திரம் கூறி அவனது உச்சி மோந்து மகிழ்வானும். ஆறு தலை உள்ளதால் அவ்விதம் அத்தன் மோந்து பார்க்கும் பேறு ஆறு முறை அல்லவா முருகனுக்குக் கிடைக்கிறது? 'அது போகட்டும், சமஸ்த லோகங்களையும் உள்ளடக்கிய விசுவ நாதன் உச்சி மோந்து பார்க்கும்போது அவனது சிரசின் பாரத்தை இளங்குமரன் எப்படி ஆறு முறை தாங்கினான்?' என்று நாம் எண்ணுகிறோமல்லவா? இவ்வாறு நாம் ஐயப்படலாகாது என்றே, உலகத்தின் பாரம் முழுவதையும் தாங்கும் 'ஜகத் பாரப்ருத்' முருகன் என்கிறார் ஆசாரியர். உலகை யெல்லாம் ஆளும் இளவரசன் என்பதைக் கூறுவதே போல் ஆறு தலையிலும் கிரீடம் தாங்குபவன் அவன் என்றும் கூறுகிறார். சுப்ரமண்ய புஜங்கத்தில் வரும் மனோரம்யமான குடும்பக் காட்சி இது.

* * *

அணி அலங்காரம் பல கொண்ட ஆசாரியரது துதிகள் ஒவ்வொன்றுமே அந்தந்தத் தெய்வத்தை அலங்கரிக்கும் அற்புத அணியாகும். அத்தகைய ஆபரணங்களிலிருந்து நான்கு மணிகளை எடுத்துக் கோத்த இந்த 'சங்கராபரண' சித்திர மாலையை ஆசாரிய சங்கரருக்கு ஓர் ஆபரணமாக அர்ப்பணம் செய்கிறோம்.



# வாழ்வு தந்த புலமை



"நன்று! கார்முகில் வண்ணா! நீயும் ஸ்ரீ ராமனும் ஒரே நிறம் படைத்தவர்கள். ஆநிரை சூழ நீ வேய்ங்குழல் இசைக்கும் பொழுது பார்க்கப் பார்க்கத் தெவிட்டவில்லைதான். ஆயினும் கையில் கோதண்டம் ஏந்தி நீ கோதண்டராமனாகத் தரிசனம் தந்தால் என் மனம் இன்னும் மகிழ்வுறும். மூலப்பொருளான உன்னை ஒரே உருவத்தில் கண்டு, கருத்தில் கொண்டு அடைய விரும்பும் ஆசையில் அப்படிச் சொல்கிறேனே ஒழிய வேறு நோக்கம் எனக்குக் கிடையாது. ஏழை என் மீது அருள் கூர்ந்து கோதண்டராமனாகக் காட்சி தர மாட்டாயா?" துளசிதாசர் இப்பொருள் படப் பாடித் துதிக்கவே, வேய்ங்குழலிசைத்த கிருஷ்ணனது உருவம், கோதண்டராமனாகக் காட்சி தந்தது.

அதே ராமர் தம்பி லட்சுமணனுடனும் சீதையுடனும் கானக வாசத்துக்குப் புறப்படுகிறார், கால் நடையாக. அண்ணனைப் பார்த்தால் தம்பியைப் பார்க்க வேண்டியதில்லை. அண்ணன் காயாம்பூ வண்ணன், தம்பி சிவந்த மேனியன். கிராமத்துப் பெண்டிர்களுக்கு ஓர் ஆவல். அவ்வழகியின் கணவன் யார் என்று தெரிந்து கொள்ளத்தான். கரு நிறமேனியனே அவர்களது கருத்தையும் கவர்ந்துள்ளான். எனவே, சீதையை நெருங்கி, "கரு நிறம் படைத்தவன் உன்னவனா, அல்லது......" என்று இழுத்தாற் போல் கேட்கின்றனர்.

'கருநிறம் படைத்தவன்' என்னும் சொல்லே இன்பத் தேனாகச் சீதையின் காதுகளிலே விழுகிறது. கெட்டிக்காரியான ஜானகி இவன்தான் என் கணவன் என்று பதில் சொன்னால் கெட்டிக்காரியாவாளா? ஓரக்கண்களால் ஜாடை காட்டிச் சொல்லாமலே சொல்லி முறுவலிக்கிறாள்!



சோழ மன்னன் முன்னிலையில் கம்பர் தமது ராமாயணப் பிரவசனம் நடத்திக் கொண்டிருக்கிறார். சேது பந்தனப் படலத்திலே ஒரு பாடலைச் சொல்லி விளக்கிக் கொண்டிருக்கிறார். "குமுதன் என்ற குரங்கினத் தலைவன் ஒரு மலையைப் பெயர்த்துக் கடலில் வீசினான். அம்மலை சுழன்று வந்து கடலில் விழுந்து சுழலவே, அதனால் கடலிலிருந்து எழும்பிய நீர்த்திவலைகள் வானுலகையும் எட்டியதாம். அதை அமுதத் துளிகள்தாம் என்று நினைத்து, இன்னும் அமுதபானம் செய்யலாம் என்று தேவர்கள் மகிழ்ச்சியுற்றார்களாம்."

**குமுத னிட்ட குலவரை கூத்தரின்**
**திமித மிட்டுத் திரியும் திரைகடல்**
**துமிதம் ஊர்புக வானவர் துள்ளினர்**
**அமுதம் இன்னும் எழுமெனும் ஆசையால்.**

இந்தப் பாடலின் மூன்றாவது அடியில் வரும் 'துமி' என்ற சொல்லை ஆட்சேபித்து, சபையிலிருந்த புலவர் ஒட்டக்கூத்தர் 'துளியைத் துமி என்கிறீரே இது நிகண்டு இலக்கியங்களில் வழங்கி வருகிறதா?" என்று கேட்டாராம். "இல்லை. இது உலக வழக்கு" என்றார் கம்பர்.

ஒட்டக்கூத்தர் இதையும் ஏற்க மறுக்கவே, கம்பர் ஒட்டக்கூத்தரை இடையர் குடியிருப்புக்கே அழைத்துச் சென்றார். ஓர் ஆய்ச்சி தயிர் கடைந்துகொண்டிருந்தாள். அப்போது அவளுடைய பிள்ளைகள் விளையாடிக்கொண்டே தயிர்ப் பானை பக்கத்தில் ஓடி வந்தனர். "பிள்ளைகளே, உங்கள் மேல் மோர்த்துமி தெறிக்கப் போகிறது. எட்ட இருங்கள்!" என்றாள். இதை ஒட்டக் கேட்ட பின் தான் ஒட்டக்கூத்தர் சமாதானம் அடைந்தார்.

கலைவாணியே ஆய்ச்சியாக வந்து கம்பரை இவ்வாறு ஆட்கொண்டதாகச் சொல்லுவார்கள் பெரியோர்கள்.

நளவெண்பா பாடிய புகழேந்திப் புலவரும், ஒட்டக்கூத்தரின் கடு சொற்களுக்குத் தப்பியவரல்ல.

புகழேந்தி பாடி வரும் எந்தப் பாடலிலும் பொருள் குற்றமோ, சொல் குற்றமோ, ஏதாகிலும் ஒன்று சொல்லாமலிருக்க மாட்டார். புகழேந்தியினால் இதனைத் தாங்க முடியவில்லை. 'ஒட்டக்கூத்தரை ஒழித்து விட்டால் குற்றம் சொல்பவர்கள் இருக்க மாட்டார்கள் அல்லவா!' என்று எண்ணினார். எண்ணியதைக் காரியத்தில் செய்யவும் துணிந்து விட்டார்.

'ஒட்டக்கூத்தர் வீட்டில் அவர் படுத்துறங்கும் அறைக்குச் சமீபமாக, கையில் பெரிய பாறங்கல்லுடன் ஒளிந்து நிற்க வேண்டியது; ஒட்டக்கூத்தர் அயர்ந்து தூங்கும் போது, அவர் தலையில் பாறங்கல்லைப் போட்டுத் தீர்த்துவிட வேண்டியது' என்று முடிவு செய்து, அதன்படியே போய் நின்று விட்டார்.

அன்றிரவு, ஒட்டக்கூத்தர் 'என்ன இருந்தாலும் புகழேந்தியைப் போல் நமக்குப் பாட வரப் போவதில்லை. அவர் மீது காய்ந்து என்ன பயன்?' என்று எண்ணியவாறே வீட்டுக்கு வந்தவர் நேரே தமது படுக்கையறைக்கு வந்து படுத்து விட்டார்.

இரவு உணவு அருந்தாமல் படுத்து விட்டாரே என்று அவர் மனைவி எழுப்ப வந்தார்.

அப்போது ஒட்டக்கூத்தர் சில பாடல்களைச் சொல்லி, "இப்படிப்பட்ட அருமையான பாடல்கள் சொல்லி அழைத்தாலும் இன்று சாப்பிடப் போவதில்லை" என்றார்.

இவற்றையெல்லாம் வெளியில் நின்று கேட்டுக் கொண்டிருந்த புலவர் புகழேந்திக்கு ஒரே வியப்பாகப் போய்விட்டது! ஆம், ஒட்டக்கூத்தர் தம் மனைவியிடம் மிகவும் பாராட்டிக் கூறிய பாடல்களெல்லாம் புகழேந்தியின் பாடல்கள்தாம்!



"ஆகா! என்ன அழகு! என்ன அழகு!"

பாதையோரத்திலே நின்று கொண்டிருந்தவன், எழிற்பாவையான அந்தப் பெண்ணைப் பார்த்துச் சற்று உரக்கவே முணுமுணுத்தான். அவளுக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது. அவனை அணுகித் துணிச்சலோடு, "உனக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டாள்.

அவள் கேள்வி அவன் உள்ளத்தைக் குத்தியது. "இரண்டு ஊசிகள்!" என்றான். வியப்பு மேலிட ஊசியைத் தந்தாள் அவள். அவளுக்கு எதிரிலேயே தன் இரு கண்களையும் ஊசியால் குத்திக் கொண்டான் வாலிபன். ஊனக் கண் ஒழிந்தது; அந்தக்கணமே ஞானக் கண் வந்தது. ஆம், பக்திக் கவி சூரதாஸரின் வாழ்க்கையில்தான் இப்படி ஒரு திருப்பம் ஏற்பட்டது.

சூரதாஸர் ஒருநாள் மக்கள் நடமாட்டமற்ற பாதை வழியே போய்க் கொண்டிருந்தார். அப்பாதையின் மத்தியிலேயே ஒரு கிணறு, தலைபிடி இல்லாத, தரை மட்டமான கிணறு. ஊனக் கண் இல்லாத சூரதாசருக்கு இது தெரிய நியாயம் ஏது? "நில்! எதிரே கிணறு இருக்கிறது! [illegible]!" என்று யாரோ குரல் கொடுத்தார்கள். அதோடு கையைப் பிடித்து இழுத்துக் கிணற்றில் விழாமல் காப்பாற்றியும் விட்டான். சூரதாஸர் தம் கையைப் பிடித்து இழுத்து விட்டவனின் கரங்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு விட்டார், அவன் தம்மை ஆட்கொள்ள வந்த கண்ணன் தான் என்ற உறுதியோடு. ஆனால்... அவன் திமிறிக்கொண்டு ஓடி விட்டான். 'என் கைகளைத் திமிறிக் கொண்டு நீ ஓடுகிறாய். ஆனால் என் மனத்தை விட்டு நீ என்ன தான் திமிறினாலும் ஓடி விட முடியாதே!" என்னும் பொருள்படப் பாடி, அவனையே அடைக்கலம் புகுந்து உய்ந்தார் சூரதாஸர்.



# படையாத பொற்பாவை

அருகில் இருக்கும் யானையைப் போல அவள் கல்லில் படைத்த சிலையில்லை. ஆனால் உயிருள்ள பொன்னிறப் பாவை; நன் நடையையே நாட்டிய மாக்கும் நங்கை. கல்யானையின் மேலிருந்து அவன் யாழிசைப்பதற்கு ஏற்ப அவள் நடக்கிறாள்.

நடப்பறியாக் கல்யானை மேலிருந்து
நம்பி யாழிசைப்பப்

படைத்தறியாப் பொற்பாவை பதம்பெயர்த்துப்
பதம்புரிய நடக்கின்றாள்

உடுக்கணமும் வெண்ணிலவும் உயர்வானும்
உலகத்துக் கல்மண்ணும்

திடுக்கிடவே திகைத்திடவே தெய்வம்போல்
திருச்சிதறி நடக்கின்றாள்.

அவளுடைய நடையின் ஆச்சரியத்திலே நட்சத்திரங் களும், நிலாவும், வானமும், கல்லும், மண்ணும், திடுக்கிட்டுத் திகைத்து வியந்து போகும்படி தெய்வீக அழகுடன் அந்த அழகு பூமியிலும் சிறிது சிதறும்படி நடப்பதாய்த் தானே தோன்றுகிறது இந்தக் காட்சி!

கல்கி தீபாவளி மலர் 1962

# மூன்று சாம்ராஜ்யங்கள்

நேயர்களுக்குப் புதுமை மிக்க ஓர் ஓவிய மடலை அளிப்பதில் பெருமகிழ்ச்சி யடைகிறோம்.

பூம்புகாரைப் பற்றிச் சிலப்பதிகாரத்தில் எவ்வளவோ படித்திருக்கிறோம். சித்திரை மாதத்தில் நடைபெறும் இந்திர விழாவைப் பற்றி இளங்கோ அடிகள் அளித்துள்ள வர்ணனையைப் போல் வேறெங்கிலும் காண இயலாது. கடற்கரையில் மக்கள் கூடி ஆட்டங்களிலும், பாடல்களிலும், கூத்துக்களிலும் ஈடுபடுவதை மிக மிக அற்புதமாக வர்ணித்திருக்கிறார். அதிலிருந்து தமிழ் மக்கள் அந்நாட்களிலேயே எவ்வளவு மேகோன்னத நிலையில் இருந்திருக்கிறார்கள் என்பது புலனாகிறது.

சோழ நாட்டின் இத்தகைய பழம் பெரும் துறைமுகப் பட்டினம் அந்நாட்களில் இரவு நேரத்தில் எப்படிக் காட்சி யளித்திருக்கக் கூடும் என்று ஓவியர் மணியம் கற்பனை செய்து பார்க்கிறார். அக்கற்பனையே ஓர் அழகிய ஓவியமாக வெளிப்படுகிறது!

ஆட்டமும் கூத்தும், பாட்டும், வாண வேடிக்கைகளும் — இவற்றை எவ்வளவு அற்புதமாகச் சித்திரித்திருக்கிறார்!

பழம் காலத்தில் நம்மவர் எப்பண்புகளை யெல்லாம் போற்றி வந்தனர் என்பதை நினைவு கூர்வது இன்றைய மக்களின் கடமையாகும்!

கற்புக்கு ஒரு காவியம் சிலப்பதிகாரம். பழம் தமிழர்கள் கற்பு நிலையை, கற்புடைப் பெண்டிரைத் தெய்வமாகப் போற்றி வணங்கினர் என்பதைக் காட்டுவது சிலப்பதிகாரம்.

சேரன் செங்குட்டுவன் படையெடுத்து வடநாடு சென்று, அந்நாட்டு மன்னர்களை வென்று வாகை சூடி, கனக விஜயர்கள் தலையில் பத்தினித் தெய்வமாகிய கண்ணகியின் உருவம் செய்வதற்கான கல்லை வைத்துத் தனது தலைநகரான வஞ்சி நகர் வந்தான் என்றும், வஞ்சியிலே கண்ணகிக்குக் கோயில் எடுப்பித்து விழாக்களையும் ஏற்பாடு செய்தான் என்றும் சிலப்பதிகாரம் கூறுகிறது.

'மன்னவன் எப்படி மன்னுயிர் அப்படி!' என்பதல்லவோ பழமொழி! பத்தினித் தெய்வத்துக்கு நடத்தும் விழாவில் மன்னன் அவ்வளவு சிரத்தை கொண்டிருந்தான் என்றால் அன்றைய வஞ்சி மூதூர் மக்கள் அவ்விழாவில் எவ்வளவு ஆர்வம் கொண்டிருப்பார்கள் என்பது கற்பனையால் ஊகித்தறிய வேண்டிய பொருளாகும்! ஓவியர் மணியம் அந்தச் சிரமம்கூட நமக்கு வைக்காமல் தாமே பத்தினித் தெய்வ விழாக் காட்சியைத் தமது கற்பனையால் கண்டு, வண்ணத்தில் வரைந்து காட்டியிருக்கிறார்!

சேரன் செங்குட்டுவனே விழாவினில் பங்கெடுத்துக் கொள்வது போலும், பத்தினித் தெய்வத்தை வீதிவலம் கொண்டு வருவது போலும் அமைத்துள்ள காட்சி மனத்தைக் கவரும் அற்புதமான சித்திரமாகும்.

தமிழகத்தின் பொற்காலம் என்று கருதப்படுவது காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு மகேந்திரபல்லவ சக்கரவர்த்தியும் நரசிம்ம பல்லவ சக்கரவர்த்தியும் ஆண்ட காலமேயாகும். அப்போது பல்லவ சாம்ராஜ்யம் வடக்கே கிருஷ்ணா நதிவரையில் பரவியிருந்தது.

மாபெரும் சாம்ராஜ்யத்தை நிலைநாட்டியாண்டதால் மட்டும் அம்மன்னர்கள் அவ்வளவு புகழுக்கு இலக்காகி விடவில்லை. அவர்கள் கலை, சமயம், கல்வி எல்லாத் துறைகளிலும் பேரார்வம் காண்பித்தார்கள். எச்சமயத்தாரிடத்தும் எம்மொழியாரிடத்தும் விரோதமின்றி அரும்பணிகளையாற்றினர்; கலைகளைப் போற்றினர்.

காளிதாஸனுக்குச் சமமாக மதிக்கப்பட்ட வடமொழிக் கவிஞன் பாரவியின் நண்பன் தாமோதரன் மகேந்திரவர்மனின் தந்தை சிம்மவிஷ்ணுவின் சபைக்கு வந்து சேர்ந்தான். அவன் மூலம் பாரவியின் 'கிராதார்ஜுனீயம்' என்ற அற்புத காவியத்தைச் சிம்மவிஷ்ணுவும் மகேந்திரனும் அறியலானார்கள்.

தாமோதரப் புலவர் காஞ்சிக்கு வருமுன்னர் கங்க மன்னன் துர்விநீதனுடன் இருந்த போது பாரவியின் கிராதார்ஜுனீய காவியத்தை அம்மன்னனுக்கு எடுத்துரைத்தான். அதை ரஸித்த துர்விநீதன் தானே கிராதார்ஜுனீயத்துக்கு உரை எழுதினான்!

இதைக் கேள்வியுற்றார் சிம்மவிஷ்ணுவின் புதல்வரான மகேந்திரவர்ம சக்கரவர்த்தி. விசித்திர சித்தர் என்ற புகழ் படைத்தவர் அல்லவா? அவர் உள்ளத்தில் துர்விநீதனைவிட ஒரு படி மேலே செல்ல வேண்டும், அந்த அரிய கவிதையைத் தாம் புது முறையில் கௌரவிக்க வேண்டும் என்ற எண்ணம் ஏற்பட்டது! அதன் விளைவே இன்றும் மாமல்லபுரத்தில் நாம் காணும் 'அர்ஜுனன் தவம்' என்னும் சிற்பச் செல்வம். 'துர்விநீதன் சொல்லில் விளக்கம் தந்தால் நான் என்றும் அழியாத கல்லில் சிற்பக் கலை கொண்டு அழியா விளக்கம் தருகிறேன்!' என்று அந்த விசித்திர சித்த மகேந்திர சக்கரவர்த்தி நினைத்தார் போலும்! அதை அந்த மகாகவி பாரவியையே அழைப்பித்து மகேந்திர சக்கரவர்த்தி காண்பித்திருக்கலாம் அல்லவா! அந்த நிலையை, ஓவியர் மணியம் கற்பனைக் கண்கொண்டு பார்த்து வர்ணச் சேர்க்கையில் தருகிறார்!

மாமல்லபுரத்திலுள்ள 'அர்ஜுனன் தவம்' என்னும் இச்சிற்பத்தைப் பற்றி அறிஞர்களிடையே நீண்ட நாட்களாகச் சர்ச்சை நிலவி வருகிறது. ஆனந்த குமாரசுவாமி முதலியவர்கள் 'இது அர்ஜுனன் தவமல்ல, பகீரதன் தவமே' என்று அறுதியிட்டுக் கூறினர். புதை பொருள் இலாகாவில் பெருந் தொண்டாற்றிப் புகழ்பெற்ற அறிஞர் ஸ்ரீ டி. என். ராமச்சந்திரன் அவர்கள், சிவபெருமான் வேடன் உருவம் தாங்கி வந்து, அர்ஜுனனுடன் சண்டையிட்டு முடிவில் பாசுபதாஸ்திரம் கொடுத்த கிராதார்ஜுனீயம் என்னும் பாரவி காவிய விளக்கமே இச்சிற்பம் என்று கூறுகிறார். தவக் கோலத்திலுள்ள அர்ஜுனனுக்கும், சிவபெருமானுக்குமிடையிலுள்ள சிங்கவயிறனை பூதகணன், சிவபெருமானின் படைவீரர்களுள் ஒருவன் என்கிறார். ஒருகால் அவ்வுருவமே பாசுபதாஸ்திரமாகக் கூட இருக்கலாம்! இன்னும் பல்வேறு காரணங்களால் இது அர்ஜுனன் தவம்தான் என்பதை 110 பக்கங்களில் ஓர் ஆராய்ச்சிக் கட்டுரை எழுதி வலியுறுத்தியிருக்கிறார். அவரது ஆராய்ச்சிப் புலமை மிக்க அக்கட்டுரை கிராதார்ஜுனீய காவியம் பாரத நாட்டை அந்த நாளில் எப்படியெல்லாம் கவர்ந்தது என்பதை விளக்குகிறது!

பலே, ஜோஸ்யம்!




ஜோஸ்யர் :– இதோ பாரு! உங்கம்மா தீபாவளி பக்ஷணங்களை எங்கே ஒளிச்ச வைச்சிருக்கான்னு சொல்லியாச்சு. நீ கொடுத்த ஓரணாவுக்கு அதுக்கு மேலே சொல்ல முடியாது!


கருமையான பின்னணியில்
பொன்னும் வர்ண அச்சும்
கொண்ட பொலிவுச் சேலை.
cali—cloth
காலி - கிளாத்
காலி-கிளாத் சிட்டேல் கடைகளில்
கிடைக்கும்:
பங்களூர்: ஸில்வர் ஜூபிலி பார்க்
ரோடு.
மதராஸ்: தன் பில்டிங்,
175/1 மவுண்ட் ரோடு.
கல்கத்தா: 1. லின்ட்ஸே ஸ்டிரீட்;
29, வாடர்லூ ஸ்டிரீட்.
அஹமதாபாத்: குபேர் நிவாஸ்,
ரிலீப் ரோடு; காலிகோ மில்ஸ்
காம்பவுண்டு.
நியூ டில்லி: 6/30-31 அஜ்மல்கான்
ரோடு, கரோல்பாக்.
பம்பாய்: 129, நியூ சர்னி ரோடு.
காட்டன் அன்ட் கிளாத் பிரைவேட்
லிமிடெட்,
302, கல்பாதேவி ரோடு, பம்பாய்-2.
584, ஸான்ட்ஹர்ஸ்ட் ரோடு,
பம்பாய்-4.
120X140 பிரின்டெட் வாயில்
Shilpi CA-127 Tamil



# தமிழ் இலக்கியக் காட்சிகள்

தமிழ் இலக்கியம் என்னும் பெருங் கடலில் முக்குளித்து நான்கு நன்முத்துக்களை நேயர்களுக்கு இவ்வாண்டு நல்குகிறோம்.

இதோ கிள்ளி வளவன்மீது காதல் கொண்ட காரிகையைப் பற்றியொரு பழம் பாடல்.

காதலில் மூழ்கியிருப்பவர்களுக்குக் காதலன் சம்பந்தப் பட்ட எப்பொருளும் உள்ளத்தை நெகிழ்விக்கக் கூடியதுதான்.

அன்று அவள் ஒரு தனிவீட்டுத்தே இருந்தாள். அந்தச் சமயம் அவ்வழியாகக் கல்லைபோத்த திண்ணிய தோள்களைக் கொண்ட கிள்ளி வளவன் தன் குதிரை மீது ஏறிச் சென்றான். 'ஆகா, குதிரை செய்த பாக்கியம் என்ன' என்று கும்பிட்டாள். உடனே கண்களிலும் கண்ணீர் பெருகி விட்டது.

இந்தச் சமயம் பார்த்து அவள் தோழி வந்து விட்டாள்.

அவள் கண்களில் பெருகும் கண்ணீரைப் பார்த்து 'ஏன் அழுகிறாய்?' என்று கேட்டாள். உண்மையைச் சொல்லிவிட முடியுமா? வேறொரு காரணத்தைச் சொல்லி விட்டாள்.

கல்லுயர்தோள் கிள்ளி
பரிதொழுது கண்பனிசோர்
மெல்லியலார் தோழியர்முன்
வேறொன்று சொல்லுவரால்
பொங்கும் படைபரப்ப
மிதெழுந்த பூந்துகள்சேர்ந்(து)
எங்கண் கலுழ்ந்தனவால்
என்று.

"குதிரை பறந்து சென்றதால் எழுந்த புழுதி படர்ந்து, கண்ணில் விழுந்து விட்டது. அதனால்தான் கண்ணீர் வருகிறது" என்றாள்.

இன்றைக்கும் நாம் பார்க்கிற ஓர் அரிய மனோபாவம் அல்லவா? எவ்வளவு அழகான பாடல்!

* * *

"பந்திக்கு முந்திக்கோ, படைக்குப் பிந்திக்கோ" என்று பரிகாசமாகச் சொல்லுவார்கள். சந்தர்ப்பக் கோளாறினால் ஒரு சுத்த வீரனைப் பற்றிப் பிறர் மேற்கண்ட விதமாக எண்ணக் கூடிய நிலை ஏற்படுகிறது. இதைவிட இழுக்கு ஒரு வீரனுக்கு உண்டா? அதை எவ்வளவு அருமையாகத் தவிர்த்து வீரனின் புகழை நிலைநாட்டுகிறார் ஒரு புலவர் என்பது புறநானூற்றுப் பாடல் ஒன்றிலிருந்து அறிகிறோம்.

போர்க்களத்திலே, ஒரு பக்கம் வீரர் படை வரிசையாக நிற்கிறது. மன்னனும் படைவீரர்களுக்கு ஏதோ சொல்லிக் கொண்டு நிற்கிறான். அந்தச் சமயம் அரசனுக்கும் வீரர்களுக்கும் போர் வெறியூட்டும் நறவம் அளிக்க ஓர் ஏவலாளன் வருகிறான். அரசனுக்குக் கொடுத்து முடியுமுன் வீரன் வாளை உருவிக்கொண்டு முன்னேறி வந்து முதலில் தனக்குக் கொடுக்குமாறு கேட்கிறான். இதைப் பார்த்தார் புலவர்.

"அதேபோல் போர்க்களத்திலும் தன் முறை வரும் வரை பொறுக்காமல் தானே முந்திச் சென்று எதிரியின் பெரும் படையைத் தகர்ப்பான்" என்கிறார்.

வேந்தற்(கு) ஏந்திய தீந்தண் நறவம்
யாம்தனக்(கு) உறுமுறை வளாவ விலக்கி
வாய்வாள் பற்றி நின்றனென் என்று
சினவல் ஓம்புமின் சிறுபுல் லாளர்
ஈண்டே போல வேண்டுவன் ஆயின்
'என்முறை வருக' என்னான் கம்மென
எழுதரு பெரும்படை விலக்கி
ஆண்டு நிற்கும் ஆண்தகை யன்னே.

— விரிச்சியூர் நன்னாகனார்

* * *

கண்ணிறைந்த கணவனைப் பெற்ற மாதரசிக்கு, தன் கணவனின் புகழ் சான்ற செயல்களை, பிறர் சொல்லக் கேட்பதில் உண்டாகும்மகிழ்ச்சியைப்போல் வேறெதிலும் உண்டாவதில்லை!

"இரவு வேளை, வானத்திலே வெண் கொற்றக் குடையைப் போல நிலவு வீசிக் கொண்டிருந்தது. வீரர்கள் பாசறையில் அமர்ந்து அளவளாவிக் கொண்டிருந்தனர். அந்த வேளை யாரோ சிலர் புதிய வேல்களுடன் போர்க்களத்தில் புகுந்தனர். அப்போது உன் கணவர், உன் வேந்தன் பெயரையும் புகழையும் கூறிக் கொண்டு, களத்தில் இறங்கி 'உங்களில் ஆயுள் குறைந்தவர்கள் எவரோ அவர்கள் வரலாம்' என்று கூவி அழைத்தான். இதைக் கேட்ட பகைவர்கள் என்ன ஆனார்கள் தெரியுமா? நாகரத்தினத்தைத் துணிந்து எவரும் நெருங்குவதில்லை. அதைப் போல் அவனையும் யாரும் நெருங்கவில்லை" என்று கூறி முடித்தார் புலவர் பெருந்தலைச் சாத்தனார்.

வெண்குடை மதியம் மேல்நிலாத் திகழ்தரக்
கண்கூ(டு) இறுத்த கடல்மருள் பாசறைக்
குமரிப்படை தழீஇய கூற்றுவினை ஆடவர்
தமர்பிறர் அறியா அமர்மயங்(கு) அழுவத்(து)
இறையும் பெயரும் தோற்றி நுமருள்
நாள்முறை தபுத்தீர் வம்மின் ஈங்கெனப்
போர்மலைந்து ஒருசிறை நிற்ப யாவரும்
அரவுஉமிழ் மணியின் குறுகார்
நிரைதார் மார்பனின் கேள்வனைப் பிறரே!

* * *

சாமான்ய மக்கள் இல்லங்களிலே குழந்தை பிறந்து விட்டால் உண்டாகும் குதூகலம் சொல்லி முடிவதில்லை. அரண்மனைகளில் தோன்றும் குதூகலம் எப்படி இருக்கும் என்று நம்மால் ஊகித்துப் பார்க்க முடிகிறதா?

அகளங்கன் என்னும் அச்சுதன் என்னும் பெயர் படைத்த மன்னனுக்குப் பட்டத்து இளவரசன் பிறந்து விட்டான். இம்மகிழ்ச்சியூட்டும் செய்தியை ஊருக்கு அறிவிக்க, முரசதிர்ந்ததாம்! அந்த முரசொலியையும் மிஞ்சியதாம் மற்றோர் ஒலி.

அரசன் மாபெரும் வீரன். திக்விஜயம் செய்து பலப் பல அரசர்களைச் சிறைப்படுத்திய பெரும் புகழ் படைத்தவன்.

அரசன் அகளங்கன்
அச்சுதன் முற்றத்து
அரசர் அவதரித்த
அந்நாள் — முரசதிரக்
கொட்டினிடும் ஓசையினும்
கோவேந்தர் காலிதளை
வெட்டிவிடும் ஓசை மிகும்!

அகளங்கன் வீரத்தையும் எவ்வளவு அழகாகக் குறிப்பிட்டு விட்டார் புலவர்.

இந்த நான்கு பாடல்களுக்கும் ஓவியர் ராஜம் அழகான வர்ணச் சேர்க்கைகளில் உரிய ஓவியங்களைக் கருத்துக்கும் கண்ணுக்கும் விருந்தளிக்கும் வகையில் அளித்திருக்கிறார்.



# தனிவழிப் பயணம்

மேகங்கள் தவழும் விரிந்த வானின்கீழ் தனி யான சாலையில் பயணம் செய்வது சுகமானதோர் அநுபவம். சாலையின் தனிமையைப் போலவே அந்த அநுபவத்தின் அழகும் தனியானது. ஆகாய வீதிக்குத் தூணெடுத்தாற் போல் சில பனைமரங்கள். மேலே கரிய நிறம் குழம்பி உலவும் முகில்கள். இவற்றை எல்லாம் பார்த்தவுடன்,

கருவுற்ற முகில்கள்சில
கன்றிவரு வானினெழில்
முன்றிலிடை நின்றபனை

தருவற்ற வனவெளியில்
தனியுற்ற பெருவழியே
நகர்கின்ற சிறுசகடம்

என்று கவி பாடலாம் போல் தோன்றுகிறதல்லவா? காண்பது அழகா யிருந்தால் அதைக் காட்டும் கவிதை யில் சொற்களும் அழகாகத்தானே இருக்க வேண்டும்? இந்தச் சாலைக் காட்சியிலும் அதைப் பற்றிய நினைவு களிலும் ஒருங்கே அழகைக் காண்கிறோம்.

கல்கி தீபாவளிமலர் 1962

# கண்ணுக்கினிய கண்ணன்

**க**ண்ணன் என்ற பெயருக்கு எத்தனையோ அர்த்தங்க ளுண்டு. அலர்ந்த தாமரை போன்ற அழகிய நயனத்தன் என்பதால் கண்ணன். கண்ணைப்போல் நமக்குப் பிரியமான தால் கண்ணன்; ஞானக்கண்ணாயிருந்து பரகதிக்கு வழி காட்டுவதாலும் கண்ணன்.

கண்ணுக்குப் பட்சபாதம் என்பது கிடையாது: எல்லாப் பொருட்களையும் அது ஒரு போலத்தான் நோக்கு கிறது: புத்திதான் இவற்றில் இனியவை-இன்னாதவை என்ற பாகுபாடுகளைச் செய்கிறது. எனவே, இக் கண்ணைப் போலவே பொருட்களின் தன்மைகளில் ஈடுபடாது யாவற்றையும் சமமாக நோக்கும் பரம்பொருளைக் கண்ணன் என்று திருநாம மிட்டு அழைப்பதாகவும் சொல்லலாம். வேதாந்த பரிபாஷை யில் சொல்லப் புகுந்தால், வியவகார உலகில் சிக்குண்டு போகாமல் சாட்சி மாத்திரமாக ஒளிரும் ஆத்மாவே கண்ணன். சாட்சி என்றாலே கண்ணோடு கூடியவன், அதாவது கண்ணன் என்றுதானே பொருள்?

இத்தனை விதங்களில் பெயர்ப் பொருத்தமுள்ளவனையே நம் கண்ணுக்கினிப்பதாலும் கண்ணனாகக் கண்டிருக்கிறார்கள் பல கவி பக்தர்கள். இவர்களில் நால்வர் கண்ட அற்புதக் கோலங்களில் நான்கையே இங்கு நான்கு சைத்திரிகர்களின் கண்ணுக்கினிய ஓவியங்களாக அளிக்கிறோம்.

**ப**ரம்பொருள் பச்சைக் குழந்தையாகப் பிறந்து பச்சைப் பொய்யைச் சொல்லும் காட்சிகூட நேத்ரானந்த மாகத்தான் இருக்கிறது. இப்படி ஒரு காட்சியைச் சொல்லில் தீட்டியிருக்கிறார் கிருஷ்ண ரசத்தை நுணுகி நுணுகிச் சுவைத் துள்ள **பெரியாழ்வார்.**

ஓர் ஆய்ச்சியின் இல்லம் புகுந்து அவ் வீட்டுப் பெண் ணைக் கூவி அழைத்து விளையாடி அவள் வளையலைக் கழற்றிக் கொண்டு விட்டானும் இந்தச் சூழ்ச்சிக்காரன். அதோடு நில் லாது அதனை அவர்கள் வீட்டுத் தோட்டத்திலேயே ஒரு நாவற் பழக்காரிக்குக் கொடுத்துப் பழங்கள் வாங்கினானும். பெண் ணின் தாய் இவன் கனி வாங்கிக் கொண்டிருக்கும்போதே கையும் மெய்யுமாகப் பிடிக்க வந்து விட்டாள். அப்போது இந்த மாயப்பிள்ளை கையில் கங்கணத்துடனேயே, "நான் நகை திருடவில்லை" என்று கூறி நகைத்தானும். இந்தக் குழந்தைத் தனத்தை **விஜயாவின்** அழகிய ஓவியத்தில் காண்கிறோம்.

**நா**வற் கனிகள் கொண்டு நிற்கும் ஞானக் கனியான ஆயப்பிள்ளையைக் கிள்ளையாக இருந்து ரசித்து, ருசித்து நாவார பாகவதம் பாடுனார் **சுகப் பிரம்மம்.** அவருடைய வர்ணனை ஒன்றையே வண்ணத்தில் எழிலுறத் தருகிறார் **கல்பனா.**

ஒரு நாள் யமுனை தடச் சோலையில் கண்ணனை மத்தியில் இருத்தி மற்றக் கோப பாலர்கள் சுற்றிலும் வட்ட வட்டமாக அமர்ந்து உணவு அருந்தினர். மஹா யாகங்களில் ஹவிர் பாகம் பெறும் பரம புருஷன் வேடிக்கை செய்தபடி அவர் களுடன் கையில் தயிர் சாதக் கவளமும், விரலில் வியஞ்சனங் களுமாக உண்கிறான். இடையில் குழலைச் செருகி, மாடுகளை ஊக்கும் குச்சியையும், அவற்றை அழைக்கும் கொம்பையும் கக்கத்தில் இடுக்கி எளியோனாக உண்கிறான் நந்தநந்தனன். அப்போது பிரபுவின் பாலிய லீலா விநோதங்களை மேலும் தூண்டுவதற்கே போல் அவர்கள் புல் மேயவிட்டிருந்த கன்று களை யெல்லாம் நீண்ட நெடுந்தூரம் இட்டுப் போய் மறைத்து விடுகிறான் சதுர்முகன். பக்தவத்ஸலனும் ஏதும் தெரியாதவன் போல் உண்ணும் கோலத்திலேயே வத்ஸங்களைத் தேடி, இதோ, செல்கிறான்.

**தே**டி வந்த திருவை யாரேனும் தள்ளுவார்களா? திருமகள் நாயகனாகிய இந்தக் கண்ணன் தேடி வந்த போது அந்தக் கோபிகை அவனைத் தள்ளத்தான் செய்தாள். கோபிகை யாரென்றால் **திருமங்கை ஆழ்வார்**தான். கண்ணன் திருமகள் நாயகன் என்பதேதான் இந்தத் திருமங்கையின் கோபத்துக்குக் காரணமாகும். 'தேடி, திருமா மகள், மண்மகள் நிற்ப ஏடி! இது என்? இது என்? இது என்னோ?' — உன்னை ஸ்ரீ தேவி யும், பூதேவியும் தேடி அலைகையில் என்னிடம் எங்கே வந்து சேர்ந்தாய் என்று எரிந்து விழுகிறாள்; ஊடுகிறாள். இந் நிகழ்ச்சியையே **ரமணியின்** ரமணீயமான சித்திரத்தில் காண்கிறீர்கள்.

இவளை வசப்படுத்தத்தான் கண்ணன் எத்தனை புதிய கோலத்தில் வந்திருக்கிறான் பார்த்தீர்களா? இரவு வேளையென் பதால் வெய்ங்குழல் பிடித்த கையில் ராமனைப் போல் 'கூன் ஆயுது ஓர் கோற்றவில்' ஏந்தி யிருக்கிறான். கத்தி வேறு வைத்திருக்கிறான். துவர் ஆடையைக் கச்சக்கட்டமிட்டு வீரனை யாக உடுத்து, குழலைக் கவராக — அதாவது இரட்டைக் கொண்டையாக — முடித்து, துளவ மாலை துவள 'கவர் ஆர் கதவின் புறமே வந்து' நிற்கிறான். வஜ்ரை கொண்டவன் போல் கையில் ஒரு செண்டைச் சிறுப்பியபடி வந்திருக்கிறான். மருள் எனும் பண்ணை — அதாவது மயக்க வல்ல பண்ணையும் பாடி நிற்கிறான் மாயவன். அப்படியும் அந்தப் பொல்லாத ஆய்ச்சி மயங்காமல், சற்றும் தயங்காமல் அவனை ஏசுகிறாள். உள்ளன்பு உள்ளவர்களுக்காக எந்தச் சிறுமையையும், பெருமையுடன் தாங்கும் பெருமானல்லவா அவன்?

**ஆ**ம், இல்லாவிட்டால் தனஞ்சயனிடம் குதிரைக் காசாரியாக இருக்க ஒப்பி விருப்பானா? ஒப்புக்கொண்டுவிட் டானே தவிர, பழக்கமில்லாத வேலையானபடியால் அதைச் சரியாகக் கவனிக்கவில்லை பார்த்தசாரதி. 'எஜமான்' போருக் குப் புறப்படு முன் வாயத்திலேயே புரவிகளைக் கழுவி, அலங் கரித்திருக்க வேண்டாமோ? மறந்து விட்டான்! தேரில் குதிரை களைப் பூட்டிய பின் தான் அவற்றுக்குக் குளிப்பாட்டவில்லை என்பது நினைவு வந்தது. குதிரைகளைக் கழுவ நீரும் வந்து சேர்ந்தது. சாரத்தியம் செய்ய ஆயத்தமாகக் கையிலெடுத்துக் கொண்ட சவுக்கைத் 'தலைப்பாகையில் செருகிக் கொண்டான் கண்ணன். அடடா, குதிரைக்குக் கடிவாளமிட்டாயிற்றே! இப்பொழுது அதனை அவிழ்த்துப் புழுதியில் புரளவிடலாமோ? தயங்கவில்லை கண்ணன். கடிவாளத்தைத் தன் பற்களிலேயே கடித்துக் கொண்டு விட்டான். அப்புறம் பாங்காக, பதவிசாக, குதிரையைக் கழுவி அதன் இளைவு போக நகத்தால் சொறிந்து குளிப்பாட்டினான். கிருஷ்ண கர்ணாமிருதத்தில் **லீலாசுகர்** வர் ணிக்கும் இந்த அற்புத கோலத்தைக் கிருஷ்ண நேத்ராம்ருத மாக விளங்கும் இம்மடலின் கடைசிச் சித்திரமாக வழங்கி யிருக்கிறார் ஓவியர் **நடராஜன்.**






★

**நீலக் கோட்டுக்காரர்** :- நான் கூடக் கவனிக்கவில்லே. என் பையன் கண்டுபிடிக்கச் சொன்னுன். இசைத்தட்டு நடுவிலே ஒரு ஓட்டை இருக்கு. வேறே கொடுங்கோ!

★



★

**மொட்டை** : டேய்! நான் அந்த மொட்டை மாடியி லிருந்து தவறிக் கீழே விழுந் தால் என்ன ஆகும்?

**அண்ணன்** : ஐயோ! அப்பா வைவார்!

★




நாட்டின் நலம் பெருக
நல்லதொரு பணி செய்யும்
சங்கர் பிராண்ட் சிமெண்ட்
தயாரிப்பாளர்களிடமிருந்து
தீபாவளி
வாழ்த்துக்கள்!
மதராஸ்
சங்கரிதுர்க்
சங்கர்நகர்
SANKAR
I C
BRAND
இந்தியா சிமெண்ட்ஸ்
லிமிடெட்
மதராஸ்-2

REGISTERED No. M. 4392
Supplement to the Kalki issue Dated 28-10-1962

Registered as a Newspaper in Ceylon

# முதல் ஸ்தானம்!

பிரயாணிகளுக்கான பஸ்கள், சாமான்களை ஏற்றிச் செல்லும் லாரிகள், விவசாயத்திற்கான டிராக்டர்கள், ரோடு ரோலர்கள் மற்றும் இவை போன்ற அதிக சக்தியைக் கொண்டு இயக்க வேண்டிய எல்லா அவசியங்களுக்கும் உலகப் புகழ் பெற்ற பெர்க்கின்ஸ் டீஸல் என்ஜின்களைத்தான் எல்லோரும் விரும்பி வாங்குகிறார்கள்.

நம்பகம் மிக்க பெர்க்கின்ஸ் டீஸல் என்ஜின்கள் எவ்வளவு கடினமான வேலைகளையும் மிகவும் சுலபமாகச் செய்து முடிக்கின்றன. மேலும் இவற்றின் பராமரிப்புச் செலவும் மிகவும் குறைவு. எண்ணெய்ச் செலவையும் பாதிக்குமேல் குறைத்துவிடுகின்றன.

மற்ற எல்லா என்ஜின்களையும் விட, பெர்க்கின்ஸ் டீஸல் என்ஜின்கள் எந்த வேலையையும் மிகவும் துரிதமாகவும், சிக்கனமாகவும், திறம்படவும் செய்து முடிக்கின்றன.

**பெர்க்கின்ஸ் டீஸல் என்ஜின்களையே வாங்குங்கள்!**













Perkins HIGH QUALITY DIESELS

பெர்க்கின்ஸ்

இந்தியாவில் தயாரிப்பவர்கள்

## ஸிம்ஸன் & கோ. லிட்

மதராஸ்-2

கிளைகள்

பெங்களூர் - உதகமண்டலம் - திருச்சிராப்பள்ளி
செகந்திராபாத்

**பெர்க்கின்ஸ் உயர்தர டீஸல் என்ஜின்கள்**

போக்குவரத்து சாதனங்களுக்கும், விவசாய யந்திரங்களுக்கும் தொழிற்சாலைகளுக்கும் இணையற்றவை

**முக்கிய அம்சங்கள்**

- ★ கண நேரத்தில் இயங்கும்
- ★ மிகவும் நம்பகமான உழைப்பு
- ★ வேகம் குன்றாமல் இயங்கும் தன்மை
- ★ சுலபமாகப் பராமரிப்பதற்கு ஏற்றவை எந்த பாகத்தையும் எளிதில் பழுது பார்க்கலாம்
- ★ நீண்டநாள் சேவை புரிகின்றன
- ★ உபரி பாகங்களும், உற்பத்தியாளர்களின் சேவையும் தாராளமாகக் கிடைக்கும்

S-302